بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْم

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 1




இந்திய வரலாற்றை அறிவியல் பூர்வமாக ஆய்வு செய்வதற்கும் உண்மையான வரலாற்றை காலம் வரிசைக் கிரமாக எடுத்துக் கூறுவதற்கும் தொல்லியல் சான்றுகளே மிகுந்த துணைபுரிகின்றன.
மனித குல வரலாற்றில் எளிய மக்களின் வாழ்வையும், நடுத்தர, உயர்குடி மக்களின் வாழ்வையும் தொல்லியல் சான்றுகள் படம் பிடித்துக் காட்டுகின்றன.

தமிழகத்தில் உள்ள பழமையான கோயில்கள், தேவாலயங்கள், பள்ளிவாசல்கள், தர்ஹாக்கள் மற்றும் அகழாய்வுகளில் கண்டுபிடிக்கப்படும் பழங்கால பொருட்கள் ஒவ்வொரு கால கட்டத்திலும் வாழ்ந்த மக்களின் பண்பாட்டையும் நாகரிகத்தையும் எடுத்துக்காட்டுகின்றன.
இதே போன்று மன்னர்கள் வெளியிட்ட நாணயங்கள், அவர்கள் காலத்தில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகள், வரலாற்று உருவாக்கத்திற்கு அடிப்படைச் சான்றாய் அமைகின்றன.
ஒரு நாட்டின், இனத்தின் வரலாற்றைப் பல்வேறு சான்றுகள் கொண்டே முழுமைப்படுத்த முடியும். இலக்கியம், கல்வெட்டு, நாணயம், தொல்லியல், வெளிநாட்டு குறிப்பு, செப்பேடு, அரசு ஆவணம் போன்றவை இன்றியமையாதது ஆகும்.
இவை அனைத்தையும் பயன்படுத்தி வரலாறு படைத்த முஸ்லிம்களில் ஒரு சிலரே வெற்றி கண்டுள்ளனர்.
இந்நிலையில் தமிழர்கள் மற்றும் முஸ்லிம்களின் ஆவணங்கள், கல்வெட்டுக்கள் பல இடங்களில் திட்டமிட்டு அழிக்கப்பட்டுவிட்டன. சமகாலத்திலேயே பல சம்பவங்களும் நடந்துள்ளன.

இவை அனைத்தையும் பயன்படுத்தி வரலாறு படைப்போர் மிகச்சிலர். அவர்களும் மேற்கண்ட பல பிரிவுகளைச் சேர்ந்த இன்றியமையாத இஸ்லாமிய ஆவணங்களைச் சிறிதும் பயன்படுத்துவது இல்லை. அவற்றைத் தொகுத்து வெளியிடும் முயற்சி பெரும் அளவு நடைபெறாததே இதற்குக் காரணம் ஆகும்.
மதராஸ் என்ற பெயர் சென்னை என்றும், மாயவரம் என்பதை மயிலாடுதுறை என்றும், சென்னை மவுண்ட் ரோடு என்பதை அண்ணாசாலையாகவும், பம்பாய் என்பதை மும்பை எனவும் பெயர் மாற்றியுள்ளார்கள். வருங்கால சந்ததியினருக்கு மறைக்கப்பட்ட பெயர்கள் அறிவதற்கு வாய்ப்பில்லை.
ஒரு சில இடங்களில் பள்ளிவாசல்கள் புதுப்பிக்கப்பட்டபோது பழைய ஆவணங்கள் அழிக்கப்பட்டன.
தற்போது நடைபெறுகின்ற சாலை விரிவாக்கத்தில் சாலையோரத்தில் அமைந்த ஏராளமான தியாகிகள் கல்லறை மண்ணோடு மண்ணாகிப்போனது.

“ஒரு இனத்தை அழிக்கவேண்டுமானால் மொழியை அழிக்கவேண்டும். மொழியை அழிக்க வேண்டுமானால் ஆவணத்தை அழிக்கவேண்டும்” என்று கூறப்படுவதுண்டு.
இஸ்லாமிய வரலாற்று ஆவணங்களின் பங்கு இல்லாமல், அவை இடம் பெறாமல் தமிழக வரலாறு முழுமையாகாது. அவ்வகையில் அவற்றை வெளிப்படுத்தும் முயற்சியில் நண்பர்கள் பலர் முயன்று ஈடுபட்டுள்ளனர்.
அதில் குறிப்பாக இராமநாதபுரம் முனைவர் எஸ்.எம். கமால், புதுக்கோட்டை முனைவர் ஜெ. ராஜா முகம்மது, பாளையங்கோட்டை செ. திவான். இலங்கை மானாமக்கீன், பாளையங்கோட்டை முனைவர் முகம்மது நாசர், ஈரோடு எம்.கே. ஜமால் முகம்மது, ஈரோடு டாக்டர் வெ. ஜீவானந்தம், ஈரோடு ஸ்டாலின் குணசேகரன், ஈரோடு சி.எம்.ஏ. அப்துல் காதர், ஈரோடு செவாலியர் கொங்கு கொளந்தசாமி, ஈரோடு முனைவர் பி. சின்னையன் ஆகிய பலர் ஒவ்வொரு துறையில் அரிய பணிகள் ஆற்றியுள்ளனர்.
தினமணி நாளிதழ் வெளியிட்ட ரம்ஜான் மலர் மூலமும் பல செய்திகள் அறிமுகமாயின. திருச்செங்கோடு எம். விஜயகுமார், ஈரோடு கே.ஏ. திருஞானசம்பந்தம், தஞ்சாவூர் ஆறுமுகம் சீதாராமன் போன்ற நாணயத் தொகுப்பாளர் பணிகளும் பாராட்டத்தக்கது

தொல்லியல் துறையைச் சார்ந்த செ.இராசு " தமிழக இஸ்லாமிய வரலாற்று ஆவணங்கள்" என்கிற நூல் இஸ்லாமிய வரலாற்று ஆவணங்களாகத் திகழும் கல்வெட்டுகள், செப்பேடு, ஓலைப்பட்டயம் போன்ற பலங்கால ஆவணங்களைத் திரட்டி ஒரே புத்தகத்தில் விவரித்திருக்கிறது. பன்னெடுங்காலமாக நிலவி வந்த இந்து-முஸ்லிம் ஒருமைப் பாட்டைச் சான்றுகளுடன் எடுத்துக் கூறும் 140 ஆவணங்கள் இந்நூலில் உள்ளன.
இந்தப் புத்தகத்தை நண்பர் Vaitiyar Malick எனக்கு அனுப்பிக் கொடுத்தார்

1860 ஆம் ஆண்டு அலெக்சாண்டர் கன்னிங்ஹாம் என்பவர்தான் கல்வெட்டுகளை ஆராய்வதற்காக உருவாக்கப்பட்ட Archaeological Survey of India (ASI) ஐத் தற்போதைய வடிவில் மாற்றியமைத்தார்.
பழங்கால மன்னர்கள் தங்களுடைய ஆட்சியில் குளம், கண்மாய்கள், மலைகள், குகைகளில் தங்கள் காலத்தின் நிகழ்வுகளை செதுக்கி வைப்பார்கள். இது ஏஎஸ்ஐ மூலம் “படிஎடுத்தல்” முறையில் காகிதத்தில் நகல் எடுக்கப்படுகிறது. இதை ஆய்வுக்குப் பயன்படுத்தி தொகுதிகளாக வெளியிடுகிறது ASI.
இந்தியாவில் உள்ள கல்வெட்டுக்கள் தமிழ், பெர்சியன், உருது, அரபி, கன்னடம் மொழிகளில் உள்ளன.
தற்பொழுது தமிழர்களின் கல்வெட்டுகள் பெரும்பாலும் கேரளாவிலும், கர்நாடாகாவிலும் அதிக அளவில் உள்ளன. ஆனால் அரசியல் காழ்புணர்ச்சியால் தமிழக கல்வெட்டுக்கள் அழிக்கப்பட்டும் சிதைக்கப்பட்டும் வருகிறது.
இது சம்பந்தமாக வெஸ்டர்ன் கிரின் பவுண்டேசன் இயக்குநர் அகமது கூறுகையில், “பண்டையக்காலத்தில் சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் ஆட்சிக்காலத்தில் பல கோயில்கள், கல்வெட்டுக்கள் பொறிக்கப்பட்டன. அந்தக் கல்வெட்டுகள் அனைத்தும் தற்பொழுது கேரளா, கர்நாடகாவில் உள்ளது.

தமிழக கல்வெட்டுகளை அரசியல் பின்புலம் கொண்டு அவர்கள் மறைத்து வருகிறார்கள். எனவே தமிழக அரசு கல்வெட்டுக்களை ஆய்வு மேற்கொள்வதற்குத் தமிழகத்தில் ஆய்வுக்கூடம் அமைக்கவேண்டும்.
தற்பொழுது மைசூரில் கல்வெட்டு ஆய்வு மையம் உள்ளது. அதே சீதோஷ்ண நிலையில் தமிழகத்தில் குன்னூர், ஊட்டி, கொடைக்கானல் ஆகிய இடங்கள் உள்ளன. எனவே தமிழக அரசு கல்வெட்டுகளை ஆய்வு மேற்கொண்டு நமது பாரம்பரியத்தை வருங்கால சந்ததியினருக்கு எடுத்து காட்ட நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும் என்று வரலாற்று ஆய்வாளர்கள் கருத்து தெரிவிக்கின்றனர்.

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 2
## ( திப்பு சுல்தானின் கொடைபெற்ற கொங்குநாட்டுக் கோயில்கள் )

ஹைதர் அலியும், திப்பு சுல்தானும் கொங்கு நாட்டில் பல பள்ளிவாசல்களிலும், தர்ஹாக்களிலும் தொழுகை நடத்தியதாகச் செவிவழிச் செய்திகளும், சில ஆவணங்களும் உள்ளன.
திப்பு சுல்தான் கொங்கு நாட்டு சைவ, வைணவக் கோயில்கட்கும் கொடையளித்துள்ளார்.
நாமக்கல் மாவட்டம், இராசிபுரம் வட்டம் மின்னக்கல்லில் ஒரு பார்ப்பனர் அக்கிரகாரம் உள்ளது. அப்பகுதிக்கு " உத்தண்ட மல்ல சமுத்திரம்" என்று பெயர். அங்கு பாமா ருக்மணி சமேத கோபாலகிருஷ்ணன் கோயில் உள்ளது. தந்தை ஹைதர் அலி காலத்திலேயே அவ்வூருக்கு வந்து திப்பு சுல்தான் பகதூர்' அவர்கள் அக்கோயிலுக்கு ஜோடிகை மானியமாக '575 ராஜகோபால வராகன்' கொடையளித்ததாக அக்கோயில் கல்வெட்டுக் கூறுகிறது.
ஈரோடு மாவட்டம் பெருந்துறை வட்டம், குன்னத்தூரை அடுத்துள்ள குறிச்சி என்ற ஊரில் 'செல்லாண்டியம்மன் கோயில்' உள்ளது. அக்கோயில் வழிபாட்டுக்காகவும், பூசாரிகள் நலத்திற்காகவும் திப்புசுல்தான் கொடை வழங்கியுள்ளார்.

அதற்குரிய ஆவணம் கறுப்பு கேன்வாஸ் துணியில் கன்னடத்தில் வெள்ளை எழுத்துக்களால் எழுதப்பட்டது. அந்த ஆவணம் மைசூரில் இந்திய கல்வெட்டுத் துறையின் முன்னாள் இயக்குநர் டாக்டர். கே.வி.ரமேஷ் அவர்கள் வசம் உள்ளது.
ஈரோடு மாவட்ம் பவானி வட்டத்தில் 'திப்பு செட்டி பாளையம்' என்ற ஊர்உள்ளது. அண்மையில் உள்ள ஜம்பையில் கிடைத்த பாடல் ஒன்றில் அவ்வூர் 'திப்பு செட்டி பாளையம்' என்று எழுதப்பட்டுள்ளது. திப்புசுல்தான் தொடர்பு இதனால் விளங்கும்.
ஆதாரம் :
@ "சேலம், நாமக்கல் மாவட்டக் கல்வெட்டுக்கள்" தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு.
@ பவானியாற்று பெருவெள்ளம்.

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 3
## (“திப்பு சுல்தான்: மதச்சார்பின்மையின் மகத்தான முன்னோடி”)

அண்மையில் நவம்பர், 10 (2017 ) தேதியிட்ட
“தி இந்து” நாளிதழில், “திப்பு சுல்தான்: மதச்சார்பின்மையின் மகத்தான முன்னோடி” என்னும் பெயரில் செல்வ புவியரசன் என்பவர் ஒரு கட்டுரை எழுதியிருந்தார்.
“கருத்துப்பேழை” என்னும் பகுதியின் கீழ் வந்திருந்த இக்கட்டுரையில், திப்பு சுல்தான் நஞ்சன்கூடு கோயிலில் கொடுத்த மரகதலிங்கமும், மேல்கோட்டை நரசிம்மர் கோயிலில் கொடுத்த முரசும் இன்றும் பார்வைக்கு இருக்கின்றன எனக் குறிப்பிட்டிருந்தார்.

அக்கொடைகளின் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளனவா எனத் தேடியதில், "எபிகிராஃபியா கர்நாடிகா" என்னும் கல்வெட்டுத் தொகுதியில் சில செய்திகள் கிடைக்கப்பெற்றன. அவற்றின் பகிர்வு இங்கே.

1) நஞ்சன்கூடு-மைசூர் அருகே நஞ்சுண்டேசுவரர் கோயில்

நஞ்சன்கூடு வட்டத்தில், கழலை (கன்னடத்தில் "கழலெ" என்று பயில்கிறது. சொல்லின் முடிவில் தமிழில் ஒலிக்கும் ஐகாரம், சில போது, கன்னடத்தில் எகரமாக ஒலிக்கின்றதைக் காண்கிறோம்.

எடுத்துக்காட்டாக, கடலை, கடலெ ஆகிறது. மழை, மழெ ஆகிறது) என்னும் ஊரில் உள்ள இலட்சுமிகாந்தர் கோயிலில் இருக்கும் வெள்ளியாலான நான்கு கிண்ணங்களிலும் (silver cups), ஒரு எச்சிற்படிக்கத்திலும் (silver spittoon) இரண்டு வரிகள் கொண்ட எழுத்துப்பொறிப்புகள் உள்ளன.

எழுத்துப்பொறிப்பு: (கன்னட எழுத்துகளில்) க.வெ. எண்: 34/1946

1 டிப்புசுல்தான பாத3சா0ர த3ர்ம

2 . தூக்க க3 84

தமிழில் கீழ்க்கண்டவாறு பெயர்க்கலாம்.

1 திப்புசுல்தான் அரசருடைய கொடை (தன்மம்)

2 எடை 84 க

தமிழில் திப்பு என நாம் ஒலித்தாலும், ஆங்கிலத்தில் 'டிப்பு' என்பதாகவே ஒலிக்கப்படுகிறது. இசுலாமியப்பெயர் டிப்பு என்னும் ஒலிப்பில் இருக்கக் கூடும்; எனவே தான், கன்னடத்தில் 'திப்பு' எனக் குறிப்பிடாமல் 'டிப்பு' என்பதாக எழுதியிருக்கிறார்கள் எனக் கருதலாம்.

அடுத்து இன்னொரு கொடைப்பொருள் பெரியதொரு வெள்ளித் தட்டாகும். அதன் எடை 422 க.

எழுத்துப்பொறிப்பு: (கன்னட எழுத்துகளில்) க.வெ. எண்: 35/1946

1 சுல்தானி பாத3சா0ஹர த4ர்ம

2 . தூக்க க3 422

தமிழில்:

1 சுல்தானி அரசருடைய கொடை (தன்மம்)

2 எடை 422 க

'பாத3சா0' என்னும் சொல் 'Bhadshah' என்னும் அரபுச் சொல்லின் கன்னடப் பெயர்ப்பு. அரசனைக் குறிக்கும் சொல். பொறிப்பின் இரண்டாவது வரியில் கொடைப் பொருளின் எடை காட்டப்பட்டுள்ளது. எடை என்பதற்குத் 'தூக்கம்' என்னும் சொல்லும் தமிழில் வழங்கும். இந்த நல்ல தமிழ்ச் சொல் கன்னடத்தில் இயல்பாய் வழங்குவது குறிப்பிடத்தக்கது.

'84 க' என்பதில் உள்ள 'க' என்பது ஓர் எடையின் அளவுப்பெயர். தமிழ்க் கல்வெட்டுகளில் காணப்படும் 'பலம்' என்பது போல. தஞ்சைக்கல்வெட்டுகளில், கோயில் கொடைப் பொருள்களான சர்க்கரை, புளி ஆகியன பலம் என்னும் அளவால் குறிக்கப்படுகின்றன.. எச்சிற்படிக்கம் கொடைப் பொருள்களுள் ஒன்றாகக் குறிக்கப்படுகின்றது.

வெற்றிலை பாக்கு உண்போர், எச்சிலைத் துப்புதற்காகப் பயன்படுத்துவது எச்சிற் படிக்கமாகும். எச்சிற் படிக்கத்தைக் கோயிலுக்குக் கொடையாக அளிக்கும் வழக்கத்தைத் தமிழகம், கருநாடகம் ஆகிய இரு பகுதிகளின் கல்வெட்டுகளும் உணர்த்துகின்றன.

இன்றும் நஞ்சன்கூடு கோயிலில் அவர் அளித்த மரகத லிங்கமும் மேல்கோட்டை நரசிம்மர் கோயிலில் அவர் வழங்கிய முரசும் பார்வைக்கு இருக்கின்றன.

மேலும், அவரது அரசாங்கத்தால் சமய நிறுவனங்களுக்கு வழங்கப்பட்ட கொடைகளில் 90% இந்து சமய நிறுவனங்களுக்கே அளிக்கப்பட்டன.

அதனால்தான் நரசிம்மர் கோயிலில் புராண நிகழ்ச்சிகளை விவரிக்கும் ஓவியங்களுக்கு இடையே திப்பு சுல்தானின் படத்தையும் வரைந்து பெருமை சேர்த்திருக்கிறார்கள்.

2) மேல்கோட்டை நம்மாழ்வார் கோயில்
மேல்கோட்டை மண்டியா மாவட்டத்தில் பாண்டவபுரம் தாலுக்காவில் இருக்கிறது. பெங்களூர் மைசூர் நெடுஞ்சாலையில் மாண்டயாவிலிரிந்து சுமார் 25 கிமீ தூரத்தில், 150 மீட்டர் உயரத்தில் உள்ள தட்டையான பகுதிதான் மேல்கோட்டை என்ற ஊர்.
மேல்கோட்டையில் உள்ள நம்மாழ்வார் கோயிலில் இரண்டு வெள்ளிக் கிண்ணங்கள் திப்புசுல்தானால் கொடையாக அளிக்கப்பட்டுள்ளன. அவற்றில் காணப்படும் பொறிப்பு கீழ்வருமாறு:
கன்னட எழுத்துகளில்:
1 டிப்புசுல்தான பாத3ச0ஹர த3ர்ம
தமிழில்:
1 திப்புசுல்தான் அரசருடைய கொடை (தன்மம்)
கொடைப்பொருளின் எடை அளவு இதில் கொடுக்கப்படவில்லை.
மேல்கோட்டை நரசிம்மர் கோயிலில் ஒரு பாறையில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு கீழ்க்கண்டவாறு உள்ளது:
1 ஶ்ரீ திருநாராய
2 ணஸ்வாமி ந்ருஸிம்ஹ ஸ்வாமிகெ3
3 மாஹெ தா3ரா இ
4 சால ஜலௌ
5 நம்
6 பிஜால்
7 விச்0வாவசு நாம ஸம்வத்ஸரத3 ஆஷாட3 சு0 7 லு
8 நவாப3 டிப்புசுல்தான் பா3ஷாயி அதி3ல்
9 ஆனெ 2 ஹெண்ணானெ 10 ஸ ஶ்ரீரங்கபட்ட
10 ணதிந்த3 ஹுஜூரநாயக்க ஶ்ரீநிவாசாச்சாரி ஹரிகா
11 ரப3க்ஷி சஹா மேலுகோட்டெ பாரபதி காசி0ராஉ மீ
12 ரஜைனு உன் முந்திட்டு வபிசி0யிதெ3
மேல்கோட்டை நரசிம்மர் மலைக்கோயிலுக்குத் திப்பு சுல்தான் இரண்டு ஆண் யானைகளையும், பத்துப் பெண்யானைகளையும் கொடையாக அளித்துள்ளார்.
திப்புசுல்தானின் அரசு அதிகாரி ஹுஜுர் நாயக்கன் என்னும் பதவியிலிருக்கும் சீநிவாசாச்சாரி என்பவரும், ஹரிகார பக்ஷி என்னும் பதவியிலிருப்பவரும், கோயில் நிருவாகிகளான (பாரபதி) காசிராவ், மீராஜைனு ஆகியோரிடம் கொடைப் பொருள்களை ஒப்படைக்கிறார்கள்.
ஜலௌ நம்பிஜால் என்னும் இசுலாமிய ஆண்டு, தாராய் மாதத்தில் கொடை அளிக்கப்படுகிறது. அதற்கு ஈடான இந்திய ஆண்டு விசுவாவசு. மாதம் ஆஷாடம். நாள், வளர்பிறையில் 7-ஆம் நாள். இதற்கு ஈடான ஆங்கிலத் தேதி ஜூலை 13, 1785 என நூல் குறிப்பு கூறுகிறது.
வரி-3 மாஹெ- மாதத்தைக் குறிக்கும் சொல்லாகலாம்.
வரி-8 திப்பு சுல்தான், நவாப் திப்பு சுல்தான் பாத்ஷா அதில் எனக் குறிக்கப்படுகிறார்.
வரி-9 ஆனெ=ஆனை=யானை; ஹெண்ணானெ=பெண் யானை. தமிழில் பெண்,
கன்னடத்தில் ஹெண் ஆனது.
கோயில் முரசில்-பாரசீக எழுத்துப் பொறிப்பு
மேல்கோட்டை நரசிம்மர் மலைக்கோயிலின் முரசின் மீது பாரசீக எழுத்துப் பொறிப்பு காணப்படுகிறது. அதன் பாடம் ஆங்கில எழுத்துகளில் கீழ்வருமாறு தரப்பட்டுள்ளது.
பாடம்:
1 Ya-Karrar
2 qita I duam nakkara I Zafar Ashar Ali

3 baksha nam Sirkar I hydari

4 Sal I Shita san 1215 Muhammad wazan Kham

5 haft

6 a(ra)tal si o haft nim dak

கல்வெட்டில் முரசு, நக்காரா எனக் குறிக்கப்படுகிறது. நகரா என்னும் வழக்கு, தமிழகத்தில் பரவலாக வழங்கும் பிறமொழிச்சொல் வழக்காகும்.

கல்வெட்டில் உள்ள 1215 என்பது நூல் குறிப்புப்படி மௌலூதி ஆண்டுக்கணக்காகும். அதற்கு ஈடான ஆங்கில ஆண்டு 1786. இது திப்பு சுல்தானின் ஆட்சிக்கால ஆண்டாகையால், இக்கொடை திப்புசுல்தானால் அளிக்கப்பட்டிருக்க வேண்டும் எனலாம்.

ஆனால், நூலில் கொடுக்கப்பட்டுள்ள விளக்கம், கொடை ஹைதர் அரசின் மேற்பார்வையில் செய்து முடிக்கப்பட்டது என்றும், முரசின் எடை ஏழு அதல் (ராத்தல்) முப்பத்தேழரை த3க் (தா3ங்கு) என்றும் கூறுகிறது. (ராத்தல் என்னும் எடை அளவு 1950-இன் பதின் ஆண்டுகளில் நம் ஊர்களில் பயன்பாட்டில் இருந்துள்ளது ).

3) ஸ்ரீரங்கபட்டணம்-அரங்கநாதர் கோயில்

ஸ்ரீரங்கபட்டணம் அரங்கநாதர் கோயிலில் ஏழு வெள்ளிக் கிண்ணங்களிலும், பஞ்சாரத்தி என்னும் பூசைப் பொருளிலும் திப்பு சுல்தானின் கொடைச் செய்தி பொறிக்கப்பட்டுள்ளது. ஒரு பெரிய கிண்ணத்தில் திப்பு சுல்தானின் கொடைச் செய்தி கீழ் வருமாறு பொறிக்கப்பட்டுள்ளது.

1 டிப்பு சுல்தான பாச்சாரவர த4ர்ம

2 ஸ்ரீகிருஷ்ண

இதிலும் ‘திப்பு’ என்னும் ஒலிப்பு இல்லை; ‘டிப்பு’ என்னும் ஒலிப்பே உள்ளது குறிப்பிடத்தக்கது. இந்தப் பொறிப்பில் கூடுதலாக ‘ஸ்ரீகிருஷ்ண’ என எழுதப்பட்டுள்ளது.

திப்பு சுல்தான் அளித்த கொடையை மைசூர் அரசரான மூன்றாம் கிருஷ்ணராஜ உடையார் மீண்டும் வழங்கினார் என நூல் குறிப்பு சொல்கிறது. பொறிப்பில் காணப்படும் 'பாச்சா' என்னும் சொல், ‘பாத்3ஷா’ என்னும் சொல்லின் கன்னடத் திரிபாகும்.

அடுத்து மூன்று கிண்ணங்களில், ஒரே ஒரு வரிப்பொறிப்பு உள்ளது.

1 டிப்பு சுல்தான பாச்சாரவர த4ர்ம

அடுத்து இன்னும் மூன்று கிண்ணங்களில் இரண்டு வரிகள் எழுதப்பட்டுள்ளன.

1 களுலெ காந்தைய்யனவர சேவெ

2 டிப்புசுல்தான பாச்சாரவர த4ர்ம

தமிழாக்கம் :

1 கழலை என்னும் ஊரைச் சேர்ந்த காந்தைய்யன் என்பவரின் சேவை

2 திப்புசுல்தான் அரசரின் தன்மம்

கொடை காந்தைய்யன் அளித்தது; அது, மீண்டும் திப்பு சுல்தானால் வழங்கப்பட்டது என்பது குறிப்பு. ஏற்கெனவே அளிக்கப்பட்ட கொடையை மீண்டும் வழங்கும் செயல் பற்றிய காரணம் தெரியவில்லை.

அடுத்து, பூசையின்போது பயன்படுத்தப்படும் “பஞ்சாரத்தி” (பஞ்ச+ஆரத்தி)யில் மூன்று வரிகள் பொறிக்கப்பட்டுள்ளன. அவை,

1 களல காந்தையன சேவெ

2 த3ண்டி3 சஹா தூக்க 167

3 டிப்புசுல்தான் பாச்சாரவர த4ர்ம

தமிழாக்கம் :

1 கழலை என்னும் ஊரைச் சேர்ந்த காந்தைய்யன் என்பவரின் சேவை

2 தண்டோடு சேர்ந்து எடை 167

3 திப்புசுல்தான் அரசரின் தன்மம்

காந்தையய்யன் அளித்த கொடை மீண்டும் திப்புசுல்தானால் வழங்கப்படுகிறது.

திப்புசுல்தானின் இறப்பு பற்றிய கல்வெட்டு

திப்பு சுல்தான், தன் தந்தை ஹைதர் அலி கானுக்கு எழுப்பிய மசோலியம் (MAUSOLEUM) என்னும் சமாதி சீரங்கபட்டணத்து வட்டத்தில் க3ஞ்சாம் என்னும் ஊரில் உள்ளது. சமாதியில், திப்புசுல்தானின் இறப்பு பற்றிய ஒரு கல்வெட்டு உள்ளது.

மொத்தம் பதிநான்கு வரிகளைக் கொண்ட இக்கல்வெட்டு, பாடல் வடிவில் எழுதப்பட்டுள்ளது. பாரசீகம், அரபு ஆகிய இரு மொழிகளிலும் எழுதப்பட்டுள்ளது. பாரசீகப் பாடல்களை இயற்றியவர்கள் மீர், உசைன், ஷஹீர் ஆகிய மூவர். அரபுப் பாடல்களை இயற்றியவர் சய்யித் ஷைக் ஜஃபரீ என்பவர்.

கல்வெட்டின் பாடல் வரிகள் கூறுவதை நூலின் பதிப்பாசிரியர் ஆங்கிலத்தில் பெயர்த்து எழுதியுள்ளார். அதன் கருத்துச் சுருக்கம் தமிழில் கீழ்வருமாறு:

“இறைவன் தன் கருணையைப் பெருமைமிகு சுல்தானுக்கு அருளியிருக்கிறான். சுல்தான் ஒரு வீரத் தியாகியாய் வீழ்ந்துபட்டனன். அவனுடைய குருதி இறைவனின் பாதையில் சிந்தியது. எதிர்பாராவண்ணம் இந்த நிகழ்வு ஜிகதா3 மாதத்தில் இருபத்தெட்டாம் நாள் நடந்தேறியது. (ஜிகதா3 மாதம் “தி4கதா3” என்றும் ஒலிக்கப்பெறுகிறது). மீர் சொல்கிறார் : ஐதரின் மகன் சுல்தான் கொல்லப்படுகின்ற நாளில் இசுலாத்தின் ஒளியும் நம்பிக்கையும் ஒரு சேர இவ்வுலகை விட்டுப் பிரிந்தன. முகம்மதுவின் சமயத்துக்காகவே திப்பு வீழ்ந்தான். அவ்வீரன் உலகிலிருந்து மறைந்த போது ஒரு குரல் கேட்டது-” வாள் மறைந்து விட்டது”.

ஷஹீர் சொல்கிறார் : (இசுலாத்தின்) நம்பிக்கை-நம் யுகத்தின் அரசன் மறைந்தனன்.”

திப்பு இறந்த ஆண்டு

திப்பு இறந்த ஆண்டு, இக்கல்வெட்டுப் பாடலில் நேரடியாக எண்களால் குறிக்கப்படாமல், பாரசீக எழுத்துகளுக்கு எண் வடிவம் கொடுத்து எழுதப்படும் ஒரு வாய்ப்பாடு வழியே குறியீடாகக் குறிக்கப்பட்டுள்ளது இக்கல்வெட்டின் சிறப்பாகும். இத்தகைய முறைக்கு ஆங்கிலத்தில் “CHRONOGRAM” என்பது பெயர். குறியீட்டு முறையில் கல்வெட்டுப் பாடலில் குறிக்கப்பட்ட ஹிஜிரி ஆண்டு 1213 என்பதாகும். ஹிஜிரி ஆண்டு 1213, ஜிகதா3 மாதம், இருபத்தெட்டாம் நாளுக்கு இணையான ஆங்கில நாள் 1799, மே மாதம் 4-ஆம் நாள்.

எழுத்துக் குறியீட்டில் காலக்கணக்கு

இக்கல்வெட்டில் காணப்படுவது போன்ற, குறியீட்டு முறையில் காலக் கணக்கை எழுதும் மரபு நம் நாட்டிலும் வடமொழியாளர்களிடையே உள்ளது. மூன்று வகையான முறைகள் வழக்கத்தில் உள்ளன. அவையாவன:

கடபயாதி3

சித்3த4மாத்ரிகா

பூ4த சங்(க்)யா

கடபயாதி3 முறை

இந்த முறையில், சமற்கிருத உயிர்மெய்எழுத்துகள் ஒரு வடிவத்துள் அமைக்கப்படுகின்றன.

க-ச வரிசை: க1 க2 க3 க4 ங ச1 ச2 ஜ1 ஜ2 ஞ

குறியீட்டெண் : 1 2 3 4 5 6 7 8 9 0

ட-த வரிசை: ட1 ட2 ட3 ட4 ண த1 த2 த3 த4 ந

குறியீட்டெண் : 1 2 3 4 5 6 7 8 9 0

ப வரிசை : ப1 ப2 ப3 ப4 ம

குறியீட்டெண் : 1 2 3 4 5

சித்3த4மாத்ரிகா முறை

இந்த முறையில் சமற்கிருத உயிர் எழுத்துகள் ஒரு வடிவத்துள் அமைக்கப்படுகின்றன.

அ ஆ இ ஈ உ ஊ ஏ ஐ ஓ ஔ அம் அஹ

1 2 3 4 5 6 7 8 9 10 11 12

இம்முறையில் பன்னிரண்டு எண்கள் வரை குறிக்கப்படுவதால், பா3ராக2டி3 (Baaraakhadi) எனவும், து3வாத3சாக்ஷரி (dvaadasaakshari) எனவும் அழைக்கப்படுவதுண்டு.

பூ4த சங்(க்)யா முறை

இந்த முறையில், சொற்களுக்கு எண் மதிப்பு அளிக்கப்படும். அதாவது, எண்களோடு தொடர்புடைய சொற்கள் குறியீடாக அமையும். எடுத்துக்காட்டாக, விசும்பு (ஆகாசம்) ஒன்று.

கண்கள் (நயனம்) இரண்டு.

உலகு (லோகம்) மூன்று.

மறைகள் (வேதங்கள்) நான்கு.

பொறிகள் (இந்திரியம்) ஐந்து.

காலம் (பருவம்-ருது) ஆறு.

இசை (ஸ்வரம்) ஏழு.

மங்கலம் எட்டு

கோள் (கிரகம்) ஒன்பது.

உரு (அவதாரம்) பத்து.

உருத்திரர் பதினொன்று.

கதிரவன் (ஆதித்யா) பன்னிரண்டு.

மேற்படி சொற்குறியீடுகள் இடமிருந்து வலமாகக் காணப்படும். அவற்றுக்கான எண்களை இடமிருந்து வலமாக எழுதியபின்னர், மற்றொரு முறை வலமிருந்து இடமாக எழுதக் கிடைப்பது நம் இலக்குக்குரிய எண்ணாகும்.

எடுத்துக்காட்டாக, சக ஆண்டு 1536. சொற்குறியீட்டில் இது,

ருது லோகம் இந்திரியம் ஆகாசம்

6 3 5 1 -> 6351

என்பதாக அமையும். 6351 என்னும் இந்த எண்ணை வலம்-இடமாக மாற்றி எழுத, சரியான சக ஆண்டு (1536) கிடைக்கும்.

நஞ்சன்கூடு இராகவேந்திரர் மடத்தில் பதினாறு செப்புப் பட்டையங்கள் உள்ளன. அவை சமற்கிருத மொழியில் தெலுங்கு எழுத்தில் எழுதப்பெற்றவை. அவற்றில் பலவற்றில் பூ4தசங்(க்)யா முறையில் சக ஆண்டு குறிக்கப்பட்டுள்ளது. ஒரு செப்பேட்டில், கீழ்க்காணும் வரிகளில் சக ஆண்டுக்குறிப்பு வருவதைக்காண்க:

வரி 42 …சின்ன சவப்பாக்2ய மஹீப தி

வரி 43 லக ஸ்வயம்| ரித்வக்3நிபா3ணபூ4ஸங்க்யாக3ணிதே

வரி 44 |ச0கஜந்மநா

இதில், ரித்வக்3நிபா3ணபூ4 என்பது சக ஆண்டுக்குறிப்பு. இதை,

ரித் வக்3நி பா3ண பூ4 என்று முதலில் பிரித்துப் பின்னர்,

ரிது அக்3நி பா3ண பூ4 என அமைத்துப் பொருள் காணவேண்டும்.

ரிது – பருவம் = 6

அக்3நி – தீ = 3

பா3ண – அம்பு = 5

பூ4 – புவி (பூ4மி) = 1

கிடைக்கப்பெறும் எண் : 6351. வலம்-இடமாக மாற்றி எழுத, சரியான சக ஆண்டு (1536) கிடைக்கும்.

ரிது (ருது) – ஆறு: வசந்த, கிரீஷ்ம, வர்ஷ, சரத், ஹேமந்த, ச்சி.

அக்3நி (தீ) – மூன்று. புறநானூற்றின் இரண்டாம் பாடலில், பொற்கோட்டு இமயத்தில்,

“சிறு தலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தி யந்தணர் அருங்கட னிறுக்கும்
முத்தீ விளக்கிற் றுஞ்சும்”

என வரும் வரிகளுக்கு விளக்கவுரை அளிக்கும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை அவர்கள், “முத்தீயாவன : ஆசுவனீயம், காருகபத்தியம், தென்றிசையங்கி” எனக் கூறுவார்.
பூ4 (புவி) ஒன்று என நாம் அறிவோம். ஆனால், பா3ண (அம்பு) ஐந்து யாவை எனத் தெரியவில்லை.
குறிப்புதவி :
1 எபிகிராஃபியா கர்நாடிகா (EPIGRAPHIA CARNATICA) தொகுதிகள்-3, 6.
2 தென்னிந்தியக் கோயில் சாசனங்கள் – தி.நா. சுப்பிரமணியன்.

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 4
## ( கல்வெட்டுக்களின் தோற்றமும் வளர்ச்சியும் )

பண்டைத் தமிழ் மக்கள், பகைவர் முன் வந்து அஞ்சாமல் ஆற்றலோடு போர்புரிந்து இறந்துபட்ட வீரர்களுக்கு, இடங்களிலாதல் வேறிடங்களிலாதல் நடுகல் ஒன்றமைத்து விழா நடத்திப் பாராட்டி வந்தனர்.
அவ்வுண்மையைத் தொல்காப்பியத்திலுள்ள, 'காட்சி கால் கோள் நீர்ப்படை நடுகல் சீர்த்தகு சிறப்பில் பெரும்படை வாழ்த்தலென்-றிரு மூன்று வகையிற் கல்லொடு புணர' என்னும் வெட்சித்திணைச் சூத்திரப் பகுதியால் உணரலாம்.

அந்நடுகல்லின் மேல் இறந்த வீரர்களின் பெயரும் பெருமையும் பொறிக்கப்படும் வழக்கம் கடைச்சங்க நாளில் இருந்தது என்பது சங்கத்துச் சான்றோர் பாடல்களால் புலப்படுகிறது.
அதனை, 'நல்லமர்க்கடந்த நாணுடை மறவர் பெயரும் பீடும் எழுதி யதர்தொறும்-பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்' என்னும் அகநானூற்றுப் பாடலாலும், (அகம். 67)
'அணிமயிற்பீலி சூட்டிப் பெயர் பொறித்தினிநட்டனரே கல்லும்' என்னும் புறநானூற்றுப் பாடலாலும் (புறம். 264) அறியலாம்.
அந்நூல்களில் காணப்படும் ஆதாரங்களைக் கூர்ந்து நோக்குங்கால், கடைச்சங்க காலத்தில் பகைவரோடு அஞ்சாது போர் புரிந்து புகழுடன் இறந்த வீரர்களின் நடுகற்களின் மேல் வரையப்பெற்ற அவர்களுடைய பெயரும் பீடுமே நம் நாட்டில் முதலில் தோன்றிய தமிழ்ச் சாசனங்கள் என்று ஐயமின்றிக் கூறலாம்.
கி.பி. ஏழாம் நூற்றாண்டின் இறுதியிலும் எட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் நிலவிய சேரமான் பெருமாள் நாயனார், தாம் இயற்றிய திருவாரூர் மும்மணிக்கோவையில், 'பட்டோர் பெயரும் ஆற்றலுமெழுதி-நட்ட கல்லும் மூதூர் நத்தமும்' என்று கூறியிருத்தலால் அவ்வழக்கம் கடைச்சங்க காலத்திற்குப் பின்னரும் தொடர்ந்து வந்துள்ளது.

பத்ருப் போர் கிபி 624 மார்ச் 17 -ல் நடந்த போர். இஸ்லாமிய வரலாற்றில் மிக முக்கியமான, இஸ்லாமிய எழுச்சியின் மைல்கல்லாகத் திகழ்ந்த அற்புதமான ஒரு தியாக நிகழ்வு.
நாமெல்லாம் இன்று இஸ்லாமியர்களாக வியாபித்திருப்பதற்கு காரணமான ஒரு நிகழ்ச்சி.
தேவையான அளவு முன்னேற்பாடுகள் இல்லாத சுமார் 313 நபர்கள், ஏறத்தாழ 1000 பேர்கள் கொண்ட ஒரு பெரும் படையை போர்க்களத்தில் எதிர் கொண்டு ஈமானிய பலத்தாலும், தியாக குணத்தாலும் அல்லாஹ்வின் உதவியைப் பெற்று சிதறடித்த உன்னத வரலாறு அதுவாகும்.
நடுகல்லின் மேல் இறந்த வீரர்களின் பெயரும் பெருமையும் பொறிக்கப்படும் வழக்கம் கடைச்சங்க நாளில் இருந்தது என்பதை அகநானூறு மற்றும் புறநானூறில் குறிப்பிட்டு சங்கத்துச் சான்றோர் பாடல்களால் புலப்படுகிறது என்பதை கண்டோம்

இதே மாதிரி பத்ருப் போரில் கலந்து இஸ்லாமியர்களில் 14 பேர்கள் ஷஹீதாகிறார்கள். அவர்களின் பெயர்கள் இன்றும் பத்ரு களத்தில் பொறிக்கப்பட்டு கண்ணியப்படுத்தப்படுகிறது மட்டும் அல்லாது அவர்களின் வீர தீர யுத்தசெயல்கள் குறித்தும் அன்றைய அரேபியாவில் நபிகளார் காலத்தில் நபிகளார் முன்பே பாடப்பட்டுள்ளது . இப்போரில் அல்லாஹ் வெற்றியை முஸ்லிம்களுக்கு கொடுத்தான். முஸ்லிம்கள் தரப்பில் 14 பேர் ஷஹீதானார்கள். அவர்களின் திருநாமங்கள்:

1. முபஷ்ஷிர் இப்னு அப்துல் முன்கதிர் ரலியல்லாஹு அன்ஹு
2. ரபீஃஉ இப்னு முஅல்லா ரலியல்லாஹு அன்ஹு
3. ஸஃது இப்னு கய்சமா ரலியல்லாஹு அன்ஹு
4. யஜீது இப்னு ஹாரிஸ் ரலியல்லாஹு அன்ஹு
5. உபைதா இப்னு ஹாரிது ரலியல்லாஹு அன்ஹு
6. ஆகில் இப்னு புகைரு ரலியல்லாஹு அன்ஹு
7. உமைர் இப்னு ஹுமாம் ரலியல்லாஹு அன்ஹு
8. முஅவ்விது இப்னு ஹாரிஸ் ரலியல்லாஹு அன்ஹு
9. திஷ்ஷிமாலைன் இப்னு அம்து அம்ரு ரலியல்லாஹு அன்ஹு
10. மிஹ்ஜா இப்னு சாலிஹ் ரலியல்லாஹு அன்ஹு
11. உமைர் இப்னு அபீவக்காஸ் ரலியல்லாஹு அன்ஹு
12. ஹாரிஸா இப்னு சுராக்கா ரலியல்லாஹு அன்ஹு
13. சஃப்வான் இப்னு வஹப் ரலியல்லாஹு அன்ஹு
14. அவ்ஃப் இப்னு ஹாரித் ரலியல்லாஹு அன்ஹு.

புறநானூறில் தமிழர்கள் யுத்தத்தம் செய்வதற்கு ஆர்வமூட்ட போர்பரணி பாடியிருக்கிறார்கள் அதுபோல ...
அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) அவர்கள் போர்ப்பரணி பாடிப்யிருப்பதை ஹதீஸ்களின் வாயிலாக அறிய முடிகிறது
ருபய்யிஉ பின்த் முஅவ்வித்(ரலி) அறிவித்தார்.
எனக்குத் திருமணம் நடந்த அன்று காலை நபி(ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள்.
(இந்த ஹதீஸைக் கேட்டுக் கொண்டிருந்த காலித் இப்னு தக்வான் - ரஹ் - அவர்களிடம்) 'எனக்கருகில் நீங்கள் அமர்ந்திருப்பது போன்று நபி(ஸல்) அவர்கள் என்னுடைய விரிப்பின் மீது அமர்ந்திருந்தார்கள்' (என்று ருபய்யிஉ கூறினார்கள்)
அங்கு சில (முஸ்லிம்) சிறுமிகள் (சலங்கையில்லா) கஞ்சிராக்களை அடித்துக் கொண்டு பத்ருப் போரில் கொல்லப்பட்ட தங்கள் முன்னோர்களைப் புகழ்ந்து (இரங்கல்) பாடிக் கொண்டிருந்தனர்.
அவர்களில் ஒரு சிறுமி, 'எங்களிடையே ஓர் இறைத்தூதர் இருக்கிறார். அவர் நாளை நடக்க விருப்பதையும் அறிவார்' என்று கூறினாள்.
உடனே நபி(ஸல்) அவர்கள், 'இப்படிச் சொல்லதே. (இதைவிடுத்து) முன்பு நீ சொல்லிக் கொண்டிருந்ததை (வேண்டுமானால்) சொல்' என்று கூறினார்கள். ( புகாரி : 4001)
இதிலிருந்து பத்ரு யுத்த வீரர்களின் தீரச் செயல்கள் பாடலாகப் படுவதை விரும்பியிருக்கிறார்கள் என்பதை அறிய முடிகிறது

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 5
## மங்களேசுவரியம்மனுக்கு சையத் இஸ்மாயில் செய்த வெண்கலத் திருவாசி

இடம் : இராமநாதபுரம் மாவட்டம், இராமநாதபுரம் வட்டம், உத்தரகோசமங்கை மங்களேசுவரியம்மன் சன்னதி வாயில் திருவாசியில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துக்கள்.

காலம் 1924

செய்தி : மதுரையில் மானேஜராக இருந்த சையத் இஸ்மாயில் சாயபு அவர்கள் 230 விளக்குகளுடன் முகப்பில் யாழி முகம் கொண்ட வெண்கலத் திருவாசி ஒன்றை மங்களேசுவரியம்மனுக்குக் கொடையாக அளித்தார். அதன் எடையும், வேலை செய்த ஆசாரியின் பெயரும் அதில் பொறிக்கப்பட்டுள்ளது.

கல்வெட்டு

1. சாலிவாகன சகாப்தம் 1845 சரியான குரோதி வருஷம் ஆவணி மாதம்
2. 27 தேதி சோம வாரமும் கிருஷ்ண பட்சத்துத் துவாதசியும் பூச நட்சத்திரமும்
3. வரிகநாம யோகமும் கவுலபாலகரணமும் கூடிய சுப தினத்தில்
4. திருவுத்தரகோச மங்கை ஸ்ரீமங்களேசுவரியம்மன் சன்னதிக்கு மதுரை
5. யிலிருக்கும் மகாராசராசஸ்ரீ சையது யிசுமாயில் சாயபு அவர்கள் மானேஜர் அதிகாரத்தில் மேற்படி கோயில் அமிசத்திலிருந்து செய்து வை
6. த்த 230 விளக்குள்ள வெங்கல யாழிமுகத் திருவாச்சி
7. க்கு சேர்
8. 842 3/4
9. சிலப்பம் வீரபுத்திர ஆசா
10. ரி சுஹஸ்த லிகிதம்

- ஆவணம், 7. சூலை... 1996 தமிழகத் தொல்லியக் கழகம், பக்கம் 122

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 7
## (அதிராம்பட்டினம் தர்காவிற்கு செவ்வப்ப நாயக்கர் கொடை)

அதிராம்பட்டினம் கடற்கரை தெருவில் உள்ள தர்காவின் பெயர் ஹசரத் ஹாஜா செய்கு அலாவுதீன் ஜிஸ்தியா வலியுல்லா சாகிப் தர்கா என்பதாகும்.

அந்தச் சிறப்புமிகும் தர்காவின் நுழைவாயிலின் மரநிலை சேதமடைந்து விழுந்தபோது செப்பேடு ஒன்று வெளிப்பட்டது. அச்செப்பேட்டை தர்கா அண்ணாவியரால் படிக்கப்பட்டது.

தஞ்சை நாயக்க மரபின் முதல் மன்னர் செவ்வப்ப நாயக்கர். அவர் 29.12.1531ஆம் ஆண்டு அந்தத் தர்காவிற்கு அதிராமப் பட்டினம் கிராமம் முழுவதையும் சர்வ மானியமாகக் கொடுத்தார்.

அதாவது அதிராமப்பட்டினத்தின் சகலவிதமான வரிகளையும் அரசுக்குச் செலுத்த வேண்டியதில்லை. ஆனால் எல்லா வரியையும் தர்காவிற்குக் கொடுக்க வேண்டும்.

சாகிப் அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்ட இடத்திற்கு மகிழங்கோட்டை என்று பெயர். அங்கு கிணறு வெட்டிக் கொடுக்கப்பட்டது. ஆண்டு தோறும் தவறாமல் கந்தூரி நடத்த வேண்டும். தர்காவின் நிர்வாகிகள் சாகிப் அவர்களின் குமாரர்கட்கும், பேரன்மார்கட்கும் வழிவழியாகக் கந்தூரி கொடுத்துவர வேண்டும்.

தீங்கு செய்பவர்கள் ரௌரவாதி நரகத்தை அடைவார்கள் என்று எழுதப்பட்டுள்ளது.

'ஸ்ரீராய' என்று அரசர் கையெழுத்திட்டுள்ளார். தொடக்கத்தில் இந்தச் செப்பேட்டில் "இராமானுஜய நம" என்று எழுதப்பட்டுள்ளது. இது தஞ்சை நாயக்கரின் முதல் செப்பேடாகும்.

தஞ்சையில் அரசர் ஆகும் முன்பு விசய நகர ஆட்சியின்போது இக்கொடை அளிக்கப்பட்டிருக்கலாம். அதனால்தான் விசயநகர மன்னன் அச்சுதராயர் (1529-1542) பெயரோடு சேர்த்து அச்சுத செவ்வப்ப நாயக்கர் என்று செப்பேட்டில் எழுதப்பட்டுள்ளது.
ஆதாரம் : "தமிழ்நாட்டு செப்பேடுகள் " பகுதி - 2 பக் 57 ; ச.கிருஷ்ணமூர்த்தி

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 8
## ( இராமநாதபுரம் ஆவணங்களில் பள்ளிவாசல் கொடைகள் )

இராமநாதபுரம் சேதுபதிகளின் செப்பேடுகள் கல்வெட்டுகள் இல்லாமல் அரண்மனையில் ஏராளமான ஓலை ஆவணங்கள். உள்ளன. அவை பெரும்பாலும் கோயில்கட்குக் கொடுத்த கொடைகளைக் குறிக்கின்றன. சிறுபான்மை தனிப்பட்டவர்கட்கு அளிக்கப்பட்ட கொடைகளைக் குறிக்கின்றன.
அவற்றில் பல்வேறு ஆவணங்கள் இசுலாம் தொடர்பானவை: பூலாங்கால் பள்ளிவாசலுக்கு முத்து விசைய ரகுநாத சேதுபதியும் முத்துவிசைய ரகுநாத செல்லத் தேவரய்யா சேதுபதியும் நிலக் கொடை வழங்கியுள்ளனர். முத்துவிஜயரகுநாத சேதுபதி அல்லது திருவுடையாத் தேவர் (ஆட்சிக் காலம் 1713-1725) என்பவர் இராமநாதபுரம் சமஸ்தான மன்னராவார். இவர் முத்து வயிரவநாத சேதுபதிக்கு அடுத்து ஆட்சிக்கு வந்தவராவார். இவர் முத்துவயிரவநாத சேதுபதியின் தம்பி ஆவார்.

அபிராமம் பள்ளிவாசலுக்குத் திருவிளக்குக்காக முகவூரணி அய்யா நாளையில் ஆதிநாராயணபிள்ளை என்பவர் நிலம் வாங்கிக் கொடையாக அளித்தார்.
நாரணமங்கலம் சுல்தானுக்கு குமார முத்துவிசைய ரகுநாத சேதுபதி நிலக் கொடையளித்தார். இதுபற்றிய செப்பேடு உள்ளது என்றும் எழுதப்பட்டுள்ளது.
தேரூர் தாலுக்கா தொண்டி ஆலிம்ஷா பள்ளிவாசல் பற்றிய கொடைச் செய்தி நவாபு ஆணையில் உள்ளது என்று பள்ளிவாசல் லெப்பை ஆலிம்ஷா கூறிய செய்தி ஓலையில் எழுதப்பட்டுள்ளது.
மற்றும் பூலாங்கால், போந்தப்புளி, தொண்டி, காட்டுபாவா சத்திரம், புல்லுக்குடி, திருச்சுழியல், காரேந்தல், சொக்கிகுளம், கொக்காடி, நாடாகுளம், குச்சனேரி, லட்சுமிபுரம் போன்ற பல ஊர்களில் உள்ள பள்ளிவாசல்களுக்கும், தர்காக்களுக்கும் நிலம் ,பொன், பொருள் கொடையாகச் சேதுபதி மன்னர்களால் கொடுக்கப்பட்டுள்ளன.

திருவிளக்குகள் ஏற்றவும், கந்தூரி நடத்தவும் அன்னதானம் ஆடை அளிக்கவும் இக்கொடைகள் பயன்படுத்தப்பட்டன.
ஓலை ஆவணங்கள்
1) பூலாங்கால் பள்ளிவாசல் கொடை பூலாங்கால் கிராமத்து நிலத்தில் சில பகுதிகளையும் பூலாங்கால் பள்ளிவாசலுக்காகப் பிலவ வருடம் தை மாதம் 17ஆம் தேதி முத்து விசைய ரெகுநாத சேதுபதியும் வெகுதானிய வருடம் மாசி மாதம் 13ஆம் தேதி முத்து விசைய ரெகுநாத செல்லத் தேவரய்யா சேதுபதியும் அளித்துள்ளனர் - 2 ஓலை.
2) அபிராமம் பள்ளி வாசல் கொடை
அபிராமம் பள்ளிவாசலுக்கு அபிராமம் ஊர் நிலம் மானியம். பள்ளிவாசல் திருவிளக்குக்கு முகவூரணி அய்யா நாளையில் ஆதிநாராயணபிள்ளை நிலம் வாங்கி விட்டது பிங்கள வருடம் ஆடி 8 தேதி.
3) நாரணமங்கலம் சுல்தான் மானியம்

இராசசிங்கமங்கலம் தாலுகா பொட்டக வயல் மாகாணத்தைச் சேர்ந்த நாரணமங்கலத்தில் சுல்தானுக்கு நில மானியம் குமார முத்து விசைய ரெகுநாத சேதுபதி விட்டது. சகம் 1702 சார்வரி வருடம் மாசி 24 தேதி - தாமிர சாசனம்.

4) தேரூர் தாலுகா தொண்டி ஆலிம்ஷா பள்ளிவாசல் கொடை

ஆலிம்ஷா பள்ளிவாசல் திருவிளக்கு பூசை நெய்வேத்தியம் சிலவுக்காக தேவதானம் புல்லுக்குடி கயிலாதநாதசுவாமி கிராமம் தண்டலக்குடியில் நிலம் சர்வ மானியம். ஊர்கள் ஆக்களூர் மாகாணத்தைச் சேர்ந்தது.

.இதற்கு நவாபு நாளையில் வாங்கிய பாலானாக் காகிதம் தஸ்தாவேசுகள் உண்டு. மதுரைக்கு ரிஜிஸ்டாரில் பதியும்படியாய் மேற்படி தாஸ்தாவேசுகளை அனுப்பி வைத்திருக்கிறதாக மேற்படி பள்ளிவாசல் லெப்பை ஆலிம்ஷா சொன்னதாய் தேரூர்

சேவுகன் பெருமான் வந்து சொன்னது.

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 9
## ( சிவகங்கை வரலாற்றில் மொட்டைப் பக்கிரி என்ற இஸ்லாமிய ஞானி )

முத்து வடுகநாத தேவர் (1772) என்பவர் சிவகங்கை சமஸ்தானம் ஆண்ட இரண்டாம் மன்னர் ஆவார். 1749-இல் இவரின் தந்தையான சசிவர்ணத் தேவர் இறந்தவுடன் இவர் சிவகங்கைச் சீமையின் ஆட்சிப்பொறுப்பை ஏற்றார். வெள்ளையரை எதிர்த்து விடுதலைக்குரல் கொடுத்த பாளையக்காரர்கள் வரிசையில் இவர் குறிப்பிடத்தக்கவர். 1752-இல் மதுரையை ஆண்ட விசயகுமார நாயக்கர் மீது பரங்கியர் கேப்டன் கோப் தலைமையில் போர் தொடுத்துக் கைப்பற்றினர். அதையறிந்த முத்துவடுகநாதர் மதுரை மீது போர் தொடுத்து அங்கிருந்த கேப்டன் கோப்பையும் அவர் படைகளையும் விரட்டியடித்து மீண்டும் விசயகுமார நாயக்கரையே மதுரை மன்னராகப் பதவி அமர்த்தினார்.

இதனாலேயே நவாப், பரங்கி மற்றும் கும்பினி படைகளுக்குச் சிவகங்கை மீது கோபம் இருந்தது. இச்சமயத்தில் கும்பினியர் தலைவனாக லார்டு டீகார்ட் என்பவன் பதவியேற்றான். முதல் வேலையாக முத்துவடுகநாதர் சிவகங்கை சார்பாகக் கும்பினியருக்குத் திரை செலுத்த வேண்டும் என்று தூதனுப்பினான். அதை முத்துவடுகர் மறுத்ததால் கான்சாகிப் மூலம் கொலை மிரட்டலும் விட்டுப் பார்த்தான் டீகார்டு. இரண்டுக்குமே இவர் பணியாததால் 1763-ஆம் ஆண்டில் மன்னர் காளையார் கோவிலுக்குச் சென்ற சமயம் பார்த்துச் சிவகங்கை மீது போர் தொடுத்துச் சூறையாடினான். இதையறிந்த முத்துவடுகநாதர் கலவரத்தைத் தடுத்துக் கான்சாகிப்பையும் விரட்டினார்.

அதே நேரத்தில் பரங்கிப்படை ஒன்று இராமநாதபுரத்தைக் கைப்பற்றியது. அப்போது இராமநாதபுரத்தின் பரங்கித் தளபதியாக மார்டினசு பொறுப்பேற்றான். அதற்கு உதவியவன் இராமநாதபுர தளபதிகளில் ஒருவனான இராயப்பன் என்றவனே. தனக்கு முத்துவடுகநாதர் மந்திரி பதவி அளிக்காததால் தான் அவன் இந்தத் துரோகச் செயலில் இறங்கியதாகத் தெரிகிறது.

அதன்பிறகு இதுவரை சிவகங்கைக்குக் கட்டாத வரியைத் திருப்பித் தருமாறும் இராமநாதபுரத்தைக் குடக்கூலிக்குத் தருமாறும் செய்தியனுப்பினான். அதற்கு மறுத்து இராமநாதபுரத்தின் மீது படையெடுக்க மறவர் சீமையைச் சேர்ந்தவர்களின் உதவியை நாடினார் முத்துவடுகநாதர்.

மறவர் சீமைப் படைகளுடன் சேர்ந்து பரங்கியர்களின் துப்பாக்கிப் படைமீதும் பீரங்கிப்படை மீதும் போர் தொடுத்து இராமநாதபுரத்தை மீண்டும் தன் ஆட்சியின் கீழ் கொண்டுவந்தார்.

இனிமேல் வடுகநாதரை வெல்ல முடியாது என்றறிந்த பரங்கியர் அன்றிரவே சிவகங்கை மீது இனி போர் தொடுப்பதில்லை எனச் சமாதானம் பேசினர். அதை உண்மையென வடுகநாதர் நம்பினார்.
சமாதானம் என்று கூறியதால் பாதுகாப்புகளைக் குறைத்து விட்டு இதுவரை இறந்த வீரர்களுக்கு அஞ்சலி செலுத்த காளையர் கோவிலுக்குச் சென்றுவிட்டார் வடுகநாதர்.
இதையறிந்த பரங்கிப்படை தன்னை இரண்டாகப் பிரித்துக் கொண்டு ஒன்றை காளையர் கோவிலுக்கு முத்து வடுகநாதரைக் கொல்ல பான்சோர் என்ற பரங்கித் தளபதியின் கீழும் மற்றொரு பிரிவை தாண்டவராய பிள்ளை படை மீதும் செலுத்திப் போர் தொடுத்தது.
கோவிலுக்குச் சென்றதால் ஆயுதம் எடுத்துக் கொள்ளாமல் சென்ற வடுகநாதரை பான்சோர் துப்பாக்கியால் சுட்டுக்கொன்றான்.
சமாதானம் பேசுவதாகப் பொய் கூறிவிட்டுக் கோவிலுக்கு ஆயுதமின்றிச் சென்ற நேரம் பார்த்து முத்துவடுகநாதரைக் கொன்றுவிட்டுச் சிவகங்கையும் காளையர்கோவிலையும் வெற்றி கொண்டதாகப் பரங்கியர் தம்பட்டம் அடித்துக்கொண்டனர். அந்தச் சதிச்செயலுக்கு லண்டன் நகரவாசிகள் வெட்கத்துடன் வெளியிட்ட ஆங்கில நாளிதழ் செய்திகளே சாட்சி.
முத்துவடுகநாதர் இறந்ததை அறிந்த அவரின் மனைவியான வேலு நாச்சியார் தன் மகளான வெள்ளச்சி நாச்சியார் மற்றும் மருது சகோதரர்களுடன் சேர்ந்து விருப்பாச்சிக்குத் தப்பிச்சென்றார்.
அதன்பிறகு ஹைதர் அலி உதவிபெற்று மீண்டும் சிவகங்கை, இராமநாதபுரம், காளையார்கோவில் போன்ற இடங்களைக் கைப்பற்றி 4 ஆண்டுகள் அரசாண்டார்.
மொட்டைப் பக்கிரி தர்காவிற்கு சிவகங்கை மன்னர் கொடை
சிவகங்கையில் 'மொட்டைப் பக்கிரி' என்று மக்களால் அன்புடன் அழைக்கப்பட்ட இஸ்லாமிய ஞானி ஒருவர் இருந்தார். அவர் செய்த பலவிதமான அற்புதங்களை இன்றும் சிவகங்கை மக்கள் நினைவுகூர்கிறார்கள்.
இரவு தூங்கும்போது அவர் உடல் உறுப்புகள் வேறு வேறாகச் சிதறிக் கிடக்குமாம். காலையில் எழுந்து வருவாராம். அவருக்கு ஒரு தர்கா கட்டப்பட்டது. அதற்கு 'மொட்டைப் பக்கிரி தர்கா' என்றே பெயர்.
அதற்குச் சிவகங்கை மன்னர் அரசு நிலையிட்ட முத்து வடுகநாதர் பெரிய உடையத்தேவர் பல கொடைகளை வழங்கி செப்பேடும் வெட்டித் தந்துள்ளார்.

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 10
## ( தஞ்சை பெரிய கோயிலில் சோனகன் சாவூர் பரஞ்சோதி )

மாமன்னன் முதலாம் இராசராசன் காலத்தில் (985-1014) கட்டப்பட்ட ஈடும் எடுப்பும் அற்ற தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் கருவிகளுக்கும் தளிச்சேரிப் பெண்டுகளுக்கும் நாயகம் செய்யும் (தலைவர்) உயர் அலுவலராக இருந்தவர் 'சோனகன் சாவூர்' என்பவர் ஆவார்.
அவர் தஞ்சாவூர்ப் புறம்படியில் இராஜவித்யாதரப் பெரும் தெருவில் வாழ்ந்து வந்தார்.
அவர் மூன்று தவணைகளில் (5+15+12) 32 பொற்காசுகள் கொடுத்து 96 ஆடுகளை விளக்கெரிக்கத் தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் மூலப்பொருளாக வைத்தார். இவருக்குப் பரஞ்சோதி என்ற பெயர் பட்டப் பெயராக விளங்கியது.
சோனகன் சாவூர் இராசேந்திரசோழன் காலத்தில் (1012-1044) கங்கை கொண்ட சோழபுரத்தில் பெருந்தரத்து அதிகாரியாகவும்; திருமந்திர ஓலை நாயகமாகவும் இருந்துள்ளார். இவை இரண்டும் பொறுப்பான பெரும் பதவிகள் ஆகும்.
இராசேந்திர சோழனால் சோனகன் சாவூருக்கு 'இராசேந்திர சோழக் கந்தருவப் பேரரையன்' என்ற உயர் பட்டமும் அளிக்கப்பட்டது.

புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட முதலாம் ராசேந்திர சோழனின் எசாயம் செப்பேட்டில் இதே சாவூர்சோனகன் பரஞ்சோதி ''ஓலைநாயகம்" என்ற உயர் அதிகாரியாக “சோனகன் சாவூர் பரஞ்சோதி ஆன இராஜேந்திரச் சோழக் கந்திருவர் பேரரயன்" என்று குறிக்கப்படுகின்றன.
டாக்டர்.எ.சுப்பராயலு, ச. கிருஷ்ணமூர்த்தி, மா. சந்திரமூர்த்தி ஆகியோர் 'சோனகன்' என்று படித்து இஸ்லாமியர் என்று சரியாக எழுதியிருக்க...
முன்னாள் தொல்லியல் துறை இயக்குநர்கள் டாக்டர் இரா. நாகசாமியும், நடன.காசிநாதனும் 'சோழகன்' 'சோழகோன்' என்று பிழையாகப் படித்துள்ளனர். 'சோனகன்' என்று தெளிவாக உள்ளது.
'சோனகன்' என்ற சொல்லுக்குத் தமிழ் அகராதிகள் "துலுக்கர் " என்றே பொருள் கூறுகிறது. இராசராசன் தஞ்சைப் பெருவுடையார் கோயிலுக்குக் கொடுத்த அணிகலன்களில் 'சோனகச்சிடுக்கு' என்பதும் ஒன்றாகும்.
"சோனகன்விளை, சோனகன் பேட்டை" என்பன தமிழ் நாட்டு இசுலாமிய ஊர்களாகும். கடலூர், தொண்டி, காயல்பட்டினம் போன்ற ஊர்களில் இசுலாம் பெருமக்கள் வாழும் தெருக்கள் "சோனகர் தெரு" என்று அழைக்கப்படுகிறது.

தமிழக இஸ்லாமிய வரலாற்று ஆவணங்கள்
1)S.I.I Vol II No 95 2) E.C. Vol X No 3
3) தமிழ்நாட்டுச் செப்பேடுகள். முதல் தொகுதி பக் 341. 342 4 "ஏசாலம் வரலாற்றுப் புதையல் பக் - 124
மேலும் தஞ்சை பெரிய கோயில் பற்றிய சில தகவல்கள்
தஞ்சாவூரில் காவிரியின் தென்கரையில் அமைந்திருக்கும் இந்தக் கோயில், ராஜராஜேச்சரம், பெருவுடையார் கோயில், பிரஹதீஸ்வரர் ஆலயம் என பல பெயர்களில் குறிப்பிடப்படுகிறது.
1003க்கும் 1010ஆம் ஆண்டிற்கும் இடையில் சோழ மன்னனான ராஜராஜ சோழனால் கட்டப்பட்ட இந்தக் கோயில், திராவிடக் கோயில் கலையின் உன்னதமான சான்றாகக் கருதப்படுகிறது.
கோயிலின் சில பகுதிகள் பிற்காலப் பாண்டியர்கள், விஜயநகர மன்னர்களால் கட்டப்பட்டன. முன்தாழ்வாரம், நந்தி மண்டபம், அம்மன் சன்னிதி, சுப்ரமணியர் சன்னிதி போன்ற இந்தப் பகுதிகளைத் தவிர கோயில் மற்ற பகுதிகள் ராஜராஜ சோழன் காலத்திலேயே கட்டப்பட்டது
யுனெஸ்கோ உலக பாரம்பரிய சின்னம் என்ற அந்தஸ்தை பெற்ற இந்தக் கோயில், இந்தியத் தொல்லியல் துறையால் பராமரிக்கப்படுகிறது. இந்தக் கோயிலின் ஆயிரமாவது ஆண்டு விழா கடந்த 2010ஆம் ஆண்டில் நடைபெற்றது.
இக்கோயிலின் தலைமைச் சிற்பியாக குஞ்சர மல்லன் ராஜராஜப்பெருந்தச்சன் என்ற பெயர் கோயிலின் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகிறது.
பிற்காலக் கோயில்களில் கோபுரங்கள் உயரமாக அமைந்திருக்கும் நிலையில், இந்தக் கோவிலில் விமானம் மிக உயரமாக அமைக்கப்பட்டுள்ளது.
கோபுரத்தின் உச்சியில் கலசத்திற்கு கீழே உள்ள பகுதி ஒரே கல்லால் ஆனது. விமானத்தின் நிழல் தரையில் விழாது என்றெல்லாம் கூறப்பட்டாலும் அது உண்மையல்ல.

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 11
## ( கிறித்தவ தேவாலயத்தில் அரபு மொழிக் கல்வெட்டு )

ஆஸ்திரேலியாவிலிருந்து 1894ல் கிறித்தவ பணிக்காக இந்தியா வந்த மறைதிரு அந்தோணி வாட்சன் பிரப் 1894ல் கோவை வந்தார்.
1897இல் ஈரோடு வந்தார். 1904ல் ஈரோடு நகர பரிபாலன சபைத் தலைவராக விளங்கினார்.

அவர் நினைவாக ஈரோடு மையப் பகுதியில் உள்ள கிறித்தவ தேவாலயம் 'பிரப் நினைவு தேவாலயம்' என்ற பெயருடன் விளங்குகிறது.
1930ல் திட்டமிடப்பட்டு 1933ல் “இந்தோசரோனிக்” கட்டிடக் கலையில் கட்டப்பட்ட அந்த தேவாலயத்தின் முகப்பில் “கடவுள் ஒருவரே” என்று பொருள்படும் "யா குதா” என்ற சொற்றொடர் பெரிய அரபு எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளது,

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 12
## ( ஈரோட்டில் 'கோஷ' ஆஸ்பத்திரி )

ஈரோட்டில் 1897 முதல் கிறிவைப் பணியாற்றிய அந்தோணி வாட்சன் பிரப் 2008ல் தன் பங்களாவின் ஒரு பகுதியிலே சிறு மருத்துவமனை ஒன்றைத் தொடங்கினார். டாக்டர் மைகன் ரீஸ் என்பவர் நியமிக்கப்பட்டார்.
மருத்துவமனை தொடங்க 1912ல் 'பனங் காடு' என்ற பகுதியை வாங்கினார். மருத்துவமனை கட்டினார்.
1914-15ஆம் ஆண்டுகளில் மலேரியா, இன்புளுயன்சா, ஈரோட்டில் அதிகமாகப் பரவியது. மருத்துவமனைப் பணி நடக்கும்போதே பாயில் படுக்க வைத்து நோயாளிகளைச் கவனித்தார்.
பெரும்பாலும் ஆண் மருத்துவர்களே இருந்த காரணத்தால் நோயினால் பாதிக்கப்பட்ட இஸ்லாமிய பெண்கள் பலர் மருத்துவ வசதியின்றி இறந்தனர்.
பிரப் வேலூரிலிருந்து பெண் டாக்டர் ஹில்டா போலார்டு என்பவரை அழைத்துக் கொண்டு வந்து இஸ்லாமியப் பெண்களுக்கு மருத்துவம் செய்தார்.
இதனால் தான் கட்டிய மருத்துவமனைக்கு "கோஷா" ஆஸ்பத்திரி என்று பெயரிட்டார். பெண்களுக்கு மட்டுமே தொடங்கப்பட்ட அம்மருத்துவமனை ஆண்களுக்கு கிச்சை அளித்தபோதும் 1961 வரை "கோஷா ஆஸ்பத்திரி" என்ற யெரிலேயே இருந்துவந்தது.
பின்னர் சி.எஸ்.ஐ. மருந்துவமனை என்று பெயர் மாற்றப்பட்டாலும் இன்னும் அந்த ஆஸ்பத்திரியை ரோஷா ஆஸ்பத்திரி என்றே மக்கள் அழைத்து வருகின்றனர்.

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 13
## (இராமேசுவரம் கோயில் விசாரணையில் அலிப்புலி ராவுத்தர்)




இராமேசுவரம் கோயில் இந்துக்களின் புனித யாத்திரைத் தலம். அங்குள்ள அர்ச்சகர்களில் இருபெரும் பிரிவு உண்டு. குருக்கள்மார் என்றும், நயினாக்கள் ஆரிய மகா சபையார் என்றும் இரு பிரிவினார் அழைக்கப் பெறுவர். தமிழ்நாட்டுப் பக்தர்களுக்குக் குருக்கள்மாரும், வடநாட்டுப் பக்தர்களுக்கு ஆரிய மகா சபையாரும் வழிபாடு நடத்துவர்.

இராமேசுவரம் கோயிலில் உள்ள பல தீர்த்தங்களில்

இலட்சுமண தீர்த்தம் என்பது மகா முக்கியமானது. மக்கள் பெருந்திரளாக அங்கு கூடுவதால் வருவாய் மிகுதி.

இலட்சுமண தீர்த்தத்தின் உரிமை பற்றி இருபிரிவு அர்ச்சகர் கட்கும் தகராறு ஏற்பட்டது.

சேதுபதி அரசரிடம் புகார் சென்றது. அப்போது சேதுநாட்டை ஆட்சிபுரிந்த மன்னர் முத்துக்குமார விசயரகுநாத சேதுபதி தன் அதிகாரிகள் நால்வரை விசாரிக்க ஆணையிட்டார்.

1. தளகர்த்தர் ரா.வெள்ளையன் சேர்வைக்காரர்
2. ரா. பிரதானி ஆண்டியப்பப் பிள்ளை
3. பெரிய கட்டளை இராமநாத பண்டாரம்
4. சத்திர மணியக்காரர்

ஆகியோர் 18.1.1746 அன்று அவ்வழக்கை விசாரிக்க வந்தனர். அந்த நீதிவிசாரணையில் நடுவராகப் பணியாற்றியவர்களில் ஒருவர் "இராமேசுவரம் அலிப்புலி ராவுத்தர்' ஆவார்.

* தமிழ்நாட்டு செப்பேடுகள், தொகுதி 2, பக்கம் 86,87, ச. கிருஷ்ணமூர்த்தி

சேதுபதி செப்பேடுகள், புலவர் செ. இராசு, தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு (1994)

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 14
## (சங்கர மடத்திற்கு கோல்கொண்டா சுல்தான் கொடை)




காஞ்சி சங்கர மடம் (Kanchi Sankara matha) தமிழ்நாட்டின் காஞ்சிபுரத்தில் அமைந்துள்ள ஓர் இந்து சமய துறவியர் இருப்பிடமாகும். இது காஞ்சி காமகோடி பீடம் என்றும் அழைக்கப்படுவதுண்டு.
ஆதி சங்கரர் இங்கு சமாதியடைந்ததாகவும் இந்த மடத்தை நிறுவியதாகவும் கூறப்படுகிறது. இந்த மடத்தின் தலைவர்கள், பீடாதிபதிகள், நான்கு (சிருங்கேரி சாரதா மடம், துவாரகை மடம், கோவர்தன மடம், ஜோஷி மடம்) சங்கர மடத் தலைவர்களைப் போலவே, "சங்கராச்சாரியர்" என்றப் பட்டத்தை பயன்படுத்துகின்றனர்.
கோல்கொண்டா சுல்தான் அபுல் ஹசன் தனாஷா என்பவர்
காஞ்சிபும் சங்கரமடத்திற்கு 16.11.1677 அன்றும், 1686ஆம்
ஆண்டும் இரண்டு கொடைகள் அளித்துச் செப்பேடுகள் வெட்டிக் கொடுத்துள்ளார்.
அச்செப்பேடுகள் தெலுங்கிலும், பெர்ஷிய மொழியிலும் எழுதப்பட்டுள்ளன. ஆனால் எழுத்துக்கள் தெலுங்கு வரிவடிவில் உள்ளன.

முதல் செப்பேடு
காஞ்சிபுரம் காமகோடி பீடத்தின் பூஜைக்காகவும், இதர மடத்தின் செலவுகட்காகவும் வருடந்தோறும் 115 வராகன் பொன் அளிக்க ஆணையிடப்பட்டதைக் கூறுகிறது. இச்செப்பேடு 16.11.1677 அன்று எழுதப்பட்டது.
இரண்டாம் செப்பேடு

சுல்தான் அபுல்ஹசன் தனாஷா தன் ஆட்சிக்குட்பட்ட கிராமமான 'மேல்பாக்கம்' என்ற பெரிய கிராமத்தின் வருவாய் முழுவதையும் காஞ்சிபுரம் மடத்தில் உள்ள சந்திரமவுலீச்சுவர சுவாமியின் பூசைக்காக ஒவ்வொரு போகமும் தவறாமல் சந்திரசூரியர் உள்ளவரை கொடுக்க ஆணையிட்டார்.
மேல்பாக்கத்தில் ஒரு சிறு பகுதி சங்கராச்சாரியார் விருப்பப்படி ஸ்ரீராமா சாஸ்திரிகள் என்பவருக்கு வழங்கப்பட்டது. இச்செப்பேடுகளில் கோல்கொண்டா சுல்தானின் அதிகாரிகள் அக்கண்ணா, மாதண்ணா ஆகியோர் குறிக்கப் பெறுகின்றனர்.
ஆதாரம் : தமிழ்நாட்டுச் செப்பேடுகள்.இரண்டாம் தொகுதி
- ச.கிருஷ்ணமூர்த்தி பக்கம் 247 - 248

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 15
## (வீரப்ப நாயக்கர் மீட்ட பள்ளிவாசல் நிலம் )

கோரிப்பாளையம் மசூதி என்பது கோரிபாளையத்தில் ( மதுரை நகரத்தின் ஒரு பகுதி) உள்ள ஒரு பெரிய மசூதியாகும், இது யேமன் சுல்தான்களின் இரண்டு கல்லறைகள் (கல்லறைகள்) உள்ளன,
அதாவது காஜா சையத் சுல்தான் அலாவுதீன் பாதுஷா ராஸி மற்றும் மதுரை சுல்தானகத்தின் காஜா சையது சுல்தான் ஷம்சுதீன் . காஜா சையத் சுல்தான் ஹபிபுதீன் ராசியின் கண்ணுக்குத் தெரியாத கல்லறை ஒன்றும் உள்ளது, அவர் இஸ்லாத்தை பரப்ப இந்தியாவுக்கு வந்த கைபி சுல்தான் என்றும் அழைக்கப்படுகிறார் .
அதன் குவிமாடம் 70 அடி (21 மீ) விட்டம் மற்றும் 20 அடி (6.1 மீ) உயரம் மற்றும் அழகர் மலையிலிருந்து கொண்டு வரப்பட்ட ஒரு கல்லால் ஆனது. இது திருமலை நாயக்கரால் தனது இஸ்லாமிய குடிமக்களுக்காக கட்டப்பட்டது என்று கூறப்படுகிறது .

கோரிப்பாளையம் என்ற பெயர் பாரசீக வார்த்தையான 'கோர்' என்பதிலிருந்து வந்தது, அதாவது கல்லறை .
மதுரை சுல்தான் அலாவுதீன் பாதுஷா (ரஹ்) மற்றும் சுல்தான் ஷம்சுதீன் பாதுஷா (ரஹ்) ஆகிய இஸ்லாமியர்களின் இரண்டு புகழ்பெற்ற " கல்லறைகள் இங்கு இருப்பதால் இந்த பகுதி கோரிப்பாளையம் என்று அழைக்கப்படுகிறது .
வைகை ஆற்றின் வடக்குக் கரையில் அமைந்துள்ள கோரிப்பாளையம் தர்காவானது ஏ.வி. பாலத்தில் இருந்து ஒரு அழகான பச்சை கல்லறையைக் காணலாம் .
தமிழகம் முழுவதிலுமிருந்து மக்கள் இங்கு வந்து ஆசி பெற்று, பலனடைந்து திரும்பிச் செல்கின்றனர்.
ஏர்வாடியைச் சேர்ந்த குதுப் சுல்தான் சையத் இப்ராகிம் ஷஹீத் பாதுஷாவின் பயணம் மற்றும் தென்னிந்தியாவில் அவரது வெற்றியைப் பற்றி கேள்விப்பட்டு13ம் நூற்றாண்டில் ஓமானில் இருந்து இஸ்லாத்தைப் பரப்புவதற்காக மதுரையின் வடக்குப் பகுதியை ஆட்சி செய்த இரண்டு ஆட்சியாளர்களும் சகோதரர்கள் .

மதுரை மற்றும் ராமநாதபுரம் மாகாணங்கள் காஜிமார் பெரிய மசூதியை நிறுவியவரும் காஜிமார் தெருவில் வசித்து வந்தவருமான காஜி சையத் தாஜுதீன் ரஹ் சுல்தான்களின் அரசாங்க காஜி (இஸ்லாமிய சட்ட ஆலோசகர் மற்றும் நடுவர்) ஆவார்.
காஜி சையத் தாஜுதீனின் வழித்தோன்றல்கள் இன்றும் காஜிமார் தெருவில் வசித்து வருகின்றனர், காஜிமார் பெரிய பள்ளிவாசல் அவர்களால் பராமரிக்கப்பட்டு வருகிறது.
சுல்தான்கள் காலத்திலிருந்து மதுரை நகரத்திற்கு காஜி சையத் தாஜுதீனின் வழித்தோன்றல்களில் இருந்து காஜிகள் நியமிக்கப்பட்டனர், இந்த பாரம்பரியத்தை பாண்டிய ஆட்சியாளர்கள் , நாயக்கர் ஆட்சியாளர்கள் , நவாப் ஆட்சியாளர்கள் மற்றும் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள்
பின்பற்றினர்.

இன்றும் தமிழகத்தின் சுதந்திர ஜனநாயக மாநில அரசு, மதுரை சுல்தான்களுக்கு காஜியாக இருந்த காஜி சையது தாஜுதீனின் வழித்தோன்றலில் இருந்துதான் காஜியை மதுரைக்கு நியமித்து வருகிறது

நாயக்கர் ஆட்சியாளர் வீரப்ப நாயக்கரின் தர்கா நிலம் தொடர்பான தகராறு தொடர்பான தீர்ப்பு தர்காவில் பொருத்தப்பட்ட கல்வெட்டில் உள்ளது.

சுல்தான் அலாவுதீன் பாதுஷா மற்றும் சுல்தான் ஷம்சுதீன் பாதுஷா ( ஓமன் சுல்தான்கள் என்று அழைக்கப்படுவார்கள் ) ஆகியோரின் வழித்தோன்றல்கள், கோரிப்பாளையம் தர்காவின் நிலத்தை அன்றைய அரசர் கூ(ன்) பாண்டியனிடமிருந்து ஒரு அடி தங்கத் துண்டுக்கும், மற்ற ஆறு கிராமங்களுக்கும் (அதாவது பீபி குளம், சொக்கிக்குளம், சோளிக்குடி, சிறுதூர், கண்ணனேந்தல், திருப்பாலை ) கோரிப்பாளையம் தர்கா பராமரிப்புக்கு 14,000 தங்க நகைகள் வீதம் மதுரை நாயக்கர் மன்னர் வீரப்ப நாயக்கர் ஆட்சியின் போது கொடுக்கப்பட்டது,

தர்காவைச் சேர்ந்த ஹக்தார்களுக்கும், நாயக்கர் அரசு ஊழியர்களுக்கும் இடையே ஆறு கிராமங்கள் தொடர்பாக தகராறு ஏற்பட்டது. மன்னர் வீரப்ப நாயக்கரிடம் வழக்கு கொண்டு வரப்பட்டது.

அவர் மன்னர் கூ(ன்) பாண்டியன் எழுதிய ஆவணங்களை விசாரித்து சரிபார்த்து, கி.பி.1573 ல் ஆறு கிராமங்களும், தர்கா நிலமும் சுல்தான்களின் வழித்தோன்றல்களுக்கு சொந்தமானது என தீர்ப்பு வழங்கினார். மேலும் சூரியன் மற்றும் சந்திரன் இருக்கும் வரை அவர்களின் மகிழ்ச்சியில் இதை மீறுபவர்கள் கங்கை நதிக்கரையில் பசுவை அறுத்த பாவத்திற்கு பொறுப்பாவார்கள் என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

இந்தக் கல்வெட்டு 13ஆம் நூற்றாண்டிலிருந்து தர்கா இருந்ததை நிரூபிக்கும் சான்றாகக் கருதப்படுகிறது.

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 16 Only picture

இந்து-முஸ்லீம் ஒற்றுமை கூறும் கல்வெட்டு

சகம்1705(கி.பி.1783) ஐ சேர்ந்த கல்வெட்டு இது. மொத்தம் 39 வரிகளையுடையது.இதில் திருநாகேஸ்வரத்தின் தெற்கு எல்லையான உப்பிலியப்பன் கோவில் முதல், வடக்கு எல்லையான ராவுத்தர்கடை வரை அரைக்காசு வீதம் மகமை வசூலித்து விளக்கெரித்துள்ளனர். இதில் இரண்டு கடைகளின் பணம் பள்ளிவாசலுக்கு ஒதுக்கப்பட்டுள்ளது. இக்காரியம் நடைபெறுவதை ஒருவர் கண்காணிக்க வேண்டும்.நிகழ்ச்சிகளுக்கு வருபவர்களை முன்னரே கணக்கெடுத்து அவர்களுக்கு மரியாதை செய்யவேண்டும், எனவும் கூறப்பட்டுள்ளது.

இச்செயல்களுக்கு எவரேனும் இடையூறு செய்தால், அவர் இந்துவெனில் 'கங்கைக் கரையில் காராம்பசுவை கொன்ற' தண்டனைக்கும், இஸ்லாமியரெனில் 'மக்கா நகரில் செய்யக்கூடாததை செய்த தோஷத்திற்கு' ஆளாவார்கள், என்று கூறப்பட்டுள்ளது.
1783 ஐ போல இன்றும் இவ்விரு மதத்தினவரும் இணைந்து விளக்கெரிப்பது குறிப்பிடத்தக்கது.

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 17
## ( சம்மட்டிவரத்தில் சாகிப் கான் தர்கா )

ஆர்க்காடு நவாப் முகம்மது அலி, கிழக்கிந்திய கும்பினியர் ஆகியோரால் வரிவசூல் செய்ய 1757ல் அனுப்பப்பட்ட கான்சாகிபு வசூலித்த வரியை மக்கள் நலப்பணிகட்கு செலவிட்டார்.
கான்சாகிபு பற்றி நன்கு ஆய்ந்த பேராசிரியர் நா.வானமாமலை " திருநெல்வேலி சீமையை வென்ற பெருமையை பறைசாற்றி இச்சீமையின் வரிக்குத்தகையை
7 லட்சத்திற்கு கான்சாகிபு கும்பினியாரிடமிருந்து பெற்றுக் கொண்டான்.
மாபூஸ்கான் தனது தம்பியான ஆர்க்காடு நவாபு முகமதலியோடு சமாதானம் செய்து கொண்டு திருநெல்வேலிச் சீமையை விட்டு போய்விட்டான்.
யூசுப்கானது நிலைமை வலுவாகி இருந்தது. கம்பெனியிடம் விசுவாசம் இல்லாமல் அவன் நடந்து கொண்டதாக பிரிட்டிஷார் ஐயுற்றனர். தஞ்சாவூரிலிருந்து அவன் படை திரட்டினான். பாளையக்காரர்களோடு சமாதானம் செய்து கொண்டு நவாபை எதிர்க்க அவர்களது உதவியை நாடினான்.
அவனது தலைமையில் உள்ள வீரர்களது தொகை 27,000 இருந்ததென்று பிரிட்டிஷ் அதிகாரிகள் நம்பினர்.
பிரெஞ்சுக்காரர்களிடமிருந்தும், ஹைதர் அலியிடமிருந்தும் அவன் இராணுவ உதவிகளைப் பெற்றதாக பிரிட்டிஷார் குற்றம் சாட்டினர்.
சுயாதிக்கமுள்ள அரசனைப் போலவே அவன் கோயில்கட்கும், மசூதிகளுக்கும் நிலங்கள் வழங்கி கல்வெட்டுக்களில் பொறித்துக் கொண்டான். திருநெல்வேலி, மதுரைச் சீமைகளில் குளங்கள் தோண்டி வாய்க்கால்கள் வெட்டி நிலங்களுக்குப் பாசனவசதி செய்து கொடுத்தான்.
புலித்தேவனையும், அவனது நண்பர்களையும் தன்னோடு சேர்த்துக் கொள்ள முயன்றான்" என்று “கான்சாகிபு சண்டை என்ற தம் நூல் பதிப்பில் குறிப்பிடுகின்றார் (பக்கம் 11). 'கான்சாகிபு சண்டை' கதைப்பாட்டும்,
“வருகையிலே கும்தான் என்று வந்தான் - அந்த
மதுரைக்கு வந்தபின்பு ராசாவுமானான்”
என்று கூறுகிறது (பக்கம் 26).
எனவே நவாபு முகம்மது அலியே கான்சாகிபுவை பதவியிலிருந்து அகற்றத் தானே படைக்குத் தலைமை தாங்கி வந்தார். கும்பினியார் பெரும் படையும் கர்னல் மன்சார் தலைமையில் வந்தது. போரில் வெல்ல முடியாமல் சிவகங்கைத் தளவாய் தாண்டவராயன் மூலம் சதியில் ஈடுபட்டனர்.
கான்சாகிபுவின் அலுவலர்கள் சீனிவாசராவ், மார்க்கசந்து (டச்சுக்காரர்), மெய்க்காவல் படைத்தலைவன் சேகுகான் மூவரும் பணத்திற்கும், பதவிக்கும் ஆசைப்பட்டு கான்சாகிபுவைக் காட்டிக் கொடுத்தனர். பிடித்த அன்றே 14.10.1764ல் தூக்கிலிட்டனர். மாவீரனின் உடலை நான்காக வெட்டி நான்கு இடங்களில் அடக்கம் செய்தனர்.
எங்கள் திருநெல்வேலி மாவட்டத்தில் கான்சாகிப் அவர்களின் கால் பாதம் மட்டும் அடக்கப் பெற்று அவ்வூரை கான்சா புரம் என்றழைக்கப்படுகிறது
'கான்சாகிபு சண்டை' கதைப்பாடல் நான்கு இடங்கள் என்று கூறி நத்தம், திண்டுக்கல் ஆகிய இடங்களைச் சுட்டிக் கூறுகின்றன.
மதுரைக்கு அண்மையில் சம்மட்டி வரத்தில் 'கான்சாகிபு தர்கா' உள்ளது. அதனை ஹிஜ்ரி 1222ல் (கி.பி. 1807) ஷேகு அதால் மகன் ஷேக் இமாம் என்பவர் கட்டியுள்ளார்.
இதைக் குறிக்கும் கல்வெட்டு தர்கா முன்புறச் சுவரில் பதிக்கப்பட்ட பலகைக்கல்லில் வெட்டப்பட்டுள்ளது.
பெர்ஷியன் மொழியில் பாடல் வடிவிலும், தமிழிலும் கல்வெட்டு உள்ளது. தமிழில் பிரபவ, தை 23ஆம் தேதி என்று குறிக்கப்பட்டுள்ளது. 'பள்ளிவாசல்' என்றும் தமிழிலில் எழுதப்பட்டுள்ளது.

கல்வெட்டு

1. பிரபவ வருஷம் தை மாசம் 23 தேதி ரா.ரா. கானுசு,
2. சாயபு பள்ளிவாசல் சேகு அதால் குமா
3. ரன் சேகு யிமாமு கட்டி வைய்த்தது

* Annual Report on Epigraphy (B) 306 of 1960
* Annual Report on Epigraphy (D) 171 of 1960

சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 18
( தமிழக இஸ்லாமியரைப் பற்றிய கல்வெட்டுகளும் செப்பேடுகளும் )

தமிழகத்தில் ஏழாம் நூற்றாண்டு முதல் அரபுக் குடா நாடுகளில் இருந்து வணிகத்திற்காகவும் சமயப் பணிக்காகவும், இஸ்லாமியர் குடிபுகுந்தது, தொழுகைப்பள்ளி, நிர்மானம், அரசியல் ஊக்குவிப்புகளுக்கு உரியவர்களாக விளங்கினர்.
இவர்கள் இறையிலிகள் பெற்றமை, தமிழ் மக்களுடன் இணைந்து செயல்பட்டமை, போன்ற செய்தித் தொடர்கள் சில கல்வெட்டுகளிலும் செப்பேடுகளிலும் குறிக்கப்பெற்று இருக்கிறது .
முதல் கல்வெட்டு :
அண்ணல் நபிகள் (ஸல்) அவர்களது இறைமறையை, அன்னார்கள் காலத்திலேயே தாங்கி வந்த தவச் செல்வர்களான ஸஹாபி தமீம் உல் அன்சாரி (ரலி) அவர்கள் உடையதும், ஸஹாபி உக்காஸா (ரலி) அவர்களுடையதும் அடக்க இடங்கள் முறையே கோவளத்திலும், முகம்மது பந்தரிலும் அமைந்துள்ள போதிலும், திருச்சிராப்பள்ளியில் முகம்மது அப்துல்லா-பின்-ஹாஜி முகம்மது அப்துல்லா நிர்மாணித்த தொழுகைப் பள்ளியில் வரையப்பெற்றுள்ள ஹிஜிரி 114 (கி.பி. 734)ம் வருட அரபிக் கல்வெட்டுதான் தமிழகத்தில் நமக்கு கிடைத்துள்ள தொன்மையான இஸ்லாமியக் கல்வெட்டாக கொள்ள வேண்டும்.
தமிழகத்தில் எட்டாம் நூற்றாண்டில் இஸ்லாமியர் தங்கி வாழத் துவங்கினர் என்பதை ஆதாரப்பூர்வமாகக் காட்டுகிறது இந்த கல்வெட்டு சாசனம்.
இஸ்லாமியர்களது புதிய குடியிருப்புகள் திருச்சிராப்பள்ளியில் மட்டும் அல்லாமல் பாண்டியனது தலைநகரான மதுரையிலும், அந்த நாட்டின் கீழைப் கடற்கரையெங்கும் அஞ்சுவண்ணங்களாக அமைந்து இருந்தன. அதனை இராமநாதபுரம் மாவட்டம் தீர்த்தாண்ட தானக் கல்வெட்டு சான்று பகர்கின்றது.
அந்தக் கல்வெட்டில் "இவ்வூரில் இருக்கிற அஞ்சு வண்ணமும், மணிக்கிராமத்தோரும் ஆரியர் சாமாந்த பண்டக சாலையும், பட்டாரியரும், தோயா வத்திரச் செட்டிகளும், தென்னிலங்கை வலஞ்சியரும், கைக்கோளரும் தூக வரும், வாணியரும், நீண்ட கரையாரும், கோயில் திருமுன்பிலே நிறைவறக்கூடி இருந்து” எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 19
( நாகூர் தர்காவும் மினராக்களும்)
ஆற்காட்டை ஆண்ட நவாபுகள் இவர்களது பெயரால் தஞ்சாவூர் நகரை காதர் நகர் என பெயரிட்டனர். நாகூர் பகுதியில் அமைதி வழியில் தனது அன்பு அழைப்பால் எண்ணற்ற மக்களை இஸ்லாத்தின் பக்கம் கொண்டுவந்த பெருமை நாகூர் ஆண்டகை அவர்களைச் சாரும்.
இவர்களது அருட்கொடையைத் தொடர்ந்து பெறும் பொருட்டு தமிழகத்தின் பிற பகுதியிலிருந்தும் முஸ்லிம் மக்கள் இங்கு வந்து குடியமர்ந்தனர். இஸ்லாமியர் பெருகினர். இப்பகுதியில் இஸ்லாம் செழித்தோங்கியது.

நாகூர் நாயகம் மறைந்ததும் அவரது புதல்வர் தனது மனைவி, மக்களுடன் அங்கு குடித்தனம் நடத்தி வந்தார். அப்பகுதியைச் சேர்ந்த மீனவர்கள் இவர்களுக்கு ஆதரவாக இருந்ததோடு நாயகத்தின் கஃப்ரை சுற்றி பலகையால் பள்ளி போல் அடைத்தார்கள். அந்தப்பள்ளியே இன்று அழகிய ஐந்து மினாராக்களை( கோபுரம்) உடையதாய் விளங்குகிறது.
மராட்டிய மன்னர் பிரதாப்சிங் (1739-1763) நாகூர் தர்கா கட்டிடங்களை விரிவு படுத்திக் கட்டினார். இம்மன்னர் நாகூர் தர்கா கட்டிடங்களின் Founder என்று சொல்லப்படுகிறது. மேலும் பிரதாப்சிங் தர்காவின் பராமரிப்பிற்கு பதினைந்து கிராமங்களை மானியமாக அளித்ததாக கல்வெட்டுச் செய்தி ஒன்று கூறுகிறது.
தர்காவில் உள்ள மிக உயரமான (131) அடி மினராவைக் கட்டியதும் இம்மன்னரே ஆவார். பிரதாப்சிங்கிற்குப் பிறகு வந்த மராட்டிய மன்னர்களும் தர்காவிற்கு பல கொடைகள் வழங்கியுள்ளனர்.
இடம் 3 - மேலே உள்ள கல்வெட்டில் தென்புறம் உள்ள கல்வெட்டு
காலம் - 1752ல் மினார் கட்டத் தொடங்கியதைக் குறிக்கிறது. 1752ல் கட்டத் தொடங்கி, 1755ஆம் ஆண்டு கட்டி முடிக்கப்பட்டது.
கல்வெட்டு :-
ஆங்கிரஸ வருஷம் மாசி மாதம் 9
2. அசறது மீரா சாயிபு அவர்கள் த
3. ற்காவில் இந்த மினாற் பதினோர
4. ங்கணம் ரா. பிறதாபசிங்கு மகா
5. ராசா சாயிபு அவர்களுடைய தற்மம்
6. சேகு அப்துல் மல்லிகையவர்கள் ராம
7. ரசா சாயிபு அவர்கள் உத்தாரப
8 .டிக்கு கட்டி வைத்த மனா
9.ரா

**சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 20**
**( நாகூர் தர்காவில் உள்ள கல்வெட்டுக்கள் ஒன்றாகத் தொகுத்து கொடுக்கப்பட்டுள்ளன)**
1.விசயராகவ நாயக்கர் கொடை
இடம் - நாகூர் தர்கா உள் மினார்
காலம் - தஞ்சை நாயக்கர் விசயராகவ நாயக்கர் (1640- 1674) காலம் பார்த்திப ஆடி 15; கி.பி. 3.7.1645
செய்தி - தஞ்சை நாயக்க மன்னரின் அதிகாரியாக இருந்த நாகூர் மீரா ராவுத்தர் உள் மினாரைக் கட்டினார் (முழுவதும் காறை பூசி மறைந்திருந்த இக்கல்வெட்டு அடையாளம் காணப்பட்டு காறை பெயர்த்தெடுக்கப்பட்டு படிக்கப் பட்டது)
கல்வெட்டு :-
1. பாத்திப வருஷம் ஆடி மாதம் 10 தேதிஸ்ரீ விசையராவுக
2. நாயக்கய்யன் காரியத்துக்குக் கர்த்தரான
3. மதாறு ராவுத்தர் நாவூர் மீரா ராவுத்தர் முத
4. ல் வாசலில் கட்டின மினாற் மீரா ராவுத்தர் த
5. ம்மத்துக்கு அகுதம் பண்ணின பேர்
6.மக்கத்திலே அகுதம் ப
7. ண்ணின பாவத்திலே
8. போக கடவாராகவும்
9. கெங்கைக் கரையில் காரா

10.ன் பசுவை கொன்ற பா
11. வத்திலே போகக்கடவாராகவும்

## **சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 21**
## **( நாகூர் தர்கா வரலாறு 1 )**

தமிழகத்தின் நாகப்பட்டினம் மாவட்டத்தின் நாகூர் நகரில் அமைந்துள்ள இஸ்லாமிய புனிதத்தலம் நாகூர் தர்கா. இது 500 ஆண்டுகளுக்கும் முற்பட்டது. இது ஹஸ்ரத் செய்த் ஷாகுல் ஹமீத் க்வாதீர் (நாகூர் ஆண்டவர்) என்ற இஸ்லாமிய புனிதரின் கல்லறை ஆகும்.
இந்த தர்கா ஐந்து ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. இது மேற்பகுதி தங்க கூரையையும், ஐந்து ஸ்தூபிகளையும் கொண்டு விளங்குகிறது.
இஸ்லாமிய புனிதரான ஹஸ்ரத் செய்த் ஷாகுல் ஹமீத் க்வாதீர் உத்திரபிரதேச மாநிலத்தின் அயோத்தியாவிற்கு அருகிலுள்ள மானிக்காபூர் என்ற இடத்தில் கி.பி. 1491 - இல் பிறந்தார்.
உலகம் முழுவதும் சென்று இஸ்லாமிய சமயத்தைப் பரப்பிய இவர் தன் இறுதி நாட்களை நாகூரில் கழித்தார். அப்போது தஞ்சாவூரை ஆண்டுவந்த அச்சுதப்பா நாயக்கன் என்ற மன்னனின் நோயை இவர் குணப்படுத்தினார். அதைத் தொடர்ந்து அம்மன்னன் சுமார் 30 ஏக்கர் நிலத்தை அளித்தார். அந்த இடத்தில் தான் தற்போது தர்காவும், பிற கட்டிடங்களும் அமைந்துள்ளன.
கி.பி. 1559 - ஆம் ஆண்டு இறைபதம் சேர்ந்த புனிதரின் உடல் இந்த தர்காவில் அடக்கம் செய்யப்பட்டுள்ளது. இவரது மகன் மற்றும் மருமகளின் சமாதிகளும் அருகிலேயே உள்ளன. பின்னாளில் தஞ்சாவூரை ஆண்ட துளசி மகாராஜா என்ற மன்னர் இந்த தர்காவின் பராமரிப்பிற்காக 4000 ஏக்கர் நிலத்தை வழங்கினார்.
அவர் உயிர் வாழ்ந்த காலத்தில் அவரால் செய்யப்பட்டு வந்த அதிசயங்கள் அவருடன் நின்றுவிடாமல் இன்றும் தொடர்கிறது. இங்கு ஆண்டுதோறும் 14 நாட்கள் கொண்டாடப்படும் கந்தூரி விழா நாகூர் ஆண்டவருக்கு அர்ப்பணிக்கப்படுகிறது. இவ்விழாவில் உலகம் முழுவதும் இருந்து பக்தர்கள் கலந்து கொள்கின்றனர்.

## **சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 22**
## **( நாகூர் தர்காவிற்கு தங்க கலசம். ஈந்தவர்கள் குறித்த கல்வெட்டுகள் )**

A. தங்கக் கலசம் வைத்த காசியப்பா ராவுத்தர்

---

மேற்படி மினார் கீழ்புறக் கல்வெட்டு :-
1. திருச்சிராப்பள்ளி பாலக்கரை
2. ம. காசியப்பா இராவுத்தரால்
3.இம் மினாரின் சிகரத்தில்
4. தங்கக் கலசம் வைக்கப் பெற்றது
5. 1916

---

B. தங்கக் கலசம் வைத்த மகாதேவ அய்யர்

---

வடக்கு மனோரா கல்வெட்டு :-
1. உ
2. கூத்தா நல்லூர்

3 . எஸ். மகாதேவ ஐயர் அவர்களால்

4. தங்க கலசம்

5. வைக்கப்பட்டது

6. 9.2. 1956

___________________________________________________________

C. செய்கு தாவூது வைத்த தங்கக் கலசம்

________________________________________________________

கீழ்ப்புறக் கல்வெட்டு :-

1. கரைப்பாக்கம்

2. ஜனாப் கு. செய்கு தாவூத் அவர்களால்

3. இந்த மணவறாவின் சிகரத்தில்

4. தங்கக் கலசம் வைக்கப்பட்டது

5. ஹிஜ்ரி 1374 ஷப்பால் 10 தேதி மன்மத வருஷம்

6. வைகாசி 19 தேதி 1955 ஜூன் 2 தேதி

**சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 22**
**( நாகூர் தர்கா)**

குஞ்சு மரைக்காயர் கட்டிய பீர் மண்டபத்தில் உள்ள கல்வெட்டு

காலம் :- ஹஜ்ரி 972 றசப் மாதம்

செய்தி :- குஞ்சு மரைக்காயர் காதர் மீரா சாயபு தன் சொந்தப் பணத்தில் பீர் மண்டபம் கட்டிய செய்தி கூறப்படுகிறது.

கல்வெட்டு :-

1. பீர் மண்டபம்

2. பிசுமில்லாகி

3. றரு கிசரத்து

4. 972 வருஷம் றசப்

5. மாதம் முதல் நாகூர் கலா

6. ரத்து சாகுல் கமீதொலி

7. ஆண்டவரவர்கள் சீசறு

8. மான குஞ்சு மரைக்

9.காயர் முகம்மது அ

10. பு பக்கர் மரைக்கா

11. யரவர்கள் குமாரரு

12. மாகிய குஞ்சு மரைக்

13. காயர் காதிறு மீறா சா

14. கிபு சொந்தத்தில் சில

15. வு செய்து கட்டிய பீர்

16. மண்டபம் 7031

17. நள வருஷம் சித்திரை மாதம்

**சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 23**
**( கோவிந்தசாமி செட்டி கொடை)**
நாகூர் தர்கா தளம் பாவிய கல்வெட்டு
1923 நவம்பர் மாதம்
2. நாகூர் 2 பக்கிரி
3. செட்டியார் குமா
4. றன் கோவிந்த
5. சாமி செட்டியால்
6. போடப்பபட்டது
- ______________________
மண்டபத் திருப்பணி செய்த அப்துல் காதர்
இடம் :- முன் மண்டபத் தூண்
காலம் - பிரமாதி வருடம், கி.பி. 1879
செய்தி :- முன் மண்டபத்தின் கீழ்ப்புறம் ஒரு பத்தியை நாகூர் அகமது லெப்பை குமாரர் ஹாஜி அப்துல் காதர் கட்டி வைத்தார். இதனைக் கட்டிய கொத்தனார் இருவர் பெயரும் கூறப்படுகிறது.
கல்வெட்டு
1. பிஸ்மில்லாஹி
2 இந்தக் கட்டிடமும் கீள்
3. புறம் ஒரு பத்தி கட்டிடமும்
4. ஹஜரத்து ஷாஹனால்
5 ஹமீது செய்யிது
6. அப்துல் காதிர் ஒலி
7. கஞ்ஜ சவாயி கஞ்ஜ பகுசு
8. பாத்துஷாஃசாஹிபு
9. ஆண்டவரவர்களுக்காக
10.நாகூர் அஃமது லெவ்வை
11. குமாரற் ஹாஜி
12. அப்துல் காதிர்
13. நகுதாவால் கட்டப் பட்டது
14. பிரமாதி வரு 1879
15.. இந்த வேலை திருச்சினாப்பள்ளி ஒறையூர்
16. சின்னத் தம்பி முத்து கருப்ப கொத்தர் குமா
17. ரர்கள் கூறு.ம. சிவந்திலிங்கம்
18. தாறானூர் ஆ. அண்ணாவி

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 24
## ( நாகூர் பெரிய மினரா பற்றிய கல்வெட்டு செய்தி )

தென்னிந்தியாவில் பிரதானமான திருத்தலங்களில் ஒன்று நாகூர் ஷரீப். நாகூர் என்பதே ஊரின் பெயர் எனினும் புனித தலங்களைச் சொல்லும் முன் தமிழில் திரு என்று கூறுவது போன்று அதே பொருளுடைய அரபி வார்த்தையான "ஷரீப்" என்பதையும் இணைத்து நாகூர் ஷரீப் என்று கூறுவது முஸ்லிம்களில் பரிசுத்த ஆன்மிகத்தின் மீது நம்பிக்கையுடையவர்களின் வழமை.
இமயம் போல் எழுந்து நிற்கும் செங்குத்தான உயர்நீள கட்டிட அமைப்பிற்கு "மினாரா" என்று பெயர். கோபுரம் என்பது அதன் பொருள். அங்கே அப்படி ஐந்து மினாராக்கள் தலை உயர்த்தி நிற்கின்றன. அவற்றின் மீது வருடாந்திர கந்தூரி உரூஸ் விழாவின் போது கொடி ஏற்றப்படும் மாட்சிமை மிகும் காட்சி இரு கண்களையும் பணிக்கச் செய்யும். இதயங்களை ஈர்க்கும்.
அந்த மினாராக்களில் அலங்கார வாசலின் முன்னே அழகாக எழுந்து நிற்பது பெரிய மினாரா.
இந்த மினாராவைக் கட்டி அமைத்தது, பிரதாப் சிங் என்ற மன்னர். இவர் தஞ்சையை ஆண்ட மன்னர்களில் ஒருவர். உண்மையில் இவர் மராட்டிய இளவரசரும் கூட. ஆண் வாரிசு இல்லை என்பது அரசர்களுக்கு அவலம். அந்த அவலத்திலிருந்து விடுபட அவசியம் ஆண் வாரிசு வேண்டும் என ஆசித்த அவர் நாகூர் நாயகத்தின் மகிமைகளை செவியுற்று நேரே நாகூர் ஷரீப் வந்தார்.
மண்ணறையில் மறைந்திலங்கும் மன்னரை வேண்டினார். ஆசைக்கும், ஆஸ்திக்கும் ஒரு அழகு மகன் பிறந்தால் தர்காவின் பிரதான வாயில் முன்னே பிரமாண்டமான மினாரா ஒன்றை கட்டி எழுப்புவதாகவும், தர்காவிற்கென ஒரு கிராமத்தையே எழுதி வைப்பதாகவும் வேண்டுதல் செய்து போனார்.
நாடி வருபவர்களின் நாட்ட தேட்டங்களை நிறைவேற்றி வைப்பதன் மூலம் அந்த நாதாக்களுக்கு என்ன கிடைத்து விடப்போகிறது. ஆனாலும் இருக்கிறவனிடம் இருக்கிறதை பெற்று இல்லாதவர்களுக்கு சேர்த்து வைப்பதையே நாடுபவர்கள் நாதாக்கள்.
அவர்களின் திருத்தலங்களில் அறுக்கப்படும் ஆடு, கோழிகளும், சமைக்கப்படும் உணவுகளும் அவர்கள் உண்ணுவதற்கல்ல. மாறாக தங்களை நாடிவரும் பக்தர்களுக்கே.
எனவே தங்களுக்கு எதுவும் தேவை இல்லை எனினும் தேடிவரும் நேயர்கள் தரும் நேமிதங்களை நிச்சயம் ஏற்றுக் கொள்வார்கள்.

மகானின் துஆவால் மகன் பிறந்தான். மன்னரின் அவா நிறைவேறியது மகிழ்ச்சி களிப்பில் மன்னரால் கட்டப்பட்டது தான் பெரிய மினாரா.
பத்து அடுக்குகளைக் கொண்ட 131அடிகளைக் கொண்டது அந்த மினாரா. கி.பி. 1752ல் கட்டத் தொடங்கி 1755ல் கட்டி முடிக்கப்பட்டது. அதோடு இளங்கடம்பனூர் என்ற கிராமத்தையும் மன்னர் நாகூர் தர்காவிற்காக எழுதிக் கொடுத்தார்

தமிழ்க் கல்வெட்டைவிட மராத்தி மொழிக் கல்வெட்டு மிக விரிவாக உள்ளது. இங்கு மராத்திக் கல்வெட்டின் மொழிபெயர்ப்பு. அளிக்கப்பட்டுள்ளது. காலம் கி.பி, 1752. மொழிபெயர்ப்பு
'சுபம் ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாகன சகம் 1674 கலியுகாப்தம் 4688 ஆங்கிரச வருடம் மாசி மாதம் 15ஆம் தேதி சுக்கிலபட்சம் பவுர்ணமியன்று அசரத் மீரா சாகிப் அவர்களுடைய சன்னதிக்கு மேற்கு போசள குலதீப மகாராசா ராச ஸ்ரீ ஏகோசி அவர்கள் மகனான ஸ்ரீ துளசிராசா சாகிப் அவர்கள் வணங்கி அளித்த இடத்தில் பசுக்களையும் அந்தணர்களையும் காப்பாற்றுகின்ற வரான ஸ்ரீமத் சத்ரபதி மகாராசா ராசஸ்ரீ ஸ்ரீமந்த் பிரதாபசிம்ம மகாராசா சாகேப் அவர்கள் 11 நிலைகளையுடைய கோபுரத்தைத் தருமமாகக் கட்டி அளித்தார்.

சர்கேய் மானோசி செகதாப் அவர்கள் நாகூர் பந்தர் கார்பார் சுருணோசி போன்ஸ்லே மத்யஸ்தர் அப்துல் மாலிக் ஆகியோர் இந்த அறச்செயலை நிறைவேற்றி முடித்தனர்.

அசரத் சாகேப் அவர்களுடைய இடத்தில் பக்தி பூர்வமாக இந்த ஆவணம் சந்திரசூரியர் உள்ளவரை நடக்க வேண்டும் என்று எழுதிக் கொடுக்கப்பட்டது. வமிச பரம்பரையாக இந்தக் கொடையை வளர்த்துவர வேண்டும் என்ற எண்ணத்துடன் இக்கட்டிடம் கட்டப்பட்டது.
('தஞ்சை மராட்டியர் கல்வெட்டுகள், செ. இராசு; தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு..)
அப்பனுக்கு பிள்ளை தப்பாமல் பிறந்தது. புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? என்ற பழமொழிக்கு ஏற்ப மன்னரின் மகனும் மகானின் மீது பக்தியும் மிகுந்த மரியாதையுடனும் வளர்ந்தார்.
நாகூர் நாயகத்தின் நல்லாசியில் பிறந்த மகன் துளசி மன்னராக முடி சூடினார், நாகூர் தர்காவிற்கு தந்தையால் வழங்கப்பட்ட சன்மான கிராமத்தையும் அதன் வருமானத்தையும் கணக்கிட்டார். அதன் வருமானம் போதாதென்று கருதினார். மேலும் பதினைந்து கிராமங்களை தர்காவிற்கு நன்கொடையாக வழங்கினார்.
புலி எட்டு அடி பாய்ந்தால் புலிக்குட்டி பதினாறு அடி பாயும் என்பார்களே. அந்த பழமொழியும் இங்கே பதிவானது.
அந்த மினாராவில் ஏற்றப்படும் கொடியானது சிங்கப்பூரில் உள்ள நாகூர் கந்தூரி கமிட்டியினரால் நாகப்பட்டனம் கந்தூரி கமிட்டியினரிடம் ஒப்படைக்கப்பட்டு, அவர்கள் ஊர்வலமாக கொண்டு வந்து நாகூர் தர்கா கந்தூரி கமிட்டியினரிடம் ஒப்படைப்பார்கள்.

சிங்கப்பூர் கமிட்டியிலும், நாகப்பட்டினம் கமிட்டியிலும் பல இந்து சமய அன்பர்கள் உறுப்பினர்களாக இருப்பது முக்கியச் செய்தியாகும். .
நாகூர் கந்தூரி ஊர்வலத்தில் சந்தனக்கூடு வருமுன் அதற்கு முன் வரும் பல்லக்கு, செட்டியார்களால் செய்யப்படுவது, அதற்கு செட்டிப்பல்லக்கு என்று பெயர்.
நாகூருக்கு வரும் பிரதான சாலையில் கூட்டு பாத்திஹா வீடு என்று ஒன்று உள்ளது. நாகூர் நாயகத்தின் கந்தூரி நடக்கும் 14 நாட்களும் இந்துப்பெருமக்கள் கூடி அவர்களது செலவில் ஏழைகளுக்கும், யாத்ரிகர்களுக்கும் அன்னதானம் செய்வார்கள்.

நாகூர் நாயகம் அவர்கள் அடக்கப்பட்டுள்ள மூலஸ்தானத்தையும், மேல் விட்டத்தையும் முதன் முதலில் கட்டிக் கொடுத்து காணிக்கை செய்தவர்கள், நாகூர் கடற்கரை ஓரமாக இருக்கும் பட்டினச்சேரியைச் சார்ந்த மீனவர்கள்.
ஆண்டு தோறும் கந்தூரி நாளன்று நாயகத்தின் சமாதியில் போர்வை போர்த்தப்படும். அந்தப் போர்வையை நெய்து காணிக்கையாக வழங்கும் பாக்கியத்தை ஆண்டுதோறும் பெறும் குடும்பத்தினர் யார் தெரியுமா?
எந்த ஹாஜியாரோ, ஆலிம்சாவோ, ராவுத்தரோ, லெப்பையோ மரைக்காயரோ அல்ல சென்னை பழனியாண்டி பிள்ளை குடும்பத்தார் தான் அந்த பெரும் பேறு பெற்றவர்கள்.

நாகூர் ரயில் நிலையம் அருகே உள்ளது ஒரு சத்திரம். அதைக் காட்டிக் கொடுத்தவரும் அவரே.
இன்னும் ஒரு அதிசய அற்புத தகவலை சொல்லவா?
நாகூர் தர்கா ஷரீபின் மைய மண்டபம், மஹான் பாதுஷா நாயகத்தின் உறைவிடம் உள்ளே புகுமுன் அமைந்துள்ளதே முழுவதும் செம்பினால் ஆன கதவு, அந்த கதவை செய்து கொடுத்ததும் அவரே.
நாகூர் நாயகத்தின் அடக்கஸ்தலத்திற்கு மேல் இருக்கும் கும்பத்தின் தங்க கலசம் கூத்தா நல்லூரைச் சார்ந்த மகாதேவ அய்யரால் 1956ல் வைக்கப்பட்டது.
பிற சமய பெரியவர்களுக்கும் இஸ்லாமியர்களுக்கும் இடையே நிலவி வந்த மதவேறுபாடுகளற்ற மன ஒற்றுமையை விவரிக்கும் அரிய பல தகவல்களில் மிகச்சிறிய தகவல்களே இவை. இதுபோல இன்னும் பல நிதர்சன நிகழ்வுகளுண்டு.

தாங்கள் உயிரினும் மேலாய் மதிக்கும் இறை நேசர்களின் சன்னிதானங்களில் தங்களின் மொத்த சொத்துக்களையும் கொட்டிவிட காத்திருக்கும் முஸ்லிம் பக்தர்களில் பலருக்கு கிடைத்திடாத இப்பாக்கியங்களை இந்து பெருமக்கள் பெற்றிருக்கின்றனர் எனும் போது இந்த நாட்டில் இதுவரை நிலவிவந்த மனித உணர்வுகளை மதிக்கும் நேசத்தை நிதர்சனமாக புரிய முடிகிறது.
இன்றும் தர்காக்களில் இடம் பெறும் நிகழ்வுகளில் இந்து, கிறிஸ்து பெருமக்கள் இதயப்பூர்வ ஆர்வத்துடன் பங்கேற்பதை காணும்போது இந்த நிலத்தில் இன, நிற, மத வேறுபாடுகளை களைந்து சர்வ சமயத்தவரும் சங்கமிக்கும் சங்கமமாக தர்காக்கள் திகழ்வதை வரலாறு வாழ்த்தும்.

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 25
## ( தொண்டைமான் அகமது சாயபுக்கு அளித்த கொடை )

இரகுநாதராய தொண்டைமான் (Raja Sri Raghunatha Raya Tondaiman (1641-1730) என்பவர் புதுக்கோட்டை மன்னர்களில் முதலாமானவர் ஆவார். இவர் 1686 முதல் 1730வரை ஆட்சி செய்தார்.
இவரது வாழ்வின் துவக்கத்தில் இராமநாதபுரம் சேதுபதியிடம் போர்த் தலைவராக தனது வாழ்வைத் துவக்கினார். சேதுபதியிடம் இவர் ஆற்றிய பணிகளுக்காக 1686 ஆம் ஆண்டு, இவரை புதுக்கோட்டையின் சுதந்திர ஆட்சியாளராக சேதுபதி அங்கீகரத்தார்.
விசயநகரப் பேரரசின் மன்னரான மூன்றாம் ஸ்ரீரங்கரிடம் படைத் தளபதியாகவும், கள்ளர் இனத் தலைவராகவும் இருந்த ஆவடையரகுநாத தொண்டைமானின் மகனாக 1641இல் இரகுநாதராய தொண்டைமான் பிறந்தார்.
இடம் :- புதுக்கோட்டை மாவட்டம், குளத்தூர் வட்டம்,
லெட்சுமணப் பட்டியில் நடப்பட்டிருக்கும் ஒரு கல்.
காலம் :- இரகுநாதத் தொண்டைமான் காலம்
செய்தி: - புதுக்கோட்டை மனனர் ரெகுனாத ராய தொண்டைமானார் (1686-1730) அவர்கள் அசரது அகம்மது சாயபு குருக்களவர்கட்கு லெட்சுமண பாண்டியப் பள்ளி கிராமத்தில் நான்கு எல்லைகட்கு உட்பட்ட பகுதிகளையும், நன்செய் நிலமும், குளம் வருவாயில் இருபதும் கொடையாக அளித்தார்.
கல்வெட்டு
1........
2. 1 தேதி அச
3. ரது நவாபு சாய
4.பு உளமந்தயத்
5. தல் உமுற வுபர அதுர
6. யவர்கள் உத்தாரப் ப
7. டிக்கி அசரது அகம்ம
8. து சாயபு குருக்களவ
9. .ர்களுக்கு ரா ரெகுனா
10. த ராய தொண்டை மா
11.னாரவர்கள் லெட்சு
12. மன்பாண்டிய பட்டி
13.கிராமம் குடியெ சேந்
14. த எல்லை நாங்கு
15. ம் நஞ்சை குள
16. ம் துகை இருபது
17. இதில் சேந்த புஞ்
18. சை நிலம் கி
19.ராமம் சந்தி
20. ரர் வரைக்கும்

21. காவேரியும் பில்
22. லும் உள்ளவரைக்கும்
23 ஆண்டு கொள்ளுவாராக
24. வும் இந்ததர்மத்து
25. க்கு தமிளரிலே ஆதா
26. மொருவர் பிசகு ப
27. ண்ணினால் கெ
28. ங்கைக் கரையிலே காராம்
29. பசுவைக் கொண்ண
30. தோஷத்திலே போ
31. வாராகவும் துலுக்கரி
32. லே யாதாமொருவர் பி.
33. சகு பண்ணினால் மக்
34 காவிலே மிருகத்தினால் வ
35. யிறு சாப்பிட்ட தோஷ
36. த்துலே போவாராக
37.வும் இப்படிக்கு சாதன
38. கல்லில் வெட்டிவிச்சோ
39. ம் யிந்த சாதனத்தை
40. யெளுதினது மரு
41. தமுத்து மதி... மன்
42. கையி எழுத்து
( புதுக்கோட்டை மாநிலக் கல்வெட்டுக்கள் எண் 978. பக்கம் 626)

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 26
## ( கைக்கூலி சீதனம் குறைத்து ஒப்பந்தம் )

இடம் :- திருச்செந்தூர் வட்டம், காயல்பட்டினம் கொடிமரப்பள்ளியில் நடப்பட்டுள்ள பலகைக் கல்
காலம் :- ......தொல்லியல் துறை ஹிஜ்ரி 1271 படித்துள்ளனர்.
செய்தி :- பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டாருக்குத் கொடுக்கும் கைக்கூலி சீதனம் அதிகமாக உயர்ந்ததால் பலர் கைக்கூலி சீதனம் கொடுக்க முடியவில்லை. அதனால் பல பெண்கள் திருமணம் ஆகாமலேயே இருந்துள்ளனர்.
அதனால் காயல் பட்டின இஸ்லாமியர் அனைவரும் கூடி கைக்கூலி சீதனம், பெண்ணுக்குச் சீதன உடைமை இவ்வளவுதான் கொடுக்க வேண்டும் என்று முடிவெடுத்து எழுதிய ஒப்பந்தம்.
இதை மீறியவர்கள் வீட்டில் நடைபெறும் நன்மை தீமைக்கு யாரும் போகக்கூடாது என்றும் தீர்மானித்தனர்.
கல்வெட்டு
1. கிகரத்து 1271 வருஷம் (935)
2. கார்த்திகை மாதம் 5 தேதி காயற்பட்டணத்திலிருக்கும் முஷ்
3 . லிமாகிய நம்மவர் சகலத்தினரும் எழுதிக் கொ
4. ண்ட சம்மத பத்திரக் கறார் நாமா. என்னவென்றால்
5. நம்மள் இதுமுன் மாப்பிள்ளைமார்களுக்கு கை
6. க்கூலி சீதனம் 150-200-250-300.
7. 350-400 எல்லை மட்டில் வாங்கிக் கலியாணம்
8. முடிக்கிறபடியினாலே யிந்தப்படி பேசிக் குடுத்த
9. பேர்களும் வருத்தப்பட்டு அதுனாலே குமர்க்கலி
10. யாணம் முடியாமல் அனேகங் குமர்கள் இருப்பதினாலே
11. யும் யேழை யெளியதுகளும் நடப்பு மனிதர்களும் கும

12. ரை வைத்துக்கொண்டு அனேகங் கஷ்டப்படுவதி
13. னாலேயும் கைக்கூலி உசந்ததன் நிமித்தியம் தன் உடப்பிற
14.ப்பான பேர்களிடத்தில் குமரிரு சாக்காட.. ர்சங்
15 .....இக்கைக்கூலி குடுக்கிறதையிட்டு....
16. அந்த இடத்தில் கைக்கூலி வாங்கி கலியாண மு
17. டிக்கிறபடியினாலேயும் இப்படிப் பல விதமாய் கும
18. ரிருந்து போறதினாலேயும் அனேகங் குமர்
19. கலியாணம் முடியாமல் இருப்பதினாலேயும் னாமெ
20.ல்லோரும் இப்போது ஒற்றுமைப்பட்டு பொரு
21.த்தமாய் கைக்கூலி சீதனம் பொருந்தி யெழுதி
22. க் கொண்டது. மாப்பிள்ளைக்குக் கைக்கூலி பணம்
23 விராகன் 71. பெண்ணுக்குச் சீதன உடமை விராகன் 30. யிந்
24. தப்படிக்கு வாங்குறதில் நம் உறமுற மாப்பிள்ளைக்கு கை
25. க்கூலி குடுத்து சீட்டு மத்தாதாயிருக்கிறயின்ராகளுக்கு
26. மேற்கண்டிருக்கிற விராகன் 71க்குக் குறைந்தது கைக்கூலி
27. குடுத்திருந்தால் மேற்படி விராகனுக்குச் சரிகூடிக் குடுத்து சீதன
28. உடமை விராகன் 30க்குப் போட்டு கலியாணம் நிறவேத்திக்
29 கொள்கிறது. மேற்படி கைக்கூலி விராகன் 71க்கு மேற்கொ
30. ண்டு பத்தியிருந்தால் மேற்கொண்ட பணம் விராகன் யக்குடு
31. த்து கலியாணத்தை நிறவேத்திக் கொள்கிறது. பெண் (ம)
32. வுத்தாகி 2ம் தாரம் கலியாணம் முடிக்கிறதும் காசு
33. கந்தைக் குடாத்திப் பட்டவர்களிடத்தில் பெண்ணிருந்
34. தால் பணம் விராகன் 10 வாங்கிக் கொண்டு கலியாண முடி
35. த்துக்கொள்கிறது.பெண்ணுக்கு சீதனம் பணம் விராகன் 30
36. பெத்துக்கொள்கிறது. நிசவுப்பட்டறை முன் வளக்கம்
37. கைக்கூலி பொன் 21க்கு ரூபாம் 42ம் 2ஆம் தாரத்துக்கு
38. ரூபாய் 10ம் கோமாளிந் தெருவில் முன் வளக்கம் பொன்
21க்கு
39. ரூபாய் 42ம் 2ஆம் தாரத்துக்கு ரூபாய்10ம்
பரிமாறந்தெருவில்
40. ரூபாய் 40 1/2 ம் 2ஆம் தாரத்துக்கு ரூபாய் 40ம் சித்தந்தெருவில்
41. பொன் 35க்கு கோப்பள்ளி ண் 5 ரூ பொன் 30க்கு ரூபாய் 40ம்
42. 2ம் தாரத்துக்கு ரூபாய் - டிக்களந்தெருவில் ரூபாய்
43. 21ம் 2ஆம் தாரத்துக்கு ரூ....வளப்பு... ருடை
44 வங்களுக்குடை பொன் 10 ரூ.... 2ம் தாரத்துக்கு ரூ
45. 21ம் யிந்தப்படிக்கு.... கலியாண முடித்துக் கொள்
46. கிறது யிந்தப்படிக்கு...நடந்து வருவோமாகவும்
47. இந்தப்படிக்கு நடக்காத...... சூலு.....
48. க்கு மாறுபட்டு நவியு.... பெறாமல் போவாராகவும்
49. அப்படிக்கு வராமல்.... ஆல காத்துக் கொள்வானாகவும்
50. ஆமீன்.... அப்படிச் சறுகுப் போனவன் வீட்டு
51. நன்மை தின்மைக்குப் போகாமலிருப்போமாகவும்
52. யெங்கள் மன ராசியில் எழுதிக்கொண்ட க.....
53. நிசாக்கு அந்தந்த முகாவக்காறரைக் கொண்டே யெ
54. ழுதிக் கொள்கிறது இதற்கு அசல்ப் பத்திரம் அறபு
55. முகியித்த..... க.... யவர்கள் வசமிருக்குது
56. அடித்தும் சாதிறுஅ.... குமாரர் உமறு சாகி...

57. முயற்சியாயிந்த முகப்பும் கட்டி விய....
58. கறார் நாமாவும் எழுதி வைத்தார் கூயி.....
59...ளிக்கொண்டு கொத்த எழுதிக்கொ......
60. குமரரான க.....
(முற்றுப் பெறவில்லை )
Annual Report on Epigraphy 104 of 1948

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 27
## ( ஈசா பள்ளிவாசலுக்கு சேதுபதி மன்னர் கொடை )






கட்டையத் தேவர் (எ) குமார முத்து விஜய ரகுநாத சேதுபதி (கி.பி. 1728 - 1735) என்பவர் இராமநாதபுரம் சமஸ்தான மன்னராவார். இவர் பவானி சங்கர சேதுபதி மன்னரைப் போரில் தோற்கடித்து சேதுபதி மன்னரானார்.
பவானி சங்கர சேதுபதி இராமநாதபுரத்தின் ஆட்சியைக் கைப்பற்ற தஞ்சை மராட்டிய மன்னர் உதவினார்.
அவரது உதவிக்கு கைமாறாக பவானி சங்கர சேதுபதி அளித்த வாக்கின்படி சேதுநாட்டின் வடபகுதியான பட்டுக்கோட்டை சீமையை தஞ்சை மன்னருக்கு அளிக்கவில்லை என்ற கோபத்தில் இருந்தார்.
இதை தனக்கு சாதகமாக பயன்படுத்திக்கொண்ட கட்டையத் தேவர் தஞ்சை மன்னரை அணுகி அவரின் உதவிபெற்று படையெடுத்து வந்து பவானி சங்கர சேதுபதியைத் தோற்கடித்து, குமாரமுத்து விஜயரகுநாத சேதுபதி என்ற பெயருடன் 1728ல் சேதுநாட்டின் மன்னர் ஆனார்.

ஈசா பள்ளிவாசலுக்கு சேதுபதி மன்னர் கொடை
இராமநாதபுரம் சேதுபதி அரசர்களில் விசயரகுநாத சேதுபதிகாத்த தேவர் குமாரமுத்து 14.1.1734 அன்று இராமநாதபுரம் நகரம் கோட்டை கடைவீதிப் பகுதியில் உள்ள ஈசா பள்ளிவாசலுக்கு வரும் ஆன்மிகப் பெருமக்களுக்கு அன்னம் வழங்குவதற்காகக் 'கிழவனேரி' என்ற ஊரைக் கொடையாகக் கொடுத்ததை இச்செப்பேடு தெரிவிக்கிறது. 'கிழவனேரி' முதுகுளத்தூர் வட்டத்தில் உள்ளது.
ஊரில் உள்ள நன்செய், புன்செய், மாவிடை, மரவிடை, திட்டு, திடல், எந்தல், பிறவிடை, குடி, படை, பள்ளு, பறை, கிணறு, மரம் முதலிய பலவும் பள்ளிவாசல் உடைமையாகும்.

இச்செப்பேட்டில் புதுமையாக காப்புச் சொல் எழுதப்பட்டுள்ளது.

"தமிழனாலும் நாலு வருணத்திலே உள்ள பேரும், சுலாமானவர்களும் கெங்கைக் பரிபாலனம் பண்ணின மக்கமதினத்திலேயும் புண்ணிய தலங்களிலேயும் அன்னதானம் பேர்கள் சொன்னதானமும் வெகு குடும்ப பிரதிட்டையள் பண்ணின பலத்தை அடைவாராகவும் என்பது காப்புப் பகுதியாகும். இக்கொடையைப் பெற்றுக் கொண்டவர் சர்தர்வேசலி மகன் சார்மூசா பாப்சா என்பவராவார்.

செப்பேடு

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1656 இதன் மேல் செல்லா நின்ற ஆன
2. ந்த வருஷம் தை மாதம் 1ந்தேதி பௌர்ணமையும் சோம வாரமும் பூச நட்சத்திரமும் சௌமியாநா
3 மயோகமும் பாலவாகரணமும் கூடின புண்ணிய காலத்தில் தேவை நகரா
4. திபன் சேதுமூலரட்சா துரந்தரன் இராமநாதசுவாமி காரியதுரந்தரன் .சிவபூஜா து
5. ரந்தரன் பரராஜ சேகரன் பரராஜ கெஜசிங்கம் இரவி குலசேகரன் இரவிமார்த்
6. தாண்டன் சொரிமுத்து வன்னியன் ஸ்வஸ்தி ஸ்ரீ மகாமண்டலேசுர
7 ன் அரியராய் தளவிபாடணன் பாசைக்குத் தப்புவராயிர கண்டன் மூவராய க
8. ண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான் பாண்டிமண்டல
9. தாபாச்சாரியான் சோழ மண்டல பிரதிஷ்டாபனாச் சாரியன் தொண்டம
10. ண்டல சண்டப் பிரசண்டன் ஈழமும் கொங்கும் யாழ்ப்பாண பட்டணமும் கெ
11. சவேட்டை கண்டருளிய ராஜாதி ராஜன் ராஜபரமேசுரன் ராஜமார்த்
12. தாண்டன் ராஜ கம்பீரன் இளங்சிங்கம். தளஞ்சிங்கம் பகைமன்னர் சிங்
13. கம் துரைராயன் ஆற்றில் பாய்ச்சி கடலில் பாய்ச்சி மதப் புலி அடைக்கலங்காத்
14. தான் தாலிக்கு வேலி சத்துருவாதியள் மிண்டன் வேதியர் காவலன் அரசராவ
15. ணராமன் அடியார் வேளைக்காரன் பரதள விபாடன் உரி கோல சுரதானன்
16. அந்தம்பர கண்டன் சாடிக்காரர் கண்டன் சுவாமி துரோகியள் மிண்டன்
17 பஞ்சவர்ணராய ராகுத்தன் பனுக்குவார் கண்டன் கொட்ட மடக்கி வை
18. யாளி நாராயணன் இவுளிபாவடி மிதித்தேறுவார் கண்டன் ஆரிய மானங்க
19. ◌ாத்தான் தொண்டியந்துறைக் காவலன் துரகரேபந்தன் அனுமகேதனன் கொ
20. டைக்கு கர்ணன் பரிக்கு நகுலன் வில்லுக்கு விஜயன் பரதநாடகப் .
21. பிரவீணன் கருணா கடாட்சன் குன்றினுயர் மேருவில் குணில் பெ
22.◌ாரித்தவன் திலதநுதல் மடமாதர் மடலெழுதவரு சுமுகன் கருட கேதனன
23. காவிக் கொடையான் விசையலட்சுமி காந்தன் கலை தெரியும் விற்பனன்
24. காமினி கந்தர்ப்பன் அட்டதிக்கு மனோபயங்கரன் துஷ்ட நிக்கிரக சிட்டபரி
25. பாலன் சங்கீத சாகித்ய வித்யா வினோதன் வீரதண்டை சேமத்தலை விள
26.ங்கிய தாளினான் சகல சாம்பிராச்சிய லெட்சுமி நிவாசன் சேது காவல
27. ன் வங்கிஷாதிபனான துகவூர் கூத்தத்தில் காத்தூரான குலோத்துங்க சோழ
28. நல்லூர் கீழ்பால் விரையாத கண்டனிலிருக்கும் ஸ்ரீ இரண்ய கெர்ப்ப யா
29, ஜி ரெகுநாதசேதுபதி காத்த தேவர் அவர்கள் மருமகன் கெங்கை கொண்டானி
30. லிருக்கும் கட்டையத்தேவர் புத்திரன் ஸ்ரீகுமாரமுத்து விசையரெகுநாத சேது
31. பதிகாத்ததேவர் அவர்கள் இராமநாதபுரத்திலிருக்கும் ஈசா பள்ளி வாசல்
32. அன்னதான தன்மத்துக்கு சர்தர்வேசலி குமாரன் சார்மூஸா பாப்ஷா
33. பாரிசமாக கட்டளையிட்ட கிழவனேரிக்கு எல்கையாவது கருக்கத்திக் கண்
34. மாய்க் கடைக்கொம்புக்கு வடக்கு மாணிக்கனேரி பொருத்துக்கு கிழ
35. க்கு மேற்படி யேந்தல் தென்கரைக்குத் தெற்கு ஆதி நாராயணன் மடைசிவந்தி
36. யப்பன் பொட்டல் செய்க்கு மேற்கு இன்னான்கு எல்கைக்குட்பட்ட கிழ
37. வனேரி நஞ்சை புஞ்சை மாவிடை மரவிடை, திட்டு திடல் ஏந்தல் பிறவிடை
38.குடி, படை, பள்ளு, பறை, கீழ் நோக்கிய கிணறு. மேல் நோக்கிய மரம்
39. அஷ்டபோக தேஜ சுவாமியங்களும் இவை பரியது சர்வமானிபம் தாம்
40. பிரசாசனம் கட்டளையிட்ட படியினாலே ஆதி சந்திராதித்த வரை புத்திர
41. பௌத்திர பரம்பரைக்கும் அன்னதானத்துக்கும் ஆண்டனுபவித்துக் கொள்
42. ளுவாராகவும் இந்த தன்மத்திற்கு தமிழனாலும் நாலு வருணத்திலே உள்
43. ள பேரும் இசுலாமானவர்களும் பரிபாலனம் பண்ணினபேர்களும் கெ
44. ங்கைக்கரையிலேயும் சேதுவிலேயும் மக்க மதினத்திலேயும் புண்
45. ணிய தலங்களிலேயும் அன்னதானம் சொன்னதானம் வெகுகுடும்ப பிர

46. திட்டையள் பண்ணின பலத்தை அடைவாராகவும் இந்த தன்மத்துக்கு
47. அகிதம் பண்ணினபேர்கள் புண்ணியத் தலங்களிலே மாதா பிதாவை
48. வதைத்த தோஷத்திலே போகக் கடவாராகவும்
ஆதார நூல் :- சேதுபதி மன்னர் செப்பேடுகள். டாக்டர் எஸ்.எம். கமால்; பக்கம் 445-451

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 28
## ( ரணசிங்க தேவரின் காட்டுபாவா பள்ளிவாசல் கொடை )

இடம் :- புதுக்கோட்டை மாவட்டம், திருமெய்யம் வட்டம் காட்டுபாவா பள்ளிவாசல் முன்பு நடப்பட்டுள்ள கல்
வரலாறு :- புதுக்கோட்டையிலிருந்து சுமார் 30 கி.மீ. தொலைவில் திருமயம் மதுரை தேசிய நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது காட்டுபாவா பள்ளிவாசல்.
இந்த பள்ளிவாசல் 17-ஆம் நூற்றாண்டில் ஆற்காட்டு நவாப்பால் கட்டப்பட்டது. பக்ரூதீன் அவுலியா என்றழைக்கப்படும் காட்டுபாவா அவர்கள் அடங்கப்பட்டுள்ளார்கள்.
ஆண்டுதோறும் இங்கு நடைபெறும் கந்தூரி விழா சிறப்பான விழாவாகும். முஸ்லீம்கள் மட்டும் இன்றி பல்வேறு தரப்பட்ட மக்களும் அந்நாளில் கூடுவார்கள்.
காலம் :- தாது வருடம், ஐப்பசி 13, கி.பி. 1690
செய்தி :- சேதுபதி மன்னர் காத்த ரகுனாதத் தேவர் மகன் ரணசிங்கத் தேவர் காட்டுபாவா பள்ளிவாசலுக்கு அடுங்குளம், காஞ்சவான் குளம் ஆகியவற்றை நீர் பாயும் நிலத்துடன் கொடை கொடுத்தார்.
கல்வாசல் நாட்டாரும். கானாட்டாரும். காலூர் பள்ளி வாசலுக்குக் கொடுத்த கொடையும் இறுதியில் கூறப்பட்டுள்ளது.
கல்வெட்டு
1. தாது வருஷம்
2. அற்பசி மாதம் 13 தேதி
3.சேதுபதி காத்த
4. ரெகுனாதத் தேவ
5. ர் குமாரன் ரண
6. சிங்குத் தேவர் உ
7. த்தாரம் நாடுகா
8. த்த சேருவை
9. லக்கி சேருவைகா
10. ரன் சீவிதம் நல்
11. லூர் புரவில் அ
12. டுக்குளமும் வ
13. யலும் காஞ்ச
14. வன் குளமும்
15. வயலும் இது
16. சூழ்ந்த புரவும்கா
17 ட்டுவாவா பள்ளி
18. வாசல் தன்முத்
19. துக்கு விட்டது
20. சந்திராதித்தவ
21. ரைக்கும் நடக்கக்
22. கடவதாகவும்
23. கல்வாசல் நாட்டா
24. ரும் கானானாட்டா
25. ருங் காலூர் பள்ளி
26. வாசல் காணி
27. இக் காணி

28. புத்திரபவுத்திர
29. வரைக்கும் அ
30. னுபவிக்கவும்
ஆதாரம் : புதுக்கோட்டை மாநிலக் கல்வெட்டுகள் எண் 901
பக்கம் 594

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 29
## (ஈரோடு கோட்டை அதிகாரிகளின் பள்ளிவாசல் கொடை)

இடம் :- ஈரோடு மாவட்டம், ஈரோடு நகரம் காவிரிக் கரையில் உள்ள சேகு அலாவுதீன் சாயபு மஜீத் தர்கா நுழைவாயில்
வலப்புறம் நடப்பட்டுள்ள குத்துக்கல்.
காலம் : - கி.பி.12.6.1761
வரலாறு :- மைசூர் மன்னன் இரண்டாம் கிருஷ்ணராச உடையார் காலத்தில் ஈரோடு மாவட்டப் பகுதி அவர் ஆட்சியில் இருந்தது. ஈரோடு கோட்டை அதிகாரியாக (தளவாய்) இருந்த ரங்கய்யநாத திம்மரசய்யன் என்பவர். அவரும் கோட்டையில் கந்தாசாரம்,அட்டவணை, சேனபோகம், சேருவைகாரர் ஆக இருந்த ஏனைய நான்கு அதிகாரிகளும் காவிரிக்கரை ஷேக் அலாவுதீன் தர்காவிற்கு வரும் அரதேசி பரதேசி பக்கிரிகளுக்கு நாள்தோறும் அன்னமிடவும், அவர்களுக்கு ஆடை கொடுக்கவும் காலிங்கராயன் பாச நன்செய் நிலத்தில் 4 மாநிலம் கொடையாகக் கொடுத்தனர்.

கல்லும், காவிரியும், சந்திரர், சூரியர், நட்சத்திரங்கள் உள்ளவரை இந்தத் தர்மம் தொடர்ந்து நடைபெற வேண்டும் என்ற விருப்பத்தையும் தெரிவித்தனர்.
இந்தத் தர்மத்திற்கு இந்துவாக இருந்து தீங்கு செய்தால் கங்கைக் கரையில் காராம் பசுவைக் கொன்ற பாவமும், தாயைச் சேர்ந்த பாவமும் பெறுவான். இசுலாமியர்கள் தீங்கு செய்தால் மக்காவில் பன்றியைக் குத்திக் கொன்று தின்ற பாவம் கிடைக்கும். தாயாரையும், மகளையும் சேர்ந்த பாவமும் வரும். பூமி ஆகாயம் கேடுகள் உண்டாக்கும். மக்கட்பேறு இல்லாமல் போகும்.
1761ஆம் ஆண்டு ஐதர்அலி முழு அதிகாரத்தைப் பெற்ற ஆண்டு, அவருடைய ஆணையில் இக்கொடை வழங்கப்பட்டிருக்கலாம். ஆனால் கல்வெட்டில் அதுபற்றிய குறிப்பு இல்லை.
1890வாக்கில் தனியார் சிலர் அனுபவித்து வந்த நிலத்தை வழக்கு மன்றம் சென்று நிர்வாகிகள் மீட்டுள்ளனர்.
தனியார் ஒருவர் மங்கம்மாள் சத்திரத்தில் சேகு அலாவுதீன் சாய்பு அடக்கம் ஆனதாகக் கூறியுள்ளார்.
மங்கம்மாள் காலம் கி.பி. 1689 -1706 ஆகும்.
கல்வெட்டு
1. சாலிவாகன சகார்த்தம் 16
2. 83 கலியுக சகார்த்தம் 48
3. 62 க்கு மேல் செல்லாநின்ற விசு
4.வருஷம் சேத்ய சுத்தவஸ் வெள்ளிக்கிழ
5. மை சுவாதி நட்சேத்திரம் பெத்த சு
6. ப தினத்தில் ஸ்ரீமது ராசாகிராச
7.ராசபரமேசுரன் பிறதிஷ்
8. டைப் பிரதாப கிருஷ்ணமாரா
9. சாஉடைய்யனவர்கள்
10.சீரங்கப் பட்டணத்தில்
11. ரத்ன சிம்மாசன ரூடராய் பிறித்

12.வி சாம்ராச்சியமாளு
13. கிற னாளயில் ஸ்ரீம
14. த் யீரோட்டுத் தள
15. வாய் ஸ்ரீரங்கய
16. நாத திம்மரைசயன்
17. வர்கள் கந்தாசா
18. ரம் அட்டவணை சேனை
19 பாகம் சேருவைகார
20. ர் முதலான பேரும்
21. காவேரி ஓரத்திலி
22. ருக்கிற சேகுமசாய்கு
23. சேகு அலாவுதீன் ஸாய
24. பு மசீத் தர்மத்து சிலாசா
25. சனம் அப்பணைப் பிறகா
26. மரத்திற்கு எழுதிக் குடுத்த விபரம்
27.அணை ஓபளிக்குச் சேர்ந்த
28 வயிறாபாளைய வதிகரை
29 யில் மாறுகால்க்கரையில் மாத்த
30. பீளமேட்டில் தோப்படியில் மானிய
31. ம் நஞ்சை 4 மாநிலம் சுத்தக் கிறைய மா
32. னியமாய் அனுபவித்துக்கொ
33. ண்டு அன்னாடகம் அரதேசி பரதே வஸ்த்தி
34. சி பக்கிரியலுக்க அன்னம்
35. ரங் கொடுத்துக்கொண்டு க
36. ல்லும் காவேரியுள்ளவரை ஆசந்தி
37. ரார்க்கம் சுகமாயிருக்கவும் இந்தத்த
38. ர்மத்துக்கு ஆராமொருவர் விகா
39. தம் பண்ணினால் காசி
40. கங்கைக்கரையில் கா
41.ராம் பசுவைக் கொன்றவனும்
42. தாயைக் கோழ்த்தவன்
43. துலுக்கரானால் மக்காவில்
44. பன்றியைக் கொன்று தின்ற
45. வன் தாயாருமகள்க்கோழ்த்த
46. வன் பூமியாகாசங்
47. கெடுக்கும் புத்திரசம்பத்தும்
48.இல்லாமல் போமென்றவாறு உ
ஆதாரம் : S.I.T Vol III Part 1 1218

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 30
## ( காயல்பட்டினம் பள்ளிவாசல்களில் பாண்டியர் கல்வெட்டுக்கள் 1)

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள திருச்செந்தூர் வட்டத்தைச் சேர்ந்த காயல்பட்டினம் தொன்மையான பேரூர். பவித்ரமாணிக்கப் பட்டினம் என்று வரலாற்றிலும் 'சிறிய மெக்கா' என்று இஸ்லாமியப் பெருமக்களாலும் அழைக்கப்படும் சிறப்பு மிக்க ஊர்.

பாண்டியர் வரலாற்றோடு தொடர்புடைய ஊர். அங்குள்ள பள்ளிவாசல்களில் உள்ள கல்வெட்டுக்களில் ஐந்து கல்வெட்டுக்கள் பாண்டியர் காலத்தைச் சேர்ந்தவை. 1, 4, 5 ஆம் எண் கல்வெட்டுக்கள் புதுக்கோட்டை முனை ராஜாமுகமது அவர்கள் அன்புடன் உதவியவை.

1) கடற்கரைப் பள்ளிக் கல்வெட்டு

கடற்கரைப் பள்ளியில் இருந்த இக்கல்வெட்டு கற்புடையார் பள்ளியில் இப்போது வைக்கப்பட்டுள்ளது. சடையவர்மன் குலசேகரப் பாண்டியன் (கி.பி. 1190-1218) கல்வெட்டு. 'பூவின் கிழத்தி மேவி வீற்றிருப்ப' என்ற அவன் மெய்க்கீர்த்தியோடு இக்கல்வெட்டு தொடங்குகிறது.

ஐந்து பாண்டியர்களுள் ஒருவனாகிய இம்மன்னன் பவித்திர மாணிக்கப்பட்டினம் என்ற ஊரில் உள்ள கடற்கரைப் பள்ளிக்கு முத்துச் சலாபத்தைக் கொடையாகக் கொடுத்ததை இக்கல்வெட்டுக் கூறுகிறது. "கீழ்க் கடல் படர் காயலந்துறை கொற்கை முத்துடை வீரபாண்டியன் பட்டினத்துள் வெண்டிரள் மணல்மேட்டு மேலெல்லை பவித்திர மாணிக்க நகர்” என்று புகழப்படுகிறது. 'வணிக சோனகர்' என்ற தொடரும் காணப்படுகிறது.

கல்வெட்டு

பூவின் கிழத்தி மேவி வீற்றிருப்ப
மேதினி மாது நீதியில் புணர
....மடந்தை சயப்புயத் திருப்ப
மாக்கலை மடந்தை வாக்கினில் பொலிய
திசைஇரு நான்கும் இசைநிலா எரிப்ப
மறைநெறி வளர மனுநெறி திகழ்தர
அறநெறிச் சமயங்கள் ஆறும் தழைப்ப
...... ..... ........எழுகடல் பொழில்
வெண்குடை நிழற்ற செங்கோல் நடப்ப
இருநேமி யளவும் ஒருநேமி ஓங்க
சேரலர் பணிய..... மணியணி
மாட கூடப் பாண்டிமண் டலங்கொள்
தென்கீழ்க் கடல்படர் காய லந்துறை
கொற்கை முத்துடை வீரபாண்டியன் பட்டினத்துள்
வெண்டிரள் மணல்மேட்டு மேலெல்கை பவித்திர மாணிக்க
நகர்க்குக் காவலர் ஐவருக் கொருவர்

திரிபுவனச் சக்கரவர்த்தி ஆணையாக கடற்கரைப் பள்ளி இறையிலியாகக் குடுக்கும்படிக்கு திருவுளத்தருளிய முத்துச் சலாபம் வாணிகச் சோனகர் குழுக்காய் நாட்டிப் படுத்து..... எல்கை காட்டியும்... வாறெல்லாம்... யாண்டு... விளங்குமுயர் வெள்ளிநாள்.... கல்லில் வெட்டுவித்தேன்.... த்துத்.... மாறென...ரா... கண்டனனே... தென்னர் பராக்கிரமனே.... யு.... ஒன்றே யாண்டு கொள்ளவுமாக.... துல்யம்... எழுத்து... ஸ்ரீ...

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 32
## ( காயல்பட்டினம் பள்ளிவாசல்களில் பாண்டியர் கல்வெட்டுக்கள் 2)

2) கற்புடையார் பள்ளிக் கல்வெட்டு

கீழ நெய்னார் தெருவில் அமைந்துள்ள பள்ளி இது. மிகப் பழமையான பள்ளிகளில் ஒன்று. இப்பள்ளிக்கருகே குளம் ஒன்றுள்ளது. முஹம்மது அபுபக்கர் வலி ரவியல்லாஹு அன்ஹு அவர்கள் இங்கு அடங்கியுள்ளார்கள். இவர்களுக்கு வருடாவருடம் கந்தூரி விழா எடுக்கப்படுகிறது.

மாறவர்மன் குலசேகரப் பாண்டியன் (1314-1362) காலக் கல்வெட்டு.அரசனின் 11ஆம் ஆட்சியாண்டில் பவித்திர மாணிக்கப் பட்டினத்து வியாபாரி வடவணிகன் என்பவன் சந்தியா தீப விளக்குவைக்க இரண்டு அச்சுக் கொடுத்தான்.

கல்வெட்டு

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கர வத்திகள் குலசேகர பாண்டிய தேவர்க்கு யாண்டு ஒன்பதாவதின் எதிர் இரண்டாவது பவித்திர மாணிக்க பட்டினத்து வியாபாரி வடவணிகன்... செய்வதாக சந்தி தீப விளக்குக்குப் பண்டாரத்துக்கு அச்சு இரண்டு இத்தர்மம் சந்திராதித்தவரை செல்வதாக...

3) இரட்டைக் குளம் பள்ளிவாசல் கல்வெட்டு

மேல் கல்வெட்டில் கண்ட குலசேகர பாண்டியனின் 16வது ஆட்சியாண்டில் சுல்தான், உய்யவந்தான் திருவனந்தன் ஆகியோர் கொடுத்த கொடை குறிக்கப்படுகிறது.

கல்வெட்டு

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலசேகர தேவர்க்கு பராண்டு பதினைந்தாவதுக்கு எதிராவது சுல்தான் உள்ளிட்டாரும் உய்யவந்தான் திருவனந்தன் இவ்வனைவோரும்...

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 33
## ( இஸ்லாமியரை வணங்கும் இந்துக்கள் )

ஈரோடு மாவட்டத்தில் ஈரோடு வட்டத்தில் காகம் ஊரிலும், பெருந்துறை வட்டத்தில் உள்ள காஞ்சிக்கோயில் வணங்கும் ஊரிலும் கொங்கு வேளாளர்களில் கண்ண குலத்தார் வாழ்ந்து வருகின்றனர்.

இரண்டு ஊரில் உள்ள கண்ணகுலப்பெருமக்களும் ஆண்குழந்தைகட்கு அவ்வூர்களிலிருந்து குடியேறி மற்ற ஊர்களில் வாழும் பலநூற்றுக் கணக்கான குடும்பங்களும் சுவாமியின் பெயர் குலதெய்வமாக ராவுத்தனன் என்றும், பெண் குழந்தைகட்கு ராவுத்தமா என்றும் 'ராவுத்தனசாமி'. பெயர் வைக்கின்றனர்.

ராவுத்தனசாமியின் பெயரைக் கேட்டால் 'டில்லி பட்டாணி துலுக்கர்' என்று கூறுகிறார்கள். தங்கள் குல முதல்வருக்கு அவர் பேருதவி செய்து காப்பாற்றியதால் அவரைக் குல தெய்வமாக வணங்குகிறோம் என்று கூறுகிறார்கள்.

ஈரோடு வட்டம் கொளாநல்லியில் வாழும் கண்ண குலப் பெருமக்களின் குலதெய்வம் பொன் குழலியம்மன் ஆகும். அம்மன் கோயிலில் அவர்கள் வணங்கும் மற்றொரு தெய்வத்தின் பெயர் துலுக்கணசாமியாகும். பொன்குழலியம்மனை வணங்கும் கண்ண குலத்தார் துலுக்கண கவுண்டர்' என்று பெயர் வைத்துக் கொள்கின்றனர்.

நாமக்கல் வட்டம் திருச்செங்கோட்டில் இதே கண்ண குலத்தார் வழிபடும் பனிமலைக் காவலர் சுவாமி கோயிலில் 'பங்கடு சுல்தான்' அடக்கத் தலம் உள்ளது. இஸ்லாமியர்களும் வந்து தங்கள் பங்கடு சுல்தானை சமய ஞானி என்று வணங்குகின்றனர். பனிமலைக் காவலர் கோயிலில் பூசை செய்யும் பூசாரியின் பெயர் ஏறருள்முத்து துலுக்கப் பூசாரி என்பது.

கொங்கு வேளாளரில் கண்ண குலத்தாருக்கும் இஸ்லாமியருக்கும் உள்ள மேற்கண்ட தொடர்புகள் மேலும் ஆய்வுக் குரியதாகும்.
ஈரோடு மாவட்டக் கல்வெட்டுக்கள். முதல் தொகுதி எண் 43. 'கொங்குநாடு' (1934) தி.சு. முத்துசாமிக் கோனார். பக்கம் 90

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 34
## ( காயல்பட்டினம் கொடிமரத்து சிறுநயினார்பள்ளிக் கல்வெட்டு )

அரிகேசரி பராக்கிரம் பாண்டியன் காலக் கல்வெட்டு (கி.பி.
1422-1463) துருக்கநயினாப் பள்ளியில் சிறந்த முறையில் விழாக்கள் நடத்த தென்காயல் மக்கள் எல்லோரும் மகிழ தொழுகை நடத்த அர்த்த மண்டபம், இடைநாழி. பெருமண்டபம், தண்ணீர்க் குளம் அமைத்து ஏற்ற திருப்பணிகளும் செய்யப்பட்டன.
இவை அனைத்தும் அரிகேசரி பராக்கிரம பாண்டியனின் 25ஆம் ஆட்சியாண்டில் (கி.பி 1451) நடைபெற்றன.
தென்வாலி நாட்டுப் பொருநையாறு பாயும் பகுதியில் வடபுறம் உமரிக்காட்டு எல்லைக்கு உட்பட்ட மாத்தூர் கொடையாகக் கொடுக்கப்பட்டது. புன்னைக் காயலும் குறிக்கப் பெறுகிறது.
அரசன் எல்லா வருவாயும் பள்ளிவாசலுக்கு அளிக்க ஓலை கொடுத்தான். இவ்வோலை கல்வெட்டாக வெட்டப்பட்டு செப்பேடும் கொடுக்கப்பட்டது. கொடை நிலங்களுக்கு வரிகளும் நீக்கப்பட்டன.
கொற்கை அதிகாரிகள் சிலர் கையொப்பமிட்டுள்ளனர். தென்காசிக் கோயில் திருப்பணிகள் செய்தவன் சிவபக்தனான இம்மன்னனே யாவான்.
கல்வெட்டு
சுபமஸ்து
1. பூமிசை வனிகை மார்பினில் பொலிய
2. . நாமிசை கலைமகள் நலமுற விளங்க
3. புயவரை மீது சயமகள் புணர
4. கயலிணை உலகில் கண்ணெனத் திகழ்தரச்
5. சந்திர குலத்து வந்தவ தரித்து
6. முந்தையர் தவத்து முளையென வளர்ந்து
7.தென்கலை வடகலை தெளிவுறத் தெரிந்து
8 மன்பதை புரக்க மணிமுடி புனைந்து
9. சங்கர சரண பங்கயஞ் சூடி .
10 வீர பாண்டிய பட்டிளத் துள்திகழ்
11. ஆர்கலி யோதக்கரை.
12..... கல்தரள வண்மணி தேக்கு
13. புரிசையங் கிருந்து தனிக்குடை திகழ்புரி
14. பவித்ர மாணிக்கப் பட்டினத் துறுபெரும்
15. செயமா துறையும் காயல்பட்டினம்
16. திகழ்தரு துருக்க நயினாப் பள்ளி
17. விழாவணி நடாத்தி வழாவகை நடாத்தற்கு
18. தென்காயல் நாட்டு மண்மக்கள் உவப்ப
19.தொழுகை அர்த்தமண் டபமும் இடைநாழி
20. பெருமண்டபமும் அலம்புநீர் வாவியும் செய்து
21. திருப்பணி செய்து சோனகப் பள்ளி
22. சிரி அரிகேசரி பராக்ரம பாண்டிய தேவர்க்கு யாண்டு இருபத்
23. தெட்டாவதின் மேலாம் எதிரது.ற்று இருபத்தொன்றாம்
24. தியதி பூரணையும் வெள்ளிக்கிழமை சோதிநாள்.... யத்து
25. தென்வாரி நாட்டுப் பொருநை பாயும் உத்தரதீரத்து உமரிக்
26. காட்டெல்லை யுட்படு மாத்தூர் காணிக்கு-பராக்கிரம

27. பாண்டிய தேவற்கு எல்கையான புன்னைக் காயற்கு உட்பட்ட
28. வடக்கீழ் எல்கை... நன்செயும் புன்செயும் மேடும் குளனும்
29. மாவடை மரவடை பட்டைகொடித் தோட்டமும்..
30. செக்கிறை மற்றுமுள்ள சமஸ்தப்பிராப்திகள் யாவும் முப்பதாவது
31. பாசன முப்பெரு முதலுக்கு தேவதானமாக விட்டது இம்
32. மரியாதையிலே இவ்வோலை பிடிபாடாகக் கொண்டு...
33. உள்ளளவும்... .......... ... ..... ....
34. கையாண்டு செம்பிலும் கல்லிலும் வெட்டியது இதனால்
35. பள்ளியிற் றொழுகைப் பணிகள் எவையும் முறையோ
36. டாழ்வாற நடாத்திப் போதாவும் பாற்க. இவை
37. கொற்கை பராக்கிரம மாறன் சிறியரிபாண்டியன் தென்னவன்
38. எழுத்து... துல்யம்... பவித்திரமாணிக்கப் பட்டினப்
39.......... ....... ......சந்திராதித்தவம்
40. ......வரியிலார் கணக்கிலும் தவிர்த்து
41. கையாண்டு கொள்ளவும் துல்ய... ஸ்வஸ்திஸ்ரீ

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 35
## ( உதய மார்த்தாண்டன் புதுப்பித்த பள்ளிவாசல் )

இடம் :- திருநெல்வேலி மாவட்டம், திருச்செந்தூர் வட்டம்,
காலம் :- வீரபாண்டியன் பட்டினம் காட்டு மகதூம் பள்ளிவாசல் கொல்லம் 568; உதய மார்த்தாண்ட வர்மன். கி.பி. 31.7.1387
வரலாறு :- வீரபாண்டியன் பட்டினத்திற்கு அருகே கிடைத்த 1383 ஆம் ஆண்டடைச் சேர்ந்த கல்வெட்டில், காயல் பட்டினத்தின் பழைய பெயர் 'உதயமார்த்தாண்டன் பட்டினம்' என்று அறிய முடிகிறது
சங்க காலத்தில் காயல்பட்டினம் தலைசிறந்த துறைமுகப் பட்டினமாகத் திகழ்ந்தது. கொற்கையுடன் இணைந்து முத்து, வலம்புரிச்சங்கு, பஞ்சு, இரும்பிலான ஆயுதங்களை ஏற்றுமதி செய்த வரலாற்றுச்சிறப்பினை உடையது. இரண்டாயிரம் ஆண்டுகள் பழமை வாய்ந்த முதுமக்கள் தாழிகள், வெளிநாட்டுக் காசுகள், கருப்பு சிவப்பு பானை ஓடுகள், வெளிநாட்டுப் பீங்கான் துண்டுகள் என பல பொருட்கள் கிடைத்து வருகின்றன. பாண்டிநாட்டிற்கான குதிரைகள் இறக்குமதி செய்யப்பட்டன.
செய்தி :- சேரமன்னனான உதயமார்த்தாண்டனின் பலகைக் கல்வெட்டொன்று வீரபாண்டியன்பட்டினத்திற்கும் காயல்பட்டினத்திற்குமிடையேயுள்ள காட்டுமொகுதூம் பள்ளி அருகே உள்ள கல்வெட்டில், அங்கிருந்த பள்ளி ஒன்றை உதையமார்த்தாண்டன் பெரும்பள்ளி என்று கூறுகிறது.
நாஞ்சில் நாட்டு மன்னன் உதயமார்த்தாண்ட வர்மன் கோணாடு கொண்டான் பட்டினத்தில் ஜும்மாத்துப் பள்ளிவாசலைப் புதுப்பித்து தன் பெயரால் "உதைய மார்த்தாண்டப் பெரும்பள்ளி என்று பெயர் வைத்து அவ்வூர்க் காதியாருக்கும் "உதைய மார்த் தாண்டக் காதியார்" என்றும் பெயர் கொடுத்தார்.
துறைமுகத்தில் ஏற்றுமதி, இறக்குமதிப் பொருட் கெல்லாம் நாலு பணத்துக்குத் கால் பணம் மகமைக் கொடையளிக்கவும் ஏற்பாடு செய்தார்.
கல்வெட்டு
1. ஸ்வஸ்திஸ்ரீ அருளிச்
2. செயல் கொல்ல
3. ம் 563 வருஷம் சிங்

4. மம் இரண்
5. டாந் தியதியும் ப
6. வுர்ணமியும் புதன்
7. கிழமையும் பெற்ற
8 அவிட்டத்து நாள்
9. சோனாடு கொண்
10. டான் பட்டினத்து ஜூ
11. மாத்துப் பள்ளிக்கு
12. உதையமார்த்தாண்
13.டப் பெரும்பள்ளி எ
14. ன்று பேருங்குடுத்
15. து இவ்வூரிற் காதி
16. யார் அபூவக்கற்கு
17. உதையமாத்தாண்
18. டக் காதியார் என்று
19. பேருங் குடுத்து இந்
20. தப் பள்ளிக்கு சுவந்
21. தரமாக இந்தச் சோ
22. ணாடு கொண்டான் ப
23. ட்டினத்துத் துறை
24. யில் ஏற்றுமதி இறக்
25. குமதி கொள்ளும்
26. வகைகளுக்கு எ
27. ல்லாம் விலைப்
28. படி உள்ள முதலு
29. க்கு நாலு பணத்து
30. க்கு காற்பணமாக
31. உள்ள விழுக்காடு
32. பெறும்படியும் இ
33. ன்னாள்வரை இப்படியி
34. லே பேரும் வழங்கி
35. இந்தச் சுதந்தரமும் பெற்
36. றுப் போதும்படியும்

**சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 36**
**( குற்றாலநாதருக்கும் நெல்லை காந்திமதியம்மனுக்கும் இஸ்லாமிய வணிகர்கள் கொடை )**




தென்காசியில் உள்ள அகமது பேட்டையில் ஏற்றுமதி இறக்குமதிப் பொருளை வியாபாரம் செய்யும் மணியம் இசுமாயில் ராவுத்தர் உள்ளிட்ட இசுலாமிய வணிகர்கள் அனைவரும் குற்றாலம், குற்றாலநாதசுவாமி திருவிழாப் பூசைக் கட்டளைக்கும். திருநெல்வேலி காந்திமதியம்மனின் சிறுகாலைச் சந்திக் கட்டளைக்கும் கொடுத்த மகமைக் கொடையை இச்செப்பேடு கூறுகிறது.
அகமது பேட்டை வணிகர்கள் இல்லாமல், செங்கோட்டை, புளியரை, பண்புளி, கடையநல்லூர், சிவராமப்பேட்டை சுரண்டை முதலிய ஊர்ச் சந்தையில் வியாபாரம் செய்யும் இசுலாமியர்களும் இம்மகமையை மாதா மாதம் அளிக்க வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது.
இதற்குச் சைவர்கள் எவரேனும் தீங்கு செய்தால் கங்கைக் கரையில் காராம்பசுவைக் கொன்ற தோஷத்திலும், இசுலாமியர்கள் தீங்கு செய்தால் தாய்க்கு விக்கினம் செய்த தோஷத்திலும் போவார்கள் என கூறியுள்ளனர்.
பட்டயம் எழுதியவர் மாடன் செட்டியார். தானாதிபதி அம்மைநாதன் சாட்சிக் கையொப்பம் இட்டுள்ளார்.
இசுலாமி யர்கள் சார்பில் இசுமாயில் ராவுத்தர் கையொப்பமிட்டுள்ளார். கோயில் கார்பாரு சந்திர குமாருப்பிள்ளை செப்பேடு செய்து வைத்தார்.

இரண்டு செப்பேடு தயார் செய்து குற்றாலம் குற்றாலநாத சுவாமி கோயிலுக்கும், திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலுக்கும் அளிக்கப்பட்டுள்ளன. கொடை அளித்த ஆண்டு கி.பி.1795.
செப்பேடு
1. சாலிவாகன சகார்த்தம் 1717 வருஷம் செல்லா
2. நின்ற கொல்லம் 964 வருஷம் கீலக வருஷம் கார்த்திகை மாதம்
3 . 25 தேதி சுவாமி குத்தாலநாதசுவாமி கட்டளைக்கு அசரது வாலா
4.சாயபு அஹமது பேட்டை மணியம் இசுமாயில் ராவுத்தா முதலான பல
5. ரும் பட்டையம் எழுதிக் கொடுத்தபடி பட்டையமாவது சுவா 6.மிக்கு நித்தியல் விளா பூசையில் கட்டளை வைத்து நடத்திவரும்
7. படி படித்தரப்படிக்கு நடத்திவரும் வகைக்கு நாங்களெல்லாரும்
8. வகைவகைத்துக் கொடுத்து யேறுசாத்து இறங்கு சாத்து

9.கச்சை ஒன்றுக்குக் கால்மாகாணிவீதமும் நடை ஒன்றுக்கு 10 . மருவுறும் சட்டமொன்றுக்கு மாகாணிப் பண வீதமும் இன் 11.னொன்றுக்கு அரை மாகாணி வீதமும் இந்தப்படிக்கு திருநெல்
12. வேலி காந்திமதியம்மன் சிறுகாலைச்சந்தி மகமைப்படிக்கு தென்
13. காசி அகமது பேட்டையிலுள்ள வணிக சேகரம் செங்கோட்டை
14. புளியரை பண்புளி கடையநல்லூர் சிவராமபேட்டை சுரண்டை
15. சந்தை முதலான துறையிலும் மகமை வைத்து கொடுத்தபடியி
16 .னாலே மாசம் மாசம் உள்ள பணம் துறைவளியும் கணக்குப் 17.பார்த்து வாங்கிக் கொண்டு சுவாமிக்கு கட்டளை யென்றென்றைக்
18. கும் நடத்திவருவோமாகவும் இப்படி நடத்தி வருகுற கட்டளை
19.தர்மத்துக்கு யாதொரு விக்கினம் செய்தால் பழமையாயுள்ள
20. பட்டையப்படிக்கு பஞ்சாட்சரத்துக்குட்பட்டவன் கெங்கைக் 21. கரையில் காராம்பசுவைக் கொன்ற தோஷத்திலும் இஸ்லாமான
22. முகமதிய மதத்தில் தாய்க்கு விக்கினம் செய்த தோஷத்திலும்
23.போவாராகவும் இந்தப்படி சம்மதித்து விளா பூசை கட்டளைக்கு
24. பட்டையமெளுதிக் குடுத்தோம் பேட்டை மணியம் இஸ்மாயில் ராவுத்தர்
25. முதலான பலரும் இந்தப் பட்டையம் எழுதினேன் மாடன் செட்டி
26. யார் தானாதிபதி அம்மை நாதன் எழுத்து இந்தப்படிக்கு இசு 27. மாயில் ராவுத்தர் காருமாறு கோவில் சந்திரகுமாருப்பிள்ளை
28. இந்தச் செப்புப்பட்டயம் செய்து எழுதி வைத்து 73
29. நி தென்காசி சேகர மயிலும் சுடலைமுத்துப்பிள்ளை திரிகூ 30. டா சலபதி துண
ஆதாரம் :

1) மெக்கன்சி ஆவணம் ஆர் 5371-2; தமிழக அரசு கீழ்த்திசைச் சுவடி நூலகம், சென்னை -5.
2)தென்னிந்தியக் கோயில் சாசனங்கள், மூன்றாம் தொகுதி முதல் பாகம். எண் 1099, பக்கம் 1073-4.
3) Annual Report on Epigraphy (A) 43 of 1946.

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 37
## ( கோட்டைக்காட்டுப் பதக்கம் )

புதுக்கோட்டை மாவட்டம் ஆலங்குடி வட்டம் கோட்டைக்காடு என்னும் ஊரில் வயலில் எஸ். நாகராசன் என்ற மாணவர் கண்டெடுத்த பஞ்சலோகத்தால் ஆன பதக்கம் மிகவும் சிறப்பு வாய்ந்தது.
4.6 செ.மீ விட்டமுடைய வட்ட வடிவில் அப்பதக்கம் அமைந்துள்ளது. அதன் எடை 30 கிராம் ஆகும். பதக்கத்தின் முன்பக்கத் தலைப்பில் நடுநாயகமாக ' அல்லா ' என்று எழுதப்பட்டுள்ளது. அதன் இருபுறமும் 'முகமது' என்று எழுதப்பட்டுள்ளது. நடுவில் அழகிய கைப்பிடியுடன் வாள் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. அதன் பெயர் வாளுக்கு மேல் 'ஸுல்ஃபிகார்' என எழுதப்பட்டுள்ளது. அந்த வாள் நபிகள் நாயகம் தன் மருமகன் அலி அவர்கட்குக் கொடுத்த வாளாகும். வாளின் அடிப்பகுதியில் 'யாசின்' என எழுதப்பட்டுள்ளது.
கீழ்ப்பகுதி விளிம்பு ஓரம் முதல் கலிபாக்கள் நால்வர் பெயர் வரிசையாகப் பொறிக்கப்பட்டுள்ளது. அவர்கள் பெயர்கள் அபுபக்கர் (கி.பி 632-634), உமர் (634-644), உதுமான் (644-655), அலி (655-663) என்பனவாகும்.
பதக்கத்தின் பின் பக்கம் தலைப்பில் இருபுறமும் ' முகமது' என்று எழுதப்பட்டுள்ளது. நடுவில் மொட்டைத் தலையுடனும், கோவணம் அணிந்தும் இரு கைகளிலும் கூர்மையான ஈட்டி ஏந்திய நிலையில் துறவி ஒருவருடைய உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. அவர் தண்ணீரின் மேல் நிற்பதுபோலக் காட்டப்பட்டுள்ளது.

வேலனின் இருபுறமும் யாசின் என்று எழுதப்பட்டுள்ளது. துறவியின் கால்களுக்கும் கீழே 154 என்று அரபு எண் பொறிக்கப்பட்டுள்ளது.
'அல்லா' என்ற புனிதச்சொல் ஒரு முறையும் முகமது என்ற சொல் நான்கு முறையும், யாசின் என்ற சொல் மூன்று முறையும் எழுதப்பட்டுள்ளன.
கி.பி. 771ஆம் ஆண்டைச் சேர்ந்ததாக இப்பதக்கம் கருதப்படுகிறது. இசுலாம் மார்க்கத்தின் புனிதச் சொற்கள் பொறிக்கப்பட்ட இப்பதக்கம் மிக முக்கியமான கண்டுபிடிப்பாகும்.

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 38
## ( அரேபியர் கடல் பயணப் பதக்கம் )

திருச்செங்கோடு நாணயவியல் ஆர்வலர் எம். விஜயகுமார், 777 (பத்திரிகைச் செய்திகள்) ஆண்டுகட்கு முற்பட்ட மிக அரிய இசுலாமிய வெள்ளிப்பதக்கம் ஒன்றைக் கண்டுபிடித்துள்ளார். (அப்பதக்கத்தை ஈரோடு புலவர் செ. இராசு, இசுலாமிய ஆய்வறிஞர் கு.ஜமால் முகமது ஆகியோர் ஆய்வு செய்தனர்)
தூய வெள்ளியில் உருவாக்கப்பட்டுள்ள அப்பதக்கம் 4.5 செண்டி மீட்டர் விட்டம் உள்ள வட்ட வடிவில் அமைந்துள்ளது. அதன் முதல் பக்க மையத்தில் மெக்கா நகரில் முதலில் இறைவனுக்காக அமைக்கப்பட்ட ஆலயமான ' கஃபத்துல்லா' அழகிய முறையில் பொறிக்கப்பட்டுள்ளது. (அப்புனிதத் தலத்தைக் கண்டு வழிபடத்தான் உலகெங்கிலுமிருந்து ஆண்டு தோறும் முப்பது லட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் கூடுகிறார்கள்)
ஆலயத்தின் மேல் பகுதியிலும் பதக்கத்தைச் சுற்றிலும் 'யாசின்' என்ற புனிதச் சொல் ஒன்பது முறை அரபு மொழியில் பொறிக்கப்பட்டுள்ளது. அச்சொல் புனிதக் குரானின் முப்பத்தாறாவது அத்தியாயத்தின் தலைப்பும், முதற்சொல்லுமாகும்.
அச்சொல் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்டவர் எனவும், நபிகள் நாயகத்தையும் குறிக்கும். புனிதக் குரானின் இதயம் என்று அப்பகுதியினைக் கூறுவர். ஒன்பது முறை அச்சொல் எழுதப்பட்டிருப்பது ஒன்பது கோள்களைக் குறிப்பதாக இருக்கலாம்.
பதக்கத்தின் மறுபக்கத்தில் கடலில் செல்லும் படகில் இரண்டு பக்தர்கள் (சூஃபிகள்) போலத் தோற்றமளிக்கும் இருவர் கையில் நீண்ட கோல் தாங்கி நிற்கின்றனர். தாடியுடனும், நீண்ட சடைமுடியுடனும் அவர்கள் காணப்படுகின்றனர். முழங்கால் வரை உடை காணப்படுகிறது. படகின் கீழ் 651 என்று அரபு மொழியில் எழுதப்பட்டுள்ளது. அது ஹிஜ்ரி ஆண்டு ஆகும். அதற்கு நேரான கி.பி. ஆண்டு 1230 ஆகும்.
கி.பி. 13,14 நூற்றாண்டுகளில்தான் ஏராளமான அரபு, பாரசீக நாட்டுப்பயணிகள் தமிழகம் வந்த தாங்கள் கண்டவற்றையும், கேட்டவற்றையும் விரிவான வரலாற்றுக் குறிப்புக்களை எழுதியுள்ளனர். இரண்டாம் பக்கம் உள்ள உருவம் அப்பயணிகள் யாரேனும் இருவரைக் குறிப்பதாக இருக்கலாம்

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 39
## ( தொழுகை நேரம் குறித்த கல்வெட்டு )

கீழக்கரையில் உள்ள ஓடக்கரை மசூதியில் தொழுகை நேரம் தமிழ்மாதம், தமிழ் எண்களில் எழுதப்பட்டுள்ளது. மாதந்தோறும் சூரியன் கதிக்கு ஏற்ப தொழுகை நேரங்கள் மாறுபட்டுள்ளதை 300 ஆண்டுகட்கு முற்பட்ட இக்கல்வெட்டுத் தெரிவிக்கிறது.
அசருக்கு அடி

---

தை மாசி பைங்கூனி சித்திரை வைகாசி ஆனி

___________________________________________________________

11 10 9 8 7 8

_________________________________________________________

10 1/2 9 1/2 8 1/2 7 1/2 7 1/2. 8 1/2

___________________________________________________________

10 . 9 8 7 8. 9

___________________________________________________________

மார்கழி காத்திகை அற்பிசி புரட்டாதி ஆவணி ஆடி

___________________________________________________________

குறிப்பு:
தை, மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி மாதங்கள் உத்தராயண காலம் (உத்தரம்-வடக்கு)
ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி மாதங்கள் தட்சிணாயன காலம். (தட்சிணம் - தெற்கு)
இதே தொழுகை நேரங்கள் கீழக்கரை ஜும்மா மசூதியிலும் கொளச்சல்கல்லுப்பள்ளியிலும் கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டுள்ளன.
குறிப்பு:
இந்தக் கல்வெட்டில் (அஸருக்கு அடி) அஸர் நேரத்தை தமிழ் பன்னிரு மாதங்களில் நிழல் எத்தனை அடிகளில் குறிக்கும் என்பது 300 ஆண்டுகட்கு முன்பு கடிகாரம் இல்லாத காலத்தில் பள்ளிவாசலில் மக்கள் அறிவதற்காகக் குறித்துள்ளது வியந்து
போற்றத் தக்கது.
இதன்படி காயல் பட்டினத்தில் அசற் தொழுகை நேரம்
தை மாதம் - 11- 10/2 அடி
மாசி மாதம் _ 10 - 9/2 அடி
பங்குனி மாதம் _ 9-8/2 அடி
சித்திரை மாதம் - 8-71/2 அடி
வைகாசி மாதம் - 7-7/2 அடி
ஆனி மாதம் _ 8-81/2 அடி
ஆடி மாதம் _ 9-9/2 அடி
ஆவணி மாதம் _ 8-7/2 அடி
புரட்டாசி மாதம் - 7-7/2 அடி
ஐப்பசி மாதம் - 8-8/2 அடி
கார்த்திகை மாதம் - 9-9/2 அடி
மார்கழி மாதம் - 10-10/2 அடி
நிழல் அரையடி செல்லும் நேரம் அசற் தொழுகை நேரம்
ஆகும்.
இதை அறிவிக்க இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.
'அசறுக்கு அடி' என்பதன் விளக்கம் இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகள் ஐந்தாகும். அவை:
1) ஈமான் என்னும் இறைநம்பிக்கை
2) தொழுகை என்னும் இறை வழிபாடு
3) நோன்பு என்னும் விரதம்
4) ஜக்காத் என்னும் தானதர்மம்
5) ஹஜ் என்னும் புனிதப் பயணம்.
தொழுகை என்பது ஐந்துவேளை என்று வரையறுக்கப் பட்டுள்ளது.

1) பஜ்ரு - அதிகாலைத் தொழுகை, கிழக்கு வானம் வெளுத்து சூரியன் உதயமாகுமுன் தொழுவது.
2) லுஹர் - மதியத் தொழுகை. சூரியன் உச்சியிலிருந்து சற்று நகர்ந்தபின் தொழுவது.
3) அஸர் - மாலைத் தொழுகை. சூரியன் மறைவதற்கு முன் தொழுவது.
4) மஃரிப் - சூரியன் மறைந்தவுடன் தொழுவது.
5) இஷா - இரவுத் தொழுகை. சூரியன் மறைந்து 70 நிமிடம் கழித்து கிழக்கு வெளுக்கு முன் தொழுவது.

ஐவகைத் தொழுகை அஸர் - மாலைத் தொழுகை எப்பொழுது தொழுவது என காயல்பட்டினத்தில் சிலர் வினவியிருக்கக் கூடும். அல்லது அஸர் நேரத்திலிருந்து நாளின் ஆரம்பம் என்பதால் இருக்கலாம்.
அஸர் நேரத்தை அறிவிக்க இந்த சூரியக் கடிகாரம் பயன்படுத்தப் பட்டிருக்க வேண்டும்.
ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து சூரிய ஒளியால் ஏற்படும் நிழல் எந்த அடியைத் தொடுகிறதோ அது அந்த மாதத் தொழுகை நேரம் ஆகும். இது ஒரு அபூர்வமான அறிவியல் குறிப்பாகும்.

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 40
## ( திண்டுகல் பேகம்பூர் பள்ளிவாசல் வரலாறு )

திண்டுக்கல் திப்பு சுல்தானின் தந்தை ஹைதர் அலியின் முக்கியமான படைத் தளங்களில் ஒன்று.
ஹைதர் அலி அவர்களின் இளைய சகோதரி, அமீருன்னிசா பேகம் ஆவார். அமீருன்னிசா பேகத்தின் கணவர் மிர்சா அலிக்கான் (Mirza ali khan) ஆவார். அமீருன்னிசா பேகம் நந்தன வருடம் ஆனி மாதம் 13ஆம் தேதி (கி.பி. 1772) குழந்த பிறந்து ஏழாம் நாள் காலமானார்.
திண்டுக்கல் பெரிய பள்ளி வாசலில் அடக்கம் செய்யப்பட்டுள்ளார்.அமீருன்னிசா பேகம் பெயரால் இந்த பகுதி பேகம்பூர் என்று அழைக்கப்படுகிறது
பேகம்பூர் பெரிய பள்ளிவாசல் (Begumpur Mosque, Begumpur Big Mosque), திண்டுக்கலிலுள்ள பேகம்பூரில் அமைந்துள்ளது. இது திண்டுக்கலிலுள்ள பழமையான பள்ளிவாசல். முகலாய கட்டிடப்பாணியில் ஹைதர் அலியால் கட்டப்பட்டது.

மைசூர் மன்னர் ஐதர் அலி திண்டுக்கல் நகரில் 3 பள்ளிவாசல்கள் கட்டினார். அவற்றில் மிகப்பெரியதுதான் இந்த பேகம்பூர் பெரிய பள்ளிவாசல் ஆகும்.
காசினாயி தோப்பு, பேகம்பூர், பனங்குளம், சின்னப்பள்ளப்பட்டி ஆகிய ஊர்களில் நன்செய், புன்செய் மானியமாக விட்டு அதைக் கவனிக்க ஒன்பது பேரையும் நியமித்தார். அந்த ஒன்பது பேரும் இந்நிலங்களை அனுபவித்துக் கொண்டு பள்ளிவாசல் பணிகளையும் கவனிக்க வேண்டும் என்று ஆணையிடப்பட்டது.
பள்ளிவாசல் உள்ள இடத்தில் தண்ணீரில் விளக்கு எரித்த அதிசயம் நடந்ததென்று கூறப்படுகிறது.
இந்திய நில அளவை உயர் அலுவல் மெக்கன்சியின் உதவியாளர்களில் ஒருவராகிய தரியாபத்து நிட்டல நாயன அய்யன் பள்ளிவாசலையும் அங்குள்ள புற கட்டிடங்களையும் சுற்றிலும் உள்ள நந்தவனத் தோட்டங்களையும் நேரில் பார்த்து அதனை அழகாக வர்ணித்துள்ளார்.
அதன் மூல ஆவணம் சென்னையில் உள்ள தமிழ்நாடு அரசின் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் உள்ளது. அதன் எண்கள் டி. 3021; ஆர். 8275 ஆகும். அதன் நகல் இங்கு தரப்படுகிறது. அதன் அழகை நோக்கும்போது “திண்டுக்கல்லில் ஒரு குட்டித் தாஜ்மகால்" என்றே அழைக்கத் தோன்றுகிறது. அங்கு சில கல்வெட்டுக்களும் உள்ளன.
மூல ஆவணம்
திண்டுக்கல் வகையரா தாடிக்கொம்பு துக்குடிக்குச் சேகரம் பேகம்பூரில் இருக்கும் மொகபரா பள்ளிவாசலுடைய வரலாறு.

ஹசரது நவாபு அயிதர் ஸ்ரீரங்கப்பட்டணம் தொரைத்தனம் செய்யும் நாளையில் தம்முடைய மச்சினன் ராஜராஜஸ்ரீ நவாபுமிர்சா அலிக்கான் சாயபு அவர்களுக்குத் திண்டுக்கல் சீமை ஜாகீராக விட்டுக்குடுத்து மேற்படி திண்டுக்கல் சீமையை நவாபு மிர்சா அலிக்கான் சாயயு துரைத்தனம் செய்யும்போது மேற்படியார் பெண்சாதி ஹஜ்ரத் பேகம் சாஹிபா அவர்கள் நந்தன வருஷம் ஆனி மாதம் 13 தேதியில் குழந்தை பிறந்து ஏழாம்நாள் இறந்து போனார்.

அதின் பிறகு பேகம் சாயபு அவர்களை அடக்கம் செய்து பள்ளிவாசலுங் கட்டி, கோரியும் கட்டிவச்சு தாருகா முதலிய எங்கள் ஒன்பது பேரையும் நேமுகம் (நியமனம் ) செய்து சர்வமானியமாக காசினாயி தோப்பு, பேகம்பூர், பனங்குளம், சின்னப்பள்ளப்பட்டியிந்த நாலு வகையும் நஞ்சை புஞ்சையுள்பட விட்டது.

விட்டு உங்கள் வமுச பரம்பரையான மாமூலாயி இவ்வகை கிராமங்களும், தோப்பும், குளமும் நீங்களே அனுபவிச்சுக் கொண்டு பேகம் சாயபுவை அடக்கம் பண்ணப்பட்ட முகபரா பள்ளிவாசலில் பணிவிடைசெய்து கொண்டு யிருக்கக்கடவதென்று கட்டளையிட்டார்கள்.

அந்த நாள் முதல் நாங்கள் தலைமுறை தலைமுறையாய் அனுபவிச்சுக் கொண்டு வருகிறோம். முன்னாலே பேகம் சாஹிபாவை அடக்கம் பண்ணின இடத்தில் மும்பில் தண்ணீர் விட்டு விளக்கு எரிந்ததென்று சொல்லுகிறார்கள்.

மக்பரா என்கிற பேகம் சாஹிபாவை அடக்கம் பண்ணின இடம் பத்து மாருக்கப் பத்துமார் கொண்டு கட்டியிருக்கிறது. அந்தக் கட்டுப் பேரில் இரண்டு மார் கொண்டு விட்டு நடுவே கமான் வளைவதாக வேலை தீர்த்து நாலுக்குக் கல்லு நாலு சின்ன கலசங்களும் நடுவே பெரிய பொன் கலசமும் வைக்கப்பட்டது வைக்கப்பட்ட இடமும் உண்டாக்கி அதன் சுத்திலே பிரதட்சணம் பண்ணும் தாவாரம்போலே கட்டி அதில் வாசல்கள் வச்சு மொகலாயி வேலையாக வெள்ளைக்காரை பூசி வெள்ளை கமூனாக வேலை செய்து இருக்கிற பிரகாசமான இடமும் உள்ளதற்குத் தினமும் பக்கிரிகள் வழிப்போக்கர் வருகுற பேர்களுக்கு சோறுகள் குடுக்கறதும் உண்டு.

மேலெழுதிய மக்பராவின் இடத்துக்கு மேற்கு யிதுகாவென்று ஒரு இடமும் சவரட்சனையாக ஆறு கமான் குண்டுபோலே வைக்கப்பட்டு மொகலாயிதராக ஆறு குண்டு மேலே வைத்து ஆறுவாசல் போலேயும் நடுவிலே அவர்கள் வேதம் படிக்கப்பட்ட மேடை போட்டுயிருக்கிற இடம் பேகம்பூர் மெகற்பாவென்று பிரபலமாக பெரிய தோட்டமும் அந்த பேகம் சாஹிபா சமாதிக்குச் சர்வ மானியம் நடத்தப்பட்டு துலுக்கர் மதாச்சாரம் பிரபலப்பட்டு இருக்கிறது.

தோட்டத்தில் தென்னை மரங்கள் மிகுந்து இருக்கிறது. பாக்குமரம்,பலாமரம், கிச்சிலி மரம், எலுமிச்சமரம், மாமரம் இவைகள் கொஞ்சங் கொஞ்சம் இருக்கின்றன. சந்தன மரங்கள் உண்டு. அந்த விதைகள் விழுந்து இப்போது செடிகள் ரொம்பவும் இருக்கின்றன. தோட்டத்தைச் சுற்றிலும் வேலி போடாது இருக்கிறது.

தரியாபத்து நிட்டல நாயன அய்யன்.

(மக்பரா-சமாதிக்குமேல் உள்ள வட்ட வடிவ டூம்! இச்சொல் மொகற்பா என்று எழுதப்பட்டுள்ளது.)

ஆதாரம் : தமிழ்நாடு அரசு கீழ்த்திசை சுவடி நூலகம் சென்னை

எண் ஆர் 8275 டி.3021 பள்ளிவாசல் நிர்வாகிகட்கு இந்த ஆவண நகல் வழங்கப்பட்டுள்ளது .

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 41
## ( மகத்துவம் நடந்த சங்ககிரி பள்ளிவாசல் )

சங்ககிரியில் பலபட்டரை அல்லாக் கோயிலுக்கு அருகில் உத்தமியான ஒரு மஹமதிய சர்தார் மனைவி இறந்து போக, சமாதி செய்தார்கள். அதற்கு அழகிய கட்டிடம் உண்டு.

பலர் அங்கு சென்று பாத்தியாக் கொடுத்து வணங்குதலுமுண்டு. முறை செய்து கொண்ட காரியம் சித்தியாகும். அத்துடன் ஏழைகளானவர்கள் எந்த மதத்தினரானாலும் அங்கு மறுமொழி சென்று "நாளை கலியாணம் இன்ன இன்ன நகை வேண்டும்" என்று கேட்டால் ...

"அப்படியே தருகிறேன் நாளை வா ! " என கோயிலிலிருந்து பிறக்கும்.
அதிகாலையில் போனால் கேட்ட நகைகளெல்லாம் வாயிற்படிக் கதவருகில் வைக்கப்பட்டிருக்கும். வணங்கி எடுத்துக் கொண்டு வந்து கலியாணம் முடிந்தவுடன் திரும்ப கொண்டு போய், "பீபி" என்றால் “ஏன்” என்று கேட்கும்.
வாங்கிப் போன நகைகளை வைத்து வணங்கிப் " போய் வருகிறேன் " எனக்கூறிவிட்டு மறுபடியும் வணங்கி வருவார்கள். இப்படிப் பலகாலம் நடந்து வந்தது.
யாரோ ஒருவர் வாங்கிப் போன நகைகளைக் கொடாது வைத்துக் கொண்டனர். அது முதல் திருமண வீட்டார் சென்று கூப்பிட்டால் கேட்பதில்லை. நகைகளும் கொடுப்பதில்லையாம்.
இது சுமார் 70 வருஷங்களுக்கு முன்னும் (சுமார் 1860 வரை) நடந்தது. பார்த்தவர்கள் இருக்கிறார்கள் என்று நேரில் விசாரித்து தி.அ. முத்துசாமிக் கோனார் 1934ல் எழுதியுள்ளார்.
ஆதாரம் : 'கொங்குநாடு', தி.அ. முத்துசாமிக் கோனார், திருச்செங்கோடு. 1934. பக் 79

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 42
## ( லாலுகான் நலத்தின் பொருட்டு சுப்பிரமணியருக்குப் பூசை )

கர்நாடக நவாப் ஆலம்கான் சுலைமான் சாகிப் அவர்கள் ஆட்சியின்போது ஷேக் தாவூது சாகிப் என்பவர் கொத்தவால் என்னும் அதிகாரியாக இருந்தார்.
அப்போது திருநெல்வேலிப் பேராயத்தைச் சேர்ந்த 12 வணிகக் குழுவினர் மகமைப் பணம் வசூல் செய்து அதிகாரி லாலுகான் சாகிப் அவர்களின நலத்தின் பொருட்டு திருநெல்வேலிக் குறவன் தெருவில் உள்ள சுப்பிரமணியர் கோயிலில் தொடர்ந்து பூசை செய்ய 28.8.1751 அன்று முடிவு செய்து செப்பேட்டில் எழுதித் தந்தனர்.
தமிழில் எழுதப்பட்டுள்ள இச்செப்பேடு திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் அலுவலகத்தில் இன்றும் உள்ளது.
Annual Report on Epigraphy (A) 48 of 1946

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 43
## ( ஆர்க்காடு நவாப் அரும்பணிகள் )




ஆற்காடு நவாப்புகள் (Arcot Nawab) என அழைக்கப்படுபவர்கள் 1690 முதல் 1801 வரை தென்னிந்திய கர்நாடக பகுதிகளை ஆண்ட மன்னர்கள் ஆவர்.
இவர்கள் தலைநகரம் இன்றைய சென்னை அருகில் உள்ள ஆற்காடு ஆகும். தமிழக வரலாற்றில் மிக முக்கியமான இவர்கள் பொதுவாக கர்நாடக நவாப்புகள் எனவும் அழைக்கப்படுகின்றனர்.
இவர்களின் பேரரசர்கள்

-

A) 1692–1703

நவாப் சுல்பிகர் அலி கான்

-

B) 1732–1740

தோஸ்த் அலி கான்

-

C) 1749–1795

முகமது அலி கான் வாலாஜா
திருச்சி ஹசரத் நத்தர்ஷா தர்கா, திருநெல்வேலி பேட்டை ஜாமி மசூதி என்று அழைக்கப்படும் வாலாஜா மசூதி, தாளையூத்து ஷாடிகான் சத்திரம், திருநெல்வேலி கதக் மசூதி ஆகியவற்றிற்குப் பல கட்டிடங்களை ஆர்க்காடு நவாபு முஹம்மது அலி (1749 -1795) பல கட்டிடங்களைக் கட்டிக் கொடுத்தார். நத்தர்ஷா தர்காவில் புனிதர் நத்தர்ஷா அங்கு ஹிஜ்ரி 375ல் வந்தது குறிக்கப்பட்டுள்ளது.

ஆதாரம் : Annual Report on Epigraphy (D) 166 - 172 of 1964

Ref : தமிழக இஸ்லாமிய வரலாற்று ஆவணங்கள்

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 44
## ( திருவறம்பூர் பள்ளிவாசல் ஓலைச்சுவடி )

21.10.1880 அன்று எழுதப்பட்ட ஓலை ஆவணம். ஐந்து ரூபாய்
மதிப்புடைய முத்திரை ஓலையில் எழுதியுள்ளது. திருவறம்பூர் கிராமம் வருஷை ராவுத்தர் மகன் பாவா நத்தரு ராவுத்தர் தனக்குச் சொந்தமான 500 ரூபாய் பெறுமானமுள்ள இரண்டு இடங்களில் உள்ள மூன்று ஏக்கர் 76 சென்டு நிலத்தில் கலத்து ஊழியத்துக்கு சேகுமுத்த லெப்பைக்கு அளிக்கப்பட்ட 30 சென்டு போக மீதி 3 ஏக்கர் 46 சென்டு நன்செய் நிலத்தைத் திருவறம்பூர் மஜீத் பள்ளிவாசலுக்கு கொடையாக அளித்தார்.
அதன் வருவாயைக் கொண்டு மஜீத் பள்ளி வாசலில் நாள்தோறும் விளக்கு வைக்க வேண்டும் என்றும், குதுபா ரம்ஜான் நோன்பு முப்பது நாட்கள் செலவிட வேண்டும் என்றும் எழுதியுள்ளார். மீதிப் பணம் இருந்தால் மஜீத் பள்ளிவாசலின் மராமத்துச் செலவுக்கு வைத்துக் கொள்ள வேண்டும் என்றும் தன் விருப்பத்தைத் தெரிவித்துள்ளார்.
இந்தக் கொடைக்கு இசுலாமியர் பலர் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர். குருசாமி அய்யர், வெங்கடாசலமய்யர், அருணாசலம்பிள்ளை மகன் வைத்தியலிங்கம் பிள்ளை, ராம பிள்ளை மகன் அருணாசலம்பிள்ளை, முத்துக் கருப்பு கண்டியன் மகன் ஆறுமுக கண்டியன் ஆகியோரும் சாட்சிக் கையொப்பமிட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. மைதீன்சா என்பவர் 'நாட்டாமை'யாக இருந்துள்ளார். இந்த ஓலையில் எழுதியவர் சய்யது அசன் என்பவர்.
ஓலைச் சுவடி
1. 1880 வருடம் அக்டோபர் மாதம் 21 தேதி திருச்சிறாப்பள்ளி தாலுக்கா திருவரம்பூர் கிறாமத்தி
2.லிருக்கும் வருஷை றாவுத்தன் குமாறன் துலுக்க ஜாதி அனுபி மதம் விவசாயம்
3.அந்தஸ்துள்ள பாவா நத்தரு றாவுத்தராகிய நான் சரீர சுகத்துடனும் ஒருவருடைய
4.கட்டாயமன்னிலும் அடியில்க் கண்ட மஜீது பள்ளிவாசலுக்கு யெழுதி
5.வைத்த தான சாசனம், யென்னவென்றால் யெனக்கு சொந்தமான திருச்சி
6.றாப்பள்ளி டிஸ்திரிக்கட்டு திருச்சிறாப்பள்ளி தாலுக்கா மேல்படி டிஸ்திரிக்கட்டுது
7.வாகுடி மாகாணத்தை சேர்ந்த மேல்படி திருவறம்பூர் கிராமத்தில் ரூ 500 பொருமான
8.அர்வை 131 நெம்பர் கரையவெட்டி நன்செய் யேக்கர்
9. 3 டி 76 இந்த நிலத்தில் யென்னால் சேகு முத்த லெப்பைக்கு கலத்து வூளி
10. யித்துக்காக விடப்பட்டிருக்குற மேல்க்கண்ட 131 நெம்பர் கலயில் தஞ்சாவூர் றோ
11.ட்டுக்கு தெர்க்கு, நாமசுவாமியின் கணபதி செய்க்கு வடக்கு
வைத்திலிங்கம் பி
12. ள்ளை நொச்சியடிைக்கு கிளக்கு, தண்ணிபந்தலுக்கு மேர்க்கு இதர்க்கு
13 ளிப்பட்ட நன்செய் டி 30 போக பாக்கி யேக்கர் 3 டி 46 இந்த நன்செய் நிலத்தை மேற்படி திரு
14. வறம்பூர் கிறாமத்தில் யென்னால் சன்னதி குளத்துக்கு போகுறபாதைக்கி
15. ளக்கு முத்துவய்யர் கொல்லைக்கும் மேர்க்கு வுசேன் ராவுத்தன் கொ
16 ல்லைக்கு தெர்க்கு சின்ன அக்கறாறத்து வீதிக்கு வடக்கு இதர்க்குள்பட்ட
17. புன்செய் நிலத்தில் கட்டப்பட்டிருக்கிற மேல்படி மஜீதின் பள்ளிவாசலில் தர்ம சிலவுக்காக
18. மேல்படி பள்ளிவாசல் பேறால் நான் சர்வ வில்லங்க சுத்தியாய் தானம்
19. செய்து குடுத்துவிட்டபடியால் மேல்படி நன்செய் நிலத்தில் நாளது தேதி முதல் வருஷாவருஷம்
20. வறப்பட்ட வருமானத்தை கொண்டு மேற்படி பள்ளிவாசலில் நித்ய வெ
21. னக்கு கதிப்பும் வசிளசாடுக மேற்படி வகையரா சாதிவாரிது சிலவும் பின்னும்
22. வருஷம 1 க்கு வரப்பட்ட இத்தொண்டு குதுபா றம்ஜான் மாசம் யெங்கிற
23. 30 நோம்பு இந்த வகையறாவின் சிலவும் நானுள்ளவரையில் நானே
24. மானேஜறாயிருந்து நடுத்திக் கொண்டு வருகிறதும் தவிற யெனக்குப்

25. பிற்க்காலம் யென்புத்திர பவுத்திற பாறம்பரையாயி யெண்ணெண்ணைக்கும்
26. டத்திவறவேண்டியது. ஒருவேளை அவர்களால் நடத்த அட்டி சம்ப
27. வித்தால் ஒடனே அவர்களை நீக்கி திருச்சிறாப்பள்ளி கோட்டையில்
28. ருக்கம் ஒரைவின் முரையார் யாருக்க மேற்படி தர்மம் நடத்த நேமுகம் செய்
29. குறார்களோ அவர்கள் நடத்திவற வேண்டியது. மேல்க்கண்ட சிலவுகள்
30. போக யேதாவது பாக்கி இருந்தால் மேற்படி பள்ளிவாசலில்
31. மறாமத்து நடத்திவற வேண்டியது. மேற்படி நன்செய் நிலத்துக்கு நான் வகையறா ஒருவரும்
32. கிறம் ஒத்தி இனாம்வகையறா செய்யக்கூடாது செய்தாலும் செல்லத் தக்கதில்லை
33. இந்தப்படி யென்மனோ றாசியில் யெழுதி வைத்த தான சாசனம் மேற்படி பள்ளிவாசல் வே
34. லை யார் பார்த்துவருகுறார்களோ அவர்கள் மேல்கண்ட நன்செய் நிலத்தின் தீர்வை கு
35. டுத்துவற வேண்டியது. பாவா நத்தரு றாவுத்தன் சம்மதி சாட்சிகள் குருசாமி
36. அய்யன் வெங்கடாசலம்மய்யர் அறிவேன். தி.அ. அப்துல்காதர் சாயபு அறிவேன்
37. அருணாசலம்பிள்ளை குமாறன் வய்த்திலிங்கம் பிள்ளை அறிவேன். றாமபிள்ளை குமாறன்
38. அருணாசலம்பிள்ளை அறிவேன். முத்துக்கறுப்பு கண்டியன் மகன் ஆருமுக கண்டியன்
39. அறிவேன். மேல்ப்படி கிறாமத்திய குடி சைய்யது சாயபு அறிவேன். னாட்டாமை மய்தின்சா
40. அறிவேன். வேதடி அப்துல் காதர் அறிவேன். மேற்படியூரிலிருக்கும் சின்னக்குட்டி
41. றாவுத்தன் மகன் இபுறாமும் சாயபு அறிவேன். மேற்படியூர் உசலி றாவுத்தர் குமாறன் அல்லாப் பிச்சை
42. என்று பேர் விளங்கிய வருசை யிபுறாமு சாயபு அறிவேன். திருச்சிராப்பள்ளி
43. கோட்டை அஸறத் சம்ஸ்பிறான் பள்ளிவாசல் தெருவிலிருக்கும் யிஸ்மால் சாயபு கு
44. மாறன் மகம்மது சாயபு அறிவேன். இந்தப்பயிர்வதி சாயபு அப்துற் சிபாற் அறிவேன்
45. சா துலிகா அப்பு சாயபு அறிவேன். நெட்டெழுத்து சய்யத்து அசன் நெ. 5767 தி.தா. திருவறம்பூர் பாவா நத்தரு றாவுத்தருக்கு அஞ்சு ரூபாய் கடுதாசி விர்க்கலாச்சுது. தி.தா. 14.07.80

படித்தவர்: செ. இராசு, (ஆசிரியர் : தமிழக இஸ்லாமிய வரலாற்று ஆவணங்கள் )

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 45
## ( கச்சத்தீவை குத்தகைக்கு வாங்கிய இஸ்லாமியர்கள்)

பாக் ஜலசந்தியில் இராமநாதபுரம் சேதுபதி மன்னர்கட்குச் சொந்தமானதாகவும், இராமேசுவரம் நகரியத்திற்கு உட்பட்டு இராமேசுவரம் கர்ணத்தின் அதிகார எல்லைக்கு உட்பட்டதாகவும் இருந்தது கச்சத்தீவு. இதற்கு ஏராளமான ஆவணச்சான்றுகள் உள்ளன.

1974ஆம் ஆண்டு ஜூன் மாதம் இந்தியா - இலங்கை ஒப்பந்தப்படி இந்திய அரசாங்கம் கச்சத்தீவை இலங்கைக்கு அன்பளிப்பாக வழங்கி விட்டது. இன்று கிழக்குக்கடற்கரை மீனவர்கட்கு ஏற்பட்ட வாழ்வுரிமைப் போராட்டங்களுக்குக் கச்சத்தீவு கைவிட்டுப் போனதே காரணம்.

கச்சத்தீவு, அதை ஒட்டிய சில தீவுகளிலும் சாயவேர் மிகுதியாக கிடைக்கும். பல இஸ்லாமிய பெருமக்கள் அதைக் குத்தகைக்கு எடுத்துள்ளனர். தனியாகவும் கூட்டமாகவும் குத்தகைக்கு எடுத்துள்ளனர். பல ஆவணங்கள் இருப்பினும் கால எல்லையாக 1880, 1947ஆம் ஆண்டுகளில் எடுத்த குத்தகை நகல்கள் இங்கு அறியப்படுகின்றன. பத்திரம் முத்திரைத்தாளில் எழுதப் பட்டுப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

பத்திரம்

பதிவு எண் - 510/80

2-7-1880

1 புத்தகம் - 16ஆம் வால்யூம் -ரிஜிஸ்டர் பத்திரத்திற்கு நகல்

(7ரூ முத்திரைத் தாளில் எழுதப்பட்டுள்ளது)
1880 ஆம் வருஷம் சூன் மாதம் 23ஆம் தேதி மதுரை டிஸ்டிரிக்கு ரிஜிஸ்தார் சரகத்து இராமநாதபுரம் சப் டிஸ்டிரிக்கு இலாக்கா இராமநாதபுரத்திலிருக்கும் மதுரை ஜில்லா ஸ்பெஷல் கலக்டர் எட்வர்டு இராமநாதபுரம் டிஸ்டிரிக்குச் சேர்ந்த கீழக்கரையிலிருக்கும் சோனக டர்னர் துரையவர்களுக்கு மேற்படி வியாபாரமும் விவசாயமும் ஜீவனம் முகம்மது அப்துல் காதர் ஜாதி சாயபு மாப்பிள்ளை மரைக்காயர் குமாரர் மரைக்காயர் 1 இராமாசாமிப்பிள்ளை மகன் விவசாய ஜீவனம்
முத்துச்சாமிபிள்ளை 2 பேரும் எழுதிக்கொடுத்த கறார் நாமா.'
என்னவென்றால் இராமநாதபுரம் ஜமீன்தாரியைச் சேர்ந்த சாயவேர்களின் பிரத்யேகமாய்க் குத்தகை ஏற்பட்டிருக்கிற ஏர்வாடி கிராமம் மேல்பக்க எல்லைக்கும், மேல்பக்கமிருக்கிற பாலையார் முதல் வேம்பாத்து கீழ்ப்பக்கம் வரையிலும் அதற்குள்ளடங்கிய தீவுகளும் நீங்கலாக
இத்துடன் சேர்ந்திருக்கிற நான்கெல்லை ஜாப்தாவில் அடங்கிய மேற்படி பாலையாத்துக்குக் கீழ்ப்பக்கம் முதல் இராமநாதபுரம் பாம்பன், திருவாடானை, சப் ரிஜிஸ்திராருக்குச் சேர்ந்த சாலைக்கரை வட்டகையென்று ஆத்தங்கரை, இராமேசுவரம், ஏர்வாடி, திருப்பாலைக்குடி. வகையறாவிலும் அதற்குள்ளடங்கின தீவுகளிலும் உண்டாகிய சாயவேர்களை
இராமநாதபுரத்தில் உசூராபீசில் துரையவர்கள் முன்பாக நாளது மாதம் 21ஆம் தேதி இஸ்தியாரின் நிபந்தனையையும் உச்சரித்து யேலங் கூறினதில் கடோசியாக பசலி ஒன்றுக்கு ரூ 700/- இந்த ஏழுநூறு வீதம் 1290ஆம் பசலி முதல் 1294ஆம் பசலி வரை பசலி 5க்கு எங்களில் முத்துச்சாமி பிள்ளையாகிய நான் ஏலத்தில் ஒப்புக்கொண்டு அதற்காக 1 பசலி குத்தகைத் துகையில் கால்வாசி துகை ரூ 175/- தேதி 21ல் டேவணியாகச் செலுத்தியிருப்பதால்
மேற்படி தீவு வகையறாக்களில் உண்டாகும் சாயவேர்களை நாங்களிருவரும் மேற்படி 1290ஆம் பசலி 1294 ஆம் பசலி வரை அனுபவித்துக் கொண்டு ஒவ்வொரு பசலிக்கும் ஏற்பட்டிருக்கும் மேல்கண்டத் குத்ததைகத் துகையை கிஸ்தி பந்திப் பிரகாரம் நாங்களிருவரும் செலுத்திவர வேண்டியது.
டேவணித் துகையை கடோசிப் பசலி வாயிதாவுக்குச் செல் வைத்துக் கொள்ளவும். எந்தப் பசலியிலாவது கிஸ்தி வாயிதாப் பிரகாரம் பணம் செலுத்தத் தவறினால் தவறின தேதி முதல் மாதம் 1 - க்கு 100க்கு ஒரு ரூபாய் வீதம் வட்டி சேர்த்திக் குடுக்கவும்.
அப்படியாவது பசலி வகையறாக்குள் அந்தந்தப் பசலி குத்தகைத்துகையைப் பூரா செலுத்தி விடாத அடுத்த பசலி குத்தகை பாத்தியதையும் டேவணியையும் இழந்து விடவும் மறு ஏலம் கூறினதில் நஷ்டம் சம்பவித்தால் அந்த நஷ்டத்திற்கு உத்திரவாதம் செய்யவும் அனுபவித்த பசலிகளுக்குள்ள குத்தகைத்துகையை நிலுவையிலிருந்தால் செல்லாகும் தேதி வரை வாயிதா தவறின தேதி முதல் மேல்கண்டபடி வட்டி சேர்த்துச் செலுத்தவும்
நாங்களும் எங்களுடய வாரிசுகளும் பிரதிநிதி வகையறாவும் உத்திரவாதியாக இருப்போம்.
கிராமாந்தரங்களுக்கு விபரம்
மதுரை டிஸ்டிரிக்கு பாம்பன் சப் டிஸ்டிரிக்கு சேகரத்தில் மன்னாரு கரைக்கும் மேற்கு வட சமுத்திரத்திற்கும் தெற்கு சொக்கம்பிள்ளை மடத்திற்கும் கூத்தன்புளிக்கும் முட்டக்கோன் வல்சைக்கும் கிழக்கு குத்துக்கால் தீவு, முயல் தீவு, மன்னாளித் தீவு தென்கரைகளுக்கு வடக்கும் இந்நான்கெல்லைகட்குட்பட்ட
கிராமங்களின் விபரம்.
இராமேஸ்வரம் உள்கடை உட்படக் கிராமம் 1
.பாம்பன் தங்கச்சிமடம் கிராமம் 1
மண்டபம் கிராமம் 1
மரைக்கான்பட்டினம் கிராமம் 1
குஞ்சியாவலசை கிராமம் . 1
அருப்புக்காடு கிராமம் வேதாளை கிராமம் 1
வேதாளை கிராமம் 1

சாத்தன்கோன்வலசை கிராமம் 1
ஆகக் கிராமங்கள் 8
குத்துக்கால் தீவு 1
முயல் தீவு 1
மன்னாளித் தீவு . 1
கச்சத் தீவு 1
ஆக தீவு 4
(ஒப்பம்) முத்துச்சாமிபிள்ளை,
முகம்மது அப்துல் காதர் மரைக்காயர்
இராமேஸ்வரம் சப்ரிஜிஸ்தாராபீஸ்
எண் 278/1948/26 7 1948

1947ஆம் வருஷம் டிசம்பர் மாதம் 2 இராமநாதபுரத்தில் இருக்கும் ஸ்ரீ ந.முத்துராமலிங்க சேதுபதியவர்கள் குமாரர் மரவ ஜாதி ராஜாங்க அந்தஸ்து இராமநாதபுரம் ராஜா ஸ்ரீ ஆர். ஷண்முக ராஜேஸ்வர சேதுபதியவர்களாகிய நாகநாத சேதுபதியவர்கள் பவர் பெற்ற திவான் ஸ்ரீ வி. பொன்னுச்சாமி பிள்ளையவர்கள் 1-வது பார்டியாகவும்....... லிருக்கும் ஜனாப்.... பிள்ளை மகன் கே.எஸ். முகம்மது மீராசா மரைக்காயர் 2 - பார்டியாகவும் எழுதிக் கொண்ட குத்தகை தெஸ்தாவேசு.

1. 1-வது பார்டியவர்களின் சமஸ்தானத்துக்குப் பாத்தியமான சமஸ்தானம் அனுபவத்திலிருக்கும் அடியில் கண்ட தீவின் 1356ஆம் பசலி முதல் 1358ஆம் பசலி முடிய குத்தகையை 2-வது பார்டி 1-வது பார்டியவர்களின் தாசில்தாரிடம் பசலி 1க்கு ரூ 23.2.0 வீதம் ஒப்புக் கொண்டும் அதன் விஷயமாய் ஏற்பட்ட நடவடிக்கையின் பேரில் 1-வது பார்டியவர்களின் தாசில்தாரிடம் பசலி 1-க்கு ரூ 23.2.0 வீதம் ஒப்புக் கொண்டும் அதன் விஷயமாய் ஏற்பட்ட நடவடிக்கையின்பேரில் 1-வது பார்டியவர்களின் (Huzur Roc. E4. 10314/42, Dt. 15-2-1947 No Proceedings) மூலம் அப்ரூவல் ஆர்டர் பிறப்பிவிக்கப் பட்டிருக்கிறது. கூ பசலிக் குத்தகைத் துகை ரூ 69.6.9வும் 2-வது பார்டியால் 1-வது பார்டியின் இராமநாதபுரம் தாலுக்கா கஜானாவில் 30-1.1947 தேதி 141820 செலவான் மூலம் இருசால் செய்யப்பட்டிருக்கிறது.

2.அந்தப்படி அடியில் கண்ட தீவை 2-வது பார்டி 1-7-1946 முதல் குத்தகைக்கு அனுபவம் எடுத்துக் கொண்டிருக்கிறபடி 1-7-1947 தேதி பசலி 1க்கு ரூ 23.2.0 வீதம் 3 பசலிக்கு அனுபவித்துக் கொள்ள வேண்டியது.

3. குத்தகை பாத்யதையை 2-வது பார்டி 1-வது பார்டியவர்களின் அனுமதியன்னியில் வேறு யார்க்கும் TRANSFER செய்யக்கூடாது.

4. இவ்விதம் மேற்படி குத்தகை பாத்யதையை அனுபவித்துக் கொண்டு குத்தகை காலம் திகைவாகிற 1949ஆம் வருடம் ஜூன் மாதம் ஆகையறாக்கு எவ்விதப் துயர்ச்சியுமன்னியில் 2-வது பார்டி 1-வது பார்டியின் பின் தாலுக்கா தாசில்தாரிடம் ஒப்புவித்து விட வேண்டியது. இதன்படி 1-வது பார்டி எஸ்டேட்டிற்கும் 2-வது பார்டியும் அவரவர்களின் வாரிசுகளும் அவர் பாத்யதையை அடைகிறவர்களும் கட்டுப்பட்டு நடந்து வர வேண்டியது.

சொத்து விபரம் :-

இராமநாதபுரம் ஜில்லா ராமேஸ்வரம் சப் ரிஜிஸ்திரேஷனுக்கு தனுஸ்கோடிக்கும் தலைமன்னாருக்கும் இடையே இருக்கும் சமஸ்தானத்துக்குப் பாத்தியமான கச்சத்தீவு.

'கச்சத்தீவு' செ. இராசு, கொங்கு ஆய்வு மைய வெளியீடு, 1995

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 46
## ( திப்பு சுல்தான் வாங்கிய பழைய கோட்டை )

ஈரோடு மாவட்டம். காங்கயம் வட்டம் கோட்டையில் பசுக்கள். காளைகள், குதிரைகள் மிகுதியாக இருந்தன. காங்கேயம் காளை போலப் பழையக் கோட்டை குதிரைகளும் சிறப்பானவை. ஒரு பட்டக்காரர் குதிரையேறி கொங்கு நாட்டுத் தேவாரத் தலங்களான ஏழு கோயில்களையும் ஒரே நாளில் சென்று வணங்கி வந்தார். அவர்கள் குதிரை பழைய கோட்டையிலிருந்து பழனிக்கு 9 நாழிகையில் (4 மணி 16 நிமிடம்) செல்லும் என்று பாடல் கூறுகிறது.

22ஆம் பட்டக்காரர் நல்லசேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியாரிடம் 10 சுழிகள் உடைய 'பஞ்சகல்யாணி' என்னும் மிக அரிய அழகான குதிரை ஒன்று இருந்தது. அக்குதிரையைப் பற்றித் திப்பு சுல்தான் கேள்விப்பட்டார். அதை வாங்க விரும்பினார்.

பழைய கோட்டையிலிருந்து குதிரைகள் வாங்கி ஐதர்அலி, திப்புசுல்தான் படைக்கு அனுப்ப ஒரு இசுலாமியப் பொறுப்பளர் பழைய கோட்டையில் இருந்தார் (அவர்களுடைய ஆறாம் தலைமுறையினர் இன்றும் பழைய கோட்டையில் வாழ்கின்றனர்). அவர் மூலம் அக்குதிரையை விலைக்கு வாங்க இயலவில்லை. பட்டக்காரர் கொடுக்க மறுத்துவிட்டார்.

ஒருநாள் பழையகோட்டைக்குத் திப்புசுல்தானே நேரில் வந்தார். பட்டக்காரர் வரவேற்று சைவ விருந்து அளித்தார். குதிரையைக் கொடுத்தே ஆகவேண்டும் என்று வற்புறுத்திய திப்புசுல்தான் மிக அதிக விலையாகிய 200 பொன் கொடுத்து அக்குதிரையை வாங்கிச் சென்றார்.

காரையூர்ச் சர்க்கரை உத்தமக் காமிண்டன்
காத்து வளர்த்திய பஞ்ச கல்யாணிப்
பேரைஉள ஓர் குதிரை சுழிகள் பத்தும்
பிறழாது இருந்தசெய்தி கேட்டு வந்து
தாரையோ அலதுஇலையோ எனமிரட்டித்
தயவொடுஇரு நூறுபொன்னும் தானே ஈந்து
போரையே கொள்திப்பு சுல்தான் சைவ
போசனமும் கூடஉண்டு போனான் தானே!

ஆதாரம் : பழைய கோட்டை மரபுப் பாடல்கள் எண். 72. பக்கம் 78
தமிழக இஸ்லாமிய வரலாற்று ஆவணங்கள்

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 47
## ( அஞ்சு வண்ணம் )

கேரள மாநிலத்திலும், தமிழ்நாட்டிலும் உள்ள பல கல்வெட்டுக்களில் (ராமந்ததளி, தலக்காடு, கொடும்பாளூர், உறையூர் சீனிவாசநல்லூர்) 'அஞ்சுவண்ணம்' என்ற மிகப்பெரிய கடல்வணிகக் குழுவின் பெயர் காணப்படுகிறது. கி.பி. 9ஆம் தூற்றாண்டிலிருந்து கிடைக்கும் அவ்வணிகக்குழுவின் பெயர் பற்றி வி.வெங்கய்யா. டி.ஏ. கோபிநாதராவ், டி.பி.சர்க்கார், டி.வி. மகாலிங்கம். கே.வி. ரமேஷ், எ. சுப்பராயலு ஆகிய பல வரலாற்றுப் பேராசிரியர்கள் மிக விரிவாக ஆய்வு செய்துள்ளனர். பலர் பல்வேறு கருத்துக்கள் கூறியுள்ளனர்.

டி.பி. சர்க்கார் ''அலி, முகம்மது என்ற சொற்கள் அஞ்சுவண்ணம் வணிகக் குழுக் கல்வெட்டில் காணப்படுவதையும், கே.வி. ரமேஷ் 'உமர்' என்ற சொல் வருவதையும் சுட்டிக் காட்டியுள்ளனர்.

பலரும் 'அஞ்சுமன்' என்ற பாரசீகச் சொல்லுடன் "அஞ்சுவண்ணம்" என்பதை ஒப்பிட்டுக் காட்டியுள்ளனர்.

களவியல் காரிகை' என்றநூல் உரையில் பல்சந்தமாலை என்ற நூலில் வரும் சில பாடல்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன.

"இயவன ரான் கலுதி தாமுதல் எண்ணவந்தார்
அயன்மிகு தானையர் அஞ்சுவண்ணத்தில் அஞ்சல் என்னா'
"யவனர்கள்
அல்லா எவைந்து சந்தியுத்தார் வகைதொழும்சீர்
.நல்லார் பயிலும் பழனங்கள் சூழ்தரும் நாட்டகமே"
என்பன அவற்றில் வரும் தொடர்கள். யவனர்-யோனகர்-சோனகர் என மாறியதாக எ. சுப்பராயலு அவர்கள் ஆய்ந்து நிறுவியுள்ளார். 'கலுபதி' என்ற சொல் 'கலீஃபா' என்பதன் தமிழ் வடிவாகும். இரண்டாம் பாடலில் அஞ்சுவண்ணத்தார் 'அல்லா' என வந்து வணங்குவது கூறப்படுகிறது.
தஞ்சாவூர் சரசுவதி மகால் சுவடியில் கிடைத்தபாடல் ஒன்று நாகப்பட்டினத்தைப் பின்வருமாறு புகழ்ந்து பாடுகிறது:
"குட க்கினில் துரங்கமும் வடக்கினில் கலிங்கமும் குணக்கினில் பசும்பொனும் குளிர்ந்ததெற்கில் ஆரமும் அடிப்பரப் படைக்கலத்து அனேகவண்ண மாகவந்து அஞ்சுவண் மும்தழைத்து அறத்தின்வண்ணம் ஆனஊர்' என்பது அப்பாடல். எனவே 'அஞ்சுவண்ணம்' என்பது இசுலாமியக் கடல்வணிகக் குழுவேயாகும் என்பது அறிஞர்கள் முடிவு.
(லீஃபா என்றால் பிரதிநிதி என்று பொருள்.)

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 48
## ( பழவேற்காடு ஆவணத்தில் இஸ்லாமியர் )

சென்னப்பட்டினம் (சென்னை) கிழக்கிந்திய கம்பெனி நடிவடிக்கைகளில் மிக முக்கியமான ஊர். இலங்கையிலிருந்து வந்த உச்சுக்காரர்கள் 1578லேயே அங்கு வந்து கோட்டை கட்டினார்கள். கோல்கொண்டா சுல்தானிடம் அனுமதி பெற்றனர்.
பழவேற்காடு,இறுக்கந்தீவு, அவரிப்பாக்கம், கணவந்துறை, தாங்கல் பெரும்புலம் இந்த 5 கிராமங்களையும் ஆயிரம் வராகன் குத்தகைக்கு டச்சுக்காரர்கள் வாங்கினர். மக்கள் பலர் அங்கு குடியேறினர். சிலகாலம் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியாரும் பழவேற்காட்டைக் கைப்பற்றித் தங்கள் வசம் வைத்திருந்தார்கள். அந்த ஊரில் பல்வேறு சமூக மக்கள் இருந்தார்கள். ஒவ்வொரு வீட்டையும், உள்ள மக்களையும் கணக்கெடுத்து 1816ஆம் வருடம் ஆவணம் எழுதப்பட்டது. இஸ்லாமியர் பற்றிய குறிப்பும் உள்ளது. பெரும்பாலும் மீன்பிடி தொழில் நடைபெற்றது.
ஆவணப்பகுதி
பளவற்காடு
வீட்டுக் கணக்கும் செனக் கணக்கும்
19. சோனகர் வீடு 100 க்கு
ஆண் பெண் பசகள் உள்படச் செனம் 600
இடமணி
9. இடமணி துலுக்கர் வீடு 2 க்கு
ஆண் பெண் பசகள் உள்படச் செனம் 12
காட்டாங்குப்பம்
2. மீன் லாபக்காரர் சோனகர் குடிசை 1 க்கு
லாபக்காரர் துலுக்கர் குடிசை 1 க்கு
தீவுக்குப்பம்
6. லாபக்காரர் சோனகர் குடிசை 5க்கு

செனம் 20
லாபக்காரர் மீனவரிடம் மீன் கொள்முதல் செய்து லாபத்துக்கு விற்பவர்கள்.
"லாபக்காரருக்கு ஒரு வராகன் மீன் முக்கால் வராகனாய்க் கொடுத்து விடுவார்கள். அவர்கள் கொண்டுபோய் சென்னப் பட்டணம் முதலான இடங்களில் வித்துக் கொள்ளுவார்கள்" (ஆவணம்)

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 49
## ( ஓடைக்காக உயிர் தியாகம் செய்த உத்தமர் )

சென்னையைக் காட்டிலும் சுமார் ஒரு நூற்றாண்டுக்கு முந்தைய வரலாற்றுப் பின்னணி கொண்ட,ஜாதி,மதபேதமற்ற நல்லிணக்க வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்ட மக்கள் வாழும் எங்கள் கிராமத்தின் சரித்திரத்தை அறிய இடையகோட்டை ஊர் வரலாறு என்ற தலைப்பில் க்ளிக் செய்யுங்கள்
தேசமெங்கும் காவிரிப் பிரச்சினையைப் பற்றி பேசுகிறோம். அதையே அரசியலாக்குகிறோம்.
இன்றைக்கு சுமார் நூற்றைம்பது வருஷத்துக்கு முன்னாடி ஒரு ஓடை யாருக்குச் சொந்தம்னு ரெண்டு ஜமீனுக்கிடையில போர் நடந்த வரலாறே இருக்குது உங்களுக்குத் தெரியுமா?
பழனிக்குப் பக்கத்துல ஆயக்குடி மற்றும் விருப்பாட்சி ஆகிய ரெண்டு ஜமீன்களுக்கிடையே ஒரு ஓடை நீரை பகிர்ந்து கொள்வதில் ஏற்பட்ட சர்ச்சை மோதலாக உருவெடுத்தது.
இந்த போரில் விருப்பாட்சி சார்பில் தளபதி சையது உஸ்மான் ஷாதுப் பாபுஜி அவர்கள் வீரத்துடன் போரிட்டு வெற்றியை நெருங்கிய நிலையில், எதிரணி போர்வீரனின் கொரில்லா முறையில் அவரை வெட்டியதையடுத்து தலை துண்டான நிலையில் வீரமரணம் அடைந்துள்ளார்.
தலையற்ற தளபதி சையது உஸ்மான் ஷாதுப் பாபுஜி அவரது உடலை சுமந்து வந்த அவரது குதிரை அன்னார் வசித்த போடுவார்பட்டி ஊரில் சேர்த்ததை அடுத்து அங்கு அன்னாரின் நினைவிடம் அப்போதைய விருப்பாட்சி பாளையக்காரரால் அமைக்கப்பட்டுள்ளது.
அவரின் வீரத்தையும், தியாகத்தையும் போற்றும்வண்ணம் அவரின் வாரிசுகளுக்கு மானியமாக நிலம் போன்றவை வழங்கப்பட்டுள்ளது.
இந்த மானியங்களை யாரேனும் அபகரிக்க முயன்றால், அவ்வாறு அபகரிக்க முயல்பவன் அவன் முஸ்லிமாக இருந்தால் புனித மெக்கா நகரில் தனது தாயை கெடுத்த பாவத்தையும், இந்துவாக இருந்தால் அவன் காசியில் வைத்து காராம்பசுவையும் அதன் கன்றையும் கொலை செய்த பாவத்தையும் அடைவார்கள் என்ற எச்சரிக்கையுடன் கல்வெட்டும் அமைக்கப்பட்டுள்ளது.
இந்த நினைவிடம் ஒட்டன்சத்திரம்-பழனி நெடுஞ்சாலையில் மாட்டுப்பாதை என்னும் இடத்திலிருந்து 4கி.மீ தூரத்தில் போடுவார்பட்டி என்னும் சிற்றூரில் ஒரு வழிபாட்டுத்தலமாக இன்றும் உள்ளது. இங்கு அன்னாரின் போர்வாள் உள்ளிட்ட பொருட்கள் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது.
ஆண்டுதோறும் இஸ்லாமிய ஹிஜ்ரி வருடத்தின் ஷவ்வால் மாதத்தில் அன்னாருக்கு விழா நடத்தப்படுகிறது.
சையது உஸ்மான் ஷாதுப் பாபுஜி என்ற பெயர் கொண்ட அந்த மாவீரரின் தலை ஆயக்குடியில் போர் நடந்த இடத்தில் அடக்கம் செய்யப்பட்டு நினைவிடம் உள்ளது. மதங்களை கடந்த நட்புக்கும் வீரத்துக்கும் அடையாளமாக திகழ்கிறது போடுவார்பட்டி கிராமம்..
படங்கள்
1.பெயர்ப்பலகை
2. அவரின் போர்வாள்
3. நினைவிடம்
4. அடக்கம் செய்யப்பட்ட இடம்
5. மானிய கல்வெட்டு
தகவல் : நண்பர் Hameed Imrans Cell 8870679086

## சமய நல்லிணக்க சரித்திர சான்றுகள் 50
## ( கற்புடையார்பள்ளிக் கல்வெட்டு )

எகிப்திலிருந்து முகமது கில்ஜியுடன் (கி.பி.850-இல்) வந்த இசுலாமியர்களே அஞ்சுவண்ணத்தார் ஆவர். ஹாசிம், பக்ரி, பருக்கி, உம்மையா, போர்வீரர் குழு ஆகிய ஐந்து இசுலாமியப் பிரிவினரே அஞ்சுவண்ணத்தார் எனப்பட்டனர். 1284-இல் ஒரு குழுவினர் இங்குக் குடியேறினர். கருப்புடையார்
பள்ளிக்கல்வெட்டில், 'அஞ்சுவண்ணத் தொழுகை செய்' என்னும் (கி.பி. 944-66) தொடர் இடம் பெற்றுள்ளது. காலத்தால் முந்திய கடற்கரைப் பள்ளிவாசலில் (கி.பி89) குலசேகரன் (கி.பி1190-1216) காலத்திக் கல்வெட்டாகும். பூவின் கிழத்தி என்னும் மெய்க்கீர்த்தியுடன் தொடங்கும் இக்கல்வெட்டில் இப்பள்ளி வாசலுக்கு வழங்கப்பட்ட நிலக்கொடை கூறப்படுகிறது.

இவ்வூரில் அப்போது வாழ்ந்த இசுலாமியர்களை சோனகர் என்றும் அவர்கள் முத்துச்சனாப வணிகத்தில் ஈடுபட்டிருந்தனர் என்றும் கல்வெட்டு கூறுகிறது.
காட்டு மக்தூம் பள்ளிவாசல் கல்வெட்டு காயல் பட்டினத்தில் மற்றொரு பெயராகப் பவித்திர மாணிக்கப் பிள்ளார் பள்ளி என்றும் கல்வெட்டில் சுட்டப்படுகிறது. இப்பள்ளிவாசலில் உள்ள உதயமார்த்தாண்டவர்மன் காலத்துக் கல்வெட்டு (கி.பி.1387) இதனை உதயமார்தாண்ட பெரியபள்ளி என்று குறிப்பிடுகிறது.
இவ்வூரின் மற்றொரு பெயராக சோணாடு கொண்டான் பட்டினம் என்று வழங்கப்பட்டதையும் கூறுகிறது. இது முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் சிறப்புப் பெயரால் வழங்கப்பட்டதாகும்.
இத்துறைமுகத்தில் வந்திறங்கும் சரக்குகளுக்கான இறக்குமதி வரி இப்பள்ளி வாசலின் வளர்ச்சிக்காக வழங்கப்பட்டது என்பதை இக்கல்வெட்டு தெரிவிக்கிறது. வீரபாண்டியன் பட்டினமே சோணாடு கொண்டான்பட்டினம் என்று பெயர்மாற்றம் பெற்றதாகவும் தெரிகிறது.
கி.பி.342-இல் வந்தவர்களால் குத்பா பெரிய பள்ளி என்னும் மசூதி கட்டப்பட்டது. கருப்புடையார் பள்ளியில் காலத்தால் முந்திய வீரபாண்டியன் காலத்துக் (946-966) கல்வெட்டு காணப்படுகிறது. இக்கல்வெட்டில் இவ்வூர் காயல்கரை, காசிர ஊர் பவித்திர மாணிக்கப்பட்டினம் என்று பல பெயர்களில் சுட்டப்படுகிறது.
மாறவர்மன் வீரபாண்டியன் காலக் கல்வெட்டு (1334-1367) பவித்திர மாணிக்கப் பட்டினமான காகிற்றூர் நாடாள்வான் கறுப்புடையார் சோனகப்பள்ளிக்குக் கொடையாக சோனக வியாபாரிகள் தலைவனுக்குக் கொடுத்த ஆணையை இக்கல்வெட்டு கூறுகிறது.
இரு போகத்துக்கும் நன்செய், புன்செய் விளைவில் அவ்வூரார் கொடுக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. இதுவரை வரியும் இனிப்பிறக்கும் வரிகளும் கறுப்புடையார் பள்ளிக்கு விட்ட நிலங்களுக்கு இல்லை என்று கூறப்பட்டுள்ளது.
கல்வெட்டு
1. ஸ்வஸ்திஸ்ரீ கோமாறப்பன்மரான திரிபுவனச்ச
2. க்கரவர்த்திகள் செம்பிநாடு கொண்டருளின சிறிவீர
3.பாண்டிய தேவற்கு யாண்டு... யாவதின் எதிராமா
4. ண்டு இசப நாயிற்று யிருபத்தெட்டாந் தியதியும் திங்
5. கணாளும் புனர்பூயத்துநாள் கண்டனன்
6.பவித்திரமாணிக்கப்பட்டினமான காகிற்றூர் கண் நாடா
7.ள்வானேன் எட்டடி நெடுந்தெரு வீற்றுள்ள ஆரல் கத்
8.தலை தரள தரங்கத்து சோனக வியாபாரி நாயகற்
9 கு கறுப்புடையார் சோனவப்பள்ளி. குடிக்குள் கோன்
10.செய்யுனென்... மேல் குடிமை அந்த
11. ராயம்...கீழ்மேல் எல்லை காயல் கரைக்

12. குப் புள்ளிபுக்க நிலம் புன்செய் நன்செய்... மாவுக்குப்
13.பாசனம் பொக்கத்து வாயிலைக் கொடிப்புறத்து
14. வாழையுள்பட்டு ஆடி குறுவை அல்பிசி குறுவைக்கு மரத்தால்
15....கல நெல்லு தூணிப்பதற்கு நெல்லும்.. .அ.
16. திரமும் இருப்பதாக...வும்
17. ......... ...... ... ........சோவைப்
18. பள்ளிக் கிதுவகை வரி இல்லாத இருந்திப் பிறக்கும்
19.சையிற் காட்டி
20..... அஞ்சுவண்ணத் தொழுகை செய்...
21.துவரற்க... பவித்திர மாணிக்க நகரூர் காகிற்
22. றூர் நாடென்ற பட்டினத்து...கறுப்
23. புடையான் தலைவன் கணக்கன் புரந்து எளுதிக்காத்து
24. அறப் பகஞ் செய்யக்........ கடவரால்
25. ....கு இறுக்கும்படிக்கு .... கல்வெட்டிக்
26. குடுத்தேன். ... ஸ்ரீ

## *அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் (விஞ்ஞானத் தஃப்ஸீர் )*

*...இப்படி ஒரு பேரவா என்னுள் எப்போதுமே என்னை எழுதத் தூண்டிக் கொண்டே இருக்கிறது. நான் உறங்கும்போதும் அது விழித்துக் கொண்டேயிருக்கிறது . இதற்குத்தானே ஆசைப்பட்டோமா ? என்று என்னுள்ளே வினா தோன்றிய வண்ணம் சதா இருந்துகொண்டே இருக்கிறது*
*முதலில் சூராத்துல் பாத்திஹாவின் 7 வசனங்கள் , பின் சூரா அல் இக்லாஸ் , அல் ஃபலக் , அந்நாஸ் ... என்று சிறு சிறு அத்தியாயங்களாக தேர்ந்தெடுத்து , பின் பெரிய பெரிய அத்தியாயங்களுக்கு விரிவாக்கம் செய்து விஞ்ஞான விளக்கம் எழுதினால் என்ன ? எழுதுவோமே. குர்ஆனுக்கும் சுன்னா முறைக்கும் எப்போது உட்பட்டுதானே எழுதுகிறோம். அப்புறம் என்ன தயக்கம் ? இன்ஷா அல்லாஹ் இந்த பேரவாவை எழுதுருவில் எழுத நாடியுள்ளேன் .*
*முன்னாள் முகநூல் தளத்தில் 'சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்க'ளுக்கு மட்டுமே 49 தொடர் பதிவுகள் எழுதியுள்ளேன். ஞாபகம் இருக்கிறதா ?*
*இந்த புதிய முயற்சி, மாறுபட்ட விஞ்ஞானத்தின் கோட்பாடுகள், அதற்கேற்றவாறுள்ள படங்கள் என்று என்னுள் ஓர் எண்ணம் சிறகு விரித்து பறக்க ஆயத்தமாகிக் கொண்டே இருக்கிறது.இன்னும் அதை மூடி வைக்கக் கூடாது என்று எண்ணி ,*
*இன்ஷா அல்லாஹ் முயற்சிக்கிறேன்.*

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் 1

(விஞ்ஞானத் தஃப்ஸீர் )

( காப்புச் சொல்லும், கடவுச் சொல்லும் )




காப்புச் சொல் :- "அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்"

கடவுச் சொல் (Pass word) : - "பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் "

"அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்" - 'ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன்''

ஆம்! காப்பு என்றால் ' காத்தல் ' என்பது சரியானதே.

ஆனால் பாதுகாப்பு என்பதை பிரித்துப் பார்த்தால் சரியாக விளங்கும்.

பாதுகாப்பு = பாதகம் + காப்பு -> பாதகாப்பு -> பாதுகாப்பு

வெறும் காப்பதல்ல பாதுகாப்பு என்பது,

பாதகங்களில் இருந்து காப்பதே பாதுகாப்பு!

பிள்ளைக்கு அன்னை பாதுகாப்பு

மனைவிற்கு கணவன் பாதுகாப்பு

மனிதர்களுக்கு இறைவன் பாதுகாப்பு - அந்த

இறைவனே சைத்தானிடமிருந்து நமக்குப் பாதுகாப்பு

இவற்றில் உட்பொருள் பொதிந்துள்ளதைக் கவனிக்கவும். அதனாலேயே இதனை பாதுக்காப்பு என்கிறோம்

இதையே வலியுறுத்தி குர்ஆனும் ....

''என் இறைவா! ஷைத்தான்களின் தூண்டுதல்களை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்'' என்றும் கூறுவீராக! திருக்குர்ஆன்.23:97.

ஷைத்தான். நம்முடைய ஒவ்வொரு அசைவுகளின் போதும் ஷைத்தானை தூரப்படுத்துவதில் அதிக கவனம் செலுத்த வேண்டும். ஷைத்தான் விஷயத்தில் அலட்சியமாக இருந்தால் நம்முடைய அனைத்துக் காரியங்களிலும் அவன் நுழைந்து ஆதிக்கம் செலுத்தி விடுவான்.

புத்திசாலித் தனத்தால் ஷைத்தானின் முயற்சியை முறியடித்து விடலாம் என்று நினைத்து விடக் கூடாது நம்முடைய புத்திசாலித் தனம் அவனுடைய சூழ்ச்சியில் தவிடுப் பொடியாகி விடும்.

அல்லாஹ்வின் துணை கொண்டு மட்டுமே ஷைத்தானுடைய சூழ்ச்சியை முறியடிக்க முடியும். அல்லாஹ்வின் பாதுகாப்புக்கு முன் அவனுடைய சூழ்ச்சி தவிடுப் பொடியாகி விடும்.

இறைவனின் மிகப்பெரும் பாதுகாப்புடன் வாழ்ந்து வந்த இறைத்தூதர் (ஸல்) அவர்களே ஷைத்தானுடைய விஷயத்தில் அதிக கவனம் செலுத்தி இருக்கிறார்கள்.
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பள்ளிவாசலில் தங்கி) இஃதிகாஃப் இருந்தார்கள். ஓர் இரவில் அவர்களைச் சந்திப்பதற்காக அவர்களிடம் நான் சென்றேன். நான் அவர்களிடம் (சிறிது நேரம்) பேசிவிட்டு திரும்பிச் செல்ல எழுந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்களும் என்னைத் திருப்பியனுப்புவதற்காக என்னுடன் வந்தார்கள்.
-உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களின் வீடே அவர்களின் இருப்பிடமாக இருந்தது. அப்போது அன்சாரிகளில் இருவர் அந்த வழியாகச் சென்றார்கள். அவர்கள் நபி(ஸல்) அவர்களைக் கண்டவுடன் விரைந்து நடக்கலானார்கள்.
உடனே நபி(ஸல்) அவர்கள் 'நிதானமாகச் செல்லுங்கள் இவர் (என் மனைவி) ஸஃபிய்யா பின்த்து ஹுயை தான்'' என்றார்கள்.
இதைக் கேட்ட அவ்விருவரும் 'அல்லாஹ் தூயவன் இறைத்தூதர் அவர்களே! (தாங்களையா நாங்கள் சந்தேகிப்போம்?)'' என்றார்கள். .
அதற்கு நபி(ஸல்) அவர்கள் 'ஷைத்தான் மனிதனின் இரத்த நாளங்களில் (கூட) ஓடுகிறான். உங்கள் உள்ளங்களில் அவன் தீய எண்ணம் எதையேனும் போட்டு விடுவான் அல்லது உங்கள் உள்ளங்களில் (சந்தேகம்) எதையாவது அவன் போட்டு விடுவான் என்று நான் அஞ்சினேன்'' என்றார்கள்.
புகாரி : 3281. ஸஃபிய்யா பின்த்து ஹுயை(ரலி) அறிவித்தார்.

அறிவின் சிந்தனையை மலுங்கச் செய்து, சந்தேகத் தீயை உள்ளத்தில் பற்ற வைத்து, கொளுத்தி விடும் அளவுக்கு ஷைத்தான் மனித உடலில் ஆதிக்கம் செலுத்தக்கூடியவன் என்பதால் இரத்தத்துடன் கலந்து விட்ட ஷைத்தான் கோபம் வந்த உடன் இரத்தத்தை சூடேற்றிவிட்டு, மனிதனுடைய கால்களை பூமியில் ஊன்றி நிற்க முடியாத அளவுக்கு ஆட வைத்து விடுவான்.
உடலில் ரத்தம் பயணம் செய்யும் தூரம் எவ்வளவு தெயுமா? ஒரு சுழற்சியில் (One Cycle) ரத்தம் பயணம் செய்யும் தூரம் ஒரு லட்சத்து 19ஆயிரம் கிலோமீட்டர்! ரத்தக் குழாய்களுக்குள் செல்லும்போது, அதன் வேகம் மணிக்கு 65 கிலோமீட்டர்! - மோட்டார் சைக்கிளின் சராசரி வேகத்தைவிட அதிகம்.
இந்த இரத்த ஓட்டம் எதற்கென்றால், நாம் உண்ட உணவின் சத்துப் பொருட்களை உடலின் பல்வேறு பாகங்களுக்கும் எடுத்துச் சென்று, அந்த உறுப்புகள் சீராக இயங்குவதற்கு உதவுகிறது.
அதே நேரத்தில் மாத்திரை சாப்பிட்டவுடன் தலைவலி அல்லது கால் வலியிலிருந்து நிவாரணம் கிடைப்பது எப்படி?
மாத்திரை சாப்பிட்டவுடன், அதில் உள்ள மருந்துப் பொருள் ரத்தம் மூலம் வலி உள்ள இடத்திற்கும் அதே வேகத்தில் பயணம் செய்கிறது. வலியிலிருந்து நிவாரணம் கிடைக்கிறது.

இரத்தத்தை சூடேறி விட்டால், அதுவரை ஆடாத எவரும் அன்று ஆடி விடுவார். அவரை ஆட்டுவித்து ஷைத்தான் ரசித்துக் கொண்டிருப்பான்.
அவருடைய அழகிய முகத்தை அழுகிய முகமாக மாற்றி விடுவான் இவரா ? அவர் ? என்று வியக்கும் அளவுக்கு முகத்தில் பறக்கும் அனலால் அவருடைய முகத் தோற்றமே மாறி விட்டிருக்கும்.
அதே சமயம், தனக்கோ, பிறருக்கோ இரத்தம் கொட்டினால் இரத்தத்தைப் பார்ப்பவர்களுக்கு மயக்கம் வருகிறது. காரணம் ஷைத்தான் இரத்த சொரூபமானவன், பயங்கரமானவன். எனவே இரத்தம் என்றதும் மனதில் திகிலை உண்டாக்கி விடுகிறான்' என்கிறார்கள்
இரத்தம் சூடாகி அசுர வேகத்தில் நரம்புகளில் ஓடுவதால், நரம்புகள் அதன் இயற்கை அளவைத் தாண்டி புடைத்துக் கொண்டு நிற்கும்.
மனித உடலில் மூளை போன்ற முக்கிய உறுப்புகள் இருக்க பாய்ந்தோடும் இரத்தத்தை சைத்தான் ஏன் தேர்வு செய்தான் ?

இரத்தம் மட்டும்தான் உடலின் அனைத்து உறுப்புகளையும் சென்றடைகிறது. இரத்தத்தின் மூலம் உடல் முழுவதையும் ஆக்ரமித்த ஷைத்தான் மூளையால் சிந்திக்கும் திறனையும் கையில் எடுத்து அதனையும் செயலிழக்கச் செய்து விடுவான். அதனால் தான் அந்த நேரத்தில் அவர் பேசிய வார்த்தைகளை கோபம் தனிந்தப் பின் மறுப்பார்.

அடுத்து சைத்தான் இரத்தத்தை தேர்வு செய்வதற்கு காரணம். மேலும் மனித வர்க்கத்தைப் படைப்பதற்கு முன்பாக இறைவன் இந்த பூமியில் ஜின் வர்க்கத்தைப் படைத்திருந்தான். ஜின் நெருப்பால் படைக்கப்பட்டது. பூமியையும் வானத்திலிருந்து பிரித்தமைத்தபோது, பூமியின் பாறை கொதிநிலையில் இருந்தது. எனவே அந்த கொடூர சூழ்நிலையில் வாழ தகுதியானவை அசூர ஜின்களே.

மேலும் பூமி கொதிக்கும் சூழ்நிலையில் வாழும் அசூர ஜின்களுக்கு கோபம் அதிகம் வரும்போது ஒன்றையொன்று கொன்று இரத்தத்தை பூமியில் ஓட்டின. அதனால்தான் மலக்குமார்கள் ஜின்கள் மாதிரி மனிதர்களை நினைத்து..., ".நபியே!) உங்களது இறைவன் மலக்குகளை நோக்கி "நான் பூமியில் (என்னுடைய) பிரதிநிதியை (ஆதமை) நிச்சயமாக ஏற்படுத்தப் போகிறேன்" எனக் கூறிய சமயத்தில் (அதற்கு) அவர்கள் "(பூமியில்) விஷமம் செய்து இரத்தம் சிந்தக்கூடிய (சந்ததிகளைப் பெறும்) அவரை அதில் (உன்னுடைய பிரதிநிதியாக) ஆக்குகிறாயா?" ( குர்ஆன் 2:30 )

கோபம் தணிந்த பின் அதே மனிதன், "நான் அப்படிப் பேச வில்லையே ! நானா அப்படிப் பேசினேன் ! "என்று வியந்து கேட்பான்.

அதேப் போன்று ஷைத்தானின் ஆக்ரமிப்பில் இருந்தபொழுது யார் அவரிடம் சென்று என்ன அறிவுரைகளைக் கூறித் தடுத்தாலும் ஏற்க மாட்டார். ஏற்க மறுப்பதுடன் விதாண்டாவாதம் பேசுவார்.

இப்படிப்பட்ட இந்த இரத்த ஓட்டம் மனிதனின் உடலில் உள்ளது என்பதை முதன் முதல் கண்டுபிடித்தவர் யார் ? உயிரினங்களின் இரத்த ஓட்டம் பற்றிய அறிவியலை இப்னு நஃபீஸ் என்பவரே முதன்முதலாக கண்டறிந்து கூறினார்.

இது நடந்தது குர்ஆன் இறக்கியருளப்பட்ட 600 ஆண்டுகளுக்குப் பின்னர் ஆகும். இவருக்கு 400 ஆண்டுகளுக்குப் பின்னர் வந்த வில்லியம் ஹார்வி என்பவர் இரத்த ஓட்டம் பற்றிய இந்த அறிவியலை மேலை நாடுகளுக்கும், உலக நாடுகளுக்கும் எடுத்துக்கூறி, இதை பிரபல்யப்படுத்தினார். வில்லியம் ஹார்வி என்ற அறிவியலாளர் பிறந்த ஆண்டு கி.பி. 1578 ஆகும்.

ஆனால் இதற்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உடல் இரத்தம் ஓடிக் கொண்டிருக்கிறது என்ற உண்மைத் தகவலை அல்லாஹ்வின் தூதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இந்த மனித சமுதாயத்திற்கு எடுத்துரைத்து விட்டார்கள். மேற்கண்ட ஹதீஸ் புகாரி : 3281

" நான் நபி(ஸல்) அவர்களுடன் அமர்ந்து கொண்டிருந்தேன் அப்போது இரண்டு மனிதர்கள் ஒருவரையொருவர் திட்டிக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவரின் முகம் (கோபத்தால்) சிவந்து அவரின் தொண்டை நரம்பு புடைத்தது.

உடனே நபி(ஸல்) அவர்கள் 'எனக்கு ஒரு (பிரார்த்தனை) வார்த்தை தெரியும். அதை இவர் சொல்வாராயின், இவருக்கு ஏற்பட்டுள்ள கோபம் போய்விடும். 'அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்' 'ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன்'' என்று இவர் பிரார்த்தித்தால் இவருக்கு ஏற்பட்டுள்ள கோபம் போய் விடும்'' என்று கூறினார்கள்.

எனவே மக்கள் அந்த மனிதரிடம் 'நபி(ஸல்) அவர்கள் 'ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரு'' என்று கூறினார்கள் அதற்கு அவர் 'எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா ?' என்று கேட்டார்.

புகாரி 3282. சுலைமான் இப்னு சுரத்(ரலி) அறிவித்தார்.

நியாயமற்ற கடும் கோபம் ஷைத்தானின் மூலமே வருகிறது என்பதற்கு மேற்காணும் சம்பவமும் அதை தடுக்க இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறிய 'அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர்ரஜீம்' 'ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன்'' எனும் பிரார்த்தனையும் சான்றுப் பகர்கிறது.

அதனால் தான் நம்முடைய புத்திசாலித்தனத்தைக் கொண்டு உடல் வலிமையைக் கொண்டு ஷைத்தானின் எந்த சூழ்ச்சியையும் முறியடிக்க முடியாது, அல்லாஹ்வின் துணை கொண்டு மட்டுமே முறியடிக்க முடியும்.
கோபம் வரப்போவது ஓரளவு முன் கூட்டியேத் நமக்குத் தெரிந்து விடும் தெரியாமல் திடீரென வந்து விடாது. எதிர் கொள்ளும் சம்பவங்களின் மூலமும் உடல் நிலையில் ஏற்படும் மாற்றங்களின் மூலமும் கண்டிப்பாகத் தெரிந்து கொள்ளலாம்.
அந்த நேரத்தில் தாமதமின்றி 'அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர்ரஜீம்' என்றுக் கூறி விட வேண்டும். அவ்வாறுக் கூறி விட்டால் மலைப்போன்று வர இருக்கும் கலாட்டாக்கள், பிரச்சனைகள் அல்லாஹ்வின் அளப்பரிய பாதுகாப்பினால் மடுவைப் போல் மாறி விடும்.
நடைமுறைக்கேற்ற மார்க்கம்தான் இஸ்லாம் என்பதற்கு இதுவும் ஒரு சிறந்த சான்றாகும். காரணம் எண்ணம் தான் செயலை தீர்மானிக்கிறது என்பதால்; 'அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்' என்பதை சொல்ல ஒருவர் எண்ணி விட்டாலே, கோபத்தைக் குறைக்க வேண்டும் என்ற நல்லெண்ணம் அவரிடம் மேலோங்கி விடும். கோபத்தைக் குறைக்க வேண்டும் என்ற நல்லெண்ணம் மேலோங்குபவரிடத்தில் மட்டுமே 'அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்' என்று சொல்லவும் தோன்றும்.
இருவரும் இவ்வாறான முடிவுக்கு வந்து விட்டால் ஷைத்தான் தலையில் மண்ணை அள்ளிக் கொட்டிக் கொண்டு ஓடுவதைத் தவிர அவ்விடத்தில் கண்டிப்பாக வேறொன்றும் நிகழாது.
ரஹ்மத் ராஜகுமாரன் 944 344 6903 வாட்ஸ் அப் 948 6909 903
குறிப்பு:- திருக்குர்ஆனின் ஆரம்பத்தில் பிஸ்மிலுக்கு முன் அவூதுபில்லாஹிமினஷ்ஷைத்தானிர்ரஜீம் எழுதப்படவில்லை. இதன் பொருள் “எடுத்தெறியப்பட்ட ஷைத்தானை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன்” என்பதாகும்.
மேலும் அல்லாஹ்வை விட்டும் கவனத்தைத் திருப்பக் கூடிய அனைத்தையும் விட்டும் உள்ளத்தை தூய்மையாக்குதல் என்பது இதன் கருத்தாகும்.
தவிர இந்த அவூது திருக்குர்ஆனில் உள்ளதல்ல. ஆயினும் திருக்குர்ஆன் ஓத ஆரம்பிக்கும் போது இதைச் சொல்லிக் கொள்வது சுன்னத்தாகும். இப்னு அதா ரஹ்மத்துல்லாஹி அலைஹி வாஜிபு என்று சொல்லி யிருக்கிறார்கள்.

**அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் 2**
**(விஞ்ஞானத் தஃப்ஸீர் )**
**காப்புச் சொல் :- "அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்" ( பகுதி 2)**

أعوذ بالله من الشيطان الرجيم

முதல் பதிவில் பூமியை வானத்திலிருந்தமைத்தபோது, பூமியின் மேற்புறம் கொதிக்கும் சூழ்நிலையில் இருந்ததால், அந்த சூட்டில் வாழக்கூடிய உயிரினமாக ஜின்களை இறைவன் படைத்திருந்தான் என்பதாக எழுதியிருந்தேன்
ஜின்கள் நெருப்பில் படைக்கப்பட்டிருப்பதால், நரகமும் நெருப்பில் படைக்கப்பட்டிருப்பதால் ஜின்களை நரகத்தின் நெருப்பு தீண்டாதா ? என்ற கேள்வி நண்பர் ஒருவர் கேட்டார்

மனிதனை மண்ணில் படைக்கப்பட்டதால் அவன் இறந்த உடம்பை மண் தீண்டாமலா இருந்தது மண்ணோடு மண்ணாக மக்க வைக்கவில்லை ?
அதைப் போல் நெருப்பில் படைக்கப்பட்ட ஜின்களை நரக நெருப்பு தீண்டாமலா இருக்கும் ? தீண்டும் இருந்தாலும் நெருப்பைப் பற்றி விஞ்ஞான ரீதியில் விவரிக்கிறேன்
சூரியனின் ஒளியில் நாம் பார்க்கக் கூடிய வைலட் v, இன்டிகோ I, புளூ B , கிரீன் G , எல்லோ Y , ஆரஞ்சு O , ரெட் R இவைகள் நாம் பார்க்கும் 0.00004 cm இருந்து 0.00007 cm வரை நம்மால் பார்க்க முடியும்
வைலட் நிறத்திற்கு மேலே அல்ட்ரா வைவட் , எக்ஸ்ரே கதிர், காமா கதிர், காஸ்மிக் கதிர் , இன்னும் அறியப்படாத கதிர்களும் உள்ளன.

அதைப்போலவே ரெட் நிறத்திற்கு கீழே இன்ஃபரா ரெட் , மின் பொறி , ராடார் கதிர்கள், டெலிவிஷன் , குட்டையான ரேடியோ அலை , ரேடியோ அலை , நீளமான ரேடியோ அலை , இன்னும் அறியப்படாத கதிர்கள் உண்டு. இவைகளில் ஏதோ நெருப்புக்கதிரில் ஜின்கள் படைக்கப்பட்டிருக்கலாம்
"ஜின்களைக் கொடிய உஷ்ணமுள்ள (" நாரி சமம் " என்ற )நெருப்பிலிருந்து படைத்தோம் " (குர்ஆன் 15 : 27)
நரகின் எரிபொருளாக குர்ஆனில் இன்னொரு இடத்தில்
"ஜின்களையும் மனிதர்களையும் கொண்டு நிச்சயமாக நரகத்தை நிரப்புவேன்'' (குர்ஆன் 11 : 119)
"மனிதர்களும் கற்களும் இரையாகின்ற நரக நெருப்புக்குப் பயந்து கொள்ளுங்கள் " (குர்ஆன் 2 : 24)
இந்த வசனத்தில் குறிப்பிடப்படும் கற்கள் கந்தகக் கற்கள் என்று அக்கால விஞ்ஞானத்தின்படி தஃப்ஸீர்களில் சொல்லப்பட்டிருந்தாலும், கந்தக கற்கள் சொற்ப காலமே வெப்பத்தை தரக்கூடியது.
ஆனால் யூரேனிய கற்கள் யுக யுகங்களாக நெருப்பைக் கொட்டக்கூடியது அட, அதன் சாம்பலிருந்து வெளிப்படும் கதிர் வீச்சு லட்சக்கணக்கான வருடங்களுக்கு இருந்து கொண்டே இருக்கும். இருக்கிறது. நரக வாசிகள் என்றென்றும் யுக யுகங்களாக அதில் இருப்பதாக இறைவன் குறிப்பிடுகிறான்
சில நரகங்களின் நெருப்பு விநோத தன்மையைக் கொண்டதாக இறைவன் ,
"நபியே ! ஹுதமா என்றால் என்னவென்று நீங்கள் அறிவீர்களா ? அதுதான் அல்லாஹ் உடைய கட்டளையால் எரிக்கப்பட்ட நெருப்பு அது உடல்களில் பட்டவுடன் உள்ளங்களில் பாய்ந்து விடும் நெருப்பு (குர்ஆன் 104 : 5 to9)
அநேகமாக இந்த நரகத்தின் நெருப்பு அணுகதிர் வீச்சியின் நெருப்பாக இருக்கலாம்
யுரேனியத்தின் கதிர் வீச்சு தன்மையை இழக்க 704 மில்லியன் வருடங்கள் ஆகும் .
எனவே ஜின்கள் " நாரி சமம் " என்ற நெருப்பில் படைக்கப்பட்டிருந்தாலும் யுரேனியம் போன்ற அணுசக்தி வெளிப்படுத்தும் கதிர் வீச்சு கொண்ட நெருப்பு நரகத்தில் இருக்கலாம் எனவே ஜின்களுக்கும கொடிய வேதனை தரக்கூடடியே நெருப்பு அதைப் படைக்கப்பட்ட " நாரி சமம் " நெருப்பைக் காட்டிலும் கொடிய நெருப்பு நரகத்தில் உண்டு
وَّاَنَّا لَمَسْنَا السَّمَاۤءَ فَوَجَدْنٰهَا مُلِئَتْ حَرَسًا شَدِيْدًا وَّشُهُبًا ۙ
"நிச்சயமாக நாங்கள் வானத்தைத் தடவிப் பார்த்தோம். அது பலமான பாதுகாவலர்களாலும், எரி நட்சத்திரங்களாலும் நிரப்பப்பட்டிருப்பதை நாங்கள் கண்டோம். (குர்ஆன் : 72: 8 )
وَّاَنَّا كُنَّا نَقْعُدُ مِنْهَا مَقَاعِدَ لِلسَّمْعِ فَمَنْ يَّسْتَمِعِ الْاٰنَ يَجِدْ لَهٗ شِهَابًا رَّصَدًا ۙ
“(முன்னர் வானில் பேசப்படுவதைச்) செவிமடுப்பதற்காக (அதற்குள்ள சில) இடங்களில் நாங்கள் அமர்ந்திருப்போம்; ஆனால் இப்பொழுதோ எவன் அவ்வாறு செவிமடுக்க முயல்கிறானோ, அவன் தனக்காகக் காத்திருக்கும் தீப்பந்தத்தையே காண்பான். (குர்ஆன் : 72: 9)
இந்த தீப்பந்தம் ஷைத்தானான ஜின்களுக்கு மிகுந்த ஆபத்தைக் கொடுக்கக் கூடிய கதிர்வீச்சாக இருக்கலாம்

**அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் 3**
**(விஞ்ஞானத் தஃப்ஸீர் )**
**(கடவுச்சொல் (PassWord) "பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்")**



கடவுச் சொல் ஒலிப்பு (Password) எனப்படுவது தகவலுக்கு அணுக்க ஒப்புதல் அளிக்கும் மறைசொல்லாகும் என்கிறது நவீன விஞ்ஞானம்.
பொதுவாக ஒரு பயனர் பெயர் அல்லது பயனர் எண்ணுடன் இணைந்து இச்சொல் பயன்படுத்தப்படுகின்றது.
கடவுச் சொற்கள் எண், எழுத்து, குறியீடுகள் என்பனவற்றை உள்ளடக்கி இருக்கலாம்.
கடவுச் சொல்லானது இயங்குதளங்கள், அலைபேசிகள், தன்னியக்கக் காசளிப்புப் பொறிகள் போன்ற கருவிகளில் பயன்படுத்தப்படுகின்றன.

இணையத்தில் மின்னஞ்சற்சேவை, சமூக வலைத் தளங்கள் போன்றவற்றுள் நுழைவதற்கு, பயனர் பெயரும் கடவுச் சொல்லும் கட்டாயமாகும்.
கடவுச் சொல்லானது பாதுகாப்பானதாகவும் நினைவுபடுத்தக் கூடியதாகவும் அமைக்கப்பட்டிருத்தல் நன்று.
வலுவான கடவுச் சொற்களை உருவாக்குவதற்கு அவை நீளமானதாக இருத்தல் வேண்டும். எட்டு அல்லது அதற்கு மேற்பட்ட வரியுருக்களைக் கடவுச் சொல் கொண்டிருத்தல் பாதுகாப்பானதாகும்.
' பிஸ்மி ' என்பது ஒவ்வொரு அத்தியாயத்திற்கும் கடவுச்சொல்லாக குர்ஆனில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.
குர்ஆனின் 114 அத்தியாயங்களில் ஒரே ஒரு அத்தியாயத்தைத் (சூரா தவ்பா) தவிர மற்ற அனைத்து அத்தியாயங்களின் தொடக்கத்திலும் بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ ' பிஸ்மில்லாஹ் ஹிர்ரஹ்மான் னிர்ரஹீம்" என்னும் வசனம் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

இதன் பொருள் "அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் தொடங்குகிறேன்" என்பதாகும்.
இஸ்லாமை ஏற்கும் முன்பு அரபு மக்களிடையே ஒரு வழக்கம் இருந்து வந்தது. ஏதேனும் ஓர் அலுவலை அவர்கள் துவங்க ஆரம்பித்தால், அவரவர் வழிபடும் விக்ரகங்களின் பெயர்களைக் கூறியே ஆரம்பம் செய்வர்.
இப்படித் தொடங்கும் பணி வெற்றி பெறும் என்பது அவர்களின் நம்பிக்கையாக இருந்தது. இந்த நம்பிக்கைக்கு முற்றுப்புள்ளிவைக்கும் விதமாக, நபிகள் நாயகம் ﷺ அவர்களுக்ககு அருளப்பெற்றக் குர்ஆனின் முதல் வசனமே, "(அனைத்தையும்) படைத்த உமது இறைவனின் பெயரால் ஓதுவீராக!" எனத் தொடங்கியது.
இறைவன் மனிதர்களிடமிருந்து எந்தத் தேவையும் அற்றவன்; இருப்பினும் தன்னுடைய அருட்கொடைகளை தொடர்ந்து வழங்கிக் கொண்டிருப்பதால், அவனை எக்கணத்திலும் மறத்தல் ஆகாது; நம் வாழ்வில் ஒவ்வொரு நிகழ்வின் தொடக்கத்திலும் இறைவனை நினைப்பது அவசியமாக இருக்கிறது என்பது இஸ்லாமிய நம்பிக்கையாகும்.

நபி நூஹு (அலை) அவர்களின் காலத்தில் அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து நன்மக்கள் தப்பிச்செல்வதற்காக செய்யப்பட்ட கப்பலை செலுத்தும் முன் "இதிலே நீங்கள் ஏறிக் கொள்ளுங்கள்; இது ஓடுவதும், நிற்பதும் அல்லாஹ்வின் பெயராலேயே (நிகழ்கின்றன). நிச்சயமாக என் இறைவன் மன்னிப்பவனாகவும், கிருபையுடையவனாகவும் இருக்கின்றான்" என்று கூறினார்.(குர்ஆன் 11: 41)
அல்லாஹ்வின் பெயராலேயே என்று கூறி தான் எந்தக் காரியத்தையும் தொடங்க வேண்டும் என நபிமார்கள் சொல்லித் தந்துள்ளார்கள் என்பதை பார்க்கலாம்.
இதே போல நபி சுலைமான் (அலை) அவர்கள் ஸபா நாட்டு அரசிக்கு எழுதிய கடிதத்தின் தொடக்கம் "பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் " என்றே அமைந்திருந்தது

நபிகள் நாயகம் ﷺ அவர்கள் வளர்ப்பு மகனாகிய உமர் இப்னு அபீ ஸலமா அவர்களை, "சிறுவனே அல்லாஹுவின் பெயரைச் சொல். உனது வலது கரத்தை கொண்டு சாப்பிடு" என்றும் அறிவுறுத்தியுள்ளார்கள்.
அர்ரஹ்மான் "எல்லா உயிரினங்களுக்கும் அருள்பாலிப் பவனாகிய இறைவன் இவ்வுலகில் உள்ள நல்லவர், கெட்டவர் அனைவருக்கும் பாரபட்சமில்லாமல் பொதுவாக உயிரினங்களுக்கு வேண்டிய எல்லாவற்றையும் கொடுத்து வளர்ப்பதிலும், அவர்களுக்கு ஏதாவது ஆபத்து நேரிட்டால் அதை விட்டு அவர்களைக் காப்பாற்றி கிருபை செய்பவன்" என்பது பொருளாகும்.
அர்ரஹீம் "மறுமையில் அல்லாஹுத் தஆலாவை நம்பிக்கை கொண்ட மூமின்களுக்கு மட்டும் பாவங்களை மன்னித்து சுவர்க்கத்தில் புகச் செய்வதாலும், அவனுடைய சந்திப்பைக் கொடுப்பதாலும் விசேஷமாக அருள் பாலிப்பவனாக இருக்கிறான்" என்பது பொருளாகும்.
ரிவாயத்து :- "அல்லாஹுத் தஆலாவுக்கு ஆயிரம் ரஹ்மத்துக்கள் உண்டு. அவற்றிலிருந்து ஒரே ஒரு ரஹ்மத்தை மட்டும்தான் அவன் உலகிலுள்ள சர்வ சிருஷ்டிகளுக்கும் அளித்து அருளினான்.
மற்றுமுள்ள 999 ரஹ்மத்துக்களை மறுமையில் அளிப்பதற்காக தன்னிடமே தயாரித்து வைத்திருக்கின்றான். இவற்றை அல்லாஹுத் தஆலா மறுமையில் தனது நல்லடியார்களுக்கு மட்டும் கொடுத்தருள்வான்" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

"அல்லாஹ் " ,என்பது "தன்னிலைக்குத் தானே ஆதாரமாய் சர்வ சிருஷ்டிகளுக்கும் மூலமாய் இறைவனுடைய குணங்கள் அனைத்தையும் தன்னில் அமைத்துக் கொண்டதாய் நித்திய அகண்ட பரிபூரணமாக விளங்கும் உண்மைக்குப் பொருளாகிய இறைவனுக்கு ஏற்பட்ட பெயராகும்.
இது இடுகுறிப் பெயர் போல் வழங்கப்பட்டு வருகிறது. இறைவனுக்குரிய மற்ற பெயர்களெல்லாம் காரணப் பெயர்களாகும். அதாவது ' அல்லாஹ் ' என்ற பெயர் மட்டும்தான் “தாத்”தின் பெயரென்றும், ஏனைய பெயர்கள் யாவும் “ஸிபாத்” அவனின் தன்மைகளைக் குறிக்கும் காரணப் பெயர்களாகும் .
எனவே அல்லாஹ் என்பதே மற்ற எல்லாப் பெயர்களையும் விடச் சிறந்தது. ஆதலால் இதனை ' இஸ்முல் அஃலம் ' என்று சொல்லுவார்கள்.
' குன் ' என்று இறைவன் சொன்னால் அது உண்டாகி விடும் .
(பிஸ்மில்லாஹி) என்று இறைவன் சொன்னால், பீ கான மா கான வபீ எகூனு மாஎகூனு (அதாவது உண்டாகி இருப்பவையெல்லாம் (இறைவனாகிய) என்னால்தான் உண்டாயின. இனி உண்டாகப் போவது அனைத்தும் என்னைக் கொண்டே உண்டாகும்) என்பது கருத்தாகும். அப்பேர்ப்பட்ட பிஸ்மியைத்தான் நமக்கு ஓதச் சொல்லி, எந்த காரியத்தையும் ஆரம்பிக்கச் சொல்கிறான் .

எல்லா காரியமும் சிறப்பு நடந்தேற " பிஸ்மி " என்ற கடவுச் சொல்லை நாம் தெரிந்தோ தெரியாமலோ பயன்படுத்துகிறோம்.
"பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம்" என்னும் வாக்கியம்

திருக்குர்ஆனுக்கு திறவு கோலாகவும், லவ்ஹுல் மஹ்ஃபூல் என்னும் பலகையில் அல்லாஹுத்தஆலாவுடைய எழுதுகோல் எழுதியவற்றில் முதல் வாக்கியமாகவும் இருக்கிறது
ஹளரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு இறக்கி வைக்கப்பட்ட முதல் வசனமும் இருக்கிறது. எனவே ஒவ்வொரு காரியத்தையும் பிஸ்மிலைக் கொண்டே ஆரம்பஞ் செய்வது நன்மையும் சிறப்புமாகும்.
ஒரே ரட்சகனாகிய இறைவனுக்கு மூன்று ஆயிரம் பெயர்கள் இருக்கின்றன.
அவற்றிலிருந்து ஓராயிரம் பெயர்களை மலக்குகளுக்கு அறிவித்தான்
மற்றுமோர் ஆயிரம் பெயர்களை நபிமார்களுக்கு அறிவித்தான்.
மற்றுமுள்ள பெயர்களில் முன்னூறு பெயர்களை "தவ்ராத்" வேதத்திலும்,
மற்றுமுள்ள முன்னூறு பெயர்களை "ஸபூர்" வேதத்திலும்,
மற்றும் முன்னூறு பெயர்களை "இன்ஜீல்" வேதத்திலும்,மற்றும் தொண்ணூற்றொன்பது பெயர்களை "திருக்குர்ஆனிலும்" கூறியுள்ளான்.
பாக்கியுள்ள ஒரே ஒரு பெயரை தான் மட்டும் தெரிந்துள்ளான். இம்மூன்றாயிரம் பெயர்களின் பொருளையும் அல்லாஹ், ரஹ்மான், ரஹீம் என்ற இந்த பெயர்களில் அமைத்து வைத்துள்ளான்.
எனவே, யாரேனும் இதையறிந்து மூவாயிரம் பெயருக்குரிய கடவுச் சொல்லான '" பிஸ்மி" யை ஓதினால் அவன் அந்த மூவாயிரம் பெயர்களை ஓதி இறைவனை திக்ருச் செய்ததின் பயனை அடைவான்" என்று மார்க்க நிபுணர்களான இமாம்கள் கூறி இருக்கிறார்கள்.
இதில் ".பிஸ்மி" என்ற அந்த ஒற்றை வார்த்தைக்கு என்ன பொருள் விளக்கம் என்பதை அல்லாஹ் மட்டுமே அறிவான். இந்த பிஸ்மிதான் மிகப் பெரிய கடவுச்சொல் என்பதை நீங்கள் அறிகிறீர்களா ?
அல்ஹதீஸ் ஒன்றில் "மிஃராஜின் இரவில் சுவர்க்கம் அனைத்தும் எனக்குக் காண்பிக்கப்பட்டன. சுவர்க்கத்தில் நான்கு நதிகள் ஓடுவதைக் கண்டேன், அவற்றில் ஒன்று தண்ணீர் நதி, இரண்டாவது பால் நதி மூன்றாவது மது நதி, நான்காவது தேன் நதியாகும்.

இந்த நான்கு நதிகளும் எவ்விடத்திலிருந்து புறப்பட்டு எங்கு போய்ச் சேருகின்றன வென்று ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் நான் கேட்டேன். அதற்கவர் "நபியே! இவை ஹவ்லுல் கவ்தருக்கு போய்ச் சேருகின்றன. ஆனால், இவை எங்கிருந்து புறப்பட்டு வருகிறது என்பது எனக்குத் தெரியாது. ஆகையால் தாங்கள் இறைவனிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்" என்று சொல்லி விட்டார்.
எனவே, நான் இறைவனிடம் அதைப் பற்றிக் கேட்டேன். அப்போது ஒரு மலக்கு என்னிடம் வந்து ஸலாம் சொல்லி, என்னைக் கண்ணை மூடி திறக்கும்படி சொன்னார். அவ்வாறே நான் கண்ணை மூடி திறந்து பார்த்தேன். அந்த நொடியே நான் ஓர் மரத்தின் அடியில் இருப்பதை உணர்ந்தேன்.
அவ்விடத்தில் முத்தினால் அமைந்த குப்பா ஒன்று இருப்பதைக் கண்டேன். அந்த குப்பாவின் வாயலுக்கு தங்கத்தினால் கதவு போடப்பட்டிருந்தது. அந்த வளை மண்டபத்தின் மீது. இவ்வுலகிலுள்ள மனிதர்கள். ஜின்கள் மற்றும் படைப்பினங்கள் அனைத்தையும் ஒன்று சேர்த்து வைத்தாலும் அவைகளெல்லாம் ஒரு பெரும் மலை உச்சியில் இருக்கும் ஒரு சிறு பறவையின் அளவுதான் இருக்கும்.
அப்படிப்பட்ட பிரம்மாண்டமான குப்பாவுக்குள்ளிருந்துதான் மேலே கூறப்பட்ட நான்கு நதிகளும் புறப்பட்டு வருவதைக் கண்டேன்.

இதை மட்டும் நான் பார்த்து விட்டு அந்த இடத்தை விட்டு அகல நாடினேன். அந்த மலக்கு என்னை நோக்கி "நபியே! இந்த குப்பாவுக்குள் தாங்கள் ஏன் நுழையவில்லை' என்று வினவினார். அதற்கு நான் 'இந்த குப்பாவின் கதவு பூட்டப்பட்டிருக்கிறதே. அதன் சாவி என்னிடத்தில் இல்லையே" என்று பதில் சொன்னேன்.
உடனே அந்த மலக்கு "நபியே பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர்ரஹீம் என்ற சொல்தான் அதன் சாவி" என்று கூறினார்.

எனவே, அந்தக் கதவருகே சென்று பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்று சொன்னேன். அந்தக் கதவு திறந்தது. உடனே நான் அந்த குப்பாவுக்குள் சென்றேன். அங்கு நான்கு தூண்கள் இருந்தன. அந்நான்கு தூண்களிலும் "பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம்" என்று எழுதப்பட்டிருந்தது.
மேலே கூறிய நான்கு நதிகளில் தண்ணீர் நதி பிஸ்மில்லாஹ் என்பதிலுள்ள மீமிலிருந்தும், பால் நதி அல்லாஹ் என்பதிலுள்ள ஹாவிலிருந்தும், மது நதி அர்ரஹ்மான் என்பதிலுள்ள மீமிலிருந்தும், தேன் நதி அர்ரஹீம் என்பதிலுள்ள மீமிலிருந்தும் வந்து கொண்டு இருந்தது.
அந்த நான்கு நதிகளின் பிறப்பிடம் " பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர்ரஹீம் " என்ற வாக்கியம்தான் என்பதை நான் புரிந்து கொண்டேன்.
பின்பு இறைவன் என்னை நோக்கி "யாரேனும் ஒருவன் பிஸ்மியை இதய சுத்தியுடன் ஓதினால், அவனுக்கு நான்கு நதிகளிலிருந்தும் வேண்டிய மட்டும் புகட்டுவேன் என்று இறைவன் கூறினான்' என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியிருக்கிறார்கள்.
ஒவ்வொரு மனிதனுக்கும் தனித்தனி பாஸ்வேர்டு (கடவுச்சொல்) அவனவன் விரல் ரேகைதான் என்பதை குர்ஆனில் அல்லாஹ்
بَلٰى قٰدِرِيْنَ عَلٰٓى اَنْ نُّسَوِّىَ بَنَانَهٗ
ஏன் முடியாது? நாமோ அவனுடைய விரல்களின் நுனியைக்கூட மிகத் துல்லியமாக அமைப்பதற்கு ஆற்றல் பெற்றுள்ளோம். (குர்ஆன் : 75:4)

**Rahmath Rajakumaran**

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமக்கு (27:30ஆவது வசனத்திலுள்ள) 'பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்' அருளப்பெறும் வரை அத்தியாயங்களுக்கிடையே பிரிக்கும் முறையை அறியாதவர்களாக இருந்தார்கள்.
அதாவது 27:30ஆவது வசனத்தில் இடம்பெற்றுள்ள 'பிஸ்மில் லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்' அருளப்பெற்ற பிறகே ஒவ்வோர் அத்தியாயத்திற்கு முன்பும் பிஸ்மில்லாஹ்வைப் பதிவு செய்துகொள்ளுமாறு நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.
நூல்: அபூதாவூத், ஹாகிம்.

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் 4
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )
## ( அல்ஹம்து லில்லாஹ் )




அனைத்துலகையும் அனைத்துலகையும் படைத்து அரிதாய்க் காக்கும் அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும்” என்பதே தலைப்பிலே கண்ட பொருளாகும்.
புகழ் நான்கு வகைப்படும்

1) இறைவன் தன்னைத்தானே புகழ்வது

2) அவன் தன்னுடைய நபிமார்களையும், நேசர்களையும் புகழ்வது

3) அடியார்கள் இறைவனைப் புகழ்வது

4 ) அடியார்கள் சிலரை சிலர் புகழ்வது

இந்த நான்கு வகை புகழ்களும் அல்லாஹ்வுக்கே உரியன

அல்ஹம்து-எல்லாப் புகழும்; லில்லாஹி-அல்லாஹ்வுக்காக; (அவன் எத்தகையோனெனின்) றப்புல் ஆலமீன்-எல்லா உலகங்களையும் படைத்துக் காத்துப் படிப்படியாக நாளடைவில் பரிபக்குவப்படுத்துபவன்

அறபி மொழியிலே புகழைக் குறிக்கும் சொற்கள் பலவிருப்பினும், “ஹம்து” என்னும் சொல்லே ஈண்டு தேர்ந் தெடுக்கப்பட்டது.

தனக்கு மட்டும் கிடைத்த உதவிக்கு நன்றியைத் தெரிவிக்கும் “ஷுக்ரு", பயன்பெறுவதற்கு முன்னரும் பயன் பெற்றதற்குப் பின்னரும் பயன்படுத்துகின்ற மத்ஹு என்பன போன்ற சொற்களைக் கையாளாமல், உதவியைப் பெற்ற பின் தனக்காகவும் பிறருக்காகவும் நன்றி செலுத்துகின்ற சொல் லாகிய "ஹம்து" என்னும் சொல்லை அமைத்திருப்பது இவ்விடத் துப் பொருத்தமுடைத்து.

அதனையும் பொதுவாகச் சொல்லாமல், "அல்ஹம்து" என்பதாக எல்லாப் புகழையும் உள்ளடக்கிக் கூறப்பட்டது. அனைத்துப்புகழுக்கும் இறைவன் மட்டுமே உரித்தாவாம் என்பதன் வழியாகப் பிற படைப்பினங்களில் காணப்படும் சிறப்புகளுக்கெல்லாம் இறைவனே அடிப்படையானவன் என்பதும்,

அவற்றின் சிறப்பியல்பனைத்தும் இறைவனின் அருட்கொடையே என்பதும், அச்சிறப்பியல்புகளுக்காகப் பாராட்டப்பட வேண்டியவன், அவற்றினை வழங்கிய அல்லாஹ்வே என்பதும் பெறப்படுகின்றன.

மிகத் தொன்மையான பழங்காலத்திலிருந்து இன்று வரை பூத்துள்ள புகழும், எதிர்காலத்தில் பூக்கவிருக்கின்ற எல்லா வகையான புகழும் இறைவனுக்கே உரியனவாகும்.

முதல் மனிதர் நம் பாவா ஆதம் (அலை) அவர்களை படைக்கும்போது ,இறைவன் மண்ணுருவியின் தலையில் தன் ஆவியை ஊதினான் என்றும் அதன் தொப்பூழில் ஊதினான் என்றும் இரு விதமாகக் கூறப்படுகிறது ."நான் என் ரூஹி லிருந்து அவரில் ஊதினேன்" என்றே இறைவன் கூறுகிறான்.

அது தலையிலே நுழைந்தது. என்ன வியப்பு ! அது உடனே சதையும் எலும்புமாக ஆகிவிட்டது. பின்னர் அது நெற்றி, செவி, நாவு ஆகியவற்றிற்கு வந்து பின்னர் உடலிற்குள் புகுந்து, முதுகு வழியாக இடுப்புக்கு வந்தது. அதற்கு மேல் செல்ல வழியில்லாது மீண்டும் மேலே வந்து கண்களிலே இறங்கியது. அவ்வளவுதான். கண்கள் ஒளி பெற்றன. அதன் பின் மூக்கில் இறங்கியது. ஆதம் (அலை) அவர்கள் தும்மினர்கள். அப்பொழுது இறைவன் ஜிப்ரீலை நோக்கி, "ஜிப்ரீலே ..! அந்தத் தும்மலைப் பிடித்து வைத்துக் கொள்ளும் ! நான் அதைக் கொண்டு என் நல்லடியார் ஈஸாவைப் படைக்க விரும்புகிறேன்" என்று கூறினான்.

ஆதம் (அலை) தும்மும் போது "அல்ஹம்து லில்லாஹ் ! "எல்லாப் புகழும் இறைவனுக்கே " என்று கூறியதும் , "ஆதமே ! உம் மீது என் அருள்பொழியட்டும் ! " இதற்காகவே நாம் உம்மைப் படைத்தோம் " என்று கூறினான். ஆதமின் தும்மலிருந்த பிடித்து வைத்த ரூஹைக் கொண்டு ஈஸா (அலை ) அவர்களைப் படைக்கும் போது அவருடைய தாயிடம் ஊதப்பட்டதாக குர் ஆனில் அல்லாஹ் ..

وَالَّتِىۡۤ اَحۡصَنَتۡ فَرۡجَهَا فَنَفَخۡنَا فِيۡهَا مِنۡ رُّوۡحِنَا وَ جَعَلۡنٰهَا وَابۡنَهَاۤ اٰيَةً لِّـلۡعٰلَمِيۡنَ

தன் கற்பைக் காத்துக்கொண்ட (மர்யம் என்ப)வரை(யும் நீங்கள் ஞாபகமூட்டுங்கள். நம்முடைய தூதர்) ஜிப்ரீல் மூலம் அவருடைய கர்ப்பத்தில் நாம் ஊதினோம். அவரையும், அவருடைய மகனையும் உலகத்தாருக்கு ஓர் அத்தாட்சியாகவும் ஆக்கினோம். (குர்ஆன் : 21:91)

நெடுங்காலம் குழந்தை இல்லாத நபி இப்ராஹீம் (அலை) அவர்களுக்கு அல்லாஹ் இரண்டு ஆண் குழந்தைகளைக் கொடுத்தற்காக இறைவனைப் புகழ்ந்தார்கள்.

الْحَمْدُ لِلَّهِ الَّذِي وَهَبَ لِي عَلَى الْكِبَرِ إِسْمَاعِيلَ وَإِسْحَاقَ ۚ إِنَّ رَبِّي لَسَمِيعُ الدُّعَاءِ

இஸ்மாயீலையும், இஸ்ஹாக்கையும் முதுமையில் எனக்கு வழங்கிய அல்லாஹ்வுக்கே புகழனைத்தும். என் இறைவன் பிரார்த்தனையை ஏற்பவன் குர்ஆன் 14:39

பாவிகளிடமிருந்து தன்னையும் தன் சமுதாய மக்களையும் காப்பாற்றியமைக்காக நூஹ் (அலை) அவர்கள் அல்லாஹ்வைப்புகழ்ந்தார்கள்.

فَإِذَا اسْتَوَيْتَ أَنْتَ وَمَنْ مَعَكَ عَلَى الْفُلْكِ فَقُلِ الْحَمْدُ لِلَّهِ الَّذِي نَجَّانَا مِنَ الْقَوْمِ الظَّالِمِينَ

நீரும், உம்முடன் உள்ளோரும் கப்பலில் அமர்ந்ததும் “அநீதி இழைத்த கூட்டத்தை விட்டும் நம்மைக் காப்பாற்றிய அல்லாஹ்வுக்கே புகழனைத்தும்’’ எனக் கூறுவீராக! குர்ஆன் 23:28

ஜின் இனத்தையும் பறவை இனத்தையும், காற்றையும் தனக்கு வசப்படுத்திக் கொடுத்து ஆட்சி அதிகாரங்களை வழங்கிய இறைவனை நபி சுலைமான் (அலை) மற்றும் தாவூத் (அலை) அவர்கள் புகழ்ந்தார்கள்.

وَلَقَدْ آتَيْنَا دَاوُودَ وَسُلَيْمَانَ عِلْمًا ۖ وَقَالَا الْحَمْدُ لِلَّهِ الَّذِي فَضَّلَنَا عَلَىٰ كَثِيرٍ مِنْ عِبَادِهِ الْمُؤْمِنِينَ

தாவூதுக்கும், ஸுலைமானுக்கும் கல்வியை அளித்தோம். ‘’நம்பிக்கை கொண்ட தனது ஏராளமான அடியார்களை விட எங்களைச் சிறப்பித்த அல்லாஹ்வுக்கே புகழனைத்தும்’’ என்று அவ்விருவரும் கூறினர். குர்ஆன் 27:15

துன்ஹாம் என்ற கலிபோர்னியாக்காரர் சொந்தமாக வெல்டிங் பட்டறை வைத்து லாரி நீளத்துக்கு ஒரு மோட்டார் பைக் தயாரித்து, ஏணி வைத்து ஏறி ஓட்டுகிறார்.

இங்கிலீஷ் விவசாயிகளுக்கு புகழ் ஆசை வந்தால், செயற்கை உரத்தைத் திணித்து பன்னிரண்டு அடி அகலத்துக்கு முட்டைகோஸ் பயிரிடுவார்கள்.

மற்றொருவர் நூதனமாக ஆயிரத்து ஐநூறு பவுண்டு பறங்கிக்காய் வளர்த்து அதை லாரியில் ஏற்றிக் கண்காட்சி நடத்துகிறார்.

இந்த மாதிரி எதையாவது செய்து டிவியில் காட்டும் போது மொத்த உலகமும் கொஞ்ச நேரமாவது தன்னைப் பார்க்க வேண்டும் என்கிற தீராத ஆசைதான் "15 நிமிட புகழ் " மனிதர்கள் என்று வர்ணிக்கிறார்கள்.

" 15 நிமிடப் புகழ் " என்ற வாக்கியத்தை அதிக இடங்களில் கேட்டிருப்பீர்கள். ஆனால், இதன் வேர் 1966 ல் இருந்து நீள்கிறது.

1985 ல் Andy Warhol's Fifteen Minutes என்ற நிகழ்ச்சியின் மூலம் டி.வி. வைத்திருந்த மக்களிடையே பெருமளவில் வரவேற்பைப் பெற்றது

1985 ஆம் ஆண்டு ஸ்வீடனின் ஸ்டாக்ஹோம் நகரத்தில் நடைபெற்ற Andy Warhol ன் ஓவியக் கண்காட்சி டி.வி மூலம் ஒளி பரப்பப்பட்டது .

கண்காட்சியில் கலந்துகொண்ட Andy Warhol ரசிகர்கள், அவருடன் புகைப்படம் எடுத்துக்கொள்ள போட்டி போட்டபோது எல்லோருமே பிரபலமாக விரும்புகிறார்கள் என்று Andy Warhol சொல்ல, அவரைப் படம் பிடித்துக்கொண்டிருந்த நாட் ஃபிங்கெல்ஸ்டெய்ன் "ஆம், 15 நிமிடத்துக்கு மட்டும் " என்று பதிலளித்தார். இதுவே 15 நிமிட புகழ் என்ற சொற்றொடர் பிரபலமாகி விட்டது

அந்த TV நிகழ்விற்குப் பிறகு அந்த சொற்ப வெளிச்ச மனிதர்களை உலகம் அந்த உடனேயே மறந்தே போகிறது. இது மனிதன் தனக்கான புகழுக்கு தேடி அலைவது.

ஆனால் இறைநேசர்களோ இறைவனைப் புகழ்வதில் ஈடுபாடு கொண்டனர்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "அல்லாஹ் ஓர் அடியாருக்கு அருட்கொடை ஒன்றை வழங்க, அவர் அல்ஹம்து லில்லாஹ்' (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்று (நன்றியுடன்) கூறினால், அவர் முன்பு பெற்றதைவிட மேலான ஒன்றையே அவருக்கு அல்லாஹ் வழங்குவான்.

மற்றொரு ஹதீஸில் நபி (ஸல்) அவர்கள் தெரிவித்துள்ளார்கள்: அல்லாஹ்வின் அடியார்களில் ஒருவர்,

" யா ரப்பி! லக்கல் ஹம்து கமா யன்பஃகீ. வி ஜலாலி வஜ்ஹிக்க வ அழீமி சுல்த்தானிக்க'

(இறைவா! உனக்கே உரிய மாண்புக்கும் உன் மகத்தான அதிகாரத்திற்கும் ஏற்ற புகழ் யாவும் உனக்கே உரியன) என்று இறைவனைப் புகழ்ந்து) உரைத்தார்.

நன்மை மற்றும் தீமைகளைப் பதிவு செய்யும் வானவர்கள் இருவரும் இதற்கு என்ன (நன்மை களை) எழுதுவது என்று தீர்மானிக்க முடியாமல் தடுமாறினர்.
உடனே இருவரும் அல்லாஹ்விடம் சென்று "எங்கள் இறைவா! ஓர் அடியார் (உன்னைத் துதித்து) ஒரு வார்த்தை சொன்னார். அதற்கு என்ன (நன்மை) எழுதுவதென எங்களுக்குத் தெரியவில்லை" என்றனர்.
“அப்படி அவர் என்ன சொன்னார்" என -அது என்ன என்பதைத் தெரிந்திருந்தும் - அல்லாஹ் கேட்டான். அதற்கு அவ்வானவர்கள்.
"லக்கல் ஹம்து யா ரப்பீ! கமா யன்பஃகீ லி ஜலாலி வஜ்ஹிக்க வ அழீமி சுல்த் தானிக்க" என்று அவர் கூறினார் இறைவா!" என்று பதிலளித்தனர்.
அப்போது அல்லாஹ். "என் அடியார் சொன்னதை அப்படியே பதிவு செய்யுங்கள். அவர் என்னைச் சந்திக்கும் போது நானே அவருக்கு உரிய பிரதி பலனை அளிப்பேன்" என்று கூறினான். (இப்னு உமர் (ரலி) - இப்னுமாஜா )
" லில்லாஹ் "
“அல்லாஹ்” என்று அவனுக்குப் பெயர் சொன்னவர் யார்? அவனேதான் தனக்கு பெயர் வைத்துக் கொண்டானா ? அல்லது யாராவது சொன்னார்களா ?
“அல்லாஹ்” என்று இறைவனின் “தாத்”திற்கு முதலில் பெயர் சொன்னவர்கள் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களாவர். அதன் விபரம் பின்வருமாறு.

ஆதம் நபி அவர்களை அல்லாஹ் படைத்து அவர்களில் “ ரூஹ்” உயிரை ஊதிய போது அவர்கள் எழுந்து ஒரு காலின் முழங்காலை – முட்டுக்காலை தரையில் குத்தியவர்களாக ஒரு காலில் நின்றார்கள்.
அவ்வேளை அவர்களுக்கு ஹக்கு தஆலாவின் வலுப்பமிகு காட்சியொன்று கிடைத்தது. அந்தக் காட்சிக்கு என்ன பெயர் வைக்க வேண்டுமென்று அல்லாஹ் விரும்பினானோ அந்தப் பெயரை நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் நாவின் மூலம் வெளியாக்கினான். அந்த நாவு " அல்லாஹ்" என்று மொழிந்தது. அவர்கள்தான் இறைவனின் “தாத்”திற்கு அல்லாஹ் என்று பெயர் சொன்னார்கள்.
அல்லாஹ்வின் அறிவில் அவன் “அஸ்மாஉல் ஹுஸ்னா” அழகிய திருநாமங்கள் கொண்டு தனக்கு பெயர் வைக்க வேண்டுமென்று விரும்பி நபிமாரின் நாவுகளின் மூலம் அப்பெயர்களை வெளியாக்கினான்.
அல்லாஹ்வின் திருநாமங்கள் தொடர்பாக குத்புல் வாஸிலீன் அப்துல் அஸீஸ் அத்தப்பாஙீ றழியல்லாஹு அன்ஹு அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்.
நபிமார்களிற் பலர் இறைவனுக்கு பெயர் சொல்லியுள்ளார். அவர்கள் கற்பனை செய்து அப்பெயர்கள் சொல்லவில்லை. அவர்களுக்கு ஆன்மீக அடிப்படையில் கிடைத்த “முஷாஹதா” காட்சிகளைப் பொறுத்து அவற்றுக் கேற்ப பெயர்கள் சொன்னார்கள்.
அவர்களில் ஒருவருக்கு ஒரு பொருள் – கருத்து காட்சியாகக் கிடைக்குமாயின் அந்தப் பொருளுக்குப் பொருத்தமான பெயரைச் சொன்னார்கள். அவர்களின் காட்சிக் கேற்றவாறே கருத்துக்கள் வெளியாகின. அதற்கேற்றவாறே பெயர்களும் வைத்தார்கள். பொதுவாக அவனின் திருநாமங்கள் யாவும் அவர்களுக்கு கிடைத்த காட்சியடிப்படையில் வைக்கப்பட்டவையேயாகும்
இறைவனுக்கு عَلِيْمٌ ، قَوِيٌّ ، عَظِيْمٌ ، مَنَّانٌ)) அலீமுன், கவிய்யுன், அளீமுன், மன்னானுன் என்று முதலில் பெயர் வைத்தவர்கள் நபீ இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்களேயாவர். இவ்வாறுதான் ஏனைய நபிமார்களும் பெயர்கள் வைத்தார்கள். எனினும் அக்காலங்களில் வாழ்ந்த நபிமார்கள் தமது மொழியிலேயே பெயர்கள் வைத்தார்கள். எனினும் திருக்குர்ஆனின் சிறப்பு அவற்றை அறபு மொழியில் ஆக்கியுள்ளதாகும். முன் வாழ்ந்த நபிமாரின் மொழிகளிலல்ல.
(நூல் கிதாபு அல் இப்ரீஸ் பக்கம் 257 )

**அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் 5**
**(விஞ்ஞானத் தஃப்ஸீர் )**
**( றப்புல் ஆலமீன் )**




"றப்புல் ஆலமீன்" என்னும் தொடரில் "றப்" என்னும் இரு எழுத்துக்களால் அமைந்து, இறைவனின் இணையற்ற காவல் முறையைக் காட்டும் இச்சொல்லை உலகத்தில் எம்மொழிகளிலும் உரிய முறையில் மொழி பெயர்க்க இயலாது என்பது முற்றிலும் உண்மையாகும்.
"ஒவ்வொன்றையும் ஒழுங்குபடுத்தி ஒரு நிலையிலிருந்து
இன்னொரு நிலைக்கு உயர்வதற்குத் துணைபுரிவதுடன், நுட்பமான தொடக்கத்திலிருந்து முழுமையான நிறைவு அடைவது வரையில் அதற்கு உதவிபுரிதல்" - என்பதாக "றப்" என்னும் இச்சின்னஞ்சிறு சொல்லுக்குப் பொருள் விரிப்பார்கள்
"அற்ப ஜல மக்கினி யால் அழியாமற் காவல் செய்து, கற்பமதில் வைத்துருவாய்க் கிளர்ந்ததற் பின்னரும் மெய்ப்புடனே தாரணியிலாக்கி" நம்மைக் காவல் செய்து வருகின்ற சிறப்பை இச்சொல் சுட்டுகின்றது.
ரப்பு என்ற அல்லாஹ்வுடைய ருபூபிய்யத்தை புகழ்கிறோம். ஏனெனில் ரப்பு என்ற அந்தப் பண்புதான் நம்மை எதுவும் இல்லாத இல்லாமையிலிருந்து உருவாக்கியது. மேலும் இல்லாமையிலிருந்து உருவாக காரணமாகவும் ஏற்பாடாகவும் ஆக்கியது ரப்பு என்னும் சிஃபத்தாகும்.
விளக்கம் என்னவென்றால், நாம் உருவகம் பெறுவதற்கு முன் எதுவும் இல்லாததாக இருந்தோம். எந்த பொருளாகவோ உருவமாகவோ எதுவாகவும் நாம் இல்லை. அந்த இல்லாமையிலிருந்து தான் நாம் ஒரு படைக்கப்பட்டோம்.
اَوَلَا يَذْكُرُ الْاِنْسَانُ اَنَّا خَلَقْنٰهُ مِنْ قَبْلُ وَلَمْ يَكُ شَيْـــًٔـــا
இதற்கு முன்னர் யாதொரு பொருளாகவும் இல்லாதிருந்த அவனை நாமே மனிதனாக படைத்தோம் என்பதை அவன் கவனிக்க வேண்டாமா? (குர்ஆன் : 19:67)

நம்மை மனிதனாக படைக்க தகுந்த ஏற்பாடுகள் அவனிடமே இருந்தன. அவன் விரும்பியப்படியே செய்துமுடித்து நம்மை மனிதனாக படைத்து வாழ வழி ஏற்படுத்தி குறிப்பிட்ட தவணை வரை உயிருடன் உலவவிட்ட அந்த அல்லாஹ் மேற்கண்ட வேலைகளை செய்யும்போது ரப்பு என்னும் ருபூபிய்யத்தின் மூலம் அனைத்தையும் செய்தான்.
சுருக்கமாகச் சொன்னால் தாயின் கருவில் உருவாவதற்கு முன்பு அல்லாஹ் நமக்கு ரப்பாக இருந்தான். பூமிக்கு வந்து நாம் பிறந்த பின் அல்லாஹ்வாகவும், ரப்பாகவும் இருக்கிறான். அதாவது இலாஹிய்யத்தும்,ருபூபிய்யத்தும் சேர்ந்த பண்பில் இருக்கிறான்.

மனிதனின் வணக்க வழிபாடுகள் இந்த பூமியில் மட்டுமே உண்டு. கப்ரிலோ மறுமையிலோ அல்லது முந்தைய இல்லாமையிலோ வணக்கம் என்பது இல்லை. எனவே வணக்கம் என்று வரும்போது அதற்கு தகுதியுடைய இலாஹிய்யத் முற்படுத்தப்பட்டுள்ளது.

ருபூபிய்யத் என்ற பண்பு வணங்கப்பட்டாலும், வணங்கப்படாவிட்டாலும் அதன் தன்மைக்கேற்ப எல்லோருக்கும் எல்லாமும் வழங்கும். எனவே இலாஹ் எனும் வணக்கத்திற்குரியவன் என்ற தன்மையை முற்படுத்தி அல்லாஹ் என்று பொதுவான தன்மையில் ரப்பை புகழ நாடுகிறோம் என்பதே விளக்கமாகும்.

فَاِنَّهُمْ عَدُوٌّ لِّىْۤ اِلَّا رَبَّ الْعٰلَمِيْنَۙ

“நிச்சயமாக இவை ( சிலைகள்) எனக்கு விரோதிகளே - அகிலங்களின் இறைவனைத் தவிர (அவனே காப்பவன்).”

الَّذِىْ خَلَقَنِىْ فَهُوَ يَهْدِيْنِۙ

“அவனே என்னைப் படைத்தான்; பின்னும், அவனே எனக்கு நேர்வழி காண்பிக்கிறான்.

وَ الَّذِىْ هُوَ يُطْعِمُنِىْ وَيَسْقِيْنِۙ

“அவனே எனக்கு உணவளிக்கின்றான்; அவனே எனக்குக் குடிப்பாட்டுகிறான்.”

وَاِذَا مَرِضْتُ فَهُوَ يَشْفِيْنِ ۙ

“நான் நோயுற்ற காலத்தில், அவனே என்னைக் குணப்படுத்துகிறான்.

وَالَّذِىْ يُمِيْتُنِىْ ثُمَّ يُحْيِيْنِۙ

“மேலும் அவனே என்னை மரணிக்கச் செய்கிறான்; பிறகு அவனே என்னை உயிர்ப்பிப்பான்.”

وَالَّذِىْۤ اَطْمَعُ اَنْ يَّغْفِرَ لِىْ خَطِيْٓـــَٔتِىْ يَوْمَ الدِّيْنِ

“நியாயத் தீர்ப்பு நாளன்று, எனக்காக என் குற்றங்களை மன்னிப்பவன் அவனே என்று நான் ஆதரவு வைக்கின்றேன்.

(குர்ஆன் : 26: 77 - 82)

அல்லாஹ் தன்னை அர்-ரப் – அதிபதி, உரிமையாளன் – என குர்’ஆனில் 900 இடங்களில் குறிப்பிடுகிறான். ' ரப் ' என்ற சொல்லின் மூல எழுத்துக்கள், மூன்று கருத்துக்களைக் குறிக்கும்.

ரா-பா-பா.

முதல் முக்கியமான கருத்து - அதிபதியாக, உரிமையாளனாக, எசமானாக இருப்பது.

இரண்டாவது கருத்து - பார்த்துக் கொள்ளுதல், உணவளித்து, ஊட்டம் கொடுத்து பரிபாலித்தல்.

மூன்றாவது கருத்து - வளர்த்தல்.

அதிபதி, உரிமையாளன், படைப்பாளன், வளர்ப்பவன்

இந்த மூல எழுத்துக்கள் 980 இடங்களில் நான்கு வருவித்த வடிவங்களில் இடம் பெறுகின்றன.

உதாரணம், ரப்பீ (2:26 என்னுடைய ரப்),

அல் ரப்பானியூன (5:63 குருமார்கள்)

ரிப்பியூன (3:146 மார்க்க அறிஞர்கள்)..

அர்-ரப் மட்டும் தான் படைப்புகள் அனைத்திற்கும் உணவளித்து, முழுமையான முறையில் உண்மையிலேயே கவனித்துக் கொள்பவன். அவன் தான் நம்மைப் படைத்து, எல்லா உயிரினங்களையும் படைத்து, மிகச் சிறிய பருவத்திலிருந்து, மிகப் பெரிய நிலை வரை பரிபாலித்து, வளர்த்து, முழுமையாக, நம் காரியங்களைச் சீர் செய்பவன்!

மொழிரீதியாக, ‘ரப்’ என்ற சொல் உரிமையாளர் (மாலிக்), எஜமானன் (அஸ்ஸயீத்), அரவணைத்து, பராமரித்து, தாங்கி நிற்பவன் (அல் கைய்யூம்), வாழ்வாதாரம் வழங்குபவன் (அர் ரஸாக்) என்ற கருத்துக்களுக்குப் பயன்படுத்தப்படுகிறது. [இப்னு மந்தூரின் லிஸான் அல் அரப்]

தவ்ஹீத் அர்ருபூபிய்யா (படைக்கும் விஷயத்தில் அல்லாஹ்வை ஒருமைப்படுத்துவது)

இதன் பொருள், அல்லாஹ் ஏகனும், தன்னுடைய செயல்களில் தனித்தவனும் ஆகும். உதாரணங்கள், படைத்தல், காரியங்களைக் கட்டுப்படுத்துதல், வாழ்வாதாரம் வழங்குதல், வாழ்வையும், மரணத்தையும் கொடுத்தல், மழையை வர்ஷித்தல்.

அல்லாஹ் அஸ்ஸவஜல் செய்யக் கூடிய விஷயங்களான, வாழ்வாதாரம் வழங்குதல், தாங்கி நிற்றல், ஊட்டம் கொடுத்தல் போன்றவற்றை வேறு யாரும் செய்ய முடியாது என்று மிக உறுதியாக நம்பப்படுகிறது.

உதாரணமாக, நபி (ஸல்) அவர்களுடன் இருந்த முஷ்ரிகீன்கள் இவ்வகையான தவ்ஹீதை மறுக்கவில்லை. அதை பொதுவாக ஒப்புக் கொண்டார்கள்.
அல்லாஹ், அர்ரப் கூறுகிறான்: (நபியே!) நீர்அவர்களிடம்: "வானங்களையும், பூமியையும் படைத்தவன் யார்?" என்றுகேட்டால், "யாவரையும்மிகைத்தவனும், எல்லாவற்றையும் அறிந்தோனுமாகிய அவனே அவற்றைபடைத்தான்"என்று நிச்சயமாக அவர்கள் கூறுவார்கள். [அல் குர்'ஆன் 43:9]
இருப்பினும், அவர்கள் தவ்ஹீத் அல் உளூஹியா என்ற ('வணக்க விஷயத்தில் அல்லாஹ்வை ஒருமைப்படுத்துவது) வகையை ஏற்றுக்கொள்ளவில்லை. அதனால், சிலைகளை வணங்கினர்.

ஒருவர் உண்மையான முஸ்லிமாக இருக்க, அல்லாஹ்வை படைப்புத் தன்மையில் மட்டும் ஒருமைப் படுத்தினால் போதாது; அதில் மறைந்திருப்பது – வணக்க விஷயத்தில் அல்லாஹ்வை ஒருமைப் படுத்துவது என்பதிலும் நம்பிக்கை கொண்டு, வணக்கங்களை அல்லாஹ்வுக்கு மட்டுமே செய்ய வேண்டும்!
இத்தகைய "றுபூபிய்யத்" வாய்க்கப் பெற்றவனே, நம்
நாட்டங்களை நிறைவேற்றும் ஆற்றல் படைத்தவன். ஆகவேதான் திருமறையின் துஆக்களெல்லாம் "றப்பீ", "றப்பனா" என்னும் விளிகளைப் பெற்று விளங்குகின்றன.
தொழுகையின் றுகூவிலும், ஸுஜூதிலும் மொழியப்படும் தொடர்களுள் "றப்பியல் அளீம்"என்றும் "றப்பியல் அஃலா" என்றும் இச்சொல் இடம் பெற்றிருக்கக் காண்கின்றோம்.
தொழுகையில் " றப்பியல்" என்கிற வார்த்தையைப் பயன்படுத்தும் போது, ஒன்று ருக்ஹூ (குனிகிறோம்) செய்றோம், அடுத்து சுஜுத் (தலை பூமியில் வைத்து வணங்குதல்)
அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உங்கள் சுஜூதுகளை அதிகப்படுத்தி கொள்ளுங்கள் என்று சொன்னார்கள்.
சுஜூது என்பது இறைவனுக்கு மட்டுமே தலை வணங்கும் தொழுகையின் ஒரு பகுதி.சுஜூதை அதிகப்படுத்த அதிகமாக தொழவேண்டும் என்பதே பொருள்.
' றப் ' என்றாலே அவனுக்கு தலை வணங்கு என்று நமது தொழுகை நமக்குச் சுட்டிக் காட்டுவதன் மூலம் சிறப்பு கவனத்தைப் பெறுகிறது .
அடுத்தப் பதிவு ஆலமீன்

**அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் 6**
**(விஞ்ஞானத் தஃப்ஸீர் )**
**(ஆலமீன் ) - ரப்புல் ஆலமீன்**

அபூஇஸ்ஹாக் அஸ்ஸஜ்ஜாஜ் (கி.பி.923) இவர்கள் அரபு மொழியியல் மற்றும் இலக்கண அறிஞராவார்.பஃக்தாதைச் சேர்ந்த அவர் 'மஆனில் குர்ஆன்' எனும் தமது நூலில் குர்ஆனின் ஆலமீன் என்ற வார்த்தைக்கு பொருள்களை விவரித்துள்ளார்.
இம்மையிலும் மறுமையிலும் இறைவன் படைக்கின்ற அனைத்துமே 'ஆலம்' என்பதில் அடங்கும். இதுவே சரியான கருத்தாகும் என்கிறார் விரிவுரையாளர் குர்துபீ, ஏனெனில், இதுதான் அனைத்துலகத்திற்கும் பொருந்துகிறது.
அல்லாஹ் கூறுகின்றான்: "அகிலத்தாரின் இறைவன் யார் ?" என்று ஃபிர்அவ்ன் கேட்டான். அதற்கு மூசா 'வானங்களுக்கும் பூமிக்கும் அவற்றுக்கிடையே உள்ளவற்றுக்கும் இறைவனே அவன்" என்று பதிலளித்தார். (குர்ஆன் 26:23,24)
'ஆலம்' என்பது 'அலாமத்' அடை யாளம் எனும் சொல்லில் இருந்து பிறந்ததாகும். அகிலமானது, அதைப் படைத்தவன் ஒருவன் இருக்கின்றான் என்பதற்கும் அவன் ஏகன் என்பதற்கும் அடையாளமாக இருப்பதால் அதற்கு இப்பெயர் வந்தது.

ஆலமீன் உலகங்கள் பற்றி ஆய்வு செய்யும்போது சில விசித்திரமான விளைவுகள் உங்களுக்குள்ளே ஏற்படுகிறது . நிஜமாலும் விசித்திரமான விளைவுகள் உங்களுக்குள்ளே ஏற்படுகிறது .
நாம் இறந்தால் உடல் மண்ணுக்குப் போகிறது.
ஆன்மா எங்கே செல்கிறது? அதிநவீன அறிவியல் ஆய்வு
இந்தக் கோட்பாட்டைத் தூக்கிப் பிடிக்கும் குவாண்டம் விஞ்ஞானிகள் இணை உலகங்கள் நம்மைச் சுற்றியிருப்பதாகக் கூறுகிறார்கள். அதாவது நம் உலகத்தின் ஜெராக்ஸ் காபி.
இந்தப் பதிவு பெரியதாக இருக்கிறதே படிக்கலாமா? வேண்டாமா?
இந்தக் கட்டுரையைத் தொடங்குவதற்கு முன் உங்களுக்கு இப்படியான சந்தேகம் எழுந்திருக்கலாம். உங்களைப் பொறுத்தவரை படிக்கலாமென்று முடிவுசெய்து தொடங்கிவிட்டீர்கள். முதல் முடிவைத் தேர்வு செய்துவிட்டதால் இரண்டாவது முடிவு நிகழவில்லையென்று நீங்கள் நினைக்கலாம். ஆனால், அதுவும் நிகழ்ந்துவிட்டது !
ஆம், இதைப் படிக்கலாமென்று முடிவெடுத்துத் தொடங்கிய மறுகணமே படிக்கவேண்டாமென்ற உங்கள் இரண்டாவது முடிவும் நிகழ்ந்திருக்கும். ஆனால் அது புதிதாகத் தோன்றிய வேறொரு பிரபஞ்சத்தில்.
ஆம். ஒவ்வொரு விஷயத்திலும் உங்களுக்குக் குறைந்தது இருவகையான எண்ணங்கள் தோன்றும். அதில் ஏதாவது ஒன்றைத்தான் தேர்ந்தெடுப்பீர்கள். அதைமட்டுமே செய்வீர்கள். ஆனால், உங்களுக்குத் தோன்றிய இரண்டாவது எண்ணத்தை நிகழ்த்தவும் அதன் விளைவுகளை அனுபவிக்கவும் செய்வீர்கள், வேறொரு பிரபஞ்சத்தில்.

பிரபஞ்சம் ஒன்றல்ல. ஒவ்வொரு முறை நாம் சிந்திக்கும்போதும், புதியதொரு பிரபஞ்சத்தை உருவாகிக்கொண்டு தானிருக்கிறது. இதைத்தான் பல்லண்டக் (Multi universe)கோட்பாடு என்கிறார்கள் குவாண்டம் இயற்பியல் விஞ்ஞானிகள்.
அறிவியல் புனைகதை எழுத்தாளரான ஹெச்.ஜி. வெல்ஸ் என்பவர்தான் முதலில் இந்தக் கருத்தை முன்வைத்தார்; 1895-ல் அவர் எழுதிய ``தி டோர் இன் தி வால் (The Door in the Wall)" என்ற நாவலில். அது வெளியாகி 62 ஆண்டுகள் கழித்து ஹூக் எவெரெட் (Hugh Everett) என்பவர் தனது ஆய்வுக் கட்டுரையில் இதே கோட்பாட்டை முன்வைத்தார்.
" ஒவ்வொரு கணத்தின்போதும் ஒரு புதிய பிரபஞ்சம் உருவாகிக் கொண்டிருக்கிறது என்பதுதான் அவரது கட்டுரை குறிப்பிட்ட விளக்கம். அதாவது மேலே குறிப்பிட்டது போல. நீங்கள் இந்தக் கட்டுரையைப் படிக்கலாமா என்ற சிந்தனையில் ஊசலாடியபோது இரண்டு வகையான சிந்தனைகளையும் நிகழ வைக்கும் இருவேறு பிரபஞ்சங்களாக நமது பிரபஞ்சம் பிரிந்திருக்கும்.
அதற்கடுத்த கணமே அந்தப் புதிய பிரபஞ்சமும் தன் பங்குக்கு அதிலிருந்து பல்வேறு பிரபஞ்சங்களைத் தோற்றுவிக்கத் தொடங்கும். அப்படிப் பிரியும் பிரபஞ்சங்களில் பலவற்றில் உங்கள் பிரதி இருக்கலாம், சிலவற்றில் இல்லாமலும் போகலாம்.
இந்தத் தோற்றங்கள் நடைபெறுவதற்குத் தூண்டுதலாக இருப்பது நமது செயல்களே. நாம் ஒரே செயலுக்குப் பல்வேறு எண்ணங்களால் சிந்தனைகளைச் செய்யும்போது அந்த ஒவ்வொரு சிந்தனையையும் நிகழ வைப்பதற்கான பிரபஞ்சங்கள் தோன்றும்.
உதாரணமாக ஒரு செயலைச் செய்வதற்கு முன் அதுகுறித்து நீங்கள் எட்டு முடிவுகளைச் சிந்தித்து இறுதியில் ஒரு முடிவைத் தீர்மானித்தால், மீதி ஏழு முடிவுகளுக்காக ஏழு புதிய பிரபஞ்சங்கள் தோன்றும். ஆக அந்த எட்டுச் சிந்தனைகளுக்கான விளைவுகளையும் நீங்கள் அனுபவிப்பீர்கள்.

நம் வாழ்க்கையை தீர்மானிப்பது நம் செயல்களை விட நம் எண்ணங்கள்தான் என்பதாக ஓர் அறிஞன் சொன்னான்:
“எண்ணங்களைப் பற்றி கவனமாக இருங்கள்.அவைகள் வார்த்தைகளாக மாறுகின்றன.
வார்த்தைகளில் கவனமாக இருங்கள்.அவை தான் செயல்களாக மாறுகின்றன.
செயல்களில்கவனமாக இருங்கள்.அவை தான் பழக்கமாக மாறுகின்றன.

பழக்கங்களில் கவனமாக இருங்கள். அவை தான் ஒழுக்கமாக மாறுகின்றன.
ஒழுக்கத்தில் கவனமாக இருங்கள். அவை தான் உங்கள் வாழ்க்கையை உருவாக்குகின்றன.
இவ்வுலக வாழ்க்கையில் கவனமாக இருங்கள். அவை தான் மறுமை வாழ்வை பெற்றுத் தருகிறது "
ஹூக் தனது ஆய்வுக்கட்டுரையை முன் வைத்த பிறகு 1980-ல் ரஷ்யாவைச் சேர்ந்த விஞ்ஞானி ஆண்ட்ரே லிண்டே என்பவரும் இதை உறுதிப்படுத்தித் தனது கோட்பாட்டை வெளியிட்டார்.
"விண்வெளி பல மண்டலங்களைக் கொண்டுள்ளது. அவையனைத்தும் தொடர்ச்சியாக மேலும் பல மண்டலங்களை உற்பத்தி செய்துகொண்டேயிருக்கிறது. அப்படி உற்பத்தியான மண்டலங்கள் அவற்றின் பங்குக்கு முன்பைவிட அதிகமான மண்டலங்களை உற்பத்தி செய்கிறது.
இவை குறிப்பிட்ட இடைவெளியோடு அருகருகே இருக்கின்றன. ஒன்றுக்கொன்று மற்றதன் இருப்பை அறிந்திருப்பதில்லை அவ்வளவுதான். பெரும்பாலும் மண்டலங்கள் கிட்டத்தட்ட ஒரே மாதிரியான அமைப்பைக் கொண்டவையாக இருக்கலாம். அல்லது மாறுபட்ட அமைப்பைக் கொண்டதாக இருக்கலாம். அதஅது அவரது எண்ணங்களைப் பொருத்தது.
இதைத்தான் திருக்குர்ஆனில் இறைவன் :
"(எவருடைய உதவியுமின்றி) நம்முடைய சக்தியைக் கொண்டே வானத்தை அமைத்தோம். நிச்சயமாக நாம் (அதனை அவர்களின் அறிவிற்கெல்லாம் எட்டாதவாறு) மிக்க விசால மாக்கியும் வைத்திருக்கின்றோம்"
(குர்ஆன் : 51:47)

இப்படித் தோன்றிக்கொண்டேயிருக்கும் பல லட்சக்கணக்கான பிரபஞ்சங்களில் நமது பிம்பங்களும் ஆங்காங்கு நமது எண்ணங்களின் முடிவுகளின் விளைவாகத் தோன்றிக் கொண்டேயிருக்கிறது.
இறந்துவிட்டால் அவ்வளவு தானென்று நாம் நினைக்கிறோம். ஒருவேளை நமது உடல் மண்ணில் புதைத்தப் பின் நமது ஆன்மா நம் எண்ணத்தால் உருவாக்கிய வேறு பிரபஞ்சத்திலிருக்கும் நமது பிம்பத்தைத் தேடிச் செல்லலாம்.
2009-ம் ஆண்டு குவாண்டம் இயற்பியல் விஞ்ஞானியான ராபர்ட் லான்ஸா (Robert Lanza) எழுதிய ஒரு புத்தகம் சமீபத்தில் இணையத்தில் வைரலாகி வருகிறது.
"பயோசென்ட்ரிஸம்: வாழ்வும் ஆன்மாவும் பிரபஞ்சத்தைப் புரிந்துகொள்வதற்கான மூலக்கூறுகள் (Biocentrism: How Life and Consciousness are the keys to understanding the nature of the Universe)" என்ற அவரது புத்தகத்தில் பேசப்பட்ட விஷயமே அதற்குக் காரணம்.

உயிரை மையமாகக் கொண்டு மானிட மூலத்தைத் தேடுவதையே பயோசென்ட்ரிஸம் என்பார்கள். குவாண்டம் விசையியல் (Quantum mechanics), இயற்பியல், வான் இயற்பியல் (Astro Physics) போன்ற துறைகளில் காட்டிய ஆர்வம் இறுதியாக அவரை பயோசென்ட்ரிஸத்தில் கொண்டு சேர்த்துள்ளது.
சொல்லப்போனால், இந்தத் துறைகள் கூட்டாக இணைந்ததில் உருவானதுதான் இந்தப் புதிய கோட்பாடே.
வாழ்வும் ஆன்மாவுமே பிரபஞ்சத்தைப் புரிந்துகொள்ள அடிப்படையென்று போதிப்பதே பயோசென்ட்ரிஸம்.
அதைப் பின்பற்றுபவர்களைப் பொறுத்தவரை பொருள்களான பிரபஞ்சத்தை உருவாக்கியது எண்ணங்களான உள்ளுணர்வுகளே காரணம் .
லான்ஸாவைப் பொறுத்தவரை விண்வெளியும் நேரமும் ஏதோ பொருளோ விஷயமோ இல்லை. மாறாக நமது புரிதலுக்கான அளவுகோல்கள். நாம் நம்மோடு அவற்றைக் கொண்டு செல்கிறோம், ஓட்டைச் சுமந்துகொண்டு சுற்றும் ஆமையைப் போல. விண்வெளி, நேரமென்ற ஓடுகளை அகற்றினாலும் நமது இருப்பு இருக்கவே செய்யும்.
வேறு பிரபஞ்சத்தில் வேறு வடிவத்தில்.

லான்ஸா கோட்பாட்டில் ஆன்மாவுக்கு இறப்பே கிடையாது என்கிறார். உடல் அழிந்தபிறகு அது வெறும் நினைவுகளாக இருக்கின்றன. மனிதர்கள் அவர்களை உடலை வைத்தே அடையாளம் கண்டுகொள்வதால்தான் அந்த நினைவுகள் தெரிவதில்லை என்கிறார்.

உடல் அழியும்போதோ அது அழிந்த பிறகோ ஆன்மாவும் அழிந்து விடுகிறதென்று மனிதர்கள் தவறாகப் புரிந்துகொண்டுள்ளனர். உடல்தான் ஆன்மாவை உருவாக்கியதென்றால் உடலோடு அதுவும் அழிந்துவிடும். ஆனால் உடல்தான் அழிகிறது.அந்த அழிவு ஆன்மாவுக்கு இல்லை என்பதை நவீன விஞ்ஞானமும் ஒத்துக் கொண்டுள்ளது.
விண்வெளி நேரம் போன்ற எல்லைகளைக் கடந்தது ஆன்மா. ஒரு உடலிலோ அல்லது அண்டவெளியிலோ, அதனால் எங்கு வேண்டுமானாலும் பிழைத்திருக்க முடியும். பல்லண்டக் கோட்பாடும் உண்மையென்று லான்ஸா நம்புகிறார்.

ஒரு பிரபஞ்சத்துக்கு அருகிலேயே மற்ற பிரபஞ்சங்களும் இருக்கின்றன. ஒரு பிரபஞ்சத்தில் உடல் அழிந்துவிட்டால் மற்றொரு பிரபஞ்சத்தில் அதைப் போலவே இருக்கும் வேறு உடலில் சென்று கலந்துவிடும். அதிலும் இறந்துவிட்டால், வேறொரு பிரபஞ்சத்திலிருக்கும் உடலில் கலந்துவிடும்.
சரீரத்தைக் கொண்டே சொர்க்க இன்பங்களோ.நரக துன்பங்களோ ஏற்படுகிறது.எந்த ஒரு ஆத்மாவையும் உடலைக் கொண்டே அல்லாஹ் தண்டிக்கிறான் காரணம் அந்த உடலைக் கொண்டே அந்த ஆத்மா கெட்ட சுகங்களான பொன்னாசை, பெண்ணாசை, மண்ணாசை போன்றவற்றில் தவழ்ந்து சீரழிந்தது எனவேதான் அவன் அந்த ஆத்மாவை உடலைக் கொண்டு தண்டிக்கிறான்!
அவன் முதலில் படைக்கிறான். மீண்டும் படைக்கிறான்.(குர்ஆன் 85:13) அவ்வாறில்லை! அவனது விரல் நுனிகளையும் சீராக்க நாம் ஆற்றலுடையவர்கள். (குர்ஆன் 75:4)
அதாவது நாம் இறக்கும்போது வேறு பிரபஞ்சத்தில் வாழும் நமது பிம்பம் கேபிள் சிக்னலை ஈர்ப்பதுபோல் நமது ஆன்மாவை ஈர்த்துக்கொள்ளும். இப்படியாகத் தொடர்ச்சியாக ஒரு பாதையில் அது பயணித்துக் கொண்டேயிருக்கும். அதனால், ஆன்மாவுக்கு இறப்பு என்பதே கிடையாது என்கிறார்.
இறைவிசுவாசியான அடியான் ஒருவன் உலகத் தொடர்புகளைத் துண்டித்துக் கொண்டு மறுமையை எதிர்நோக்கி கொண்டிருக்கையில் (சக்கராத்தின் நேரத்தில்) சூரிய ஒளிக்கு ஒப்பான பிரகாசம் கொண்ட முகத்துடன் வானத்திலிருந்து வானவர்கள் சிலர் அவரிடம் வருவார்கள்.
இவர்கள் தங்களது சுவர்க்கத்துக்கு கபன் துணிகளிலிருந்து ஒரு கபன் துணியையும் சுவர்க்கத்தின் நறுமணத்திலிருந்து நறுமணத்தையும் வைத்து கொண்டு அவருடைய பார்வைக்கு எட்டும் தூரமளவு அமர்ந்திருப்பார்கள்.

அப்பொழுது உயிரை கைப்பற்றும் வானவர் வந்து அவரருகில் அமர்வார். அவரை நோக்கி நல்ல ஆத்மாவே! ஏக இறைவனுடைய மன்னிப்பை நோக்கியும் அவனுடைய திருப்தியை நோக்கியும் இந்த உடலிலிருந்து வெளியேறி விடு என கூறுவார்.
தோல் பையிலிருந்து (அதனை வளைத்தால்) நீர் வழிந்து விழுவது போல அந்த (ஆத்மா உடலிலிருந்து இலகுவாக) வெளியேறிவிடும்.
அந்த உயிரை எடுத்தவுடன் கொஞ்சநேரம் கூட கையில் வைத்து கொள்ளாமல் அந்த கபனில் கொண்டு வந்த நறுமணத்தோடு வைத்து விடுவார்கள். (பின்பு அந்த உயிரை) அல்லாஹ்விடம் கொண்டு செல்வார்கள்) வானவர்கள் இருக்கும் கூட்டத்திற்கு அருகாமையில் அந்த உயிரை கொண்டு போகும் போதெல்லாம் இது யாருடைய நல்ல உயிர் ? என அவ்வானவர்கள் கேட்பார்கள். அதற்கு இவருக்கு சொல்லப்பட்ட நல்ல பெயரைக் கொண்டு இன்னாருடைய மகன் இன்னார் என்று சொல்லப்படும்.
இவருக்காக முதல் வானத்தை திறக்கும் படி அவ்வானவர் கூறுவார். வானம் திறக்கப்படும். இப்படி ஏழு வானம் திறக்கப்படும். அப்போது அல்லாஹ் என் அடியானுடைய செயல்களை நல்லவர்களுடைய ஏடான இல்லியீனிலே பதிவு செய்யுங்கள், அந்த ஆத்மாவை மீண்டும் பூமிக்கு கொண்டு வந்து அவனுடைய கப்ரில் சேருங்கள் என்று கூறுவான்.
( நூல்: அஹ்மத் 17803)

நிராகரிப்பவன் மரண வேளையை நெருங்கிவிட்டால், கருத்த முகத்துடன் சில வானவர்கள் வந்து கண் பார்வை எட்டும் தூரத்தில் அமர்ந்துவிடுவார்கள். அவர்களிடத்தில் ஒரு கம்பளி இருக்கும்.
உயிரைக் கைப்பற்றக்கூடிய மலக்கு வந்து அவனை நோக்கி கெட்ட ஆத்மாவே! அல்லாஹ் கொடுக்க இருக்கும் இழிவை நோக்கியும் அவனுடைய கோபத்தை நோக்கியும் நீ வெளியேறி வா! என்று கூறுவார்.
அப்பொழுது அவ்வுயிர் ஒளிந்து கொள்வதற்காக உடல் முழுவதும் ஓட ஆரம்பித்துவிடும். நனைத்த கம்பளியிலிருந்து முள் கம்பியை பிடுங்கி எடுப்பது போல் அவனுடைய உடலிலிருந்து உயிர் கைப்பற்றப்படும். கொஞ்ச நேரம் கூட (அவ்வானவர்) தன் கையில் வைக்க மாட்டார். உடனே கம்பளிதுணியில் வைத்துவிடுவார். பின்பு அந்த உயிர் முதல் வானத்திற்கு எடுத்துச் செல்லப்படும்.
இவ்வுலகில் வீசும் துர்நாற்றத்தை விட அதிகமாக துர்நாற்றம் அதிலிருந்து வீசும். பின்பு அந்த உயிரை முதல் வானத்திற்கு கொண்டு செல்வார். வானவர்கள் இருக்கும் கூட்டத்திற்கு அருகில் கொண்டு செல்கின்ற போது எவனுடைய கெட்ட உயிர் ? என அங்குள்ள வானவர்கள் கேட்டார்கள். இன்னாருடைய மகன் இன்னார் என்று சொல்லப்படும்.

முதல் வானத்தை திறக்கும் படி அவ்வானவர் கேட்பார். அவனுக்காக வானம் திறக்கப்படாது என்று கூறிவிட்டு பின்வரும் வசனத்தை ஓதிக் காட்டினார்கள்.
நமது வசனங்களைப் பொய்யெனக் கருதி, அதைப் புறக்கணிப்போருக்கு வானத்தின் வாசல்கள் திறக்கப்பட மாட்டாது. ஊசித் துவாரத்தில் ஒட்டகம் நுழையும் வரை அவர்கள் சொர்க்கத்தில் நுழைய மாட்டார்கள். இவ்வாறே குற்றவாளிகளைத் தண்டிப்போம். (குர்ஆன் 7:40)
ஏக இறைவன் உயிரைச் சுமந்து வந்த வானவரைப் பார்த்து அவனுடைய செயல்களை பூமியின் அடிப்பாகத்திலுள்ள ஸிஜ்ஜீன் என்ற இடத்திற்கு எறியப்படும். பிறகு பின்வரும் வசனத்தை ஓதிக்காட்டினார்கள்.
அல்லாஹ்வுக்கு அர்ப்பணித்து, அவனுக்கு இணை கற்பிக்காதோராக (ஆகுங்கள்!) அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பவன் வானத்திலிருந்து விழுந்து பறவைகள் தூக்கிச் சென்றவனைப் போல், அல்லது காற்று தூரமான இடத்தில் கொண்டு போய் வீசிய ஒருவனைப் போல் ஆவான். (குர்ஆன் 22:31)
இவ்வாறு (கெட்டவர்களின் ஏடான) ஸிஜ்ஜீனில் அவனுடைய செயல்கள் பதியப்படும் (நூல் : அஹ்மத் 17803)

இந்தக் பயோசென்ட்ரிஸக் கோட்பாடு பல முரண்பாடுகளைக் கொண்டிருந்தாலும் இதைப் பலரும் முழுமையாக நம்புகிறார்கள். பல்லண்டக் கோட்பாடு உண்மையென்று ஏற்றுக்கொண்ட பல இயற்பியல், வானியல் விஞ்ஞானிகளும் கூட நம்புகிறார்கள்.
அவர்களைப் பொறுத்தவரை இணை உலகங்களின் இருப்பைப் பொய்யாக்கும் எந்த இயல்விதிகளும் இல்லையென்பதே இதை உறுதியாக நம்புவதற்குப் போதுமான காரணம்.
"ஒவ்வொருவரும் தத்தமது எண்ணங்களின்{வழிமுறைப்}படி செயலாற்றுகின்றனர்." {அல்குர்ஆன்:17:84}
நபி{ஸல்}அவர்கள் கூறினார்கள்:
"மறுமை நாளில் ஓர் அடியான் அல்லாஹ்வின் சமூகத்தில் கொண்டு வரப்படுவான். அவனோடு மலை போல் குவிக்கப்பட்ட அவனுடைய நற்செயல்களும் கொண்டு வரப்படும்.
அப்போது அங்கே ஓர் வானவர் "இவரால் பாதிப்புக்குள்ளானவர்கள் எவரும் உண்டோ? வாருங்கள் இவரின் நன்மைகளில் இருந்து அதற்கான ஈட்டை பெற்றுச் செல்லுங்கள் என்று அறிவிப்புச் செய்வார்.
.
அப்போது சிலமனிதர்கள் அங்கே வந்து அவரின் நன்மைகளில் இருந்து எடுத்துச் சென்றிடுவர். இறுதியில் அம்மனிதர் மட்டும் தனியே நின்று கொண்டிருப்பார்.
அப்போது அல்லாஹ் அவரை அழைத்து "ஓ..அடியானே ! உன்னுடைய பொக்கிஷம் ஒன்று என்னிடம் உள்ளது அதை என் படைப்பினங்களில் எவரும் அறிய மாட்டார்.பரிசுத்த என் வானவர்களும் கூட அறியமாட்டார்கள்." என்று சொல்வான்.

அப்போது அந்த அடியான் “அல்லாஹ்வே அது என்ன”? என்று கேட்பான். அதற்கு அல்லாஹ் ”ஓ..அடியானே ! உன்னுடைய தூய்மையான எண்ணங்கள்தான் அது ! நீ ஒவ்வொரு முறை எண்ணும் போதும் அதற்கு நான் எழுபதுமடங்கு நன்மைகளை எழுதினேன்.” என்பான். நூல்:புகாரி, 2449,6534.
எது எப்படியோ ! நீங்கள் வாழும் இந்த பிரபஞ்சத்தில் உங்கள் எண்ணத்தைக் கொண்டுதான் மறுமை உலகில் நீங்கள் நிரந்தரமாக வாழப்போகும் பிரபஞ்சங்கள் உருவாகிறது என்பதை மறந்து விடாதீர்கள் .

**அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் 7**
**(விஞ்ஞானத் தஃப்ஸீர் )**
**( அர்ரஹ்மானிர் ரஹீம் )**

இவ்வுலகில் எல்லா உயிரினங்களுக்கும் நிஃமத்துக்களை அளித்து உதவி செய்பவன் என்பது " அர்ரஹ்மான் " என்பதின் கருத்தாகும்.
மனிதர்கள் செய்த நன்மை தீமை முதலியவற்றை மறுமையில் விசாரித்து, நன்மை செய்த தன் நல்லடியார்களான மூமின்களுக்கு மட்டும் நல்லருள் புரிந்து சொர்க்கத்தை அளிப்பவன் என்பது அர்ரஹீம் என்பதன் கருத்தாகும்
எனவேதான் இறைவன் இம்மைக்கு ரஹ்மானாகவும், மறுமைக்கு ரஹீமாகவும் இருக்கிறான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியிருக்கிறார்கள்.
இறைவன் கூறுகிறான் :
'ஒவ்வொரு நாள் சூரிய உதயத்தின் போதும் சில விஷயங்கள் நடக்காமல் உதயமாகுவதில்லை. வானம் இறைவனை அழைத்து கூறுகிறது.
"எனது இறைவா! எனக்கு அனுமதி கொடு. ஆதமின் மக்கள் மீது என்னில் ஒரு துண்டை உடைத்து வீசுகிறேன். (அவர்கள் அழியட்டும்). ஏனெனில், அவங்கள் உன் நன்மைகளை அனுபவித்து கொள்கிறார்கள். ஆனால், உனக்கு நன்றி செய்வதை விட்டு ஒதுங்கிக் கொள்கின்றனர். (எனவே, அவர்களை நான் அழித்து விடுகிறேன்) " என்று அனுமதி கோருகிறது.
கடலும் அது போன்றே என் இறைவா எனக்கு அனுமதி கொடு ஆதமின் மக்களை நான் மூழ்கடித்து விடுகிறேன் உன் நன்மைகளை அனுபவித்துக் கொண்டு நன்றி செய்வதை விட்டும் ஒதுங்கிக் கொள்கிறார்கள் எனவே அவர்களை மூழ்கடித்து அழுத்தி விடுகிறேன் என்று கூறுகிறது - ஹதீஸ் குத்ஸி
(நபியே) நிச்சயமாக பூமியில் உள்ளவற்றையும், அவனது கட்டளைப்படியே கடலில் செல்லும் கப்பலையும் அல்லாஹ் உங்களுக்கு வசப்படுத்தித் தந்தான் என்பதை நீர் பார்க்கவில்லையா?
தனது கட்டளையின்றி பூமியின் மீது வானம் விழுந்து விடாதவாறு அதனை அவனே தடுத்துக் கொண்டிருக்கிறான். நிச்சயமாக அல்லாஹ் மனிதர்கள் மீது மிகப்பெரும் கருணையாளன், நிகரற்ற அன்புடையவன். (குர்அன் 22:65)

தனது அனுமதியின்றி பூமியின் மீது வானம் விழுந்து விடக்கூடாது என்று வானத்துக்குக் கட்டளையிட்டு இறைவன் தடுத்து வைத்திருக்கிறான். இவ்வாறு தடுத்து வைத்திருப்பது மனிதர்களின் மீதான அளவற்ற கருணையினாலும், நிகரற்ற அன்பினாலுமே என்று விவரித்து இறைமறை வசனங்கள் கூறகின்றன.
இவ்வசனத்தில் அன்பும், கருணையும் சேர்ந்தாற்போல் சொல்லப்பட்டாலும், கருணையைவிட அன்புக்கு ஒருபடி உயர்வுண்டு என்பதை வரும் நபிமொழிகளிலிருந்து விளங்குகிறோம்,
அல்லாஹ் அன்பை நூறாகப் பங்கிட்டான். அதில் தொண்ணூற்று ஒன்பது பங்கைத் தன்னிடம் வைத்துக்கொண்டான். (மீதிமிருக்கும்) ஒன்றையே பூமியில் இறக்கினான். இந்த ஒரு பங்கினால் தான் படைப்பினங்கள் பரஸ்பரம் பாசம் காட்டுகின்றன.

எந்த அளவிற்கென்றால், மிதித்துவிடுவோமோ என்ற அச்சத்தினால் குதிரை தன்னுடைய குட்டியைவிட்டுக் கால்குளம்பைத் தூக்கிக் கொள்கிறது. என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
(அறிவிப்பவர்: அபூ ஹுரைரா (ரலி) நூல்கள்: (புகாரி 6000, முஸ்லிம் 5310, திர்மிதீ, இப்னுமாஜா, அஹ்மத், தாரமீ)
தாயின் கால்களுக்கிடையில் விளையாடும் குட்டியை மிதித்து விடுவோமோ என்கிற உள்ளுணர்வில், உயிரினப் பிராணிகளும் கால்களை உயர்த்திக்கொள்வதும், தன் குஞ்சுகளுக்கு ஆபத்து ஏற்பட்டுவிடுமோ என அன்னியப் பறவைகள் குஞ்சுகளின் அருகில் வந்தால் தாய்ப் பறவை சீறிப் பாய்ந்து போரிடுவதும் அன்பு எனும் பாசத்தினால் ஏற்படும் உள்ளுணர்வாகும்.

இது உயிரினங்களின் உறவினால் ஏற்படும் இயல்பு. அல்லாஹ் இரட்சகனாக இருப்பதால் மனிதர்களிடம் அன்பு செலுத்துவது இறைவனின் நியதி எனலாம்.
தாய்மையின் அன்புக்கு நிகராக எவரையும், எவற்றையும் ஒப்பிட்டுச் சொல்லிட இயலாது. தாயின் அன்பைவிட அடியார்கள் மீது அல்லாஹ் மிகுந்த அன்பு வைத்துள்ளான்:
(ஹவாஸின் குலத்தைச் சேர்ந்த) கைதிகள் சிலர் நபி(ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அவர்களிடையே இருந்த ஒரு பெண்ணின் மார்பில் பால் சுரந்தது. அவள் பாலூட்டுவதற்காக(த் தன் குழந்தையைத் தேடினாள்). குழந்தை கிடைக்கவில்லை )
எனவே கைதிகளில் எந்தக் குழந்தையைக் கண்டாலும், அதை (வாரி) எடுத்து(ப் பாலூட்டினாள். தன் குழந்தை கிடைத்தவுடன் அதை எடுத்து)த் தன் வயிற்றோடு அணைத்துப் பாலூட்டலானாள்.
அப்போது 'எங்களிடம் நபி(ஸல்) அவர்கள், 'இந்தப் பெண் தன் குழந்தையை தீயில் எறிவாளா? சொல்லுங்கள்!' என்றார்கள்.
நாங்கள், 'இல்லை, எந்நிலையிலும் அவளால் எறிய முடியாது' என்று சொன்னோம்.
அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'இந்தக் குழந்தையின் மீது இவளுக்குள்ள அன்பைவிட அல்லாஹ் தன் அடியார்களின் மீது மிகவும் அன்பு வைத்துள்ளான்' என்று கூறினார்கள். (அறிவிப்பவர்: உமர் இப்னு கத்தாப் (ரலி) நூல்கள்: புகாரி 5999 முஸ்லிம் 5315)

இறைவன் பூமியில் இறக்கிய நூறில் ஒரு பங்கு அன்பிற்கே உயிரினங்கள் உறவுகளிடம் இவ்வளவு அன்பு செலுத்துகின்றது என்றால் மீதம் தொண்ணூற்றொன்பது பங்கை தன்னிடம் வைத்திருக்கும் அல்லாஹ்வை நிகரற்ற அன்புடையவன் என்று சொல்லுவதே பொருத்தமாகும்.
கருணை
(நபியே) உம்மை அவர்கள் பொய்ப்பித்தால், ''உங்களுடைய இறைவன் விசாலமான கருணையுடையவன் என்றும், குற்றவாளிகளான கூட்டாத்தாரை விட்டும் அவனது தண்டனை தடுக்கப்பட மாட்டாது'' என்றும் நீர் கூறுவீராக! (குர்ஆன் 6:147)

''இறைவன் விசாலமான கருணையுடையவன்'' என்பதை ''இறைவன் விசாலமான அருளுக்குரியவன்'' என்றும் சொல்லலாம். அல்லாஹ் அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன், மிகப் பெரும் கருணையாளன் என்பதால், குற்றவாளிகளுக்கு அவன் அளிக்கவிருக்கும் தண்டனையில் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்திவிடாது என்பதையும் மேற்கண்ட வசனத்தின் வாயிலாக அறிவிக்கப்படுகின்றது.
ஆகவே, குற்வாளியின் மீது நீதிபதிக்கு அன்பு ஏற்பட்டால் சட்டத்தை வளைப்பான் என்பது பூமியிலுள்ள நீதிபதிகளுக்குப் பொருந்துமேயன்றி, வானத்திலுள்ள தன்னிகரற்ற தனி நீதிபதி இறைவனுக்குப் பொருந்தாது.
...நிச்சயமாக உமது இறைவன் தண்டிப்பதில் தீவிரமானவன். மேலும், நிச்சயமாக அவன் மிக்க மன்னிப்பவனும் நிகரற்ற அன்புடையோனுமாவான். (அல்குர்ஆன் 6:165)

பாவத்தை மன்னிப்பவனும், மன்னிப்புக் கோரலை ஏற்றுக் கொள்பவனும், தண்டிப்பதில் கடுமையானவனும், அருளுக்குரியவனுமாவான். அவனையன்றி வணங்கப்படத் தகுதியானவன் வேறு யாரும் இல்லை! அவனிடமே மீளுதல் உள்ளது. (அல்குர்ஆன் 40:3)

இறைவனின் பண்புகள் அனைத்தும் அளவற்றவையே ஆனாலும் அவனது பண்புகள் அவனுடைய தீர்ப்புக்கு எவ்வித இடையூறாக அமையாது.

மனிதர்களிடையே எவ்வாறு அன்பு ஏற்படுகின்றதோ அதுபோல் மனிதர்கள் மீது கருணை காட்டவேண்டும் என்றும் நபிமொழி வலியுறுத்துகிறது.

''மக்கள் மீது கருணை காட்டாதவருக்கு அல்லாஹ் கருணை காட்டமாட்டான்'' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர்: ஜரீர் இப்னு அப்துல்லாஹ் (ரலி) நூல்கள்: புகாரி 7376, முஸ்லிம் 4638, திர்மிதீ, அஹ்மத்)

நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசிப்பான்... (அல்குர்ஆன் 3:31)

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் 8
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )
## ( மாலிகி யவ்மித்தீன் - (அவனே) மறுமை நாளின் அதிபதி )




ஹஸ்ரத் அலீ (ரலி) அவர்கள் இவ்வாறு சொன்னார்கள்:

'இம்மை உலகத்தையே உண்மையாகக் கொண்டவருக்கு அது உண்மையின் இருப்பிடமாகும். அதனைப் பயன் படுத்தியவர்களுக்கு அது செல்வங்களைத் தருமிடமாகும். அதிலிருந்து கற்றுக் கொள்பவருக்கு அது படிப்பினை தரும் இடமாகும். அது இறைநேசர்களின் வழிபாட்டுத் தலமாகவும் மலக்குகளின் தொழும் இடமாகவும் வஹியின் இறங்கு தளமாகவும் அல்லாஹ்வுடைய நேசர்களின் சந்தையாகவும் இருக்கின்றது."

(நஹ்ஜுல் பலாகா - மொழி 131)

'எவர் வரம்பு மீறி இவ்வுலக வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டாரோ, நிச்சயமாக அவர் ஒதுங்குமிடம் நரகமாகும். மேலும், எவர் தன் இறைவனின் சந்நிதியைப் பயந்து, மனோ இச்சையிலிருந்து தன்னைத் தடுத்துக் கொண்டாரோ, நிச்சயமாக அவர் ஒதுங்குமிடம் சுவனமாகும்." (80: 37-41)

இவ்வுலகமென்பது, முடிவற்ற நிலையான ஒரு வீட்டை அடைவதற்காக மனிதர்கள் கடந்து செல்லும் பாலமாக இருக்கின்றது என்பது எமது நம்பிக்கையாகும். வேறு வார்த்தைகளில் சொல்வதானால் வேறொரு வீட்டிற்காக பயிர் விதைக்கப்படுகின்ற ஒரு விளைநிலமாகும்.

இவ்வுலக வாழ்க்கைப் பிறகு கியாமத் என்னும் மறுமை நாள் ஏற்படவாப் போகிறது ?"

மறுமை நாள் பற்றிய சந்தேகம் கொண்டோரைப் பார்த்து அல்குர்ஆன் கூறுகின்றது, 'உங்களது ஆரம்பம் அல்லாஹ்விடமிருந்தே உருவானது. அவ்வாறிருக்க, மரணித்தவர்களை உயிர்ப்பிக்கும் அவனது மகா வல்லமையில் எவ்வாறு உங்களுக்கு சந்தேகம் எழுகின்றது ?
அவன் தான் ஆரம்பத்தில் உங்களை மண்ணிலிருந்து படைத்தான். பின்னர், உங்களை வேறொரு வாழ்வுக்காக மீட்டுகின்றான்.
'படைப்புகளை முதலாவதாகப் படைத்ததில் நாம் இயலாமலாகி விட்டோமா? அவ்வாறன்று.(இறந்தபின்) மீண்டும் படைப்பது பற்றி இவர்கள் சந்தேகத்தில் இருக்கின்றனர்." குர்ஆன் (50:15)
'மேலும், அவன் தன்னுடைய படைப்பை மறந்து விட்டு ஓர் உதாரணத்தையும் நமக்காகக் கூறுகின்றான்.
'எலும்புகளை, அவை மக்கிப் போன நிலையில் உயிரூட்டுபவன் யார்? என்று அவன் கேட்கிறான். (நபியே!) நீர் கூறும். முதன் முதலில் அதனைப் படைத்தானே, அவனே அதை உயிர்ப்பிப்பான். அவன் ஒவ்வொரு படைப்பைப் பற்றியும் நன்கறிபவன்."
குர்ஆன் (36:78,79)

மறு உலகம் பற்றிய எளிய உதாரணத்துடன் விளக்கப்படுகிறது
மனிதர்களின் இவ்வுலக வாழ்க்கையென்பது, தாயின் வயிற்றுக்குள் மட்டுப்படுத்தப்பட்ட சூழலில் உயிர்வாழும் சிசுவின் வாழ்வைப் போன்றதாகும்.
கற்பத்திலிருக்கும் சிசு, திறமை, சாதுரியம் என எத்தகைய இயல்புடையதாக இருப்பினும் வெளிப்புற உலகிலுள்ள சூரியன், சந்திரன், தென்றல், காற்று, தாவரங்கள், மலைகள். பள்ளத்தாக்குகள், பசுந்தரைகள், கடலலைகள் போன்ற எதனையும் உணர்ந்து கொள்ளமாட்டாது.
அதுபோலவே, மனிதனின் இவ்வுலக வாழ்க்கையில் மறுமை பற்றிய உண்மைகளை பூரணமாக அறிந்து கொள்வதென்பதும் சாத்தியமற்றதே.
மனிதர்களாகிய நம்மைப் பொறுத்த வரையில் கியாமத் வாழ்வு என்பது கற்பத்திலுள்ள சிசுவுக்கு தெரியாத வெளியுலக வாழ்வு போன்றதாகும்.
அதுபோல மறுமை உலகம் என்பதும் ஓர் ஆச்சரியமான மறு உலகம்.மரணத்தின் பின்னுள்ள மீளவுயிர்ப்பித்தல், விசாரணை, பட்டோலை,தீர்ப்பு, சுவனம், நரகம் முதலானவற்றை உள்ளடக்கிய மறுமை வாழ்வானது வரையறுக்கப்பட்ட இவ்வுலகில் நாம் புரிந்து கொள்ள முடிந்ததை விட மிக உயர்ந்ததும் சிறப்பானதும் ஆகும் என நாம் நம்புகின்றோம்.
'எந்தவொரு ஆத்மாவும் அவர்களுக்காக மறைத்து வைக்கப்பட்டிருக்கும் கண்களின் குளிர்ச்சியை அறிய மாட்டாது.' குர்ஆன் (32: 17)
நபிகள் நாயகம் ﷺ அவர்களின் பிரபல்யமான ஹதீஸ் ஒன்றிலே வந்திருப்பதாவது:
'எனது நல்லடியார்களுக்கு எந்தக் கண்ணும் கண்டிராத, எந்தச் செவியும் கேட்டிராத, மனித எண்ணத்தில் என்றுமே தோன்றாத அருட் கொடைகளை ஏற்பாடு செய்து வைத்துள்ளேன் என்று அல்லாஹ் கூறுகின்றான.;"
புஹாரி, முஸ்லிம் போன்ற ஹதீஸ் கலை அறிஞர்களும் தப்ரீஸீ, ஆலூஸீ, குர்துபி போன்ற பிரபலமான தஃப்ஸீர் கலை அறிஞர்களும் தங்களது நூற்களில் இதனைக் குறிப்பிட்டுள்ளார்கள்.
மறுமை இன்றி இம்மை வாழ்வில் அர்த்தமில்லை
" மஆத் " என்பது மறுமை நாள் பற்றிய நம்பிக்கையைக் குறிக்கின்றது. உலகில் வாழ்ந்த மனிதர்கள் அனைவரும் மறுமை நாளில் மீள உயிர்ப்பித்து எழுப்பப்படுவார்களென்றும், அவர்களது செயல்களனைத்தும் விசாரிக்கப்பட்டு, நல்லடியார் கள் சுவனத்திற்கும், பாவிகள் நரகிற்கும் அனுப்பப் படுவர் என்றும் நாம் நம்பிக்கை கொள்கிறோம்.
மறுமையில் ஆத்மா மாத்திரம் விசாரணைக்காகச் செல்வதில்லை. உடலும் உயிரும் இணைந்து சென்றே புதியதொரு வாழ்வை ஆரம்பிக்கின்றன.

ஏனெனில், இவ்வுலகில் வாழ்ந்த காலங்களில் உடலும், உயிரும் சேர்ந்தே ஒரு விடயத்தைச் செய்தன. ஆதலால் அங்கு கிடைக்கும் நன்மை-தீமைகளும் இரண்டையுமே சென்றடைய வேண்டியது அவசியமாகும்.
குர்ஆனில் மஆதைத் தொடர்பு படுத்தி வந்துள்ள அநேகமான வசனங்களில், உடலும் இணைந்த மஆத் பற்றிய கருத்துகளே பொதிந்திருக்கின்றன. இறந்து போன எலும்புகளை எவ்வாறு புதியதொரு வாழ்வுக்குத் திருப்ப முடியுமென எதிரிகள் ஆச்சரியத்துடனும், சந்தேகத்துடனும் வினாவெழுப்பிக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு அல்குர்ஆன் இவ்வாறு பதிலளித்தது:
'(நபியே!) நீர் சொல்லும், முதலில் அதைப் படைத்தவன் தான் அதனை மீண்டும் உயிர்ப்பிப்பான்." (36: 79)
'மனிதன், அவனது உக்கிப் போன எலும்புகளை நாம் ஒன்று சேர்க்கமாட்டோம் என்று எண்ணுகின்றானா? ஆம், நாம் அவனது விரல்களின் நுனிகளைக் கூட சீர்படுத்த சக்தியுடையோராய் இருக்கின்றோம்." (75: 3,4)
இவ்வசனங்களும், இவை போன்ற வேறு பல வசனங்களும் உடலின் 'மஆதை'யே குறிப்பிட்டுச் சொல்லுகின்றன.
'நீங்கள் உங்களது கப்றுகளிலிருந்து எழுப்பப்படுவீர்கள்" என்று கூறும் அல்குர்ஆன் வசனங்களும் கூட இதனையே குறிப்பிடுகின்றன. குர்ஆன் (36:51,52 54:07 70:43)
'அல்லாஹ், அவனைத் தவிர வேறு இறைவனில்லை. அவன், நிச்சயமாக மறுமை நாளில் உங்களை ஒன்று சேர்ப்பான். அதில் சந்தேகமில்லை." குர்ஆன் ( 4: 87 )

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 9
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )
## ( உன்னையே வணங்குகிறோம். உன்னிடமே உதவி தேடுகிறோம் )

சகல வணக்கத்துக்கும் பாத்தியதை வாய்ந்தவன் இறைவன் ஒருவனே. ஆதலால், அவனை நோக்கி “இறைவா! உன்னைத்தான் வணங்குகிறோம். உன்னைத் தவிர வேறு யாரும் வணக்கத்திற்கு உரியவன் இல்லை" என்று உறுதி கூறுவதே இதன் தாத்பரியமாகும்.
ஹளரத் ஜிப்ரயீல் ( அலை) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நோக்கி, "இய்யாக நஃபுது உன்னையே ஆதரவு வைக்கிறோம் என்று கூறுவீராக! "என்று சொல்லி இருப்பதாக ஹளரத் இப்னு அப்பாஸ் ( ரலி) அவர்களால் அறிவிக்கப்பட்டிருக்கிறது.
மேலும் தொழுகையில் சூரத்துல் ஃபாத்திஹாவை ஓதுகிறவர் தனிமையாக இருப்பின் "உன்னைத்தான் வணங்குகிறேன்" என்று ஒருமையாகச் சொல்லாமல், "உன்னைத்தான் வணங்குகிறோம்" என்று பன்மையாகச் சொல்லப்பட்டிருப்பதின் தாத்பரியம் என்ன?
தொழுது கொண்டிருப்பவர் ஒவ்வொருவரும் தன்னையும் தன்னுடன் இருக்கும் மலக்குகளையும் மற்றும் ஜமாஅத்துத் தொழுகைக்கு வந்தவர்களையும் சேர்த்துக் கொண்டு பிரார்த்தனை புரிவதாகும்.
மேலும், தன்னுடைய வணக்கத்துடன் மற்ற எல்லா மூமின்களான நல்லடியார்களுடைய வணக்கத்தையும் சேர்த்துக் கொண்டு இறைவனிடத்தில் விசுவாசம் தெரிவித்துக் கொள்வதுமாகும்.
"உன்னையே வணங்கி இம்மை மறுமைக் காரியங்களிலும் எங்களுக்கு சீர்திருத்தம் உண்டாகுவதற்காக உன்னிடமே உதவி தேடுகின்றோம்" என்பதே வஇய்யாக நஸ்தஈன் "உன்னிடமே உதவி தேடுகின்றோம்" என்பதின் தாத்பரியமாகும்.

கொடிய நம்ரூது அரசன், ஹளரத் இப்ராஹீம் (அலை) அவர்களின் கால் கரங்களை கட்டிப் பிணைத்து பெரிய நெருப்புக் குண்டத்தில் தள்ளி எரிக்கத் தொடங்கிய போது, ஹளரத் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் வந்து,இப்ராஹீம் அவர்களிடம் ,
'நபியே! என்னிடத்தில் இப்போது ஏதாவது தேவையுண்டா ? " என்று வினவினார்.

அதற்கு இப்ராஹீம் நபி "உம்மிடத்தில் எனக்கு எந்த தேவையுமில்லை. ஆனால், அல்லாஹ்விடத்தில்தான் எனக்குத் தேவை உண்டு" என்று சொன்னார்கள்.
உடனே ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அவ்வாறெனில் அவனிடம் கேளுங்கள்" என்று கூறினார்கள்.
அதற்கு ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் "அவன் எனது நிலையை அறிந்திருப்பதே எனக்குப் போதும்" என்று விடையளித்தார்கள்.
ஆகவே "உன்னிடமே உதவி தேடுகிறோம்" என்று இறைவனை சொந்தப்படுத்திக் கூறியிருப்பதில் ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாம் அவர்களைப் பின்பற்றி நடக்க வேண்டும் என்பது தெரிய வருகிறது.
மேலும் " உன்னையே வணங்குகிறோம் உன்னிடமே உதவி தேடுகிறோம் " என்ற குர்ஆன் வசனம் உணர்த்துவது : பார்த்தல் என்பது இரு வகையாகும். ஒன்று நேரடி பார்வை. அதாவது கண்களால் பார்த்தல், மற்றொன்று ஈமானியப் பார்வை எனும் நம்பிக்கை சார்ந்த பார்வை. அதாவது, கல்பென்னும் உள்ளத்தால் பார்க்குதல், இவை இரண்டும் ஒன்றுக்கொன்று முரணானவை.
கண்களால் பார்க்கும் நேரடிப் பார்வை என்பது உனக்கு எதிரே உள்ள ஒரு பொருளை உன் கண்களால் பார்ப்பதாகும்.

கண்கொண்டு நேரில் உள்ளதை நேரடியாகப் பார்ப்பதில் நம்பிக்கை சார்ந்த ஈமானியப் பார்வை எதுவும் இல்லை.
என்னை நீங்கள் நேரில் நின்று பார்க்கும்போது உங்கள் பார்வை நிதர்சனமானது. உண்மை நிகழ்வில் உள்ளதுதான். நேரில் பார்க்கும் வரையும் அது உறுதியான எகீன் என்னும் பார்வைதான். கற்பனையோ, கனவோ, பிம்பமோ, நிழலோ அல்ல.
அதேநேரம் நம்பிக்கை சார்ந்த ஈமானியப் பார்வை என்பது உங்கள் முன்னால் இல்லாத ஒன்றை, மறைவாக உள்ளதைப் பார்ப்பது. இந்தப் பார்வை நேரடி பார்வையை விட அதிக உறுதி வாய்ந்தது. ஏனெனில், இது ஈமானியப் பார்வை மற்றும் அகமியப் பார்வையாகும். இதுதான் நாம் கவனிக்கும் முக்கிய விஷயம்,
ஜிப்ரயீல் (அலை) அவர்கள் நபிகளாரிடம் நேரடியாக மனித உருவில் வந்து, இஹ்சான் என்றால் என்ன ? என்பது பற்றி எனக்கு விளக்குங்கள் :
" அல்லாஹ்வை நீ நேரில் பார்ப்பதைப் போல் உணர்ந்து வணங்குவது அல்லது அல்லாஹ்வை நீ நேரில் பார்ப்பது போல் உணர் முடியாவிட்டால், அந்த அல்லாஹ் உன்னைப் பார்க்கிறான் என்ற உணர்வில் வணங்குவது "
ஒரு மனிதன் ஈமான் கொள்ளும் போது, அவனின் அனைத்துப் பார்வையும் கவனமும் ஈமானிய பார்வை ஆகிவிட வேண்டும்.
சொர்க்கத்தைப் பற்றி திருமறையின் ஒரு வசனத்தை படித்தால், அப்போது அவர், அந்த சுவனவாசிகளை பார்ப்பதுபோல் உணர வேண்டும். அங்கே, அந்த சுவனத்தில் அவர்கள் அனுபவிக்கும் அருட்கொடைகளை கண்முன் கொண்டு வந்து நிறுத்தி, அதை உணர வேண்டும். அதுதான் ஈமானியப் பார்வை என்பதாகும்.
அதுபோன்றே, நரகத்தைப் பற்றி ஒரு வசனத்தைப் படித்தால், அவர் உடல் நடுங்க வேண்டும். நரகத்தையும், நரகவாசிகளையும் நேரில் பார்ப்பது போல உணர வேண்டும். அங்கே, அவர்கள் படும் துன்பத்தை கண்முன் கொண்டுவந்து, அதை அஞ்சியவராக உடல் நடுங்க வேண்டும். அப்படி உணர்வதுதான் ஈமானிய பார்வையாகும்.
இந்த ஈமானியப் பார்வையை ஞானிகள் தியானம் என்கிறார்கள். தியானம் என்பது மனதை கட்டுப்படுத்தும் அல்லது ஒருமுகப்படுத்தும் உபாயத்திற்கான பயிற்சி. தியானம் மன அமைதியை தரும், நம்மை உள்நோக்கி காண வைக்கும், அறநெறி சார்ந்த வாழ்க்கைக்கும் அமைதியான ஆன்மிகத்திற்கும் நம்மை இட்டுச்செல்லும். தியான தன்மையை அடைவது என்பது இலக்கு. தியானம் மூலமாக ஆன்ம ஞானம் மற்றும் முக்தி அடைய முடிகின்ற சாத்தியம் இருக்கிறது.
தியானத்தில் மனம் எதை எண்ணுகிறதோ அதுவாகவே மாறிவிடும் என மற்ற வேதங்கள் சொல்கிறது. நாம் எதை நினைக்கிறோமோ அதுவாகவே ஆகிறோம்

சுவனத்தில் சுவனவாசிகள் அனுபவிக்கும் அருட்கொடைகளை கண்முன் கொண்டு வந்து நிறுத்தி, அதை உணர வேண்டும்.
நரகத்தையும், நரகவாசிகளையும் நேரில் பார்ப்பது போல உணர வேண்டும். அங்கே, அவர்கள் படும் துன்பத்தை கண்முன் கொண்டுவந்து, அதை அஞ்சியவராக உடல் நடுங்க வேண்டும். அதுதான் ஈமானியப் பார்வை என்னும் தியானம்
அல்லாஹ்வை நீ நேரில் பார்ப்பதைப் போல் உணர்ந்து வணங்குவது அல்லது அல்லாஹ்வை நீ நேரில் பார்ப்பது போல் உணர் , முடியாவிட்டால், அந்த அல்லாஹ் உன்னைப் பார்க்கிறான் என்ற உணர்வில் வணங்குவது இது தியானத்தின் மிக உச்ச நிலை .
இமாம் சுஃப்யானுத் தவ்ரீ (ரஹ்) அவர்கள் மக்ரிபுத் தொழுகையை இமாமாக நின்றுநிறைவேற்றி வைத்தார்கள். அப்போது தொழுகையில் இய்யாக நஃபுது வஇய்யாக நஸ்தான் என்று ஓதியவுடனேயே மெய்மறந்து கீழே விழுந்து விட்டார்கள்.
மூர்ச்சை தெளிந்த பிறகு விழுந்த காரணத்தைப்பற்றி கேட்கப்பட்டது. அதற்கு 'உன்னிடத்தில்தான் உதவி தேடுகின்றோம்' என்று சொல்கிறோம் "அவ்வாறெனில் அரசர்களிடமும் மருத்துவர்களிடமும் எதற்காக நீர் போகின்றீர்?" என்று இறைவன் கேட்பதைப் பயந்து விழுந்து விட்டேன்" என்று கூறினார்கள்.
மனம் எதை எண்ணுகிறதோ அதுவாகவே மாறிவிடும் .

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 10
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )

நீ எங்களை நேர்வழியில் நடத்துவாயாக!
(அல்குர்ஆன் : 1:6)
'நேர்வழியில் நடந்திடவும் வழிகேட்டைத் தவிர்ந்திடவும்' தினமும் நாம் குறைந்தது 17 தடவைகள் தொழுகையில் துஆச் செய்து கொண்டிருக்கின்றோம்.
நீ எங்களை நேர் வழியில் நடத்துவாயாக! (அது) நீ எவர்களுக்கு அருள் புரிந்தாயோ அவ்வழி. (அது) உன் கோபத்துக்கு ஆளானோர் வழியுமல்ல, நெறி தவறியோர் வழியுமல்ல. (சூரத்துல் ஃபாத்திஹா)
'நேர்வழி பெற்று, முஸ்லிம்களாக இருக்கும் நாம் எதற்காக மீண்டும் மீண்டும் நேர்வழிக்காகப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கின்றோம்?! என என்றாவது நீங்கள் சிந்தித்துப் பார்த்ததுண்டா?! சில நொடித் துளிகள் சிந்தியுங்களேன்! அதில் உங்கள் வாழ்க்கை மாற்றத்தின் காரணியைக் காண்பீர்கள்!
நேர்வழியை அல்லாஹ் இரண்டாகப் பிரித்துள்ளான்.
1- நேர்வழியைக் காண்பித்தல்.
2- நேர்வழியில் நடந்திட வாய்ப்பளித்தல். அதில் உறுதியாக நிலைத்திருக்கச் செய்தல்.
அல்குர்ஆனின் மூலமும் இறைத் தூதர் (ஸல்) அவர்களின் வாயிலாகவும் அல்லாஹ் மக்களுக்கு நேர்வழியைக் காண்பித்தான். சத்தியத்தையும் அசத்தியத்தையும் மிகத் தெளிவாக பிரித்தறிவிப்பதுடன் இறைத்தூதர்களின் பணி நிறைவு பெற்றுவிடுகிறது. இதுதான் முதலாம் வகை நேர்வழி!.
ஆனால் அந்த நேர்வழியில் நுழைந்திடும் வாய்ப்பையும் இஸ்லாத்தினுள் நுழைந்தவர்கள் அவர்களின் மரணம் வரை சத்தியத்தில் நிலைத்து நிற்கும் பாக்கியத்தையும் அல்லாஹ் தான் நாடியவருக்கு மட்டுமே வழங்குகிறான். இதுதான் இரண்டாம் வகை நேர்வழி.
“விசுவாசியின் இருதயம் ரஹ்மானுடைய விரல்களில் நின்றும் இரண்டு விரல்களுக்கிடையில் இருக்கிறது. அவன் விரும்பியபடி அதனைப் புறட்டுகிறான்" என்று நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள். எனவே, அவன் நாடினால் அதனை நிலைத்திருக்கச் செய்வான்; இல்லையேல் வழி தவறச் செய்வான்.

இதையே விதி வழியே மனிதன் வாழ்கிறான் என்பதை பாரசீக கவிஞர் உமர்கய்யாம் எழுதிய ரூபய்யத்திலிருந்து
" எழுதிச் செல்லும் விதியின்கை
எழுதி எழுதி மேற் செல்லும்
தொழுது கெஞ்சி நின்றாலும்
சூழ்ச்சிகள் பலவும் செய்தாலும்
வழுவிப் பின்னாய் நீங்கியொரு
வார்த்தையேனும் மாற்றிடுமோ
அழுது கண்ணிராறெல்லாம்
அதிலோர் எழுத்தை அழித்திடுமோ? "
நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இவ்வளவு பெரிய அந்தஸ்தை அடைந்திருந்தும், தங்களது இருதயத்தைக் குறித்து அச்சமற்றிருக்கவில்லை. இதற்காக "இருதயங்களைப் புறட்டுபவனே! உனது அடியானின் இருதயத்தை உனது மார்க்கத்தின் மீதும் உனக்கு வழிபாடு செய்வதன் மீதும்....” என்று கூறிப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள்.

நேர் வழி என்பது பாத்தில் என்னும் அசத்தியத்திலிருந்து சத்தியத்தின்பால் இருதயத்தை மாற்றுதலுக்கு அதாவது அல்லாஹ்வைத் தவிரவுள்ளதை விட்டு ஹக்கின்பால், ஹள்றத்தின்பால் மாற்றுவதற்குப் பெயர். இது அல்லாஹ்வை மறந்திருப்பவர்களின் காரியத்தைச் சேர்ந்ததல்ல' என்று தாவீலாத்துன்னஜ்மிய்யா என்னும் கிரந்தத்தில் கூறப்பட்டு இருக்கிறது.
(நபியே!) நீர் நேசிப்பவர்களை(யெல்லாம்) நிச்சயமாக நேர்வழியில் செலுத்திவிட உம்மால் முடியாது. ஆனால், அல்லாஹ் தான் நாடியவர்களை நேர்வழியில் செலுத்துகிறான் மேலும் நேர்வழி பெற்றவர்களை அவன் நன்கறிகிறான். (அல்குர்ஆன் 28:56)

மேற்கண்ட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது தந்தையுடன் பிறந்தவரும் நபியவர்களை வளர்த்தவருமான ஹளரத் அபூதாலிபைக் குறித்து அருளப்பட்டதாக பெரும்பாலான அறிஞர்கள் கூறுகின்றனர் ஆகவே இதன்படி " நீர் விரும்பியவர் " என்ற பதம் அபூதாலிபைக் குறிக்கிறது
அபூதாலிபுக்கு மரணம் சமீபித்தபோது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவரருகில் சென்று "பெரிய தந்தையே! லாஇலாஹ இல்லல்லாஹு (அல்லாஹ்வைத் தவிர வணக்கத்துக்குரியவனில்லை) என்ற வாக்கியத்தைக் கூறுவீராக. இதனைக் கொண்டு நான் அல்லாஹ்விடத்தில் தங்களுக்காக வாதாடுகிறேன்" என்று கூறினார்கள்.

அவர் விசுவாசம் கொண்டுவிட வேண்டும் என்பது நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது பேரவா.
நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது இவ்வேண்டுகோளுக்கு அவர் “என் சகோதரரின் புதல்வரே! நீர் உண்மை கூறுகிறீர் என்பதை நான் திட்டமாக அறிந்திருக்கிறேன். என்றாலும், மரண வேளையில் நான் கோழையாகி விட்டேன் என்று கூறப்படுவதை நான் விரும்பவில்லை...
...எனக்குப் பிறகு உமக்கும் உமது தந்தையின் புதல்வர்களுக்கும் இது ஒரு இழிவாக இருக்கும் குறையாக இருக்கும் என்பது இல்லாவிடின், அவ்வாக்கியத்தை நான் கூறி இருப்பேன். நான் பிரிகிற வேளையில் செய்திருப்பேன். உமது அபிமானத்தையும், என் நன்மையில் உமக்கிருக்கிற பிரியத்தையும் நான் பார்க்கிறேன்...
...என்றாலும், என் மூதாதையரான அப்துல் முத்தலிபு, ஹாஷிம், அப்து மனாஃப் ஆகியவர்களது மார்க்கத்தின்படியே நான் மரணமடைவேன்" என்றார்.
"ஹிதாயத் அதாவது நேர் வழி என்பது அநாதியானவனது நாட்டத்துடன் சேர்ந்தது. அபூதாலிப் சம்பந்தமாக நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது நாட்டம் அநாதியானவனது நாட்டத்துடன்

சேர்ந்ததாக இருந்திருக்குமாயின் அபூதாலிப் நேர் வழி பெற்றவராக இருந்திருப்பார். ஆனால், அபூதாலிப் சம்பந்தமாக நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு முறையில்தான் இருந்தது. எனவேதான் அது நிறைவேறவில்லை.
ஆனால், உமர் சம்பந்தமாக நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது நாட்டம் இறைவனின் நாட்டத்துடன் சேர்ந்திருந்ததால் "நாயனே! உமரைக் கொண்டு இஸ்லாமுக்கு கண்ணியம் கொடு" என்று நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிரார்த்தித்ததை எவ்வாறு அவன் நிறைவேற்றி இருக்கிறான் என்பதைக் கவனியுங்கள் என்று அராயிஸுல் பயான் என்னும் கிதாபில் கூறப்பட்டிருக்கிறது.
இஸ்லாத்தைப் பற்றி நன்கு அறிந்த பலர் இஸ்லாத்தை ஏற்காமலேயே மரணித்துவிடுவதும், இஸ்லாத்தில் இணைந்த பிறகு மீண்டும் வழிகேட்டிற்கு திரும்பி விடுவதும், வாழ்நாள் முழுக்க நல்லறங்கள் புரிந்து வருபவர் தன் இறுதி நாட்களில் தீமைகளுடன் மரணிப்பதும் இதன் காரணத்தினால்தான்!
எனவே அல்லாஹ் நமக்கு வழங்கிய நேர்வழியில் நமது மரணம் வரை நிலைத்து நின்றிடவும் மரணிக்கும் வரை தொடர்ந்து அவனைத் தொழுது, அவனுக்கு கட்டுப்பட்டு நடக்கும் பாக்கியத்தைப் பெற்றிடவும்தான் மீண்டும் மீண்டும் நாள் ஒன்றுக்கு 17 தடவை துஆச் செய்து கொண்டிருக்கின்றோம்.

இந்த நேர்வழியின் மூலமாக நாம் இவ்வுலகில் இறைப் பொறுத்தத்துடன் வாழவும் மறுமையில் நபிமார்களுடனும் நல்லோர்களுடனும் இணையும் பாக்கியத்தைப் பெறவும் அல்லாஹ் வாய்ப்பளிக்கிறான்.
யார் அல்லாஹ்வுக்கும் (அவன்) தூதருக்கும் கீழ்படிந்து நடக்கிறார்களோ அவர்கள் அல்லாஹ்வின் அருளைப் பெற்ற நபிமார்கள், ஸித்தீகீன்கள் (சத்தியவான்கள்) ஷுஹதாக்கள் (உயிர்த்தியாகிகள்) ஸாலிஹீன்கள் ( நற்கருமங்களுடையவர்கள்) ஆகியவர்களுடன் இருப்பார்கள். இவர்கள் தாம் மிக்க அழகான தோழர்கள் ஆவார்கள். (அல்குர்ஆன் 4:69)

அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கட்டுப்படுவதின் மூலமாக மட்டுமே நபி (ஸல்) அவர்களுடனும் நல்லோர்களுடனும் சுவனத்தில் இணையும் பாக்கியம் கிடைக்கும் என்பதை மிகத் தெளிவாக இந்த ஆயத்திலிருந்து விளங்கிக் கொள்ளலாம்.
எவர் (அல்லாஹ்வின்) தூதருக்குக் கீழ்படிகிறாரோ, அவர் அல்லாஹ்வுக்குக் கீழ்படிகிறார்;. யாராவது ஒருவர் (இவ்வாறு கீழ்படிவதை) நிராகரித்தால் (நீர் வருந்த வேண்டியதில்லை, ஏனெனில்) நாம் உம்மை அவர்களின் கண்காணிப்பாளராக அனுப்பவில்லை. (அல்குர்ஆன் 4:80)
அல்லாஹ்வுக்கு கட்டுப்படுவது என்பது அல்லாஹ்வுடைய தூதருக்கு கட்டுப்படுதின் மூலமாக மட்டுமே சாத்தியமாகும் என்பதை இந்த வசனம் மிகத் தெளிவாக உணர்த்துகிறது. எனவே நம்முடைய பாதை நபி (ஸல்) அவர்கள் சென்ற பாதையாக இருக்கவேண்டும். அந்தப் பாதையில் சென்று அவர்களுடன் சுவனத்தில் இணையும் வாய்ப்பை பெற ஆசைப்பட வேண்டும். அதற்காக முயற்சிக்க வேண்டும்.
ரபீஆ இப்னு கஅப் அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் நபி (ஸல்) அவர்களுடன் இரவில் தங்கி, உளூச் செய்யும் தண்ணீரைக் கொண்டுவது மற்றும் அவர்களுடைய தேவைகளை நிறைவேற்றி பணிவிடை செய்துவந்தேன்.
(ஒருநாள்) என்னிடம் எதையேனும் கேள்! என்றார்கள்.
நான் உங்களுடன் சுவனத்தில் இருக்கவேண்டும்! என்றேன்.
இது தவிர வேறு ஏதேனும் உண்டா? என்றார்கள்.
அதுமட்டும்தான்! என்றேன். (நீ விரும்புவதை பெறவேண்டுமானால்) நீ (அல்லாஹ்வுக்கு) அதிகமாக ஸஜ்தா செய்து (அவனைத் தொழுது) எனக்கு உதவி செய்வீராக! என்றார்கள். (நூல்: முஸ்லிம் 754)
அதிகமான தொழுகைகளுடனும் நல்லறங்களுடனும் சென்றால்தான் நபி (ஸல்) அவர்களுடன் சுவனத்தில் இணைய முடியும் என்பதை இந்த ஹதீஸின் மூலம் அறிகிறோம்.

**அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 11**
**(விஞ்ஞானத் தஃப்ஸீர் )**

நீ எவர்களுக்கு அருள் புரிந்தாயோ அவ்வழி. (அது) உன் கோபத்திற்கு ஆளானோர் வழியுமல்ல நெறி தவறியோர் வழியுமல்ல. (குர்ஆன் : 1:6, 7)

அல்லாஹ்வின் அடியார்கள் மூன்று வகையினராவர்.

(1) அவனது அருள் பெற்றவர்கள்.

(2) அவனின் கோபத்திற்குள்ளானவர்கள்.

(3) வழிதவறியவர்கள்.

1) உண்மையான கொள்கைகளை மனதில் உறுதி கொண்டு இறைவனின் கட்டளையின்படி அவனுக்குச் செய்ய வேண்டிய வணக்கங்களையும், நற்காரியங்களையும் செய்பவர்கள் இறைவனின் அருள் பெற்ற முதல் பிரிவினராவர்.

அவர்கள் சென்ற வழியிலேயே தன்னையும் நடத்துமாறு ஒவ்வொரு அடியானும் இறைவனிடம் வேண்டிக் கொள்ள வேண்டுமென்பதை சூராத்துல் பாத்திஹாவின் குர்ஆன் (1: 6) வது வசனம் காட்டுகிறது.

முதல் பிரிவினர் பற்றி குர்ஆனில் இன்னொரு இடத்தில்

وَمَنْ يُّطِعِ اللّٰهَ وَالرَّسُوْلَ فَاُولٰٓٮِٕكَ مَعَ الَّذِيْنَ اَنْعَمَ اللّٰهُ عَلَيْهِمْ مِّنَ النَّبِيّٖنَ وَالصِّدِّيْقِيْنَ وَالشُّهَدَآءِ وَالصّٰلِحِيْنَ‌ وَحَسُنَ اُولٰٓٮِٕكَ رَفِيْقًا

யார் அல்லாஹ்வுக்கும் (அவன்) தூதருக்கும் கீழ்படிந்து நடக்கிறார்களோ அவர்கள் அல்லாஹ்வின் அருளைப்பெற்ற நபிமார்கள், ஸித்தீகீன்கள் (சத்தியவான்கள்) ஷுஹதாக்கள் (உயிர்த்தியாகிகள்) ஸாலிஹீன்கள் (நற்கருமங்களுடையவர்கள்) ஆகியவர்களுடன் இருப்பார்கள் - இவர்கள் தாம் மிக்க அழகான தோழர்கள் ஆவார்கள்.(குர்ஆன் : 4:69)

2) உண்மை கொள்கைகளுடன் தப்பான கொள்கைகளையும் விசுவாசம் கொண்டு, இறைவனுடைய கட்டளை பற்றி தனக்கு நன்கு தெரிந்திருந்தும் அவற்றுக்கு மாறு செய்வதன் காரணமாக இறைவனுடைய கோபத்திற்கு உள்ளானவர்கள் இரண்டாம் பிரிவினர். இவர்கள் யூதர்கள் ஆவர்.

قُلْ هَلْ اُنَـبِّئُكُمْ بِشَرٍّ مِّنْ ذٰ لِكَ مَثُوْبَةً عِنْدَ اللّٰهِ‌ مَنْ لَّعَنَهُ اللّٰهُ وَغَضِبَ عَلَيْهِ وَجَعَلَ مِنْهُمُ الْقِرَدَةَ وَالْخَـنَازِيْرَ وَعَبَدَ الطَّاغُوْتَ‌ اُولٰٓٮِٕكَ شَرٌّ مَّكَانًا وَّاَضَلُّ عَنْ سَوَآءِ السَّبِيْلِ

“அல்லாஹ்விடமிருந்து இதைவிடக் கெட்ட பிரதிபலனை அடைந்தவர்களைப் பற்றி உங்களுக்கு அறிவிக்கட்டுமா? (அவர்கள் யாரெனில்) எவரை அல்லாஹ் சபித்து, இன்னும் அவர்கள் மீது கோபமுங்கொண்டு, அவர்களில் சிலரைக் குரங்குகளாகவும், பன்றிகளாகவும் ஆக்கினானோ அவர்களும், ஷைத்தானை வழிப்பட்டவர்களும் தான் - அவர்கள்தாம் மிகவும் தாழ்ந்த நிலையினர்; நேரான வழியிலிருந்தும் தவறியவர்கள்” என்று (நபியே!) நீர் கூறுவீராக. (குர்ஆன் : 5:60)

நபி தாவூத் அலை மக்கள் அவர்களுக்குரிய ஜும்மா நாளான சனிக் கிழமை மீன் பிடிக்க கூடாது என்ற இறை கட்டளை ஒரு பிரிவினர் மீறினார்கள் இறைவன் அவர்களை குரங்குகளாகவும் அவர்களில் வயோதிகர்களை பன்றிகளாகவும் மாற்றினான் பின்னர் ஓரிரு நாட்களில் முழுவதையும் அழித்தொழித்தான் என்பதாக குர்ஆன் (2 : 66 )

மறுமையில் நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் தந்தை ஆஷரை முள்ளம் பன்றியாக மாற்றப்படுவதாக அறிகிறோம் .

நபி (ஸல்) அவர்கள் நபித்தோழர்களுடன் காட்டு வழியே பயணப்படும் போது கையிருப்பு உணவு காலியானதால் உணவு சமைக்க ஏற்படானது சின்ன மலை பொதும்பிலுள்ள ஏராளமான உடும்புகளைக் கொண்டு உணவு தயாரிப்பு நடந்து கொண்டு இருந்தது.

நபிஸல் அவர்கள் கூடாரத்தை விட்டு வெளியே வந்து இது என்ன உணவு என்று கேட்க சகாபாக்கள் பதில் சொன்னார்கள் உடனே நபிஸல் அவர்கள் யாரும் இந்த உணவை சாப்பிட வேண்டாம் அப்படியே பூமியில் கொட்டச் சொன்னார்கள்

உடனே சகாபாக்கள் " யா ரசூல்லாஹ்..! உடும்பு கறி ஹராம் என்று இப்போது வஹி வந்ததா ? " எனக் கேட்க " இல்லை இல்லை உடும்பு கறி ஆகுமானதுதான் ஆனாலும் இந்த இடத்தில் உள்ள உடும்புகள் பனி இஸ்ரவேலர்களை அல்லாஹ்வின் சாபத்தால் உடும்பாக மாற்றப்பட்டுள்ளனர் " என்றார்கள் ஆதாரம் " அஸ்துல் காபா" (சஹாபாக்களின் வாழ்க்கை வரலாறு)
அல் மஸ்க் என்பது உருமாற்றம் அதாவது மனித வடிவில் உள்ளவர்களை அவ லட்சண வடிவில் மாற்றுதல் இந்த மாற்றம் மனித தன்மையிலிருந்து மிருக தன்மைக்கோ அல்லது கல் மண் மரம் ஜடப் பொருளாகவோ மாற்றினாலும் இரண்டுமே அல் மஸ்க் உருமாற்றம்தான்
நபிஸல் அவர்கள் பிரத்யேக மாக அல்லாஹ்விடத்தில் தூஆ கேட்டதால் அவர்களுடைய கௌமன்களுக்கு உருமாற்றம் பூமியில் இல்லை ஆனால் மற்ற நபிமார்களின் கௌமன்களை அல்லாஹ் உருமாற்றம் செய்யப்பட்டுள்ளனர்
3) அடிப்படையான உண்மை கொள்கைகளில் விசுவாசம் கொள்ளாமல், தப்பான கொள்கையில் விசுவாசம் கொண்டு நேர்வழியே விட்டு விலகி நடப்பவர்கள் மூன்றாம் பிரிவினர்.இவர்கள் கிறிஸ்துவர்கள் ஆவர்.
قُلْ يٰۤـاَهْلَ الْـكِتٰبِ لَا تَغْلُوْا فِىْ دِيْـنِكُمْ غَيْرَ الْحَـقِّ وَلَا تَتَّبِعُوْۤا اَهْوَآءَ قَوْمٍ قَدْ ضَلُّوْا مِنْ قَبْلُ وَاَضَلُّوْا كَثِيْرًا وَّضَلُّوْا عَنْ سَوَآءِ السَّبِيْلِ
“வேதமுடையவர்களே! நீங்கள் உங்கள் மார்க்கத்தில் உண்மையில்லாததை கூறி வரம்பு மீறாதீர்கள்; (உங்களுக்கு) முன்பு வழிதவறிச் சென்ற கூட்டதாரின் மனோ இச்சைகளை நீங்கள் பின்பற்றாதீர்கள்; அநேகரை அவர்கள் வழி தவறச் செய்ததுடன், தாங்களும் நேர் வழியை விட்டு விலகி விட்டனர்” என்றும் (நபியே!) நீர் கூறுவீராக! (குர்ஆன் : 5:77)
இறைவனின் சினத்திற்கு ஆளானோர் ஒரு பிரிவினர்; வழிதவறியோர் மற்றொரு பிரிவினர் எனத் தனித்தனியே இரு தவறான வழியினரைப் பிரித்துக் காட்டி. இவ்விரு வழிகளிலுருந்தும் அனைவரும் விலகிவிட வேண்டும் என்பதை உணர்த்தும் முகமாகவே (வலள் ளால்லீன்' எனும் சொற்றொடரில்) 'லா' எனும் எதிர்மறை இடைச்சொல் (மீண்டும்) கொண்டு வரப்பட்டு உறுதி செய்யப்பட்டுள்ளது.
இதே கருத்து நபிமொழிகளிலும், நபித்தோழர்களின் கூற்றுகளிலும் காணப்படுகிறது. அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
'ஃகைரில் மஃக்ளூபி அலைஹிம்' (இறைவனின் கோபத்திற்கு ஆளானோர் யார் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வினவினேன்.
அதற்கு "யூதர்களே அவர்கள்" என நபியவர்கள் பதிலளித்தார்கள்.
வலள் ளால்லீன்' (வழிதவறியோர்) யார் என வினவினேன்.
அதற்குக் கிறிஸ்துவர்கள் ஆவர் என பதில் அளித்தார்கள்
ஆமீன் :
அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை ஓதிய பிறகு ஆமீன்' என்று கூறுவது விரும்பத் தக்கதாகும். 'ஆமீன்' என்பதற்கு "இறைவா! ஏற்பாயாக!" என்று பொருள்.
அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தொழுகையில்) ஃகைரில் மஃக்ளூபி அலைஹிம் வலள் ளால்லீன்' என்று ஓதியவுடன் 'ஆமீன் என்று கூறுவார்கள். அது, அவர்களுக்கருகில் முதல் அணியில் நிற்பவர் களின் செவிகளுக்குக் கேட்கும். நூல் அபூதாவூத்,
- "ஆமீன்" சப்தத்தால் பள்ளிவாசல் அதிரும் என இப்னுமாஜா கூடுதலாக வந்துள்ளது.

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 12
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் ) (சூரத்துல் ஃபீல்- யானை)




கி.பி 571 பிப்ரவரி கடைசி தினம் அல்லது மார்ச் 1 முஹர்ரம் மாதத்தில் ஏமன் நாட்டு மன்னன் அப்ரஹா யானைப் படையை திரட்டிக் கொண்டு கஃபவை நோக்கி வந்தான். இந்த நிகழ்வு நபி (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு 50 நாட்களுக்கு முன்பு நடந்தது .

"(நபியே) யானைப் படையினரை உங்களது இறைவன் எவ்வாறு அழியச் செய்தான் என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா ?

அவர்களுடைய சூழ்ச்சியை அவன் வீணாக்கி விட வில்லையா ?

அவர்கள் மீது பறவைகளைக் கூட்டங் கூட்டமாக அனுப்பி வைத்தான் .

( கெட்டியான) சுடப்பட்ட சிறிய கற்களை அவை அவர்கள் மீது எறிந்தன .

அதனால் அவன் அவர்களை(ப் பறவைகளால் ) கொத்தி தின்னப்பட்ட கதிர்களைப் போல் ஆக்கி (அழித்து) விட்டான் . திருக்குர்ஆன் : ( 105 : 1 - 5 )

கரிய நிறமும் மஞ்சள் நிற மூக்கும் அவற்றின் கழுத்து பச்சை நிறமுமாக உள்ள சிறிய பறவைக் கூட்டங்களை அனுப்பினான் இப்பறவைகளை யாரும் அதற்கு முன்னர் கண்டதில்லை .அதற்குப் பின்னும் கண்டதில்லை " என்பதாக இப்னு ஜூபைர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்

'தைரன் அபாபீல் ' என்பது கொத்துக் கொத்தாக வந்த ஒருவகை கடற்பறவைகளைக் குறிக்கிறது. இதில் அபாபீல் என்பது ஒருமை இல்லாத பன்மைப் பெயர் சொல்லாகும். இதற்கு 'கூட்டம் கூட்டமாக ' என்பதே பொருளாகும்.பலரும் புரிந்து வைத்திருப்பது போன்று அபாபீல் என்பது பறவை இனத்தின் பெயரன்று என்பது இங்கு குறிப்பிடத்தக்கது (தஃப்சீர் இப்னு அபீஹாத்திம்)

எப்படியாயினும் 'அபாபீல்' என்ற சொல்லின் பொருள் அதிகமானவை, ஒன்றன்பின் ஒன்றாக தொடர்ந்து வருபவை என்பதுதான் அர்த்தம் ( தஃப்சீர் அல்பஹ்ருல் முஹீத்)

இப்னு ஹிஷாம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

'அபாபீல் ' என்றால் 'கூட்டங்கள்' என்பதே பொருளாகும். (இது பன்மையாகும்) இச்சொல்லின் ஒருமையை குறித்து அரபியர்கள் பேசவில்லை.

ஒவ்வொரு பறவையின் வாயில் ஒரு கல்லும் , இரு கால்களில் இரு கற்களும் இருந்தன. ஒவ்வொரு கல்லிலும் எவர் மீது அது விழ வேண்டுமோ அவரது பெயர் அக்கற்களில் எழுதி இருந்தது .

அக்கல் அவர்களது தலை உச்சியில் விழுந்ததும் அவர்களது உடலுக்குள் சென்று கால் வழியாக வெளியேறிக் கீழே விழுந்தன. யானைகளின் உடலிலும் இக்கற்கள் ஊடுருவி வெளிவந்தன,

இக் கற்களில் சிலவற்றை மக்காவாசிகளால் எடுத்து வைக்கப்பட்டிருந்தன . நபி (ஸல்) அவர்களின் மாமி உம்மு ஹானீ (ரலி) அவர்களிடம் இவற்றில் சில கற்கள் இருப்பதை தாம் பார்த்ததாக இப்னு அப்பாஸ் ( ரலி) அவர்கள் கூறியிருக்கிறார்கள் .

மேற்கண்ட வசனத்தில் ' சுடப்பட்ட சிறிய கற்கள் " என்று இறைவன் குறிப்பிடுவதாலும், கிதாபுகளின் குறிப்பில் தலைபட்டு கால்வழியாக வெளியேறியதாலும், அக்கற்கள் அணு கதிர்வீச்சு கொண்ட யூரேனியம் U 231 அல்லது இருடியம், தோரியம் போன்ற அணுக்கற்களாக இருக்கலாம் .

இக்கற்கள் பட்டாணி கடலைப் போன்று சிறியதாக இருந்தாலும் சுய பொருண்மை திணிவுகளில் மிக அதிகமான எடை கொண்டதாக இருக்கும் . எனவேதான் யானையின் உடலிலும் உட்புகுந்து அக்கற்கள் வெளியேறி இருக்கிறது .

மேலும் நிலைச் சக்தி (mgh )யும், அணு சக்தியும் (Atomic Energy )யும் இந்நிகழ்வில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

கற்களின் வீச்சு விசையைக் கணக்கிட

mass (m) = கல்லின் பொருண்மை

10 கிராம்

gravidatio Force (g ) =

புவி ஈர்ப்பு விசை 9 . 81 Newton/ met

height ( h ) = ஒவ்வொரு கற்களும் வீசப்படும் உயரங்கள் .15 மீட்டர் (50 அடி)

செலவிடப்படும் சக்தி

Energy ( E ) = m X g X h

= 10/ 1000 X 9.81 X 15

= 1. 4715 kgm - Newton / met

ஒவ்வொரு மீட்டர் உயரத்திற்கும் ஒன்றரை கிலோகிராம் எடை வீதம் அதிகரித்துக் கொண்டே இருக்கும்

இப்னு உமர்(ரலி) அவர்கள் குறிப்பிடுகிறார்கள் : " நாங்கள் தாயிஃபிலிருந்து நபி (ஸல்) அவர்களுடன் திரும்பும்போது ஒரு கப்ரின் அருகில் சென்றோம்.

அப்போது நபி (ஸல்) அவர்கள் , " இது அபூரிகாலின் கப்ரு. இவர் தக்கீப் கோத்திரத்து தலைவர் . இவர் கஃபா ஹரமில் இருக்கும் வரை அவர் மீது கல் விழாமல் தடுக்கப்பட்டுக் கொண்டிருந்தது.ஹரத்தை விட்டு அவர் வெளியேறியதும்,அவர் பெயர் பொறிக்கப்பட்ட கல் அவர் மீது விழுந்து இதே இடத்தில் மாண்டர். இவர்தான் அப்ரஹா மன்னனுக்கு மக்காவிற்குள் வர வழிவகுத்துக் கொடுத்தவர் .

"மக்கா கஃபா ஹரத்தை இடிக்க மஹ்மூது என்னும் பிரமாண்டமான யானை மறுத்தது. அதை கொடுமைப்படுத்திக் கொண்டு வந்த படைத் தளபதியும் யானைப்பாகனும் நொண்டி சப்பாணியாகவும் , பாகன் குருடனாகவும் மக்காவில் மனிதர்களிடம் உணவுப் பிச்சைக் கேட்டு வாங்கி உண்டு வந்தனர் " என்று அன்னை ஆயிஷா ஸீத்தீக்கா (ரலி) அவர்கள் கூறியிருக்கிறார்கள்

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 13
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )



(சூரத்துல் குறைஷ்)
لِاِيْلٰفِ قُرَيْشٍۙ

குறைஷிகளுக்கு விருப்பம் உண்டாக்கி,
اٖلٰفِهِمْ رِحْلَةَ الشِّتَآءِ وَالصَّيْفِ

மாரிக் காலத்துடையவும் கோடைக்காலத்துடையவும் பிரயாணத்தில் அவர்களுக்கு மன விருப்பத்தை உண்டாக்கியமைக்காக-
فَلْيَعْبُدُوْا رَبَّ هٰذَا الْبَيْتِۙ

இவ்வீட்டின் (கஃபாவின்) இறைவனை அவர்கள் வணங்குவார்களாக.
الَّذِىْۤ اَطْعَمَهُمْ مِّنْ جُوْعٍ ۙ وَّاٰمَنَهُمْ مِّنْ خَوْفٍ

அவனே, அவர்களுக்குப் பசிக்கு உணவளித்தான்; மேலும் அவர்களுக்கு அச்சத்திலிருந்தும் அபயமளித்தான்.

(அல்குர்ஆன் : 106: 1 - 4)

குறைஷ் என்பது அரபு நாட்டிலுள்ள ஒரு கோத்திரத்தின் பெயர். இக்கோத்திரத்தார் நுளறுப்னு கினானா என்பவரின் சந்ததியைச் சேர்ந்தவர்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் இதே கோத்திரத்தைச் சேர்ந்தவர்களேயாவர்கள். இக்கோத்திரத்தார் திருமக்காவில் வாழ்ந்து கொண்டிருந்தனர். திரு கஃபாவுக்கு பணிவிடை செய்வதும், ஜம்ஜம் கிணற்றைப் பராமரிப்பதும் இவர்களிடம் ஒப்புவிக்கப்பட்டிருந்தன. ஆகவே இவர்கள் வெளியிடங்களுக்குச் சென்றால் கஃபா ஊழியர்கள் என்ற முறையில் இவர்களுக்கு ஆங்காங்கு உள்ளவர்கள் மிக மரியாதை செய்து உபசரிப்பார்கள்.

இவர்கள் ஆதியில் ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களது புதல்வர் ஹளரத் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம். அவர்களது சந்ததியினர். ஆதலின், தங்களது மூல பிதா ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய மார்க்கத்தையே கடைப்பிடித்து வந்தனர்.
பின்னர் அவர்களிலொருவர் ஷாம் தேசத்திலிருந்து விக்கிரஹங்களை விலைக்கு வாங்கிக் கொண்டு வந்து திருகஃபாவில் வைத்து விட்டார். விக்கிரங்களை வழிபடுதல் கொஞ்சமாகப் அரேபியாவில் பரவ ஆரம்பித்தது. இவர்களிடமும் அது பரவி நன்கு வேரூன்றிவிட்டது.
எனவே, குறைஷியர் தங்களை ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களது சந்ததியினர் என்றும் அவர்களது மார்க்கத்தைப் பின்பற்றுகிறவர்கள் என்றும் கருதிக் கொண்டாலும் பல தலைமுறைகளாகப் பழக்கத்தில் இருந்து வந்த விக்கிரஹ ஆராதனையையும் விடாமல் இருந்தனர். பலர் இவ்வாராதனை இப்ராஹீமுடைய மார்க்கம்தான் என்றுங் கூட எண்ணிக் கொண்டிருந்தனர்.
இந்நிலையில்தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமக்காவில் சன்மார்க்கப் பிரச்சாரம் புரிய ஆரம்பித்தார்கள். விக்கிரஹ ஆராதனையை இச்சன்மார்க்கம் பலமாக நிராகரித்ததால் பலமாக

எதிர்த்தனர். இரு பக்கமும் பல உயிர்ச் சேதங்களும் ஏற்பட்டன. கடைசியில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மிகைத்தார்கள்.
உடனே குறைஷியர் யாவரும் பணிந்து இஸ்லாமிய சன்மார்க்கத்தைப் பலமாக விசுவாசித்தனர். மனப்பூர்வமாக விக்கிரஹ ஆராதனையை அவர்கள் துறந்தது மட்டுமில்லாமல், பிறரையும் துறக்கச் செய்வதில் அதிகம் முயற்சி எடுத்து வெற்றி கண்டனர்.
கலீஃபாக்கள் யாவரும் குறைஷியரே. குலஃபாயே ராஷிதீன்களாகிய நான்கு கலீஃபாக்களும், பின்னர் வந்த உமய்யா வம்சத்தினரும், அவர்களுக்குப் பிறகு வந்த அப்பாஸிய்யா வம்சத்தாரும், இஸ்லாம் மார்க்கத்துக்குச் செய்த அரும்பெரும் சேவைகளால் இஸ்லாமிய உலகம் முழுவதும் குறைஷிக் கோத்திரத்தை நன்கு மதித்து கண்ணியப்படுத்தியது.
இந்த சூரத்தில் இறைவன் கூறியிருப்பது போல குறைஷியருக்கு மாரிகால, கோடைகாலப் பயணங்கள் இரண்டு இருந்ததால், இஸ்லாம் மார்க்கம் தோன்றிய பிறகு இப்பழக்கத்தின் மூலம் மிகமிக தூர தேசங்களுக்குப் பயணம் செய்ய இவர்கள் துணிந்தனர். சில காலத்துக்குள் மேற்கே ஐரோப்பா கண்டத்தில் ஸ்பெய்ன், போர்ச்சுக்கல், தென்பிரான்சு முதலிய இடங்களிலிருந்தும் கிழக்கே சீனா தேசத்தில் காண்டன் கடற்கரை நகர் வரையும் இஸ்லாமைப் பரவச் செய்து விட்டனர்.

குறைஷியர் தங்களது ஜீவனோபாயத்துக்காக தெற்கிலும் வடக்கிலும் பயணம் செய்து வர்த்தகம் செய்து சம்பாதித்து வந்தனர். அவர்களில் இக்கொள்ளை, களவு, கொலை மிகச் சொற்பமாகவே இருந்தது. ஆதலால், சம்பாத்தியக்காரர்கள் என்ற கருத்தில் இக்கோத்திரத்தாரை குறைஷியர் என்று அழைத்தனர்.
யானைப் படையினரை அழித்து. குறைஷியருக்குப் பிரியமான மழை காலத்துடையவும் கோடை காலத்துடையவும் பிரயாணத்தை ஸ்திரப்படுத்தியதால், அவர்கள் இவ்வாலயத்தின் றப்பை வணங்கட்டும் என்பதாகும். எனவே. இக்கருத்துப்படி இது ஏக இறைக் கொள்கையைப் பிரச்சாரம் செய்வதாகும்.
அதாவது குறைஷியரின் நன்மைக்காக அவர்களுக்குப் பிரியமான இரண்டு பிரயாணங்களை ஏற்படுத்திய இந்த ஆலயத்தின் றப்பை, அவர்கள் வணங்க வேண்டும் என்பது கருத்து.

குறைஷியரின் பிரயாணப் பிரியம்தான் என்னே! என்று ஆச்சரியமாகக் கூறுவதாகும். அவர்களுக்கு இப்பிரயாணப் பிரியம் ஏற்பட்டது இவ்வாலயத்தின் பரக்கத்தாலாகும். இதன் பயனாகவே அவர்களுக்கு அபயமேற்பட்டிருக்கிறது. பிறரின் மதிப்புக்குரியவர்களாக இருந்ததால் சென்ற இடமெல்லாம் வரவேற்கப்பட்டு பசியை விட்டும் காப்பாற்றப்பட்டிருக்கின்றனர் என்பது கருத்தாகும்.
நீண்ட தூரம் பயணம் செய்யும் பழக்கம் ஒரு சமூகத்துக்கு இருக்குமாயின் அச்சமூகத்துக்கு தைரியமும் துணிவும் அதிகம் இருக்கும். அத்துடன் அதன் பொருளாதார நிலையும் திருப்திகரமாக இருக்கும். பலவிதமான மக்களுடன் பழக நேரிடுவதால். நாகரிக முன்னேற்றமும் அறிவு வளர்ச்சியும் உண்டாகும். சிறிது காலத்துக்கு முன்னர் இழிவாகவும் பழிக்கத்தக்கவர்களாகவும் இருந்தவர்கள். வர்த்தகத் தொழிலின் காரணமாக இக்காலத்தில் கல்வி கேள்விகளில் சிறந்தவர்களாகவும் கண்ணியமானவர்களாகவும் மதிக்கப்படுவது யாவருக்கும் கண்கூடாகத் தெரிந்த விஷயம்.
குறைஷியருக்கு இறைவன் வர்த்தகத்துக்காக ஆண்டில் இரு முறை நீண்ட பயணம் செய்யும் பழக்கத்தையும் பிரியத்தையும்
முன்கூட்டியே ஏற்படுத்தி வைத்திருந்ததால். பல நாட்டுப் பழக்க வழக்கங்களை அவர்கள் உணர்ந்திருந்தனர். இஸ்லாம் மார்க்கத்தை அவர்கள் தழுவி அரசாங்கமும் கைக்கு வந்ததால், அவர்கள் மிகத் துணிவுடன் உலகின் பல பாகங்களுக்கும் சென்றனர். அந்நிய நாட்டினருடன் சாதுர்யமாகப் பழகி அவர்களது நட்புக்கு உரியவர்களாக ஆகும் ஆற்றலும் பெற்றனர்.
இதனால் அவர்கள் முஸ்லிம்களுக்குக் தலைமை வகித்து அடர்ந்த காடுகளையும் மனித சஞ்சாரமற்ற வனாந்தரங்களையும் கொடிய காட்டு மிருகங்கள் வாழும் மலைகளையும் ஆழிய கடல்களையும் கடந்து

மேற்கில் பர்பரியர் நாடுகளையும் கிழக்கில் துருக்கிஸ்தான், மங்கோலியா, சீனா வரையிலும் கூடச் சென்று வெற்றிக் கொடியை நாட்டினர்.
திருமக்கமா நகரமும், கஃபா ஷரீஃபும் அமைந்திருக்கும் பிரதேசம், கல் மலைகளைக் கொண்ட ஒரு பள்ளத்தாக்கு அங்கு தண்ணீர் என்பதே இல்லை. மலைகளில் கூட நிழல் தரக்கூடிய மரங்கள் வரை வழியில்லை மிகவும் வறண்ட பாலைவனம், இறைவன் இதில் ஜம்ஜம் கிணறைத் தோன்றச் செய்து திரு சுஃபாவைச் சுற்றிலும் குறைஷியரை வாழச் செய்தான். ஆயினும், அவர்கள் வாழும் இடம் திருகஃபாவை ஒட்டியதால், அதன் எல்லைக்குள் எவரும் சண்டை போடலாகாது என்ற எண்ணம் அனைவர் உள்ளத்திலும் உண்டாயிற்று.

கொலை கலகம், கொள்ளை ஆகியவற்றையே நித்திய தொழிலாகக் கொண்ட அரபியர், ரம் எல்லைக்குள் வந்ததும் தங்களது பஞ்சமா பாதகச் செயல்களை அடியுடன் மறந்து விடுவர். அவ்வாலயத்தைச் சுற்றி வாழும் குறைஷியர்பால் அவர்களுக்கு அபிமானமும் மதிப்பும் உண்டாகி, ரம் எல்லைக்கு உள்ளிலும் வெளியிலும் அவர்களுக் பூரண அபயமேற்படும்படி இறைவன் செய்துள்ளான்.
அன்றியும். ஆண்டுதோறும் திருகஃபாவை ஹஜ் செய்ய வேண்டும் என்ற கடமையை இறைவன் ஏற்படுத்தி அதனை நிறைவேற்ற வேண்டும். என்ற எண்ணத்தையும் மக்களுக்கு உண்டாக்கினான். அவர்கள் கூட்டங் கூட்டமாகச் சென்றனர். மேலும், தங்களுடன் வேண்டிய உணவுப் பொருள்களை எடுத்துச் செல்லவும், தாங்களும் புசித்து, அங்குள்ளவர்களையும் புசிக்கச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தால் தேவைக்கு அதிகமாகவே கொண்டு செல்லும் பழக்கத்தையும் ஏற்படுத்தினான்.

திருமக்காவுக்குச் செல்லும் ஹாஜிகளையோ அவர்களது பொருள்களையோ எவரும் எதுவும் செய்யலாகாது என அந்த மாதங்களை சங்கையான மாதங்களாக ஆக்கினான். அதில் கலகம் முதலியவற்றை அரபு நாடு முழுவதிலுமே நிகழாத வண்ணம் இறைவன் தடுத்து, உணவுப் பொருள்கள் சுலபமாகப் போய்ச் சேர ஏற்பாடு செய்திருப்பதும் அவனுடைய பேரருளாகும்.
எனவே, இவ்விரு பேருபகாரத்தையும் இறைவன் இந்த சூரத்தின் இறுதியில் சுட்டிக் காட்டி பசி, பிணியை அகற்றுவதும் அபயத்தையளிப்பதும் மெய்யான இறைவனைத் தவிர வேறு எவராலும் முடியாது; முஷ்ரிக்குகள் வழிபடும் தெய்வங்கள் இவற்றைச் செய்கின்றனவா? என்பதை ஆராய வேண்டும் என குறைஷியருக்கு அறிவுறுத்தப்பட்டிருக்கிறது.
தவிர, அப்றஹத்துல் அஷ்ரமாலும் அவனது வீரர்களாலும் திரு மக்காவில் குறைஷியருக்கு பயமேற்பட்டிருந்தது. அவர்களை இறைவன் பறவைகளால் மடியச் செய்து, அவர்களுக்கு அவன் அபயமளித்தான். அவர்கள் தங்களுடன் கொண்டு வந்த மதிக்க முடியாத செல்வங்கள் குறைஷியருக்கு சுலபமாகக் கிடைத்ததால், அவர்களது செல்வ நிலையும் உயர்ந்தது. எனவே. இவ்விரு உபகாரங்களையும் இறைவன் இங்கு சுட்டிக் காட்டியிருப்பதாகவும் கொள்ளலாம்.

குறைஷியரின் பயணம் தற்கால பயண ஆய்வாளர்கள் செய்த ஆராய்ச்சியின்படி அமைந்திருப்பதை பாருங்கள் பயணங்களால் கிடைக்கும் பயன்கள் என்ன? என்பது பற்றி
பயண ஆராய்ச்சியாளர் ஃபைலெப் செபாஸ்டியன் கூறுவது ¡
புத்தகம் கற்றுத்தருவதை விட பன்மடங்கு பாடங்களை பயணங்கள் கற்றுத்தரும். நேரத்தை விற்றேனும் நினைவுகளை பெற வேண்டும் என்பர். பயண டைரி எழுதத் தயாராகுங்கள்....
வீட்டில் இருந்து அலுவலகம் செல்வதும் ஒரு பயணம் தான். வீட்டிலிருந்து அண்டார்டிகா செல்வதும் பயணம் தான். பூமியில் இருந்து பால்வெளி தாண்டி போவதும் பயணம் தான். தூரம் எதுவாக இருந்தாலும் அதில் இருந்து நாம் கற்கும் பாடங்கள் தான் நம் பயணத்தை மதிப்பானதாக மாற்றுகிறது.

ஆராய்ச்சியாளர் ஃபைலெப் செபாஸ்டியன், "நிறைவான பயண அனுபவம் என்பது திருப்தியைப் பற்றியது மட்டுமல்ல. தனிப்பட்ட முறையில் நமது பயணச் செயல்பாடுகளை நாம் எவ்வளவு அர்த்தமுள்ளதாகக் கண்டோம் என்பதும் கூட" என்ற வலுவான கருத்தை முன்வைக்கிறார்.
பயணங்கள் நமக்கு எதையெல்லாம் கற்றுத்தருகின்றன என்பது பற்றி ஃபைலெப் செபாஸ்டியன்,
இக்கட்டான சூழல் வரும் வரை நம்மை பற்றி நமக்கே சரியாக தெரியாது. நம்மால் எது முடியும், முடியாது என்பது பயணம் செய்யும் போது தான் தெரியும். வீட்டில் இருந்து கடைக்கு நடக்க முடியாத ஒருவர் பயணத்தின் போது 5 கிமீ அசால்டாக நடப்பார்.
தனது இயலாமையை உணர்ந்து கொள்ளும் தருணங்களை பயணம் தரும். நம்மால் ஒரு காரியத்தை செய்ய முடியும். ஆனால் இவ்வளவு நாள் நமக்கே தெரியவில்லையே என்று உணரும் தருணங்களும் உண்டு. நம்மை நாம் தெரிந்துகொள்ள அவ்வளவு பரந்துபட்ட வாய்ப்புகளை பயணம் ஏற்படுத்தி கொடுக்கும்.
எனக்கு எது வரும் வராது என்று தெரிந்த பிறகு, என்னால் முடியாததை நான் முயற்சித்து அதற்கு நான் என்னை தயார்படுத்தி கொள்வேன் என்பவர்களுக்கு பயணமே வழி. ஒருவனுக்கு உயரம் என்றால் பயம். அதை முறியடிக்க முயலும்போது, மலையேற்றம் , பஞ்சி ஜம்பிங் , பாரா கிளைடிங் முதலியவற்றை மேற்கொள்ளலாம். உயரத்தின் பயத்தை பழக்கத்தால் மாற்றிவிடலாம்.

இந்த உலகம் சிறியதே. ஆனால் இதில் வாழும் மனித இனங்கள் ஏராளம். கிணற்றுத் தவளைக்கு கடலை பற்றி தெரியாது. வெளியில் வந்தால் தான் மற்ற மக்களின் கலாச்சாரம் , பண்பாடு, வாழ்வியல், மொழி, வரலாறு முதலியவற்றை கற்றுக்கொள்ள முடியும். உலகத்தில் எந்த மாதிரியான வாழ்க்கை முறைகள் எல்லாம் இருக்கின்றன என்பதைக் கற்றுத் தரும். எப்படியும் வாழலாம் என்று கற்றுக் கொள்வோம்.
பலரது வாழ்க்கை மாறியதற்கு பயணங்களையே காரணம் என்று சொல்வர். பணத்தின் போக்கு, அதில் சந்தித்த மனிதர்கள், நடந்த ஏதாவது ஒரு நிகழ்வு, அவரது வாழ்க்கை பற்றிய புரிதலையே மாற்றி விடும்.
காந்தி ஆப்பிரிக்காவில் கருப்பினத்தவர்களுக்காக போராட ஆரம்பித்தது பீட்டர்மரிட்ஸ்பேர்க் பயணத்தால் தான். அரை நிர்வாண பக்கிரி ஆக மாற காரணம் அவரது மதுரை பயணம். வாழ்க்கையை நாம் பார்க்கும் பார்வை அப்படியே தலைகீழாக கூட மாறிவிடும்.

ஒரு சிலர் பிறந்ததில் இருந்து தனியாகவே வளர்ந்து, எல்லாம் தனக்கு என வாழ்ந்து பழகியிருப்பர். ஒரு பென்சிலைக் கூட கடனாக தர மாட்டார்கள். அவர்கள் மக்களோடு மக்களாக கூட்டத்தோடு கலந்து எல்லாவற்றையும் பகிர்ந்து வாழ கற்றுக் கொடுப்பது பயணம் தான். எல்லோரும் சமம். எதுவும் நமக்கு மட்டுமானது இல்லை என்ற எண்ணத்தை கொண்டு வரும்.
பாட்டி வீட்டுக்கு போவது கூட பயணம் தான். பாட்டி, தாத்தாவின் தனிமையை 4 நாள் அவர்கள் வீட்டுக்கு போகும் பேரப்பிள்ளைகள் போக்கிவிடுவர். அவர்கள் சென்ற பின்னும் அந்த கதை பேசி பெரியவர்கள் மகிழ்ச்சி கொள்வர். பாட்டி பேரக்குழந்தை பந்தங்கள் எல்லாம் வாழ்க்கை முழுக்க இனிய நினைவாக மிதக்கும் கதைகள்.
எல்லா உறவுகளும் அப்படிதான்.ஒரு சிறிய பயணத்தால் சரி செய்யப்படும். எல்லோரும் சேர்ந்து செல்லும் குடும்ப சுற்றுலா மேலும் உதவி செய்யும். பயணத்தின் போது வரும் அனுபவங்கள் அவர்களுக்குள்ள மனக்கசப்பை போக்கி பாசப்புரிதல்களை ஏற்படுத்தும்.

அம்மா, அப்பா, மகன், மகள் என்று வாழும் நியூக்ளியர் குடும்பத்தைத் தாண்டி டெல்லி நண்பன், அசாம் அண்ணன், குஜராத் தம்பி, கொலம்பியா நண்பன் என்று பயணங்களில் சந்திக்கும் நபர்களால் நம் குடும்ப வட்டம் எல்லை அற்றதாகும். பாசம் பரிமாறப்படும்.
வேலை, படிப்பு, கடன், பிரச்சனை என்று ஒரு வட்டத்திற்குள் புழுங்கி கொண்டிருக்கும் நேரத்தில் எல்லாவற்றையும் விட்டுவிட்டு 2 நாள் செய்யும் பயணம் மன அமைதியை உண்டாக்க முயலும். இந்த சிறிய இடைவேளை பிரச்சனைகளை சரி செய்ய புதிய யோசனைகளை கொடுக்கும்.

ஸ்காட் ஹாரிசன் என்பவர் நியூயார்க் நகரத்தில் மது தயாரிப்பு நிறுவனம் நடத்தி வந்தார். ஆப்பிரிக்கா நாட்டிற்கு ஒரு முறை பயணம் மேற்கொண்டார். அப்போது அங்கே அவர் பார்த்த வறட்சி, வறுமை, சுகாதாரமற்ற நிலை அவரை எதோ செய்தது.

அதன் பிறகு சுகாதாராமான தண்ணீர் மற்றும் சூழலை ஏற்படுத்த ஆப்பிரிக்காவில் தொண்டு தொண்டு நிறுவனம் நடத்தி வருகிறார். இப்படியான புதிய தொடக்கங்கள் பயணங்களால் உண்டாகின்றன.

இருப்பது ஒரு வாழ்க்கை தான். பறவைகளைப்போல் இறக்கை இல்லை பறந்து உலகைக் காண. கால்களால் நடந்து கற்றுக்கொள்ளுங்கள். புத்தகம் கற்றுத்தருவதை விட பன்மடங்கு பாடங்களை பயணங்கள் கற்றுத்தரும். அதனால் சம்பாதிக்கும் பணத்தில் ஒரு பங்கை பயணத்திற்காக செலவுசெய்து நினைவுகளையும், வாழ்க்கை பாடங்களையும் கற்றுக்கொள்ளுங்கள். நேரத்தை விற்றேனும் நினைவுகளை பெற வேண்டும் என்பர். அதற்கு பயண டைரி எழுதத் தயாராகுங்கள்.

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 14
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் ) பகுதி 1




اَرَءَيْتَ الَّذِىْ يُكَذِّبُ بِالدِّيْنِ

(நபியே!) நியாயத் தீர்ப்பைப் பொய்ப்பிக்கின்றானே அவனை நீர் பார்த்தீரா?
فَذٰلِكَ الَّذِىْ يَدُعُّ الْيَتِيْمَۙ

பின்னர் அவன்தான் அநாதைகளை விரட்டுகிறான்.
وَ لَا يَحُضُّ عَلٰى طَعَامِ الْمِسْكِيْنِ

மேலும், ஏழைக்கு உணவளிப்பதின் பேரிலும் அவன் தூண்டுவதில்லை.
فَوَيْلٌ لِّلْمُصَلِّيْنَۙ

இன்னும், (கவனமற்ற) தொழுகையாளிகளுக்குக் கேடுதான்.
الَّذِيْنَ هُمْ عَنْ صَلَاتِهِمْ سَاهُوْنَۙ

அவர்கள் எத்தகையோர் என்றால் தம் தொழுகையில் பராமுகமாக(வும், அசிரத்தையாக)வும் இருப்போர்.
الَّذِيْنَ هُمْ يُرَآءُوْنَۙ

அவர்கள் பிறருக்குக் காண்பிக்(கவே தான் தொழு)கிறார்கள்.
وَيَمْنَعُوْنَ الْمَاعُوْنَ

மேலும், அற்பமான (புழங்கும்) பொருள்களைக் (கொடுப்பதை விட்டும்) தடுக்கிறார்கள். (குர்ஆன் : 107:1-7)

ஹளரத் ஜாபிர் ரலியல்லாஹுதஆலா அன்ஹு, இப்னு அப்பாஸ் ரலியல்லாஹுதஆலா அன்ஹுமா, அத்தாஉ ரலியல்லாஹுதஆலா அன்ஹுஉட்பட பெரும்பாலானவர்கள், இந்த சூரத்து திருமக்காவில் அருளப்பட்டதெனக் கூறுகின்றனர். ஆனால், இது மதீனாவில் அருளப்பட்டதாக கத்தாதா ரலியல்லாஹுதஆலா அன்ஹு கூறியுள்ளார். சிலர் இதன் முற்பகுதி ஆஸ் பின் வாயில் என்பவனைக் குறித்தும், பிற்பகுதி திரு மதீனாவில் அப்துல்லாஹ் இப்னு உபை என்னும் முனாஃபிக்கைக் குறித்தும் அருளப்பட்டதாகக் கூறியுள்ளார்கள்.
இந்த சூரத்தில் ஒழுக்க விழுப்பங்களுக்கும், நரக வாழ்வுக்கும், சமூக ஒற்றுமைக்கும் இன்றியமையாத முக்கிய விஷயங்கள் கூறப்பட்டு இருக்கின்றன.
மனிதன் செய்யும் நன்மை, தீமையான காரியங்களுக்கு இவ்வுலகிலேயே பிரதி பலன் கிடைக்கிறது. பின்னர் அவன்
மரணமடைந்த பிறகும் மறுமையில் அவனது செய்கைகளுக்குரிய பிரதிபலனை அடைய வேண்டும்.
இவ்வுலகில் செய்யும் ஒவ்வொரு செய்கைக்கும் மறுமையில் பதில் அளிக்க வேண்டும் என்ற நம்பிக்கை ஒருவருக்கு இருக்குமாயின், அவர் தீய நடத்தைகளில் ஒரு போதும் ஈடுபடமாட்டார். பிறரைத் தொந்தரவு செய்யவோ அநியாய அக்கிரமங்களைச் செய்யவோ மனந் துணியமாட்டார்.
இந்நம்பிக்கை இல்லாதவர் எதையும் தாராளமாகத் துணிந்து செய்வார். எனவே, இக்கொள்கை அனைத்து அக்கிரமங்களையும் ஒடுக்குவதற்கு சிறந்த மருந்தாகும். இந்த சூரத்தின் முதலாவது ஆயத்தில் அஸ்திபாரமான இக்கொள்கை வற்புறுத்தப்பட்டிருக்கிறது.

கொள்கைக்குப் பிறகு நடத்தை அவசியமானது. நடத்தை என்பது பல வகை. முக்கியமாக மனிதன் ஏழையாயினும், தரித்திரனாயினும், படித்தவனாயினும், பாமரனாயினும், யாராயிருந்தாலும் அவனது ஒழுக்கம் விழுப்பமாக இருக்க வேண்டும். இது இல்லாவிடில் அவனிலுள்ள மற்றைய நல்ல அம்சங்களெல்லாம் மதிப்பில்லாமற் போய்விடும்.
ஒழுக்கம் இரு வகைப்படும். ஒன்று தீமையை விலக்கல், மற்றொன்று நன்மையைக் கொண்டு வரல்.
இவ்விரண்டிலும் கூட தீமையை விலக்குவதுதான் முதன்மையானது. எனவேதான் இறைவன் இவ்வத்தியாயத்தின் இரண்டாம் ஆயத்தில் அனாதையை துன்புறுத்துபவரை இகழ்ந்து கூறியுள்ளான். பின்னர் மூன்றாம் ஆயத்தில் நன்மையைக் கொண்டு வருவதாகிய ஏழைகளுக்கு உணவளிக்கத் தூண்டாமல் இருப்பதைக் கண்டித்துள்ளான்.

اَرَءَيْتَ الَّذِىْ يُكَذِّبُ بِالدِّيْنِ

1 ) (நபியே!) நியாயத் தீர்ப்பைப் பொய்ப்பிக்கின்றானே அவனை நீர் பார்த்தீரா?
நியாயத் தீர்ப்பு நாள் என்பது இருக்குமா என்ற சந்தேகம் கேள்வி மனிதரிடம் இருந்து கொண்டே இருக்கிறது இருக்கும். அதற்குரிய ஆதாரங்கள்
நியாயத் தீர்ப்பு நாள் நிச்சயமானது என்பதை நிறுவக் கூடிய ஆதாரங்கள் மிகத் தெளிவானவை என்பது நமது நம்பிக்கையாகும்.
1. படைப்பின் நோக்கமானது, மனிதன், இவ்வுலகில் பிறந்து பிரச்சினைகளுக்கு மத்தியில் சில நாட்கள் வாழ வேண்டும், அதன்பின் அழிந்து விடுவது என்ற குறுகிய போக்கைக் கொண்டதல்ல என்பதற்கு இவ்வாழ்வே போதுமான அத்தாட்சியாகும்.
'உங்களை நாம் படைத்ததெல்லாம் வீணுக்காகத் தான் என்றும் நிச்சயமாக நீங்கள் எம்மிடம் மீளக் கொண்டு வரப்பட மாட்டீர்கள் என்றும் எண்ணிக் கொண்டீர்களா?" (23: 115)
இங்கு குறிப்பிடத்தக்க விசயம் யாதெனில் மஆத் இல்லையெனில், மனித வாழ்க்கையும், படைப்பும் வீணானதாகவும், அர்த்தமற்றதாகவும் போயிருக்கும் என்பதை இவ்வசனம் சுட்டிக் காட்டுகிறது.
2. இறைவனது நீதி அவசியமானது. இவ்வுலகில் நல்லவர்களும் தீயவர்களும் சம அந்தஸ்துப் பெற்றவர்களாக இருப்பதையும், சில வேளைகளில் நல்லவர்களை விட தீயவர்கள் அந்தஸ்தில் உயர்ந்தவர்களாக மாறிவிடுவதையும் காண முடிகின்றது. ஆனால் நல்லோரும் தீயோரும் அவரவரது செயல்களுக்கான

வெகுமதிகளைப் பெற்றுக் கொள்ளும் விதத்தில் அல்லாஹ்வினால் நீதியான கூலி வழங்கப்படுவது அவசியமாகின்றது.
'தீமைகளைச் சம்பாதித்துக் கொண்டவர்கள், விசுவாசம் கொண்டு நற்கருமங்களைச் செய்தவர்களைப் போன்று அவர்களையும் நாம் ஆக்கிவிடுவோம் என்று எண்ணிக் கொண்டார்களா? அவர்கள் உயிர் வாழ்வதும், மரணித்து விடுவதும் சமமே. அவர்கள் இதற்கு மாறாக தீர்ப்புச் செய்து கொண்டது மிகக் கெட்டதாகி விட்டது." (45: 21)

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 15
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் ) பகுதி – 2

فَذٰلِكَ الَّذِىْ يَدُعُّ الْيَتِيْمَۙ
" பின்னர் அவன்தான் அநாதைகளை விரட்டுகிறான்."(குர்ஆன் 107 : 2 )
உண்மையான அனாதை யார் தெரியுமா?
இல்லறத்தை துறந்தால் துறவி.
வாழ்க்கைத் துணையை இழந்தால் விதவை.
செல்வத்தை இழந்தால் ஏழை.
சொந்த நாட்டை துறந்தால் அகதி.
பெற்றோரை இழந்தால் அனாதை.
அனாதை என்பதற்கு தமிழ் அகராதியில் வரும் பொருள் ‘திக்கற்றவன்’, ‘ஆதரவற்றவன்’ ஆகும்.
‘ஆதரிப்பார் அற்றவன் அனாதை’, ‘ஆதரிக்கும் பெற்றோரை இழப்பவன் அனாதை ஆவான்’ என இஸ்லாம் கூறுகிறது.

பெற்றோரில் இருவரோ அல்லது ஒருவரோ தவறிவிட்டால் இருவரையோ அல்லது ஒருவரை இழந்துவிட்ட குழந்தை ‘அனாதை குழந்தை’ என்ற அடைமொழியுடன் இரக்கமாக அழைக்கப்படுகிறது.
ஒரு குழந்தை தன் பெற்றோரின் அரவணைப்பிலும் ஆதரவிலும், அன்பிலும், அக்கறையிலும், பாதுகாப்பிலும், கண்காணிப்பிலும் வளர்கிறது.
பெற்றோரில் இருவரோ அல்லது ஒருவரோ தவறிவிட்டால் இருவரையோ அல்லது ஒருவரை இழந்துவிட்ட குழந்தை ‘அனாதை குழந்தை’ என்ற அடைமொழியுடன் இரக்கமாக அழைக்கப்படுகிறது.
அனாதைகளை ஆதரிப்பதால் அனாதை இல்லங்கள் ஊர் தோறும் தோற்றுவிக்கப்பட்டிருக்கின்றன. முதல் அனாதை இல்லத்தை தோற்றுவித்தவன் அவனே இறைவன் ஆவான். அவன் அன்பாளன்; கிருபையாளன்.
அபூஜஹ்ல் ஒரு அனாதைப் பையனுக்கு பொறுப்பாளனாய் இருந்தான். அப்பையன் தன்னுடைய சொந்தப் பொருளிலிருந்து தன் செலவுக்கு ஏதேனும் கேட்டு வாங்கலாம் என அபூஜஹ்லிடம் நிர்வாணமாக வந்தான். அப்பையனை அவன் பலமாகத் தள்ளித் தூரத்திவிட்டான்.
அஜஹ்ல் தனக்கு எதையும் தருவான் என்ற நம்பிக்கையை அப்பையன் இழந்தான். அப்போது குறைஷித் தலைவர்கள் அப்பையனிடம் "நீ முஹம்மதிடம் சொல், அவர் உனக்காக அஜஹ்லிடம் சிபரிசு செய்வார்" என்று கூறினார்கள்.

அக்குறைஷித் தலைவர்கள் இதை கேலியாகக் கூறினார்கள். அப்பையன் உண்மை என்றே நம்பினான்.
எனவே, அப்பையன் தனது நிலையை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் சொன்னதும், அப்பையனுடன் அஹ்லிடம் சென்று அப்பையனுக்குரிய பொருள்களைக் கொடுக்குமாறு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

அபூஜஹ்லும் எவ்விதத் தாமதமுமில்லாமல் அப்பையனுக்குரிய சகல பொருள்களையும் குறைவில்லாமல் கொடுத்தான்.
இதனைக் குறித்து மற்றைய குறைஷித் தலைவர்கள் அபூஜஹ்லைக் குறை கூறிய போது "முஹம்மதின் இரு ஓரங்களிலும் இரு ஆயுதங்களிருப்பதைப் பார்த்தேன். நான் அவர் வேண்டுகோளுக்கு இணங்கவில்லையானால், அந்த ஆயுதங்களால் நான் குத்தப்பட்டு மாண்டிருப்பேன். இதனை நீங்கள் உணரவில்லை போலும்" என்று பதிலளித்தான்.
'(நபியே) அவன் உம்மை அனாதையாகக் கண்டு அவன் அரவணைக்கவில்லையா?'
'உம்மை வழி அறியாதவராகக் கண்டு வழிகாட்டினான்'.
'உம்மை வறுமையில் கண்டு தன்னிறைவு பெற்றவராக்கினான்' குர்ஆன்: (93–6,7,8)
அனாதைகளின் முக்கியமான மூன்று அம்சங்களை பற்றி மேற்கூறப்பட்ட திருக்குர்ஆனின் வசனம் கோடிட்டு காட்டுகிறது.

1. அனாதைகளின் அரவணைப்பு, 2. அனாதைகளின் அறியாமையை போக்கி அவர்களை அறிவுசார்ந்த சமூகமாக மாற்றிக் காட்டுவது, 3. அவர்களை பொருளாதாரத்தில் தன்னிறைவு பெற்றவர்களாக ஏற்றம் காணச்செய்வது.
இவை அடிப்படையான அம்சங்கள். பாதுகாப்பு, கல்வி, பொருளாதாரம் ஆகியவை தான் ஒரு அனாதையை சமூகத்தில் அந்தஸ்து உடையவனாக மாற்றிக்காட்டுகிறது.
பெற்றோரை இழந்த குழந்தை, பருவ வயதை அடையும் வரைதான் அனாதை. பருவ வயதை அடைந்துவிட்ட எவரும் இஸ்லாத்தில் அனாதை இல்லை. பருவ வயதை அடையும் வரை நன்மை தரும் செயலாக உள்ளது.
'நானும், அனாதையின் காப்பாளரும் சொர்க்கத்தில் இப்படி இருப்போம் என்று கூறியபடி நபி (ஸல்) அவர்கள் தங்களின் சுட்டு விரலாலும், மற்றொரு விரலாலும் (சற்றே இடைவெளிவிட்ட விரல்) சைகை செய்தார்கள்' (அறிவிப்பாளர்: ஸஹ்ல்பின் ஸஅத் (ரலி)
அனாதை என்பது நிரந்தரமான ஒரு அடையாளம் அல்ல. பெற்றோரை இழந்த குழந்தை பருவ வயதை அடையும் வரைதான் அனாதை. இது தற்காலிகமானது.
'பருவ வயதை அடைந்த ஒருவர் அனாதையாக இருக்கமுடியாது; மேலும் மாதவிடாய் ஏற்பட்ட ஒருத்தியும் அனாதையாக இருக்க முடியாது' என நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்.
சரி உண்மையான அனாதை யார் தெரியுமா? இதோ அறிவுக் கருவூலம் அலி (ரலி) அவர்களின் சிந்தனையை கவனிப்போம்.

'பெற்றோரை இழந்தவன் உண்மையான அனாதை இல்லை. உண்மையான அனாதை என்பவன் கல்வியும், ஒழுக்கத்தையும் இழந்தவன் தான்'.
கல்வி, ஒழுக்கம் ஆகிய இரண்டையும் இழந்தவன் நிரந்தரமான அனாதை ஆவான்.
நபி (ஸல்) அவர்களும் அனாதை தான். அவர்கள் பருவ வயதை அடையும் இந்த அடையாளம் தற்காலிகமாக இருந்தது. ஆனாலும் நபி (ஸல்) அவர்கள் கல்வியையும், ஒழுக்கத்தையும் இழந்த நிரந்தரமான அனாதை அல்ல.
நபித்தோழர்களில் அபூ ஹுரைரா (ரலி), ஜுபைர் பின் அவ்வாம் (ரலி) ஆகிய இருவரும் அனாதைகளே. எனினும் இவர்கள் இழந்தது பெற்றோரைத்தான். கல்வியையும் ஒழுக்கத்தையும் அல்ல.
குடும்பத்தில் அனாதை; கல்வியில் சாதனை. இந்த சாதனைக்கு சொந்தக்காரர் அபூஹுரைரா (ரலி) அவர்கள் ஆவார்கள். அனாதையிலும் கடும் வறுமையிலும் வாழ்ந்த அவர் '5374' நபி மொழிகளை அறிவித்திருக்கிறார். அனாதையாக பிறந்தாலும் கல்விக்காக வாழ்ந்தவர் அவர். இவ்வாறே எத்தனையோ அறிஞர்கள் பெற்றோரை இழந்த அனாதைகளானாலும், கல்வியையும், ஒழுக்கத்தையும் ஒரு போதும் இழக்கவில்லை.

இந்த பட்டியலில் இமாம் புகாரி, இமாம் ஷாபி, இமாம் அஹ்மது பின் ஹன்பால், இமாம் இப்னு ஜங்ஸி, இமாம் அவ்ஜாயி, இமாம் சுயூதி, மாமேதை இப்னுஹஜர், இமாம் தவ்ரி ஆகியோர் அனாதைகளே. என்றாலும் கல்வியையும் ஒழுக்கத்தையும் அவர்கள் ஒருபோதும் இழக்கவில்லை.
அனாதைகள் எனும் அடையாளத்தைவிட இஸ்லாமிய மார்க்கமேதைகள் எனும் பட்டத்துடன் அவர்கள் பேரும், புகழும் பெற்று இன்று வரைக்கும், உலகம் அழியும் வரைக்கும் அழியாப்புகழுடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இவர்களை புகழுடன் வாழ வைத்தது கல்வியும் ஒழுக்கமும் தான்.

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 16
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் ) பகுதி 3



وَ لَا يَحُضُّ عَلٰى طَعَامِ الْمِسْكِيْنِ
மேலும், ஏழைக்கு உணவளிப்பதின் பேரிலும் அவன் தூண்டுவதில்லை. (குர்ஆன் 107 : 3)
உணவு என்பது ஓர் உயிரினத்திற்குத் தேவையான ஊட்டச்சத்து கிடைப்பதற்காக உண்ணப்படும் எந்தவொரு பொருளையும் குறிக்கும்.
உணவு வழக்கமாக தாவரங்கள் அல்லது விலங்குகளிலிருந்து தோன்றுகிறது. கார்போவைதரேட்டுகள், கொழுப்புகள், புரதங்கள், உயிர்ச்சத்துக்கள், தாதுக்கள் போன்ற அவசியமான சத்துகளை உணவு பெற்றுள்ளது. உயிரினத்தால் உட்கொள்ளப்படும் உணவு அவ்வுயிரினத்தின் உடல் செல்களால் தன்வயமாக்கப்பட்டு, வளர்ச்சியடையவும் உயிர்வாழவும் தேவையான ஆற்றலை வழங்குகிறது.

'உடம்பை வளர்த்தேன், உயிர் வளர்த்தேனே' என்பது திருமந்திரம் தந்த திருமூலரின் வாக்கு. இந்த உடலை வளர்த்து உணவை எளிதாக பெறுவதற்கு நம் முன்னோர்கள் பல நுட்பமான வழிமுறைகளை, பயிற்சிகளை நமக்கு விட்டுச் சென்றுள்ளனர். உடல் வளர்த்தல் என்பது வெறும் உடம்பை மட்டுமே பேணிக் காக்கும் செயல் அல்ல; அதில் உள்ள உயிரையும் வளர்ப்பதுவே. அதற்கு உணவு மிக அவசியமாகிறது

குர்ஆன் கூறும் மேற்கண்ட வசனம் கூறுவது மறுமையைப் பற்றிய விசுவாசமின்மைக்கு மற்றொரு அடையாளம். மனிதன் என்றால் மண்ணுயிரை தன்னுயிர் போல் கருத வேண்டும். அதாவது இறைவனது சிருஷ்டிகள் மீது தயை இருக்க வேண்டும். தமிமின் மெலியாரைப் பார்த்து இரக்கம் கொண்டு இயன்றவரை உதவி செய்ய வேண்டும். தன்னால் உதவி செய்வதற்கு இல்லையாயின் இன்னொருவரை கொண்டாயினும் உதவி செய்விக்க வேண்டும். தானும் அவ்வாறு செய்யாமலும் பிறரை செய்விக்காமலும் இருப்பது இறைபயம் இல்லாததை காண்பிக்கிறது. எனவே அவனால் எவருக்கும் எவ்வித நன்மையும் இல்லை.
உலகில் பட்டினியால் பாதிக்கப்பட்டுள்ள 88 நாடுகளில் இந்தியா 66 ஆவது இடத்தில் இருக்கிறது."

உலகெங்கிலும் சத்தான உணவின்றி அரைகுறைப் பட்டினி நிலையில் வாழும் மக்களில் ஏறத்தாழ 27 சதவீதத்தினர் (23 கோடி பேர்) இந்திய நாட்டைச் சேர்ந்தவர்கள்;
இந்தியாவில் ஒவ்வொரு மாதமும் 75,000 குழந்தைகள் சத்தான உணவின்றி இறந்து போகின்றன;
உணவுப் பொருட்களின் விலையேற்றத்தால் ஒவ்வொரு ஆண்டும் ஏறத்தாழ 15 இலட்சம் குழந்தைகள் அரைகுறைப் பட்டினி நிலைக்குத் தள்ளப்படுகின்றன
இன்னும் இந்த நாட்டில் ஒரு வேளை உணவுக்கு கூட வழியில்லாமல் வறுமைக் கோட்டிற்கு கீழே 30 சதவீதம் மக்கள் அவதிப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள் - என பல்வேறு புள்ளிவிவரங்கள் வெளிவந்துள்ளன.
கி.பி 630 ல் அரபுலகத்தை கடுமையான பஞ்சம் வாட்டியது. கிராமவாசிகள் பலர் பசி பட்டினியால் இறந்து போனார்கள். பன்னூற்றுக் கணக்கானோர் தலைநகர் மதீனாவை முற்றுகையிட்டனர். அங்குதான் உணவு பங்கிடப் பட்டு வந்தது.
உடனே உமர் (ரலி) சிரியா இராக் பாலஸ்தீனில் உள்ள கவர்னர்களுக்கு கடிதம் எழுதினார். சரியான நேரத்தில் ஆளுநர்களுடை உதவி வரவே பல்லாயிரக்க்கணக்கானோர் உயிர் பிழைத்தனர். சிரியாவின் ஆளுநராக இருந்த அபூ உபைதார் (ரலி) பெருமளவிலான உதவிப் பொருட்களை அனுப்பியதோடு ஒரு கடிதமும் எழுதினார்.
"நான் உங்களுக்கு உணவுப் பொதிகளைச் சுமந்த ஒட்டக அணிகளை அனுப்பி வைக்கிறேன். அதன் ஒரு முனை சிரியாவில் இருக்கும்,மறு முனை மதீனாவில் இருக்கும் " என அதில அபூஉபைதா எழுதியிருந்தார்.
மதீனாவை தேடி வந்த மக்களின் துயரை ஆற்றிய பிறகு பாலைவனத்தில் உள்ளோடிய மக்களை தேடிச் சென்று அவர்களுக்கு உதவ உமர் (ரலி) ஆட்களை அனுப்பினார். அக்காலங்களில் இரவு தோறும் மக்களை உமர் பொது விருந்துக்கு அழைத்தார். நூற்றுக்கணக்கானோர் அந்த விருந்தில் கலந்து தங்களது பசியை ஆற்றிக் கொண்டனர். (ஹய்கல்)

நிலமை ஓரளவு சீரடைந்த்தும் மதீனாவில் தங்கியிருந்தவர்கள் தங்களது ஊர்களுக்குச் செல்வதற்கு தேவையான ஏற்பாடுகளை உமர் செய்து கொடுத்தார்.
மக்களுக்கான அத்தியாவசியக் கடமைகளை நிறைவேற்றுவதை அவர்களுக்கு தான் செய்கிற கிருபையாக கொடையாக அவர் அர்த்தப் படுத்த முயல்வில்லை. கடமையாக கருதினார்.
இறப்பதற்கு நான்கு நாட்களுக்கு முன்னாள் தோழர்களோடு பேசுகிற போது “அல்லாஹ் என்னை உயிரோடு வைத்திருந்தால், இராக் வாசிகளின் விதவைப் பெண்களை எனக்குப் பிறகு வேறெவரிடமும் கையேந்தத் தேவையில்லாத நிலையில் தான் விட்டுச் செல்வேன்:” என்று உமர் (ரலி) சொன்னார்.
அல்ஹதீஸ்:- விதவைகளுக்காகவும் ஏழைகளுக்காகவும் பாடுபடுபவர் ஜிஹாது செய்பவரைப் போன்றும், இடைவிடாமல் நின்று வணங்குபவரைப் போன்றும் நோன்பு துறக்காமல் தொடர்ந்து நோன்பு நோற்பவரைப் போன்றும் ஆவார்.
اَوْ اِطْعٰمٌ فِىْ يَوْمٍ ذِىْ مَسْغَبَةٍ ۙ

அல்லது, பசித்திருக்கும் நாளில் உணவளித்தலாகும்.(அல்குர்ஆன் : 90:14)
يَّتِيْمًا ذَا مَقْرَبَةٍ ۙ

உறவினனான ஓர் அநாதைக்கோ,(அல்குர்ஆன் : 90:15)
اَوْ مِسْكِيْنًا ذَا مَتْرَبَةٍ

அல்லது (வறுமை) மண்ணில் புரளும் ஓர் ஏழைக்கோ (உணவளிப்பதாகும்).(அல்குர்ஆன் : 90:16)
ஃபீ யவ்மின் தீ மஸ்கபத்தின் (பஞ்சமுடைய நாளில்) என்று குறிப்பாகக் கூறப்பட்டுள்ளது, செழிப்பான காலத்தில் கையில் இருப்பவரும் இல்லாதவரும்கூட, பிறருக்கு உணவளிக்கவோ உதவி செய்யவோ பின்வாங்க மாட்டார். அக்காலத்தில் பிறர் உதவியை எதிர்பார்ப்பவர்களும் அதிகமாக இருக்க மாட்டார்கள்.
ஆனால், பஞ்ச காலத்தில் பிறர் உதவியை எதிர்பார்ப்பவர்கள் அதிகமிருப்பர். அக்காலத்தில் கையிலுள்ளவர்கள் தங்களிடமுள்ளது செலவாகி விட்டால் பின்னர் நாம் என்ன செய்வது என்ற அச்சத்தால், இயன்ற வரை தங்களிடமுள்ளதை செலவழிக்காமல் இருக்கவே விரும்புவர். இத்தகைய காலத்தில் பிறருக்கு உதவி செய்வது பெருங்கடமையாக இருப்பது மட்டுமின்றி அதிக நன்மையுமாகும்.

மேலும் இப்பஞ்ச காலத்தில் தங்களிடமுள்ளதைப் பிறருக்குக் கொடுப்பதும்கூட வசதியுள்ளவர்களுக்குக் கொடுக்கத்தான் பொதுவாக யாவரும் விரும்புவர். ஏனெனில், அவர்களிடமிருந்து அதனைத் திரும்ப அடைய முடியும். அல்லது அதற்குப் பதிலாக வேறு விதத்தில் பயனடைய முடியும் என கணக்குப் போடுவார்கள்.
ஆனால் அனாதைகள் பெரும்பாலும் ஏழைகளாக இருப்பர். ஆதலால், ஒருவரும் அநாதையைக் கவனிக்க மாட்டார்கள். பெரும்பாலும் அவர்கள் ஒதுக்கித் தள்ளப்படுபவர்களாகவே இருப்பர். அநாதைகள் சிறுவர்களாக இருப்பதால் இவர்களிடமிருந்து பிரதிபலனை அடைவதற்கும் வாய்ப்பில்லை.
ஆதலால், ஒவ்வொருவரும் இத்தகைய பஞ்ச காலத்தில் தங்கள் உறவினர்களிலுள்ள அனாதைகளை காப்பாற்றி விடுவார்களாயின் சமூகத்திலுள்ள எல்லா அனாதைகளும் காப்பாற்றப்படுவதுடன் பிறரிடம் கையேந்தும் இழிவுக்கும் எச்சமூகமும் எக்குலமும் ஆளாக நேரிடாது.

இது போலவே மிகக் கடுமையான வறுமையில் பீடிக்கப்பட்ட ஏழையும் ஆளாக மாட்டார். முதலாவது அடிமையை விடுவித்தல், இரண்டாவது உறவினர்களிலுள்ள அனாதைகளைக் காத்தல், மூன்றாவது கடும் பஞ்சத்தால் வாடும் ஏழை ஆகிய இம்மூவகையினரையும் காப்பாற்றுதல் மிகப் பெரும் நன்மையாகும்.
பஞ்சங்களை எதிர்கொள்வதற்கு ‘வாழ்க்கை முறை மாற்றம்’ என்பது மிகவும் முக்கியமானது. தேசத்தந்தை மகாத்மா காந்தியடிகள் எப்போதுமே சரியான உணவு முறையைக் கடைப்பிடித்தவர். ஆட்டுப் பால், பழுத்த தக்காளி, ஆரஞ்சுப் பழங்கள், கேரட் சாறு, இஞ்சிச் சாறு, எலுமிச்சை சாறு, கற்றாழைச் சாறு ஆகியவற்றின் கலவை ஒரு குவளை, ஒரு கிண்ணம் அவித்த காய்கறிகள் ஆகியவைதான் காந்தியடிகளின் அன்றாட உணவாக இருந்தது.

அவர் மாலைக்குள் தனது இரவு உணவை முடித்துக்கொள்வார். இருட்டிய பின்னர் அவர் உணவு உண்ணுவதில்லை. ‘வாழ்க்கை முறை மாற்றம்’ என்ற வார்த்தையை அறியும் முன்னரே அவர் சரியான உணவு விகிதத்தைக் கடைப்பிடித்துள்ளார். அவர் இறுதி வரை இந்திய விவசாயின், எளிய மக்களின் அடையாளமாகவே வாழ்ந்து மறைந்தார்.
மக்களின் நிலை எப்படி இருக்கிறது என்று பார்ப்பதற்காக இரவு ரோந்தில் தனியாக ரோந்து போவது உமர் (ரலி) யின் வழக்கம்.
ஒரு நாள் ஒரு வீட்டில் ஒரு தாய் காலிப்பனையை அடுப்பில் வைத்து சமைப்பபது போல பாசாங்கு செய்து கொண்டிருந்தாள். அதன் மூலம் அழுகிற பசிக்காக அழுகிற குழந்தையை சமாதானப்படுத்திக் கொண்டிருந்தாள். இதைப் பார்த்து கண்ணீர் வடித்த உமர் (ரலி) அரசின் கருவூலத்திற்கு சென்று கோதுமை மூட்டை தன்னுடைய தோளில் சுமந்து வந்து அந்தப் பெண்மணியிடம் கொடுத்தார்கள்.

இதை நாங்கள் சுமந்து செல்கிறோம் என்று தோழர்கள் சொன்ன போது. என்னுடை அரசாங்கத்தில் பட்டினியால் ஒரு நாய் இறந்து போனால் கூட என்னிடமே விசாரிக்கப்படும் என்று பதிலளித்தார்கள்.
ஒரு பெண், வீட்டிலுள்ள உணவை வீணாக்காமல் தர்மம் செய்தால் அவள் தர்மம் செய்த நன்மையைப் பெறுவாள். அதைச் சம்பாதித்த காரணத்தால் தர்மத்தின் நன்மை அவளுடைய கணவனுக்கும் கிடைக்கும்; அது போன்றே கருவூலக்காப்பாளருக்கும் கிடைக்கும். இவர்களில் யாரும் யாருடைய நன்மையையும் குறைத்து விடமுடியாது’ என நபி (ஸல்) கூறினார்கள். (ஆயிஷா (ரலி), நூல்: புகாரி)
பக்கத்து வீட்டுக்காரகள் பசித்திருக்க வயிறாற சாப்பிடுகிறவன் உண்மையில் நம்மைச் சார்ந்தவனல்ல என்றார்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ( ஹதீஸ்)

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 17
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் ) பகுதி 4

فَوَيْلٌ لِّلْمُصَلِّيْنَۙ

இன்னும், (கவனமற்ற) தொழுகையாளிகளுக்குக் கேடுதான்.(அல்குர்ஆன் : 107:4)
الَّذِيْنَ هُمْ عَنْ صَلَاتِهِمْ سَاهُوْنَۙ

அவர்கள் எத்தகையோர் என்றால் தம் தொழுகையில் பராமுகமாக(வும், அசிரத்தையாக)வும் இருப்போர். (அல்குர்ஆன் : 107:5)
الَّذِيْنَ هُمْ يُرَآءُوْنَۙ

அவர்கள் பிறருக்குக் காண்பிக்(கவே தான் தொழு)கிறார்கள்.(அல்குர்ஆன் : 107:6)
முதலில் இறைவனை நாம் ஏன் வணங்க வேண்டும் ? என்று ஆராய்வோம்.
புவியில் உலக உயிர்கள் வாழ்வதற்கு ஏற்ற சூழ்நிலைகள் நிறைய தேவைப்படுகின்றது. ஆனால் அவை ஒவ்வொன்றும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டிருக்க வேண்டும். பூமி ஒரு நிரந்தர வேகத்தில் சுற்றிக் கொண்டிருக்கின்றது.
இதை விடுத்து அதன் வேகத்தை கூட்டினாலும் குறைத்தாலும் புவியின் நிலையில் நிறைய மாற்றங்கள் எழும். இரவும் பகலும் நீண்டு அல்லது குறைந்து போய்விடும். மரம் செடி கொடிகள் எல்லாம் உஷ்ணத்தால் எரிந்தோ அல்லது குளிரால் உறைந்தோ போய்விடக்கூடும்.

சூரியனிடமிருந்து ஒரு குறிப்பிட்ட தூரத்தில் புவியிருப்பதால், சூரியன் வெப்பத்தை மிகச் சரியான அளவாக பூமிக்கு கொடுக்கின்றது. இப்போது புவிக்கு கிடைக்கும் உஷ்ணத்தில் பாதியளவிற்கு குறைந்தால் உயிர்கள் குளிரில் உறைந்துவிடும். இரண்டு மடங்கானால் எரிந்து சாம்பலாகிவிடும்.
பூமியின் சாய்நிலையில் மாற்றம் கண்டால் பருவ காலங்கள் இடமாறி கடல் நீராவி வேறு திசையில் பயணித்து கண்டங்களை பனிப் பிரதேசமாகவோ,பாலைவனமாகவோ மாற்றிவிடும்.
சந்திரனின் தூரம் இப்போது இருப்பதைவிட குறைந்தால் பிரமாண்ட அலை எழுச்சி ஏற்பட்டு கண்டங்கள் நீரில் மூழ்கி விடும்.
பூமியின் மேற்படலம் பருமன் குறைந்தால் உயிர்களுக்கு ஆக்ஸிஜன் கிடைக்காது. கடல் ஆழமானால் கார்பன் டை ஆக்ஸைடு மற்றும் ஆக்ஸிஜனை கடல் இழுத்துக் கொள்ளும்.
ஆகாயத்தில் காற்று மண்டலம் இல்லாமல் இருந்தால் விண்கற்கள் பூமியின்மீது மோதி தீ விபத்துக்களை உண்டாக்கும்.
இந்த நிகழ்வுகளெல்லாம் நடக்காமல் அவை அவைகள் ஓர் நியதிக்குள் மிகத் துல்லியமாக இயங்க வைக்கும் அந்த மாபெரும் பெரியோன் யார் ?
உயிர்களுக்கு ஆதாரனமானது ஜீன். சொல்லால் அளவிடமுடியாத அளவில் சிறியவையான இந்த ஜீன்கள் உயிர்களின் தனித்தன்மையை நிர்ணயிப்பது எப்படி ? இதை இயக்கும் அந்த வல்லவன் யார் ? உலக உயிர்களின் அனைத்து ஜீன்களையும் ஒன்று சேர்த்தால் ஓர் கட்டைவிரல் அளவிற்குத்தான் இருக்கும் என்கிறது விஞ்ஞானம். இவ்வளவு சிறிய ஜீன்களும் அதன் துணைகளான குரோமஸோம் செல்களும் ஒவ்வோர் உயிர் மூலத்துணுக்கில் இருந்து கொண்டு அந்தந்த உயிர்களின் அதாவது அனைத்து மனித, விலங்கு, பறவை, தாவரங்களின் குணாம்சங்களுக்கு மூலதிறவுகோளாய் செயல்பட வைக்கும் அந்த அற்புதன் யார் ?
ஆக அணு முதல் அண்டம் வரை படைத்து, பக்குவப்படுத்தி, பரிபாலனம் செய்யும் அப்பேர்ப்பட்ட வல்லோனை, பெரியோனை இறைவன் என்று நம்புகிறோம். ஆதலால் அவனையே வணங்குகிறோம்.

அடிமை என்பது இறைவனுக்கும் இறை அடியார்களுக்கு மிடையில் சம்பந்தப்பட்டது. இறைவனுடன் இணைதல். இது நபிமார்கள், வலிமார்களின் வேலை. இவ்விணைதலால் ஆன்மாவில் பிரகாசமும் ஆனந்தங்களும் உண்டாகின்றன.
மரணமடைந்த பிறகு அவ்வான்மா பரிசுத்த உலகின்பால், உயரமான மேட்டிலிருநது பள்ளத்தின்பால், பந்து வேகமாகச் செல்வது போல் செல்லும். இதனை அடைவதற்காக எத்தனையோ துறவிகளும் ஞானிகளும் காடு, மலை, வனாந்தரங்களுக்குச் சென்று தன்னந்தனியாக இருந்து தூக்கம், உணவு முதலியவற்றை நீக்கி வணங்குகின்றனர்.
என்றாலும் உலக மக்களின் ஆத்ம வியாதிகளுக்கு இரட்சகராய் வந்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இல்லாமல், நாம் தேடும் அகத் தூய்மையையும், ஆத்ம பரிபக்குவத்தையும் அடைய முடியாது. இதற்கு இரண்டு அம்சங்கள் இன்றியமையாதவை. ஒன்று தொழுகை.
இதனை இறைவன் இந்த சூரத்தில் ( 107 : 4 ) ஆயத்துகளில் கூறியிருக்கிறான். தொழுகையில் உடல் உழைப்பும் ஆன்மாவும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. இவ்வணக்கத்தில் மன ஓர்மையுடன் இவ்வணக்கத்துக்குரிய இதர ஷர்த்துகளும் நிறைவேறுமாயின், ஆன்மா வெகு விரைவில் பரிபக்குவ நிலையை அடைகிறது. பின்னர் அடியான் தானாகவே பாவங்களைச் செய்வதை வெறுக்கிறான்.
இதனைத்தான் இறைவன் “நிச்சயமாக தொழுகை மானக்கேடானவற்றையும் வெறுக்கத் தக்கதையும் விலக்கும்” என்று கூறியுள்ளான்.
இத்தகைய தொழுகையை ஒருவர் அலட்சியமாக நினைத்து நிறைவேற்றுவாராயின் அவர் இறைவனின் நினைவில் உள்ளவராக இருக்க முடியாது. இறை நம்பிக்கை இருந்தால் இறை வணக்கத்தில் அலட்சியம் செய்ய முடியாது. எனவே, இதில் அலட்சிய புத்தி காண்பிப்பது நியாயத் தீர்ப்பு நாளை விசுவாசிக்காததன் அடையாளமேயாகும்.

திருமக்காவிலுள்ள காஃபிர்கள் இத்தொழுகையைப் பார்த்து கேலி செய்தனர். இதனை அவர்கள் முற்றிலும் புறக்கணித்தனர்.
திரு மதீனாவிலுள்ள முனாஃபிக்குகள் இதனை நிறைவேற்றினர். ஆயினும், மனப்பூர்வமாக, மன ஓர்மையுடன் நிறைவேற்றவில்லை. தங்கள் தொழுகையில் அலட்சியமாக இருப்பவர்கள் என்பது இவ்விரு வகையினரையும், அதாவது தொழுகையை அடியுடன் நிறைவேற்றாதவர்களையும். சோம்பலாக, அலட்சியமாக நிறைவேற்றுபவர்களையும் குறிக்கும்.
இவ்விரு வகையினருக்கும் இறைபக்தியோ, பயமோ, விசுவாசமோ இருக்குமாயின் இவ்வாறு செய்ய மாட்டார்கள். அவைகள் இல்லாததால்தான் இவ்வாறு அலட்சியமாக இருக்கின்றனர். ஆதலால், இவர்களுக்கு "வைல்" என்னும் நரக ஓடை தயாராக இருக்கிறது.
இத்தகைய வணக்கங்களை நிறைவேற்றுவதில் பொறுப்பை உணர்ந்து உள்ளப்பூர்வமாக நிறைவேற்ற வேண்டும். உலகிலுள்ளவர்கள் தன்னைப் போற்ற வேண்டும். தன்னைப் பற்றி பெருமையாக எண்ண வேண்டும் என்ற எண்ணத்துடன் செய்தால், உண்மையில் அது இறை வணக்கமல்ல. மனித வணக்கமேயாகும்.
இதனை இறைவன் இறைவணக்கமாக ஏற்றுக் கொள்ளமாட்டான். இத்தகைய வணக்கங்கள் உள்ளவர்கள் மேற்கண்ட அலட்சியமானதுடன் சேர்ந்தவர்களே ஆவர். எனவே அவர்களுக்கு கிடைத்த தீமை பலனை இவர்களுக்கு கிடைக்கும் இந்த சூராவின் (107 : 6 ) வசனத்தில் கூறப்பட்டிருக்கிறது.

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 17

## (விஞ்ஞானத் தஃப்ஸீர் ) பகுதி 4

فَوَيْلٌ لِّلْمُصَلِّيْنَۙ

இன்னும், (கவனமற்ற) தொழுகையாளிகளுக்குக் கேடுதான். (அல்குர்ஆன் : 107:4)
الَّذِيْنَ هُمْ عَنْ صَلَاتِهِمْ سَاهُوْنَۙ

அவர்கள் எத்தகையோர் என்றால் தம் தொழுகையில் பராமுகமாக(வும், அசிரத்தையாக)வும் இருப்போர்.(அல்குர்ஆன் : 107:5)
الَّذِيْنَ هُمْ يُرَآءُوْنَۙ

அவர்கள் பிறருக்குக் காண்பிக்(கவே தான் தொழு)கிறார்கள்.(அல்குர்ஆன் : 107:6)
முதலில் இறைவனை நாம் ஏன் வணங்க வேண்டும் ? என்று ஆராய்வோம்.
புவியில் உலக உயிர்கள் வாழ்வதற்கு ஏற்ற சூழ்நிலைகள் நிறைய தேவைப்படுகின்றது. ஆனால் அவை ஒவ்வொன்றும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டிருக்க வேண்டும். பூமி ஒரு நிரந்தர வேகத்தில் சுற்றிக் கொண்டிருக்கின்றது.
இதை விடுத்து அதன் வேகத்தை கூட்டினாலும் குறைத்தாலும் புவியின் நிலையில் நிறைய மாற்றங்கள் எழும். இரவும் பகலும் நீண்டு அல்லது குறைந்து போய்விடும். மரம் செடி கொடிகள் எல்லாம் உஷ்ணத்தால் எரிந்தோ அல்லது குளிரால் உறைந்தோ போய்விடக்கூடும்.
சூரியனிடமிருந்து ஒரு குறிப்பிட்ட தூரத்தில் புவியிருப்பதால், சூரியன் வெப்பத்தை மிகச் சரியான அளவாக பூமிக்கு கொடுக்கின்றது. இப்போது புவிக்கு கிடைக்கும் உஷ்ணத்தில் பாதியளவிற்கு குறைந்தால் உயிர்கள் குளிரில் உறைந்துவிடும். இரண்டு மடங்கானால் எரிந்து சாம்பலாகிவிடும்.
பூமியின் சாய்நிலையில் மாற்றம் கண்டால் பருவ காலங்கள் இடமாறி கடல் நீராவி வேறு திசையில் பயணித்து கண்டங்களை பனிப் பிரதேசமாகவோ,பாலைவனமாகவோ மாற்றிவிடும்.
சந்திரனின் தூரம் இப்போது இருப்பதைவிட குறைந்தால் பிரமாண்ட அலை எழுச்சி ஏற்பட்டு கண்டங்கள் நீரில் மூழ்கி விடும்.

பூமியின் மேற்படலம் பருமன் குறைந்தால் உயிர்களுக்கு ஆக்ஸிஜன் கிடைக்காது. கடல் ஆழமானால் கார்பன் டை ஆக்ஸைடு மற்றும் ஆக்ஸிஜனை கடல் இழுத்துக் கொள்ளும்.
ஆகாயத்தில் காற்று மண்டலம் இல்லாமல் இருந்தால் விண்கற்கள் பூமியின்மீது மோதி தீ விபத்துக்களை உண்டாக்கும்.
இந்த நிகழ்வுகளெல்லாம் நடக்காமல் அவை அவைகள் ஓர் நியதிக்குள் மிகத் துல்லியமாக இயங்க வைக்கும் அந்த மாபெரும் பெரியோன் யார் ?
உயிர்களுக்கு ஆதாரனமானது ஜீன். சொல்லால் அளவிடமுடியாத அளவில் சிறியவையான இந்த ஜீன்கள் உயிர்களின் தனித்தன்மையை நிர்ணயிப்பது எப்படி ? இதை இயக்கும் அந்த வல்லவன் யார் ? உலக உயிர்களின் அனைத்து ஜீன்களையும் ஒன்று சேர்த்தால் ஓர் கட்டைவிரல் அளவிற்குத்தான் இருக்கும் என்கிறது விஞ்ஞானம். இவ்வளவு சிறிய ஜீன்களும் அதன் துணைகளான குரோமஸோம் செல்களும் ஒவ்வோர் உயிர் மூலத்துணுக்கில் இருந்து கொண்டு அந்தந்த உயிர்களின் அதாவது அனைத்து மனித, விலங்கு, பறவை, தாவரங்களின் குணாம்சங்களுக்கு மூலதிறவுகோளாய் செயல்பட வைக்கும் அந்த அற்புதன் யார் ?
ஆக அணு முதல் அண்டம் வரை படைத்து, பக்குவப்படுத்தி, பரிபாலனம் செய்யும் அப்பேர்ப்பட்ட வல்லோனை, பெரியோனை இறைவன் என்று நம்புகிறோம். ஆதலால் அவனையே வணங்குகிறோம்.

அடிமை என்பது இறைவனுக்கும் இறை அடியார்களுக்கு மிடையில் சம்பந்தப்பட்டது. இறைவனுடன் இணைதல். இது நபிமார்கள், வலிமார்களின் வேலை. இவ்விணைதலால் ஆன்மாவில் பிரகாசமும் ஆனந்தங்களும் உண்டாகின்றன.

மரணமடைந்த பிறகு அவ்வான்மா பரிசுத்த உலகின்பால், உயரமான மேட்டிலிருநது பள்ளத்தின்பால், பந்து வேகமாகச் செல்வது போல் செல்லும். இதனை அடைவதற்காக எத்தனையோ துறவிகளும் ஞானிகளும் காடு, மலை, வனாந்தரங்களுக்குச் சென்று தன்னந்தனியாக இருந்து தூக்கம், உணவு முதலியவற்றை நீக்கி வணங்குகின்றனர்.
என்றாலும் உலக மக்களின் ஆத்ம வியாதிகளுக்கு இரட்சகராய் வந்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இல்லாமல், நாம் தேடும் அகத் தூய்மையையும், ஆத்ம பரிபக்குவத்தையும் அடைய முடியாது. இதற்கு இரண்டு அம்சங்கள் இன்றியமையாதவை. ஒன்று தொழுகை.
இதனை இறைவன் இந்த சூரத்தில் ( 107 : 4 ) ஆயத்துகளில் கூறியிருக்கிறான். தொழுகையில் உடல் உழைப்பும் ஆன்மாவும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. இவ்வணக்கத்தில் மன ஓர்மையுடன் இவ்வணக்கத்துக்குரிய இதர ஷர்த்துகளும் நிறைவேறுமாயின், ஆன்மா வெகு விரைவில் பரிபக்குவ நிலையை அடைகிறது. பின்னர் அடியான் தானாகவே பாவங்களைச் செய்வதை வெறுக்கிறான்.
இதனைத்தான் இறைவன் "நிச்சயமாக தொழுகை மானக்கேடானவற்றையும் வெறுக்கத் தக்கதையும் விலக்கும்" என்று கூறியுள்ளான்.
இத்தகைய தொழுகையை ஒருவர் அலட்சியமாக நினைத்து நிறைவேற்றுவாராயின் அவர் இறைவனின் நினைவில் உள்ளவராக இருக்க முடியாது. இறை நம்பிக்கை இருந்தால் இறை வணக்கத்தில் அலட்சியம் செய்ய முடியாது. எனவே, இதில் அலட்சிய புத்தி காண்பிப்பது நியாயத் தீர்ப்பு நாளை விசுவாசிக்காததன் அடையாளமேயாகும்.

திருமக்காவிலுள்ள காஃபிர்கள் இத்தொழுகையைப் பார்த்து கேலி செய்தனர். இதனை அவர்கள் முற்றிலும் புறக்கணித்தனர்.
திரு மதீனாவிலுள்ள முனாஃபிக்குகள் இதனை நிறைவேற்றினர். ஆயினும், மனப்பூர்வமாக, மன ஓர்மையுடன் நிறைவேற்றவில்லை. தங்கள் தொழுகையில் அலட்சியமாக இருப்பவர்கள் என்பது இவ்விரு வகையினரையும், அதாவது தொழுகையை அடியுடன் நிறைவேற்றாதவர்களையும். சோம்பலாக, அலட்சியமாக நிறைவேற்றுபவர்களையும் குறிக்கும்.
இவ்விரு வகையினருக்கும் இறைபக்தியோ, பயமோ, விசுவாசமோ இருக்குமாயின் இவ்வாறு செய்ய மாட்டார்கள். அவைகள் இல்லாததால்தான் இவ்வாறு அலட்சியமாக இருக்கின்றனர். ஆதலால், இவர்களுக்கு "வைல்" என்னும் நரக ஓடை தயாராக இருக்கிறது.
இத்தகைய வணக்கங்களை நிறைவேற்றுவதில் பொறுப்பை உணர்ந்து உள்ளப்பூர்வமாக நிறைவேற்ற வேண்டும். உலகிலுள்ளவர்கள் தன்னைப் போற்ற வேண்டும். தன்னைப் பற்றி பெருமையாக எண்ண வேண்டும் என்ற எண்ணத்துடன் செய்தால், உண்மையில் அது இறை வணக்கமல்ல. மனித வணக்கமேயாகும்.
இதனை இறைவன் இறைவணக்கமாக ஏற்றுக் கொள்ளமாட்டான். இத்தகைய வணக்கங்கள் உள்ளவர்கள் மேற்கண்ட அலட்சியமானதுடன் சேர்ந்தவர்களே ஆவர். எனவே அவர்களுக்கு கிடைத்த தீமை பலனை இவர்களுக்கு கிடைக்கும் இந்த சூராவின் (107 : 6 ) வசனத்தில் கூறப்பட்டிருக்கிறது.

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 18
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் ) பகுதி 5



( அற்பப் பொருள்)
وَيَمْنَعُوْنَ الْمَاعُوْنَ
மேலும், அற்பமான (புழங்கும்) பொருள்களைக் (கொடுப்பதை விட்டும்) தடுக்கிறார்கள். (அல்குர்ஆன் : 107:7)
பார்க்கின்சனின் அற்பப் பொருள் விதி (Parkinson's law of triviality) என்பது 1957-ம் ஆண்டு நார்த்கோட் பார்க்கின்சன், உப்பு பெறாத (தேவையற்ற) காரியங்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பது குறித்து வெளியிட்ட விதியாகும்.அட , அற்பப் பொருளுக்கும் விஞ்ஞானம் விதி வகுத்திருக்கிறதா ? வகுத்திருக்கிறது.
எடுத்துக்காட்டிற்கு, ஒரு ஊருக்கு அணு உலை வருகிறது என்றால், அந்த அணு உலை பற்றி பேசும் நேரத்தைக் காட்டிலும், அந்த அணு உலையைக் கொண்டு வரும் வாகனம் நிறுத்துமிடத்திற்கு என்ன நிற வண்ணம் அடிக்கலாம் என்று தான் அதிகம் நேரம் விவாதிப்பார்களாம்.
ஏன் என்றால், எல்லாருக்கும் அணு உலை நுட்பம் தெரியாது. ஆனால், வண்ணம் அடிப்பது பற்றி எல்லாராலும் கருத்து சொல்ல முடியும். இதுதான் அற்பப் பொருள் பற்றிய விஞ்ஞான விதி.
இறைவன் அற்ப கொசு அல்லது அதைவிட (அற்பத்தில்) மேலான எதையும் உதாரணமாகக் கூறுவதற்கு அல்லாஹ் நிச்சயமாக வெட்கப்பட மாட்டான் என்கிறது குர்ஆன் (2 : 26)

இறைவன் மீது ஒருவருக்கு பக்தியும் விசுவாசமும் இருக்குமாயின் அவர் இறைவன் கட்டளைப்படி நடக்க விரும்புவார். வேறொன்றின் மீது பக்தியும் பிரியமும் இருக்குமாயின் பிரியம் உள்ளதைத் தன்னிடம் வைத்திருக்கவே விரும்புவார்.
எனவே, உலோபிகள் இறை பயமோ, பக்தியோ இல்லாதவர்களாவார்கள். இறைவனைப் பார்க்கினும் பணத்தின் மீது பிரியம் அதிகமிருப்பதால்தான் கஞ்சத்தனம் செய்கின்றனர். கஞ்சத்தனம் நியாயத் தீர்ப்பு நாளை விசுவாசிக்காததையே காட்டுகிறது.
எனவேதான் இந்த சூரத்தின் இறுதியில் "அற்ப (வஸ்துவையும்) மானதையும் கூட விலக்குவார்கள்" என்று இறைவன் கூறியுள்ளான்.

மனிதன் பெரும் பெரும் செல்வங்களைக் கொடுப்பது ஒரு பக்கம் இருக்க மனிதர்கள் தம்மில் சர்வ சாதாரணமாகக் கொடுக்கல் வாங்கல் செய்கிற அற்பமானவற்றையும் கூட, கொடுத்து உதவ விரும்பமாட்டார்கள் என்பது இந்த சூரத்தின் இறுதியில் கூறப்பட்டிருக்கிறது.
'அற்பமான பொருள்' என்பது என்னவென்பதைக் குறித்து உலமாக்கள் பலவித கருத்துக்களைக் கூறியிருக்கின்றனர்.
' ஜக்காத் ' என்று ஒரு சாரார் கூறுகின்றனர். மொத்த சொத்தில் நாற்பதில் ஒரு பாகம்தான் தர்மம் கொடுக்க வேண்டும் என்று இருப்பதால், நாற்பதில் ஒன்று மிக அற்பமானதுதான் என்று கூறுகின்றனர்.

உலோபிகள் தங்களது பொருளாசையை விட்டு விட்டு இறைபக்தி கொள்ளாமல் வெறுமனே வணங்குவது, அந்தரங்கத்தில் பிறரை மெய்க்கச் செய்வதற்காகத்தான்.
உலோபியானவன் கடல், திடல் ஆகியவற்றைத் துறந்தாலும் சுவர்க்கவாசியாக ஒருபோதும் ஆக மாட்டான் என ஒரு பெரியார் கூறியுள்ளார். "உலோபி அல்லாஹ்வின் விரோதி. அவன் வணங்குபவனாக இருந்தாலும் சரியே" என்று ஹதீஸிலும் கூறப்பட்டிருக்கிறது.
புராணத்தில் ஒரு கதை சொல்லப்படுகிறது
நிறைய பொன்னும் பொருளும் சேர்த்துப் பணக்காரனான் உலோபி ஒருவன் இறக்கும்போது எல்லாவற்றையும் இந்த உலகத்தில் விட்டுச் செல்ல அவனுக்கு மனமில்லை கடவுளை வேண்டிக் கடும் தவம் புரிந்தான் !
கடவுளும் அவன் முன் தோன்றி, ""பக்தா! உனக்கு என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்டார்.
"நான் இறந்து மேலுலகம் செல்லும்பொழுது என்னுடைய எல்லா சொத்துக்களையும் எடுத்துச் செல்ல விரும்புகிறேன்'' என்றான் உலோபியான பணக்காரன்!
"சொர்க்கத்தின் சட்டம் இதற்கு இடம் கொடுக்காது..., என்றாலும், உனக்கு ஒரு சிறப்புச் சலுகை தருகிறேன். எல்லா சொத்துக்களையும் எடுத்துவர முடியாது. ஆனால் ஒரே ஒரு பெட்டி மட்டும் எடுத்து வரலாம்'' என்றார் கடவுள்.
பணக்காரனும் சரியென்று எல்லாச் சொத்துக்களையும் விற்று தங்கக் கட்டிகளாக மாற்றி ஒரு பெட்டியில் போட்டு வைத்தான்.

சாகும் காலம் வந்தது தலைமாட்டில் அந்தப் பெட்டியை வைத்துக் கைகளால் இறுகப் பற்றிக்கொண்டு படுத்து இறந்தும் போனான். கடவுள் வரம் கொடுத்திருந்ததால், உடலோடு பெட்டியையும் எமதூதர்கள் மேல் உலகம் கொண்டு சென்றனர்.
ஆனால் சொர்க்கத்தின் காவலாளி, பெட்டியோடு உள்ளேவிட மறுத்தான். கடவுள் வரம் கொடுத்திருப்பதாகச் சொன்னான் பணக்காரன். இருந்தாலும் காவலாளி,"பெட்டியைத் திறந்து காட்டவேண்டும்''என்றான்.
இடுப்பில் பத்திரமாக வைத்திருந்த சாவியால் பெட்டியைத் திறந்து உள்ளிருக்கும் தங்கக் கட்டிகளைக் காண்பித்தான் பணக்காரன்.
அதைப் பார்த்ததும் காவலாளி விழுந்து விழுந்து சிரித்தான்!
"அட முட்டாளே..! கடும் தவமிருந்து வரம் வாங்கி இதையா கொண்டு வந்தாய்? இதெல்லாம் இங்கு நடைபாதைக் கற்கள்!'' என்றான் காவலாளி.
இல்லை என்று சொல்லக்கூடாத பொருள் என்ன? வென உம்முல் மூமினீன் ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்கள் வினவியதற்கு
தண்ணீர், நெருப்பு, உப்பு என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பதிலளித்தார்கள். அதற்கு உம்முல் மூமினீன் ஆயிஷா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்கள்
"இந்த தண்ணீர் (சரிதான்). நெருப்பையும் உப்பையும் பற்றி என்ன?" வென்று வினவினார்கள்.
அதற்கு சிவந்தவளே, ஒருவர் நெருப்பைக் கொடுத்தால், அந்நெருப்பைக் கொண்டு சமைக்கப்படும் உணவுகள் அனைத்தையும் தர்மம் செய்தவரைப் போன்றாவார். உப்பை ஒருவர் தர்மம் செய்தால், அந்த உப்பின் மூலம் எந்தெந்த பொருள்கள் சுவையாயிற்றோ அவை யாவற்றையும் தர்மம் செய்தவரைப் போன்றாவார். தண்ணீர் கிடைக்காத இடத்தில் குடிக்க தண்ணீர் கொடுத்தால் அவர் ஒரு உயிரை உயிர்ப்பித்தவரைப் போன்றாவார்" என்று பதிலளித்தார்கள்.

107-வது சூரத்துல் மாஊன் விஞ்ஞான தஃப்ஸீர் விளக்கம் நிறைவுப் பெற்றது.

**அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 19**
**(விஞ்ஞானத் தஃப்ஸீர் )**
**(அல்கௌதர் - அபரிமிதமான நன்மைகள் பகுதி 1 )**



اِنَّاۤ اَعۡطَيۡنٰكَ الۡكَوۡثَرَ

(நபியே!) நிச்சயமாக நாம் உமக்கு கவ்ஸர் (என்ற தடாகத்தை) கொடுத்திருக்கின்றோம். (அல்குர்ஆன் : 108:1)
فَصَلِّ لِرَبِّكَ وَانۡحَرۡ

எனவே, உம் இறைவனுக்கு நீர் தொழுது, குர்பானியும் கொடுப்பீராக. (அல்குர்ஆன் : 108:2)
اِنَّ شَانِئَكَ هُوَ الۡاَبۡتَرُ

நிச்சயமாக உம்முடைய பகைவன் (எவனோ) அவன்தான் சந்ததியற்றவன். (அல்குர்ஆன் : 108:3)

அல் கௌதர் சூரா கீழ்க்கண்ட 3 விஷயங்களைத்தான் சொல்வதாக நமக்கு தெரிகிறது.

1) அல்லாஹ்விடம் இருந்து அளவற்ற நன்மைகளை பெற்றிருக்கும் அடியான்

2) தனது நன்றியை தொழுகையின் மூலமும்,தியாகத்தின் மூலமும் தெரிவித்தல் வேண்டும்

3) பிறரை பழிப்பவன், தானே அப்பழிக்கு உள்ளாகிறான்

முப்பத்தேழு எழுத்துக்களால் அமைந்த மூன்றே வசனங் களைப் பெற்று ஆன்ற பொருள் தருகின்ற சூறா கவ்தர் அருளப்பட்டதை அறிந்த, பகைமையுணர்ச்சி கொண்ட பெருங்கவிஞன் மஃனா என்பான், அதன் அழகிலே சொக்கிப் போய், "மா ஹாதா கவ்லுல் பஷர்" (இது மனிதனின் மொழியன்று) என்பதாக வியந்து மொழிந்து, அன்று முதல், தான் கவிதை எழுதுவதையே கைவிட்டதாக வரலாறு கூறுகின்றது.

இத்திருமறை அருளப்பட்ட காலத்தில் வாழ்ந்த மக்களின் மொழிப் புலமையும் மனன ஆற்றலும் ஈடிணையற்றனவாக இருந்தன. அவர்களின் இலக்கிய எழுச்சியையும் கவிதை ஆர்வத்தையும் தணித்து வியப்பிலாழ்த்திய பெருமையைப் பெற்றது, வல்லான் அருளிய சொல்லாலுயர்ந்த திருமறை.

திருமறையின் எளிமையும்,நடையழகும், அணிநயமும், இலக்கிய ஆற்றலும், இலக்கணச் செறிவும் என்றும் புதுமை யாக நின்றொளிர்வது உலகப் புதுமைகளுள் ஒன்றாகவே அமைந்துவிடுகின்றது.

பொது மொழி என்பது ஒரு குழுவினர் தங்கள் உள்ளக் கருத்துக்களை அடுத்தவர்க்கு எடுத்துரைத்துக் கூட்டுறவு கொள்வதற்குக் காரணமாக அமையும் ஒலிக் குறியீடுகளின் தொகுப்பே மொழியாகுமென மொழி நூல் வல்லார் மொழிவர்.

ஒரு நாட்டின் வெப்பதட்ப நிலைக்கும்,அங்கு வாழ்கின்ற மாந்தர்தம் உடற்கூறுகளுக்கும் ஏற்ற முறையில் அவ்வொலிக் குறியீடுகள் அமைகின்றன. அவ்வொலிக் குறியீடுகள் வெற்றோசையாக வல்லாது. அவற்றைப் பேசுவோரின் கலை, நாகரிகம், பண்பாடு ஆகிய வற்றின் சின்னமாகவும் இலங்கக் காணலாம்.

மொழியியல் அறிஞர் பிச்டே {F!TCHTE} கூறுவது : "ஒரு மனிதனின் வாழ்க்கை முழுவதிலும் மொழியானது பின்னிப் பிணைந்துள்ளது. பேசும் மொழியின் வேர்கள், அவன் அடி முதல் முடிவரை ஒருவன் பரவிச் சென்று, அவனது ஆசாபாசங்கள், சிந்தனைகள், பழக்க வழக்கங்கள் அனைத்திலுமே ஊடுருவி நிற்கின்றன.
ஒரு மொழி பேசும் குழுவினரை, அம்மொழியானது சில வரையறைகளுக்குக் கட்டுப்பட்டு ஒன்று திரட்டி விடுகிறது. பருப்பொருள் உலகையும் மானசீக உலகையும் இணைத்து வைக்கும் ஒரே பிணைப்பாக இலங்குகின்றது "
இவ்விளக்கத்திற்கு மிகப் பொருத்தமாக திருக்குர்ஆன் அருளப்பட்ட அரபிமொழி அமைந்திருக்கக் காண்கிறோம். இங்கு ஒன்றை, நன்றாக நாம் ஞாபகத்தில் இருத்திக் கொள்ள வேண்டும். உலகில் காணப்படும் ஏனைய நூல்களைப் போல் அல்குர்ஆன் மனிதனால் உருவாக்கப்பட்ட ஒரு நூல் அல்ல.
அன்றைய பெரும் பெரும் புலவர்கள், அரபி இலக்கண, இலக்கிய விற்பன்னர்கள் எல்லோரும் திருக்குர்ஆனை தோற்கடிக்க முயன்று பின் ஏகோபித்து பெருங்கவிஞன் மஃனா என்பான் சொன்னதையேச் சொன்னார்கள். அதாவது "மாஹாதா கவ்லுல் பஷர்" நிச்சயமாக இது மனிதனின் சொல் அல்ல" என்பதாகும்.
ஆக அல்குர்ஆன் தெய்வீக வெளிப்பாடாக இருந்ததால், சாதாரண அறிவு படைத்தவர்களும் அதி அற்புதமாக விளங்கிக் கொள்ளும் நிலையிலும், எளிதாகவும் இருக்கும் அதே வேளை மறுபுறம் சாதாரண அறிவு படைத்தவர்கள் பேசும் கொச்சை நடையிலும் அது அமைந்திருக்கவில்லை. இதிலும், அல்குர்ஆனின் ஓர் அற்புதமே.

நாங்கள் கற்றவர்கள், அறிஞர்கள் என்ற மமதையோடு குர்ஆனை அணுகுவோருக்கு அது விளங்காத புதிராகவும், அதேசமயம் நான் அல்லாஹ்வின் அடிமை. நான் என்ற பெருமை அல்லாஹ்வுக்கு மட்டுமே சொந்தம், என்ற உண்மையான உள்ள உணர்வோடு குர்ஆனை அணுகுவோருக்கு அது எளிதாக விளங்கும் நிலையிலும் அமைந்திருப்பதும் ஓர் அற்புதமே!
இதைத்தான் அல்லாஹ் ....
وَلَقَدْ يَسَّرْنَا الْقُرْاٰنَ لِلذِّكْرِ فَهَلْ مِنْ مُّدَّكِرٍ
நிச்சயமாக இக் குர்ஆனை நன்கு நினைவு படுத்திக் கொள்ளும் பொருட்டே எளிதாக்கி வைத்திருக்கின்றோம். எனவே (இதிலிருந்து) நல்லுணர்வு பெறுவோர் உண்டா?
(அல்குர்ஆன் : 54: 17, 22 , 32, 40) என்று கமர் சூராவில் அற்புதத்தை புகுத்தி 4 விடுத்தம் கேட்கிறான்.
திருமறையின் பொருளை உணராமல் ஓதுபவர்கள்கூட எத்தகைய சிரமமின்றி எளிதாக அதனை மனனம் செய்யும் ஆற்றலைப் பெறுவதும், அத்தகைய ஓதுபவர்கள் பாருலகின் பல்வேறு பகுதிகளிலும் ஆயிரக்கணக்காகப் பெருகிக் கிடப்பதும்,
திருமறையின் ஒரு தொடரையோ, வசனத்தையோ, அத்தியாயத்தையோ எத்தனை முறைகள் திருப்பித் திருப்பி ஓதினாலும், எத்தகைய சலிப்பும் ஏற்படாமலிருப்பதும்,
அதற்கு மாறாக அற்புதமான ஆத்மீக உயர்வுகளை ஏற்படுத்துவதும்,
வாழ்வில் தோன்றுகின்ற எத்தகைய சிக்கலுக்கும் ஏற்ற தீர்வுகளை இரண்டொரு வசனங்களில் எடுத்தியம்பி விடுவதும்,
தவறான நோக்கோடு தன்னை அணுகு வார்க்குத் தக்க பதிலடி கொடுப்பதும், பளுவான சொல் என்பதற்குத் தெளிவான விளக்கமாக அமைவதாகும்.

1. நிச்சயமாக நாம் உமக்கு. மிதமான நன்மைகளை)க் கொடுத்திருக்கிறோம்.(அல்குர்ஆன் : 108:1)
"கௌதர்" என்ற பதத்திற்கு, "அளவுக்கதிகமான நன்மைகள்" என்ற பொருளுண்டு."கௌதர் என்பது, அளவற்ற நன்மைகளாகும். அவற்றை அல்லாஹ் நபிகள் பெருமான் (ஸல்) அவர்களுக்குக் கொடுத்துள்ளான்' என ஹள்ரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள். (புகாரீ)

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்ட பலவிதமான நன்மைகளை இங்கு எடுத்து எழுத முடியாது. சிலவற்றை மட்டும் சுருக்கமாகக் குறிப்பிடுவோம்.

(1) வேறு யாருக்கும் கொடாத அளவு உண்மையான ஞானத்தை அல்லாஹ் நபிகள் பெருமான் (ஸல்), அவர்களுக்குக் கொடுத்திருந்தான்.

(2) உலகத்தில் தோன்றிய மற்ற நபிமார்கள் (அலைஹி முஸ்ஸலாம்) யாவரும் ஒரு குறிப்பிட்ட கூட்டத்தாருக்கும் ஒரு குறிப்பிட்ட தேசத்தாருக்கும் ஒரு குறிப்பிட்ட காலம் வரை நபிகளாக அனுப்பப்பட்டிருந்தார்கள். நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களோ, சர்வ உலகத்துக்கும் உலகம் முடியும் வரை (காத்தமுன் னபிய்யீனாக) இறுதி கடைசி நபியாக அனுப்பப் பட்டிருக்கிறார்கள்.

(3) நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் மூலமாக வெளியான திருக்குர்ஆனும் அவர்களுக்குக் கிடைத்துள்ள நன்மைகளில் ஒன்று. அதிலுள்ள 6666 அத்தியாயங்களில் ஒரு சிறிய அத்தியாயத்தைப் போலக் கூட வேறு எவராலும் உண்டாக்க முடியாதபடி அவ்வளவு மேலான முறையில் அமைக்கப்பெற்ற ஒரு சிறந்த ஞானப்பொக்கிஷமாகும். அதோடு

நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் சரீர அழகிலும் மிகச் சிறந்து விளங்கினார்கள். அதைப்போலவே உயர்ந்த குணத்திலும் அவர்களுக்கு நிகராக யாரையும்

சொல்ல முடியாது.

(4) அவர்களது திருநாமம் எக்காலும் எல்லோராலும் கௌரவமாக நினைவு கொள்ளப்படுகிறது. இது ஒரு பெரிய நன்மையாகும். இத்தகைய கீர்த்தி யாருக்கும் கிடைத்து விடமுடியாது. இதனைப் பெறும் பேரவாவில் ஆயிரக்கணக்கானவர்கள் தங்களது ஆவிகளைப் பறிகொடுத்திருக்கின்றனர்.

அவர்களுக்கு முன்னுள்ள நபிமார்கள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக கொடுக்கப்பட்டிருந்த விசேஷ குணங்கள் அனைத்தும் ஒருங்கே சேர்த்து நபிகள் பெருமான் (ஸல்) அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்தன.

சொர்க்கத்தின் மத்தியிலுள்ள ஓர் ஆற்றிற்கும் "கௌதர்" என்ற பெயர் உண்டு. அது நபி பெருமான் (ஸல்) அவர்களுக்குச் சொந்தமாகவே அல்லாஹ்வால் அருளப் பெற்றது.

மிஃராஜ் இரவில் நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் அதைக் கண்டிருக்கிறார்கள். மஹ்ஷர் (மறுமையில் கேள்வி கணக்குக்காக யாவரும் ஒரு சேர நின்று கொண்டிருக்குமிடம்) மைதானத்திலுள்ள தடாகத்துக்கும் "ஹௌளுல் கௌதர்" என்ற பெயருண்டு. இந்தத் தடாகத்திற்கு சுவர்க்கத்திலுள்ள 'கௌதர்"நதியிலிருந்து தண்ணீர் பாய்ந்து கொண்டிருக்கும்.

(புகாரீ -முஸ்லிம்)

மறுமைநாளில் சூரியவெப்பம் கடுமையானதாக இருக்கும். ஒவ்வொருவருக்கும் தாங்க முடியாத அளவு தாகமுண்டாகும். உம்மத்துகளில் அல்லாஹ்வுக்கு கீழ்ப்படிந்த அடியார்களுக்கு உண்டாகும் தாகத்தைத் தீர்ப்பதற்காக இந்தத் தடாகத்திலிருந்து நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் தண்ணீர் அருந்தச் செய்வார்கள்.

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 20
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )
## (அல்கௌதர் - ஒரு சொல் பல பொருள் - பகுதி 2 )

தமிழ் உரைநடை மற்றும் செய்யுள்களில் ஒரு சொல் பல பொருளை குறிக்கும். உதாரணமாக சூரியனை எடுத்துக்கொள்வோம்...

சூரியனை "சூரியன்" என நாம் அழைத்தாலும், அதற்கு தமிழில் வேறுபட்ட சில பெயர்கள் இருக்கின்றன. ஞாயிறு என்றாலும் கதிரவன் என்றாலும் சூரியனைக் குறிக்கும், ஆதவன் என்றாலும் பகலோன் என்றாலும் பரிதி என்றாலும் சூரியனையே குறிக்கும். இவைகள் போக செம்பரிதி , செஞ்ஞாயிறு, செய்யோன் போன்ற சொற்களும் சூரியனைக் குறிக்கும் சொற்களாகும்.ஆங்கிலத்தில் இதை ' ஹோமோபோன் ' என்று சொல்வார்கள்.

திருக்குர்ஆனிலும் " கவ்தர் " என்ற சொல்லை நபி (ஸல்) அவர்களுக்கு கொடுத்திருப்பதாக " நிச்சயமாக நாம் உமக்கு கவ்தரை கொடுத்திருக்கிறோம்" என்ற ஆயத்திலுள்ள கவ்தர் என்ற பதத்துக்கு அதிகம் என்பது பொருள். அதாவது மிகுந்த நன்மைகள்,சகலவிதமான உயர்வும் பாக்கியமும் கண்ணியமும் என்பது கருத்து.
மிகுந்த நன்மை என்பது விவேகம்தான். இதனைக் குறித்து "மேலும் எவர் விவேகத்தைக் கொடுக்கப்பட்டாரோ அவர் மிகுந்த நன்மைகள் கொடுக்கப்பட்டவராவார்" என்று இறைவன் கூறியுள்ளான்.

மிகுந்த நன்மை என்பது என்ன என்பதையும் கவதர் என்பதையும் குறித்து பல்வேறு பொருள்கள் கூறி இருக்கின்றனர். இவற்றை இமாம் ராஜீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தமது தஃப்ஸீருல் கபீரில் கூறி இருக்கிறார். அவற்றின் சாரம்சம் வருமாறு.

1.கவ்தர் என்பது (சுவர்க்கத்திலுள்ள) ஒரு தடாகத்தைக் குறிக்கிறது. இதனைக் குறித்து பல ஹதீஸ்கள் கூறப்பட்டிருக்கின்றன. கியாமத்து நாளில் தாகமும் உஷ்ணமும் மனிதர்களுக்கு ஏற்படும். யாவருக்கும் தண்ணீர் கிடைக்காது. தாகம், தாகம் என்று மனிதர்கள் கதறுவார்கள்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கவ்தரை அல்லாஹு தஆலா கொடுப்பான். அதன் நீளமும் அகலமும் நூற்றுக்கணக்கான மைல்கள் பரப்பளவு உள்ளதாக இருக்கும். அதன் தண்ணீர் பனிக் கட்டியைவிட அதிகக் குளிர்ச்சியானது. பாலைவிட அதிக வெண்மையானது. தேனினும் அதிக மதுரமானது. அதில் ஒரு முறை அருந்தியருவருக்கு மஹ்ஷர் மைதானில் பின்னர் தாகமே வராது,
நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும், ஸஹாபிகளும், அஹ்ல பைத்துகளும் மனிதர்களுக்கு தண்ணீர் கொடுப்பார்கள்.
முற்காலத்திலுள்ளவர்களும் பிற்காலத்தில் உள்ளவர்களும் தாகத்தால் அங்கு ஓடி வருவார்கள். பாக்கியவான்கள் அதிலிருந்து அருந்துவார்கள். நிர்ப்பாக்கியவான்கள் அருந்த முடியாமல் தள்ளப்படுவார்கள் என்ற விபரங்கள் ஹதீஸ்களில் காணப்படுகின்றன.

2. கவ்தர் என்பது சுவர்க்கத்திலுள்ள ஒரு ஆறு. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மிஃராஜுக்குச் சென்ற போது அதனை அவர்கள் பார்த்தார்கள். அதன் கரைகளில் முத்துக்கூடாரங்கள் இருந்தன. அதன் தண்ணீரை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பார்த்தார்கள். அது கஸ்தூரியைவிட அதிக மணமுள்ளதாக இருந்தது. இது என்னவென்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள். ஹளரத் ஜிப்ரயில் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் விசாரித்தார்கள். அல்லாஹு தஅலா தங்களுக்குக் கொடுத்துள்ள அந்த கவ் 1தர்தான் இது" என்று பதிலளித்தார்கள் என்று புகாரி, முஸ்லிம் முதலிய கிரந்தங்களில் கூறப்பட்டிருக்கிறது.

3. கவ்தர் என்பது மக்கட் பெருக்கம். மக்கள் என்பது ஆத்மார்த்த மக்கள். இரத்த சம்பந்தமான மக்கள் (உறவினர்கள்) என இரு வகைப்படும். நபி
ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது உம்மத்துகள் அனைவரும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது ஆத்மார்த்த மக்களாவார்கள். இன்றைய உலகில் இம்மக்கள் உலகிலுள்ள மற்ற சமயத்தினரைவிட எண்ணிக்கையில் அதிகமாக இருக்கின்றனர்.
வெளிப் பார்வைக்கு முஸ்லிம்கள் குறைவாகவும் முஸ்லிம் அல்லாதார் அதிகமாகவும் காணப்படலாம். ஆனால், முஸ்லிம் அல்லாதாரின் வகுப்புகளை தனித்தனியே பிரித்துப் பார்த்தால், இவ்வகுப்புகளில் எதுவும் முஸ்லிம்களை மிகைக்காது என்பது உண்மை.
மேலும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது உதிர சம்பந்தமான மக்களுக்கும் உலகில் பஞ்சமில்லை. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பல மக்களுக்குத் தந்தையாக இருந்தார்கள். ஆயினும், ஃபாத்திமா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்கள் மூலமாகத்தான் இவ்வுலகில் சந்ததி பெருகிற்று.

இவர்களுக்கு ஸாதாத்துகள், அவ்லாதுர் ரசூல் என்று பெயர். இன்ஷா அல்லாஹ், இனி ஒரு காலத்தில் இவ்வுலகம் முழுவதிலும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது இவ்விருவித சந்ததியினர்தான் இருப்பர்.
4.கவ்தர் என்பது உலமாக்கள், வலிமார்கள் ஆகியவர்களும் மிகுந்த நன்மை உள்ளவர்களேயாவர். இறைவன் கிருபையால் இந்த உம்மத்தில் எந்த அளவுக்கு அஹ்லுல் கமால் இருந்தார்களோ அந்த அளவுக்கு, வேறு உம்மத்தில் இல்லை. இறைவன் கிருபையால் இன்றும் இருந்து வருகின்றனர். இன்ஷா அல்லாஹ் இனி மேலும் இருப்பர். இவர்கள் பனூ இஸ்ராயீல்களிலுள்ள நபிமார்களது அந்தஸ்தில் இருக்கின்றனர்.

5.கவ்தர் என்பது மகத்தான நபித்துவம் என்றும் கூறப்பட்டிருக்கிறது. இது மிக உன்னதமான மிகுந்த நன்மைகள். இது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைத் தவிர, வேறு யாருக்கும் கிடைக்கவில்லை. எவரும் உலகம் முழுவதற்கும் பொது நபியாக வரவில்லை. எவராலும் இவ்வளவு பரக்கத்துகளும் நன்மைகளும் ஏற்படவுமில்லை. நபித்துவத்தின் முற்றுப் புள்ளி வேறு யாருக்கும் கிடைக்கவில்லை.

6. கவ்தர் என்பது திருக்குர்ஆன்.இதுவும் மிகுந்த நன்மையுள்ளது. திருக்குர்ஆனால் உலகம் அடைந்த நன்மை கண் கூடானது. அவைகள் இத்தனை என்று கணக்கிடவும் முடியாது.

7.கவ்தர் என்பது தீனுல் இஸ்லாம். இரு உலகின் நன்மைகளும் பேறுகளும் இதற்குள் அடங்கி இருக்கின்றன என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை.

8.கவ்தர் என்பது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஏற்பட்டுள்ள ஆத்மார்த்த முன்னேற்றங்கள்.

9.கவ்தர் என்பது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது உயர்ந்த புகழ். உலகமெங்கும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது பெயர் மிக மரியாதையுடன் உச்சரிக்கப்படுகிறது. இப்பேறு எல்லோருக்கும் வாய்ப்பதில்லை. எண்ணற்றவர்கள் இப்பேற்றுக்கு ஆசைப்பட்டு ஏக்கத்துடன் இவ்வுலகை விட்டு அகன்றிருக்கிறார்கள்.

10.கவ்தர் என்பது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இருந்த கல்வி அறிவு. இதனைக் குறித்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் 'எனக்கு முன்னோர்கள். பின்னோர்கள் அனைவரின் கல்வியறிவும் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று கூறியுள்ளார்கள்.

11.கவ்தர் என்பது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இருந்த உயர்ந்த நற்குணங்கள்.

12.கவ்தர் என்பது மகாமுல் மஹ்மூத். கியாமத்து நாளில் இது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மட்டும் அளிக்கப்படும். இதனைப் பார்த்து எல்லா நபிமார்களும் கைசேதப்படுவார்கள்.

13.கவ்தர் என்பது இந்த சூரத்து. இது மூன்று ஆயத்துகளைக் கொண்ட சிறிய சூரத்துதான். இம்மூன்று ஆயத்துகளிலும் எண்ணற்ற கருத்துக்கள் அடங்கியுள்ளன. அரபு நாட்டிலுள்ள எந்த கல்விமானும் புலவனும் இந்த சூரத்துக்குப் போட்டியாக செய்யுள் இயற்றவோ, வசனமெழுதவோ முடியவில்லை. முற்காலத்தில் நிகரற்ற வசனமாகவோ செய்யுளாகவோ மதிக்கப்படுபவற்றை எழுதி திருகஃபாவின் மீது தொங்கவிடுவது வழக்கம். இந்த சூரத்து அருளப்பட்ட போது அப்புலவர்கள் யாவரும் திகைத்தனர். அனைவரும் தங்களுடைய

காவியங்களையும் செய்யுள்களையும் திருகஃபாவை விட்டகற்றி விட்டனர். ஒரு பெரும் புலவர் மட்டும் இந்த சூரத்துக்கு மேல் " இது மனித வாக்கல்ல" என்று தமது மதிப்புரையை ஈந்தார்.

14.கவ்தர் என்பது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அல்லாஹுதஆலா அளித்த எல்லா அருட்கொடைகளையும் குறிக்கும்.

15. கவ்தர் என்பது அது ஒரு மிக உயர்ந்த பதவி. அதனைப் பார்க்கினும் உயர்ந்த பதவி வேறு எந்த அடியாருக்கும் அளிக்கப்படவில்லை.

இப்பதினைந்து விதமான கருத்துக்களும் கவ்தர் என்ற பதத்துக்கு ஒன்றுக்கொன்று முரண்பாடில்லாமல் பொருந்தி இருக்கின்றன தவிர, இவ்வாயத்தில் "அஃத்தைனா " என்ற பதம் கூறப்பட்டிருப்பதால் இதனை இறைவன் கிருபையாகவே, அன்பளிப்பாகவே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அளித்தான் என்பது தெரிய வருகிறது.

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 21
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )

(அல்கௌதர் = தொழுகையும் + குர்பானியும் - பகுதி 3 )

فَصَلِّ لِرَبِّكَ وَانْحَرْ

உம் இறைவனுக்கு நீர் தொழுது, குர்பானியும் கொடுப்பீராக. (அல்குர்ஆன் : 108:2)
எனவே, உமது றப்புக்காக நீர் தொழுவீராக !இன்னும் குர்பானியும் கொடுப்பீராக ! என்ற ஆயத்திலுள்ள இரு கட்டளைகளும் கவ்தரை இறைவன் அளித்ததற்கு நன்றியாக
நிறைவேற்ற வேண்டும்.
தொழுகையும், குர்பானியும் என இரு வணங்கங்கள் கவ்தரைப் பெற்றுத் தரும் என்பதாக சூசகமாக உணர்த்தப்பட்டிருக்கிறது !
தொழுகைக்கும் கவ்தருக்கும் நெருங்கிய பொருத்தமுண்டு. தொழுகையில் அடியான் தன்னுடைய றப்புடன் உரையாடுகின்றான். அவனுக்குப் பணிகிறான். அவனிடம் பிரார்த்தனை செய்கிறான். இது மெஞ்ஞானிகளுக்கு தேனினும் மதுரமானது.
"கவனமற்ற இதயத்திலிருந்து வருகிற எந்தப் பிரார்த்தனைக்கும் இறைவன் செவி சாய்ப்பதில்லை'' என்று நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் கூறுகின்றார். நமது காரியங்கள் அனைத்தையும் மன ஓர்மையோடு செய்து பழக வேண்டும்.

நம்முடைய பல காரியங்களில் நம் மனம் ஒருமுகப் படுவதில்லை என்கிற உண்மையை முதலில் நாம் உணர வேண்டும். அதைப் பெற முயற்சிக்க வேண்டும்.
யாராவது நம்மை ஏதாவது பேசிக் காயப்படுத்திவிட்டால் நாள் முழுக்க அதையே நினைத்துக் கொண்டு ஒரு வித சஞ்சலத்தோடு இருக்கிறோமே, என்ன காரணம்? நம்மைக் காயப்படுத்திய அந்த வார்த்தைகளில், அந்த நிகழ்வில் நம் மனம் ஒருமுகப்பட்டு அதில் குவிந்து நிற்பதுதான் காரணம்.
ஆக ஏதாவது ஒரு விஷயத்தில் நம் மனதைக் குவிக்கிற ஆற்றல் நம்மிடம் இயல்பாகவே இருக்கிறது என்பதையே அது நமக்கு உணர்த்துகிறது.

கவனத்தைச் சிதற விடாமல் ஒரு விஷயத்தில், அல்லது ஒரு பொருளில் மட்டும் செலுத்தினால் மகத்தான சாதனைகள் செய்யலாம். எனவே நம்முடைய ஒவ்வொரு காரியங்களையும் மன ஓர்மையோடு செய்து பழக வேண்டும்.

நமது மனம் அலைபாய்கிறது என்பதை நாம் முதலில் உணர வேண்டும். மன ஓர்மை பெற முயற்சிக்க வேண்டும். "ஒரு குணத்தை நீங்கள் அடைய விரும்பினால் ஏற்கெனவே அது உங்களிடம் இருப்பதாகக் கற்பனை செய்து கொள்ளுங்கள்" என்கிறார் வில்லியம் ஜேம்ஸ் என்னும் உளவியல் அறிஞர்
தொழுகையில் இலங்குகிற மறைவான தெய்வீக ஒளி பாலைப் பார்க்கினும் வெண்மையானது. தொழுகையில் உண்டாகிற உறுதியும், சந்தோஷமும் பனிக் கட்டியைப் பார்க்கினும், அதிக குளிர்ச்சியாகவும், தொழுகையிலுள்ள அதபுகளும் சுன்னத்துகளும் பசுமை மிக்க மரங்களையும் முத்து இரத்தினக் கூடாரங்களையும் போலிருக்கின்றன.

தொழுகையிலுள்ள ஒவ்வொரு ருக்னுகளிலும் ஓதப்படும் திக்ருகளும், தஸ்பீஹுகளும் இரத்தினக் குவளைகள் நிரம்ப கவ்தரின் தண்ணீர் அளிக்கப்படுவதைப் போலிருக்கிறது" என்பது கருத்து.
ஹஜ்ரத் ஜுபைர் இப்னு அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் சுவனத்தின் திறவுகோல் தொழுகை ; தொழுகையின் திறவுகோல் உளூ என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் .(நூல் : முஸ்னத் அஹ்மத்)
"எனது கண் குளிர்ச்சி தொழுகையில் வைக்கப்பட்டுள்ளது" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக ஹஜ்ரத் அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் . (நூல் : நஸாயீ)
உளூவும்,குளிர்ச்சியும் கவ்தர் தடாகத்தை ஞாபகப்படுத்துகின்றன
தொழுகையும், மிஃஹ்ராஜ்யும்
தொழுகையின் போது அல்லாஹ்வின் முன் உள்ளச்சப்பாட்டுடன் நில்லுங்கள்' (2:238) என்ற திருக்குர்ஆன் வசனத்தை நினைவில் கொள்ள வேண்டும்.
பள்ளிவாசல் தவிர்த்து பிற இடங்களை தொழுகை நடத்தும் போது, சிரிப்பும், பேச்சுமாக இருக்கும் இடத்தை தொழுகைக்குத் தேர்வு செய்யக்கூடாது. இன்னும், தனிமையில் இறைவனிடம் கண்ணீர் விட்டு அழுது பிரார்த்தனை செய்வது நமக்கு ஆறுதலைத் தருகிறது.
மற்றவர்கள் பார்க்கும்படியாக தொழும்பொழுது பிறர் ஏதாவது நினைப்பார்களோ என்ற தயக்கம் சிலருக்கு ஏற்படுகிறது. எனவே கூடுமான வரை சப்தம் இல்லாத, ஒதுக்குப்புறமான இடமாக இருப்பது நல்லது.
தொழுகையில் நாம் ஒரே நிலையில் இருப்பதில்லை. தொழ ஆரம்பிக்கும் முன் இறைவனைத் தவிர மற்ற சிந்தனைகளை ஒதுக்கி மனதை ஒருமுகப்படுத்த வேண்டும். 'என் இறைவனுக்கு முன் நிற்கிறேன், அவன் முன் அடி பணியப்போகிறேன்' என்ற எண்ணத்தைக் கொண்டு மனதை நிரப்ப வேண்டும்.
தலை குனிந்து, பார்வை கீழ் நோக்க வேண்டும். ஒரு திசையில் மட்டுமே பார்க்கும் படியாக கண்களைக் கட்டுப்படுத்தலாம்.
ஆனால், 'எதையும் கேட்காதே' என்று செவிகளைக் கட்டுப்படுத்த முடியாது. செவிகள் திறந்தே இருக்கும். இருந்தாலும், தொழுகையில் ஓத வேண்டியவற்றை மனதிற்குள் ஓதாமல் மென்மையான குரலில் நமக்கு மட்டும் கேட்கும் வகையில் ஓதும்பொழுது செவிப்புலன்களையும் நம் கட்டுக்குள் கொண்டு வரலாம்.
நம்மைப் படைத்த இறைவன் மீது அளவு கடந்த அன்பு, பணிவு, மரியாதை, நன்றியுணர்வு, அவனின் மீதான மிகுந்த அச்சம் ஆகிய அனைத்தையும் ஒருசேர மனதில் நிரப்புவது பயிற்சியின் மூலம் சாத்தியமே.
எந்த இடத்தில் நின்று தொழுதாலும், இறையில்லமான கஃபதுல்லாஹ்வை முன்னோக்குவதுப் போல் நாம் நின்று தொழுவதும் கஃபதுல்லாஹ் என்று நினைத்துக் கொள்வது தொழுகையில் நம்முடைய நெருக்கத்தை அதிகப்படுத்தும்.
"இஹ்ஸான் என்றால் என்ன ? " என்று
நபிகள் நாயகம் ﷺ அவர்களிடம் கேட்கப்பட்ட போது ,

" அல்லாஹ் நேரில் பார்ப்பது போன்று நீ அவனை வணங்குவதாகும். நீ அவனைப் பார்க்கவில்லையானாலும் அவன் உன்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறான் " என்று பதிலளித்தார்கள் .இது முராக்கபாவின் நிலையாகும் .
முதல் நிலையில் இரு கைகளையும் உயர்த்துகிறோம். மனிதர்கள் ஏதும் செய்ய இயலாத நிலையில், 'என்னிடம் ஒன்றுமில்லை, நான் நிராயுதபாணி, நான் சரணடைகிறேன்' என்று இரு கைகளையும் தூக்கிக் கொண்டு நிற்பதை நாம் பார்த்திருப்போம். இது அந்த மாதிரியான நிலை.
'என் இறைவா, நான் உன் அடிமை, என்னால் ஆகக்கூடியதென்று எதுவும் இல்லை, நான் உன்னிடமே சரணடைகிறேன், என்னை உன்னிடமே ஒப்படைக்கிறேன்' என்று சொல்லக்கூடிய நிலை இதுதான்.
பின்னர் இரண்டாவது நிலை மாறுகிறது. இரு கைகளையும் நெஞ்சிற்கு கீழே கட்டுகிறோம். நம் நெஞ்சத்தை இறைவனோடு பிணைக்கும் நிலை இது. தன்னைப் படைத்து, பரிபாலிக்கும், இவ்வுலகத்தின் அதிபதி, ஆசான் முன் கை கட்டி நிற்கும் ஒரு அடியானின் நிலை இது.
பின்னர் திருக்குர்ஆன் வசனங்களை முறைப்படி ஓத ஆரம்பிக்கிறோம்.

அடுத்த நிலை உடல் வளைத்து, குனிந்து, முழங்கால்களைப் பிடித்தபடி நிற்கும் நிலை. இறைவனுக்கு முன் நம் பணிவை இன்னும் அதிகமாகக் காட்டுவதுடன், 'அவனைத் தவிர வேறு எவர் முன்னும் தலை குனிந்து நிற்க மாட்டேன்' என்றும் கூறும் நிலை இது.

அடுத்த நிலை, எண் சாண் உடலை குறுக்கி, சிரம் பணிந்து வணங்கும் நிலை. நம்மைப் படைத்த இறைவனின் காலடியில் விழுந்து கிடைக்கும் ஒரு தூசியைப் போல் நம்மை எண்ணிக் கொள்ள வேண்டும்.
இந்நிலையில் அடியானுக்கு இறைவனின் நெருக்கம் கிடைக்கிறது. அத்துடன் இந்நிலையில் இருக்கும் ஒரு அடியானின் படித்தரம் சுவனத்தில் உயர்த்தப்படுவதாகவும், அவரின் ஏட்டில் இருந்து ஒரு பாவம் அழிக்கப்படுவதாகவும் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.
கண்களில் ஈரம் கசிய, நம்முடைய இறைவனுக்கு முற்றிலும் பணியும் நிலை இது. 'உன்னைத் தவிர எனக்கு வேறு கதியே இல்லை, உன்னைத் தவிர வேறு யாரிடமும் கேட்க மாட்டேன், நீயே, நீ மட்டுமே எனக்குப் போதுமானவன்' என்று மனம் உருகி நிற்கும் இந்த நிலை மிகவும் உன்னதமானது.
பின்னர் தலை குனிந்த வண்ணம் அமரும் நிலை. ஒரு விதமான நிம்மதி மனதில் நிறைந்திருக்கும் நிலை. நம்முடைய எல்லாக் காரியங்களையும் நமக்கு பொறுப்பேற்றுக் கொண்டவனிடம் ஒப்படைத்து விட்டோம் என்பதால் ஏற்படும் நிம்மதி அது.
அமர்ந்திருக்கும் நிலையில் அல்லாஹ்விடம் மன்னிப்பு கேட்கிறோம். தொழுகையை முடிக்கும் முன்பாக அமர்ந்திருக்கும் நிலையில் வலது, இடது தோள்களை நோக்கி. தலையைத் திருப்பி நம்முடைய நன்மை, தீமைகளை ஏட்டில் பதிவு செய்யும், வானவர்களுக்கு ஸலாம் கூறி தொழுகையை முடிக்கிறோம்.
உடனே எழுந்திருக்காமல் கைகளை உயர்த்தி நம்மைப் படைத்த இறைவனிடம் பாவமன்னிப்பு கேட்டு நம்முடைய தேவைகளைக் கேட்டு, திக்ரு (அவனை நினைவு கூருதல்) செய்து தொழுகையை நிறைவு செய்கிறோம்.

தொழுகையின் ஒவ்வொரு நிலையிலும், அரபியில் வசனங்களை ஓதினாலும், அவற்றின் பொருளை அவரவர் தாய்மொழியில் புரிந்து ஓதுவதால், ஈடுபாட்டுடனும், முழுக் கவனத்துடனும் நம்மால் தொழ முடியும்.
தொழுகை மிஃராஜின் பரிசாகும். இது முஃமினீன் மிஃராஜாகும். அதனால், தொழுகையின் அசைவுகள் அடிமைத்துவத்தின் வெளிப்பாடாக அமைந்திருக்கின்றன. "அடிமைத்துவத்தின் பலன் வெற்றியாகும். இதனை அத்தியாத்தில் பெறமுடியும். அத்தஹிய்யாத் இறைவனுக்கு முன்னாள் நபி ﷺ அவர்கள் உரையாடியதை நினைவுப்படுத்துகின்றது.
அதனால், தொழும்போது நாம் நேரே அல்லாஹ்வுடன் வசனிப்பதாகவும், நபி ﷺ அவர்களுக்கு ஸலாம் கூறுவதாகவும் கருதிக்கொள்ள வேண்டும். அதனால் நபி ﷺ அவர்களை நேரில் பார்ப்பதாக கற்பனை

செய்துகொண்டு ஸலாம் கூறினால் நபி ﷺ அவர்கள் பதில் கூறுவார்கள் என்று ஹஜ்ஜதுல் இஸ்லாம் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் இஹ்யாவில் குறிப்பிட்டுள்ளார்கள்.
மிஃராஜில் கிடைத்த மகத்தான பரிசுதான் தொழுகையாகும். இவ்விரவில் தான் ஐங்காலத் தொழுகை கடமையாக்கப்பட்டது.

இறைவனது சந்நிதானத்திற்குச் சென்ற இறைத்தூதருக்கு அவன் அளித்த சன்மானமாகத் தொழுகை அமைந்தது. அல்லாஹ் அதனை ஏனைய சன்மார்க்கக் கடமைகள் போன்று இப்பூவுலகில் வைத்து விதியாக்காது வானுலகில் வைத்து உயர்ந்த மலக்குகள் மத்தியில் கடமையாக்கினான்.
அந்தப் பரிசை தன் தூதருக்கும் தனது அடியார்கள் அனைவருக்குமான நிரந்தர நிலையான மிஃஹ்ராஜாகவும் ஆக்கி வைத்தான். தன்னோடு தனது நபியவர்கள் விரும்பும்போதெல்லாம் உரையாடுவதற்கான ஊடகமாகவும் தொழுகையை அமைத்து வைத்தான்.
குர்பானி கொடுப்பதால் ஏழைகள் பயனடைகிறார்கள். மேலே கூறப்பட்டுள்ள சூரத்தின் இறுதியில் கூறப்பட்ட கஞ்சத்தனத்துக்கு பதிலாக பாக்கியவான்கள் தர்மமும் செய்கிறார்கள்.

இங்கு தொழு என்று பொதுவாகத்தான் கூறப்பட்டுள்ளது. இது ஃபர்லு, நஃயில் போன்ற எல்லா தொழுகைகளுக்கும் பொருந்தும். இதுபோல குர்பானி கொடுக்குமாறு பொதுவாகக் கூறப்பட்டு இருக்கிறது. ஆதலால், ஹாஜிகள் மினாவில் கொடுக்கிற குர்பானிக்கும், மற்றவர்கள் துல்ஹஜ் மாதப் பெருநாள் தொழுகைக்குப் பிறகு தங்கள் வீடுகளில் கொடுக்கிற குர்பானிகளுக்கும், அக்கீக்காவுக்காகச் செய்யப்படும் குர்பானிகளுக்கும் இது பொருந்தும்.
குர்பானி கொடுக்கும் வணக்கமும் ஏகநாயனை வணங்கும் ' வணக்கமும் திருமக்காவில் ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம். இஸ்மாயில் அலைஹிஸ்ஸலாம் ஆகியவர்களது காலத்திலிருந்தே இருந்து வந்தன, இடைக் காலத்தில் ஏக இறை வணக்கம் விக்கிரஹ ஆராதனையாகவும், இறைவனுக்காகச் செய்து வந்த குர்பானி விக்கிரஹங்களுக்காகவும் ஏற்பட்டு விட்டன. அதினும் விக்கிரஹ ஆராதனை என்பது விக்கிரஹங்களுக்கு ஸஜ்தாச் செய்வதும், பூஜை போடுவதும், கை தட்டுவகமாகவே இருந்தன.
இவற்றை ஒழித்து 'வணங்குவதும் குர்பானி கொடுப்பதும் உமது றப்புக்காகவே இருக்க வேண்டும், விக்கிரஹங்களுக்காக இருக்கலாகாது" என்று சமிக்ஞை செய்யப்பட்டிருக்கிறது.
குர்பானி கொடுப்பதில் மற்றொன்றும் இருக்கிறது. தவிர, அதாவது தன்னையே பலியிட்டு, அவனது தாத்தில் தன்னையே முற்றிலும் அழித்து விட வேண்டும் என்பதாகும்.
இது ஆத்மார்த்த குர்பானி. இது நபிமார்களுக்கும் வலிமார்களுக்கும் கிடைக்கும் பாக்கியம். இதுபோல அவர்களது தொழுகையும் அல்லாஹு தஆலாவுக்காகத்தான். நன்மைக்காகவோ சுவர்க்கத்துக்கு ஆசைப்பட்டோ நரகத்துக்கு பயந்தோ இல்லை என்பதாகும்.
قُلْ اِنَّ صَلَاتِىْ وَنُسُكِىْ وَ مَحْيَاىَ وَمَمَاتِىْ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَۙ
(அன்றி,) நீங்கள் கூறுங்கள்: "நிச்சயமாக என்னுடைய தொழுகையும், என்னுடைய (மற்ற) வணக்கங்களும், என் வாழ்வும், என் மரணமும் உலகத்தாரை படைத்து வளர்த்து பரிபக்குவப்படுத்தும் அல்லாஹ்வுக்கே உரித்தானவை. (குர்ஆன் : 6:162)

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 22
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )

اِنَّ شَانِئَكَ هُوَ الْاَبْتَرُ

நிச்சயமாக உம்முடைய பகைவன் (எவனோ) அவன்தான் சந்ததியற்றவன். (குர்ஆன் : 108:3)
உம்முடைய பகைவன் சந்ததியற்றவன்' என்ற இவ்வாக்கியமானது, நபிகள் பெருமான் (ஸல்) அவர்களுடைய பெயரும் கீர்த்தியும் இவ்வுலகம் முடியும் வரையும், சதாகாலமும் ஓங்கி வளர்ந்து கொண்டிருக்கும் என்பதையும் அவர்களுடைய பகைவர்கள் சந்ததியற்றுப் பேர் சொல்வதற்குக் கூட ஆள் இல்லாமல் நாசமடைவார்கள் என்பதையும் குறிப்பிட்டுக் காட்டுகிறது.

தினம் ஐந்து வேளை பாங்கிலும் தொழுகையிலும் பிரசங்கங்கள் உபதேசங்களிலும் கோடிக்கணக்கான மக்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பெயரை மொழிந்து கொண்டிருக்கிறார்கள். எக்காலமும் இவ்வாறே நடந்து கொண்டிருக்கும்.
ஆனால் நபி பெருமான் (ஸல்) அவர்களைப் பழித்துக் கொண்டிருந்த பகைவர்களோ அவர்களின் பெயர்களைச் சொல்வதற்கு எவருமில்லாத நிலையில் நாசமாய்ப் போனார்கள்.
நபி (ஸல்) அவர்களின் அன்பு மனைவி அன்னை கதீஜா (ரலி) அவர்களின் மூலமாக காஸிம் (ரலி), அப்துல்லா (ரலி) ஆகிய இரண்டு ஆண் குழந்தைகளும், ஜைனப் (ரலி), ருக்கையா (ரலி), உம்மு ஹுஅல்ஸும் (ரலி), பாத்திமா (ரலி) ஆகிய பெண் குழந்தைகளும் பிறந்தார்கள்.
இதில், பெண் குழந்தைகள் மட்டுமே நீண்ட காலம் உயிருடன் வாழ்ந்தனர். ஆண் குழந்தைகள் இரண்டும் சிறுவயதிலேயே காலமாகி விட்டனர்.

அன்னை கதீஜா (ரலி) அவர்களின் மறைவிற்குப் பிறகு மரியா பின்து ஷம்ஊன் (ரலி) அவர்களை நபிகளார் திருமணம் செய்து கொண்டார்கள். இவர்களுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. இப்ராகிம் என்று பெயரிடப்பட்ட அந்தக் குழந்தை மீது அண்ணல் எம்பெருமானார் (ஸல்) மிகுந்த அன்பு கொண்டிருந்தார்கள்.
ஆனால், இளவயதிலேயே மகன் இப்ராகிம் (ரலி) மரணமடைந்தார்கள். இந்த செய்தி கேட்டு பெருமானார் (ஸல்) நிலைகுலைந்து போனார்கள். எத்தனையோ சோகங்களிலும் அழுது அறியாத அவர்களின் கண்களில் இருந்து கண்ணீர் தாரை தாரையாக வழிந்தோடியது.
ஆஸ்இப்னு வாயில் அஸ்ஸஹ்மி என்பவனும் மற்றும் இறை மறுப்பாளர்களும், 'முஹம்மது சந்ததியற்றவராய் ஆகிவிட்டார்" எனக் குறை கூறினார்கள்.
கஃபுப்னு அஷ்ரப் என்ற யூதத் தலைவனும் ஒரு சமயம் மக்காவுக்கு வந்தபோது, குறைஷிகளிடம் அவர்களைத் திருப்திப்படுத்துவதற்காக, 'முஹம்மதுக்குப் பின் அவரின் பெயரை சொல்வதற்குக்கூட ஒருவரும் இருக்கமாட்டார்கள்'' என்று சொன்னான்.
இதே சம்பவத்தைப் பயன்படுத்தி அபூஸூபியானும் அவனைச் சார்ந்த குரைஷி குலத்தின் எதிரிகளும், “இதோ இந்த
முகம்மதுக்கு வாரிசே இல்லாமல் போய் விட்டது. இவர் என்னவோ தன்னை இறைத்தூதர் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்” என்று ஏளனம் செய்தனர்.
பொறாமைக் குணம் படைத்த இவர்களின் கூற்று உண்மைக்குப் புறம்பானது என்பதை உலகினருக்கு உணர்த்தவே இவ்வத்தியாயம் இறங்கிற்று.
அப்போது தற்செயலாக சந்திர கிரகணம் ஏற்பட்டது. உடனே சில சஹாபாக்கள் ‘நபிகளின் மகன் மரணித்து விட்ட காரணத்தினால்தான் சந்திர கிரகணம் ஏற்பட்டுவிட்டது’ என்ற செய்தியை மக்களிடையே பரப்பினார்கள்.

இந்த செய்தியைக் கேள்வியுற்ற கண்மணி நாயகம், தன் துக்கத்தையும் மறந்து எல்லா தோழர்களையும் மதினாவில் உள்ள பள்ளிவாசலான மஸ்ஜிதுன் நபவியில் ஒன்று கூட்டி இவ்வாறு உரை நிகழ்த்தினார்கள்:
“அல்லாஹ் நிகழ்த்தி காட்டும் இயற்கை நிகழ்வுகள்தான் சூரிய, சந்திர கிரகணங்கள். அவைகள் அல்லாஹ்வின் கட்டளைப்படி, அது அதற்கென வரையறுக்கப்பட்டுள்ள வட்ட வரைக்குள் நீந்திக்கொண்டிருக்கின்றன. அவைகள் எப்போதாவது ஒரு நேர்கோட்டில் வரும் போது இது போன்ற கிரகணங்கள் ஏற்படுவது இறைவனின் கட்டளை. இயற்கையின் நியதி.
சூரா யாஸின் இன்னும் பல இடங்களில் இதனை அல்லாஹ் வசனமாய் அமைத்திருப்பதை நான் உங்களுக்கு ஓதிகாட்டவில்லையா? அப்படிப்பட்ட இயற்கை நிகழ்வுகளுக்கு, யாராயிருந்தாலும் அவர்களின் பிறப்போ, இறப்போ காரணமாக இருக்க முடியாது.

அறியாமை காலத்தில் இருந்தது போல நீங்கள் இன்னும் மூட நம்பிக்கையை நம்பி பகுத்தறிவை மறுக்க எத்தனிக்கிறீர்களா? இது அறியாமை. எனது மகன் இப்ராகிம் இறப்பிற்கும் இந்த கிரகணத்திற்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை” என்றார்கள்.
தான் துக்கத்தில் பாதிக்கப்பட்டிருந்தாலும் மக்களின் மூட நம்பிக்கையை தகர்த்தெறிய வேண்டும் என்பதில் மிக்க கவலை கொண்டிருந்தார்கள் நபிகள் நாயகம்.
அரேபியரிடையே ஆண் வாரிசு என்பது அந்த அளவிற்கு சிறப்பு வாய்ந்ததாக கருதப்பட்டது.
திருக்குர்ஆனுக்கு விரிவுரை எழுதிய மார்க்க அறிஞர்கள் சிலர் குறிப்பிடும் போது, ‘நபிகளுக்கு வாரிசு ஏற்படுத்தலாகாது என்ற எண்ணத்தில் தான் அல்லாஹ் அவர்களுக்கு ஆண் வாரிசை கொடுத்தும் அதை எடுத்துக்கொண்டானோ? அல்லாஹ் அனைத்தையும் அறிந்தவனாக இருக்கின்றான்.
அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் தான் இறுதி நபி, அவர்களுக்குப் பின் நபித்துவம் இல்லவே இல்லை என்பதின் அடையாளமாக கூட இது இருக்கலாம்’ என்று விளக்கம் அளிக்கிறார்கள்.
அறியாமை, மூட பழக்க வழக்கங்கள், தவறான நம்பிக்கைகள் போன்றவற்றை அகற்றி இறைவன் வகுத்த வழியில் நாம் அனைவரும் வாழ இந்த நிகழ்வு ஒரு உதாரணமாக திகழ்கிறது.
அபூபக்ரா(ரலி) அறிவித்தார்கள் : "நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தபோது சூரிய கிரகணம் ஏற்பட்டது. உடனே நபி(ஸல்) அவர்கள் தங்களின் ஆடையை இழுத்துக் கொண்டு பள்ளிக்குள் நுழைந்தார்கள். நாங்களும் நுழைந்தோம். கிரகணம் விலகும் வரை எங்களுக்கு இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தினார்கள்.
பிறகு 'சூரியனுக்கும் சந்திரனுக்கும் எவருடைய மரணத்திற்காகவும் கிரகணம் பிடிப்பதில்லை. எனவே நீங்கள் கிரகணங்களைக் கண்டால் தொழுங்கள். அவை விலகும் வரை பிரார்த்தியுங்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். ஸஹீஹ் புகாரி : 1040.

விஞ்ஞான ரீதியில் கிரகணத்தின்போது நமக்கு என்ன நடக்கிறது?
கிரகணம் (eclipse) என்பது வானியல் பொருள் ஒன்று வேறொரு பொருளின் நிழலினாலோ அல்லது வேறொரு பொருள் இப்பொருளுக்கும் பார்வையாளருக்கும் இடையில் செல்லுவதாலோ தற்காலிகமாக மறைக்கப்படும் போது ஏற்படும் ஒரு வானியல் நிகழ்வு ஆகும்.இதனை கிரகணம் என்றழைக்கப்படுகிறது
கிரகணம் என்ற சொல் பெரும்பாலும் நிலாவின் நிழல் பூமியின் மேற்பரப்பைத் தாண்டும் போது நிகழும் சூரிய கிரகணத்தையோ, அல்லது நிலா பூமியின் நிழலினுள் செல்லும் போது ஏற்படும் சந்திர கிரகணம் ஆகியவற்றை விவரிக்க பயன்படுத்தப்படுகிறது.
ஒரு பௌர்ணமியிலிருந்து அடுத்த பௌர்ணமி வரையுள்ள 28 நாட்களில், சந்திரன், முழு நிலவிலிருந்து தேய்ந்து, அமாவசையாகி, மீண்டும் மெதுமெதுவாய் வளர்ந்து பௌர்ணமி நிலவாகும் வரை, ஒவ்வொரு நாளும் வெவ்வேறு அளவில், வடிவில் இருக்கும்.
அந்த 28 முகங்களையும் ஒரு முழு சந்திர கிரகணத்தின் போது, சுமார் மூன்றே மணி நேரத்தில், நாம் பார்த்துவிட முடியும். அதாவது, ஒரு மாத காலத்தில் நடப்பது எல்லாம் சில மணி நேரத்தில் சூட்சுமமாக நடக்கிறது.

சக்தி ரீதியாகப் பார்த்தால், ஒரு மாத காலத்தை நாம் வெறும் 3 மணி நேரத்தில் கடந்து விடுகிறோம். இந்த அடிப்படையில் தான் பூமி, சந்திர கிரகணத்தை, நிலவின் முழு சுற்று என்று தவறாக எடுத்துக் கொள்கிறது. உங்கள் சக்தி கிட்டத்தட்ட 28 நாட்கள் மூப்படைகிறது. அதாவது சக்தியளவில் உங்கள் வாழ்வில் 27 நாட்கள் சூட்சுமமாகக் குறைகிறது.

கிரகணத்திற்கு முன் ஊட்டச்சத்து நிறைந்த உணவாய் இருப்பது, கிரகணத்திற்குப் பின் விஷம்போல் ஆகிவிடும். இதன் தாக்கம் உலகின் அனைத்துப் பொருட்களின் மீதும் இருக்கும்.

அதிலும், தன் இயற்கையான இயல்பில் இருந்து மாறியிருக்கும் பொருட்கள், அதிவிரைவாக சிதைய ஆரம்பித்து விடும். கிரகண நேரத்தில் பழங்களிலும், காய்களிலும் அதிக மாற்றம் இல்லாவிட்டாலும், சமைத்த உணவு கிரகணத்திற்கு முன்பும் பின்பும் மிக வித்தியாசமாக இருக்கிறது.

கிரகணத்திற்கு முன் ஊட்டச்சத்து நிறைந்த உணவாய் இருப்பது, கிரகணத்திற்குப் பின் விஷம்போல் ஆகிவிடும்.
விஷம் என்றால்... அந்த உணவை உண்டால் இறந்திடுவோமா? இது அவ்வாறல்ல. விஷம் வெவ்வேறு தீவிரத்தில் வேலை செய்யும்.

அடிப்படையாகப் பார்த்தால், விஷம் என்பது உங்கள் விழிப்புணர்வைக் குறைப்பது. அது சிறிதளவே உங்கள் விழிப்புணர்வைக் குறைத்தது என்றால்,நீங்கள் மந்தமாக இருப்பீர்கள். இன்னும் அதிகமாகக் குறைத்தால், தூக்கத்தில் ஆழ்வீர்கள். அதுவே மொத்தமாய் உங்கள் விழிப்புணர்வை எடுத்துவிட்டது என்றால், நீங்கள் இறந்தே விடுவீர்கள்.

மந்தம், தூக்கம், மரணம்... இவை அடுத்தடுத்த படிநிலைகள் தானே! அதனால், கிரகணத்தின்போது, மற்ற நாட்களைவிட சமைத்த உணவு சக்தி அளவில், அதிவிரைவாக சிதைவுறும்.

இது உணவிற்கு மட்டுமல்ல, உங்கள் உடலிற்கும், உலகில் உள்ள ஒவ்வொன்றிற்குமே இது நடக்கிறது. அதிலும், அந்த உணவு உங்கள் உடலில் இருந்தால், இதன் தாக்கம் இன்னும் அதிகமாக இருக்கும்.

இது வெறும் உணவு பற்றியல்ல. இது உங்களைப் பற்றியும் தான். உங்களின் இயல்பான நிலையை விட்டு நீங்கள் எந்த அளவிற்கு விலகி இருக்கிறீர்களோ,அந்த அளவிற்கு இதன் தாக்கம் உங்கள் மீது அதிகமாக இருக்கும். உங்கள் இயல்பான நிலையிலேயே நீங்கள் இருந்தால், இந்தச் சக்தி உங்களின் மீது அதிக தாக்கம் ஏற்படுத்த முடியாது.

**அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 23**
**(விஞ்ஞானத் தஃப்ஸீர் )**
**( சூரத்துல் காஃபிரூன் )**




بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ

قُلۡ يَٰٓأَيُّهَا ٱلۡكَٰفِرُونَ ١ لَآ أَعۡبُدُ مَا تَعۡبُدُونَ ٢ وَلَآ أَنتُمۡ
عَٰبِدُونَ مَآ أَعۡبُدُ ٣ وَلَآ أَنَا۠ عَابِدٞ مَّا عَبَدتُّمۡ ٤ وَلَآ أَنتُمۡ
عَٰبِدُونَ مَآ أَعۡبُدُ ٥ لَكُمۡ دِينُكُمۡ وَلِيَ دِينِ ٦

قُلْ يٰۤاَيُّهَا الْكٰفِرُوْنَۙ

(நபியே!) நீர் சொல்வீராக: காஃபிர்களே!

(அல்குர்ஆன் : 109:1)
لَاۤ اَعْبُدُ مَا تَعْبُدُوْنَۙ

நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்கமாட்டேன்.(அல்குர்ஆன் : 109:2)
وَلَاۤ اَنْـتُمْ عٰبِدُوْنَ مَاۤ اَعْبُدُ

இன்னும், நான் வணங்குகிறவனை நீங்கள் வணங்குகிறவர்களல்லர்.(அல்குர்ஆன் : 109:3)
وَلَاۤ اَنَا عَابِدٌ مَّا عَبَدْتُّمْۙ

அன்றியும், நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்குபவனல்லன்.(அல்குர்ஆன் : 109:4)
وَ لَاۤ اَنْـتُمْ عٰبِدُوْنَ مَاۤ اَعْبُدُ

மேலும், நான் வணங்குபவனை நீங்கள் வணங்குபவர்கள் அல்லர்.(அல்குர்ஆன் : 109:5)
لَكُمْ دِيْنُكُمْ وَلِىَ دِيْنِ

உங்களுக்கு உங்களுடைய மார்க்கம்; எனக்கு என்னுடைய மார்க்கம்."(அல்குர்ஆன் : 109:6)

'அபூஜஹ்ல், ஆஸுப்னு வாயில், வலீதுப்னு முஙய்யறா. அஸ்வதுப்னு அப்தில் யகூத், அஸ்வதுப்னு அப்தில் முத்தலிப் உள்பட காஃபிர்களது ஒரு கூட்டம், ஹளரத் அப்பாஸ் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் மூலமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு செய்தி சொல்லி விடுகிறார்கள்

தாங்கள் எங்களது விக்கிரஹங்களையும் அவற்றை நாங்கள் வணங்குவதையும் குறித்துக் கெடுதலாகப் பேசலாகாது. - தங்களுக்கு அரசாங்கம் வேண்டுமென்ற ஆசை இருந்தால், நாங்கள் தங்களை எங்களது தலைவராக ஏற்றுக் கொள்கிறோம்.

பொருள் வேண்டும் என்ற நோக்கமிருந்தால் சந்தா வசூல் செய்து தாங்கள் விரும்புகிற பொருளைத் தருகிறோம். அழகிய பெண்கள் மீது ஆசையாக இருந்தால். குறைஷிக் கோத்திரத்திலேயே மிக அழகியை தங்களுக்கு நாங்கள் மணம் செய்விக்கிறோம்" என்று தெரிவித்தனர்.

அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "இவற்றில் எதுவும் எனக்கு வேண்டியதில்லை. நீங்கள் நாசமடைவதை விட்டும் தப்பித்துக் கொள்ள வேண்டும்; நேரான வழியைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதையே நான் விரும்புகிறேன்" என்று பதிலளித்தார்கள்.

இப்பதிலைக் கேட்ட பிறகு அக்காஃபிர்கள் 'நாங்கள் வணங்குபவற்றை நீங்கள் வணங்க வேண்டும். நீங்கள் வணங்குவதை நாங்களும் வணங்குகிறோம். இவ்வாறு செய்வதால் நமக்குள் பிளவு இருக்காது. எவ்வித மனக் கசப்பும் இருக்காது. இதற்கு சம்மதம் இல்லாவிடில்.

நாங்கள் வணங்குவதை விட்டு நீங்கள் பிரிந்திருந்து கொண்டு, தவ்ஹீதை பரவச் செய்வதாலும், எங்கள் வணக்கங்களைக் குறை கூறுவதாலும், பெரும் பெரும் கஷ்டங்களை அடைய நேரிடும்" என்று சொல்லி அனுப்பினார்கள்.

இதற்கு மறுமொழியாக இறைவன் இந்த சூரத்தை அருளினான். "நீங்கள் காஃபிர்களாக இருந்து கொண்டு என்னிடம் எதையும் எதிர் பார்க்க முடியாது" என்பதைத் தெளிவாக அறிவித்து விடுமாறு கட்டளையிட்டுள்ளான்.

அறிந்து கொள்ளுங்கள் :- இந்த சூரத்தின் ஆரம்பத்தில் குல் (சொல்வீராக) என்ற கட்டளை உள்ளது. இதிலிருந்து நபி ஸல்லல்லாஹு அறிக்கை தம் சார்பாக இல்லாமல் இறைவன் சார்பாகவே இருக்கிறது என்பது தெளிவாகிறது, அதாவது "நானாக உங்களைக் காஃபிர்கள் " என்று கூறவில்லை. நீங்கள் வணங்குவதை நானாகக் குறை கூறவில்லை. அவ்வாறு கூறுமாறு நான் கட்டளையிடப்பட்டிருக்கிறேன்.

எனவே, என்னுடைய கூற்றை நீங்கள் அங்கீகரிக்காமல் இருப்பதும் எனக்கு இடையூறு செய்வதும் அக்கிரமமேயாகும். இதற்கு முன்னரும் நான் உங்கள் மத்தியில்தானிருக்கிறேன். அக்காலத்தில் இவ்வாறு நான் கூறவில்லை. (கடந்த காலத்தின் தங்கள் நிலையை நபிகளார் கூறுகிறார்கள்) ஆதலால், இவ்விஷயத்தை நீங்கள் நன்கு சிந்தித்துப் பார்க்க வேண்டும்" என்ற விபரம் சூசகமாகக் கூறப்பட்டுள்ளது..

யா அய்யுஹல் காஃபிரூன் (காஃபிரானவர்களே) என்ற வார்த்தை மனித வர்க்கத்தாரிடமுள்ள ஆத்ம நோய் இன்னதென்பதை விபரிக்கிறது. குஃப்ரு என்னும் நோய் அவர்களிடமிருப்பதால் சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களை

அவர்கள் வணங்குகின்றனர். எனவே, நோயாளிகளின் இச்செய்கையுடன் நான் கலந்து கொள்ள முடியாது என்பது இதில் கண்டிப்பாக உணர்த்தப்பட்டிருக்கிறது.
தவிர, இரண்டு மூன்று நான்கு ஐந்தாவது ஆயத்துகளில் ஒரே விஷயம் மீண்டும் மீண்டும் கூறப்பட்டிருப்பது போல் காணப்படுகிறது.
ஆனால், அரபி இலக்கண வல்லுநர்கள் இவ்வாயத்துகளில் கூறப்பட்டுள்ள அரபிப் பதங்களைக் கவனித்து, இங்கு ஒரே விஷயம் திரும்பக் கூறப்படவில்லை, இப்போது நான் வணங்குபவனாக இல்லை, நீங்களும் நான் வணங்குபவனை வணங்குகிறீர்களில்லை என்று நிகழ்காலச் செய்கையையும்,
நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்குபவனாக இல்லை. நான் வணங்குபவனை நீங்கள் வணங்குகிறவர்களாக இல்லை என்று எதிர்காலச் செய்கையையும் குறிக்கின்றன என்று கூறியிருக்கிறார்கள்.
எனவே. நீங்கள் வேறு; நான் வேறு. எனது கொள்கையை நீங்கள் பின்பற்ற மாட்டீர்கள்; உங்கள் கொள்கையை நான் பின்பற்ற மாட்டேன் என்று கண்டிப்பாய் கூறப்பட்டுள்ளது.
கடந்தகாலம் , நிகழ்காலம், எதிர்காலம் குறித்தும் அந்தந்த காலங்களில் நடந்த , நடக்க இருக்கிற நிகழ்வுகளைப் பற்றி இவ்வத்தியாயம் கூறுகிறது.

காலம் நமக்குப் புற உலகின் செயல்கள் வழியாக ஒருவிதமாகவும் உடல் வழியாக இன்னொரு விதமாகவும் நினைவின் வழி வேறு விதமாகவும், சமயம், அறிவியல், தத்துவம், வரலாறு வழியே மற்றோர் விதமாகவும், இயற்கையின் வழியே புதிராகவும் அறிமுகமாகிறது. தேவையான தருணங்களில் இதில் தேவையானதை தேர்வு செய்து நாம் காலத்தைப் புரிந்து கொள்கிறோம். செயல்படுகிறோம்.
காலம் ஒரு நதியை போலத்தான் என்கிறார் விஞ்ஞான மாமேதை ஆல்பர்ட் ஐன்ஸ்டைன். " நதி எப்படி புவிஈர்ப்பு விசையால் பாதிக்கப்பட்டு ஒரு இடத்தில் வேகமாகவும் ஒரு இடத்தில மெதுவாகவும் ஓடுகிறதோ அப்படி தான் காலமும் ஈர்ப்பு விசையால் பாதிக்கபட்டு இடத்துக்கு தகுந்தாற் போல் மாறி ஒடுகிறது" என்றார்.
ஆனால் ஓடிக்கொண்டிருக்கும் நதி தேங்கிவிடக் கூடாது. தேக்கம் என்பது ஒருவிதமான நோய். ஏதோ ஒன்றைத் தேடித்தான் மனிதன் செயல்களைத் தொடங்குகிறான். அந்தத் தொடக்கத்தில் விழிப்புணர்வு இல்லையெனில் தேங்கிவிடுகிறான். அந்த தேக்கம் அந்த செயலின் நோய்.
யா அய்யுஹல் காஃபிரூன் (காஃபிரானவர்களே) என்ற வார்த்தை மனித வர்க்கத்தாரிடமுள்ள ஆத்ம நோய் இன்னதென்பதை விபரிக்கிறது. குஃப்ரு என்னும் நோய் அவர்களிடமிருப்பதால் சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களை அவர்கள் வணங்குகின்றனர். எனவே, நோயாளிகளின் இச்செய்கையுடன் நான் கலந்து கொள்ள முடியாது என்று நபிகளார்கள் மறுத்துள்ளார்கள்.
எனவே " நீங்கள் வேறு ; நான் வேறு; எனது கொள்கையை நீங்கள் பின்பற்ற மாட்டீர்கள் உங்கள் கொள்கையை நான் பின்பற்ற மாட்டேன்" என்று கண்டிப்பாக கூறப்பட்டுள்ளது
பின்னர் காஃபிர்களுக்கு இவ்வுபதேசங்களைச் செய்வதில் என்ன பயன்? என்ற சந்தேகம் உண்டாகிறது.
காலம் ஒரு நதியைப் போலத்தான். அணை கடந்த வெள்ளம் அழுதாலும் வராது என்ற பழமொழி போல் கடந்து விட்ட காலமும் திருப்பி வராது.

ஏகத்துவம் என்கிற நதி பெருகி பிரவாகம் எடுத்து கரை காணாத கடலில் கலக்கிறது . ஷிர்க்கை கை கொண்டு குஃப்ரு என்னும் குட்டைக்குள் தேங்கி ஒடுங்கும் நதியாகிவிடுகிறது காஃபிர்களின் வணக்கங்கள்
உபதேசம் செய்பவர் பொதுவாக அனைவருக்கும் உபதேசம் செய்ய வேண்டும். அவர்கள் உபதேசத்தை அங்கீகரிப்பார்களா அல்லவா என்பதைக் கவனிக்க வேண்டியதில்லை. இம்முறையை அனுசரித்து, சில குறிப்பிட்ட காஃபிர்கள், இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவ மாட்டார்கள் என்பதை குர்ஆன் உணர்த்தியதை உணர்ந்திருந்தாலும், தனிப்பட்ட அவ்வுணர்வை ஆதாரமாகக் கொண்டு, அவர்களுக்கு உபதேசம் செய்வதை நிறுத்துவது முறையாகாது.

மேலும், மறுமையில் இறைவன் விசாரணை புரிந்து தண்டிக்கும் போது "அக்குற்றவாளிகள் தங்களிடம் சரியான போதகர் வரவில்லை என்று காரணம் கூறுவதற்கும் இடமிருக்கலாகாது; ஆதலால், கடைசி வரை உபதேசம் செய்து கொண்டிருக்க வேண்டும். அதனை நிறுத்தலாகாது.

"இதா ஜுல்ஜிலத்துல் அர்லு பாதி குர்ஆனுக்கும்,
குல் ஹுவல்லாஹு அஹது மூன்றிலொரு குர்ஆனுக்கும்,
குல் யா அய்யுஹல் காஃபிரூன் நாலிலொரு பங்கு குர்ஆனுக்கும் சமமானது "
என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக இப்னு அப்பாஸ் ரலியல்லாஹுதஆலா அன்ஹுமா, அனஸுப்னு மாலிக் ரலியல்லாஹுதஆலா அன்ஹு ஆகியவர்கள் கூறியுள்ளார்கள்

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 24
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் ) ( சூரத்துன் னஸ்ர் _ உதவி )




اِذَا جَآءَ نَصْرُ اللّٰهِ وَالْفَتْحُۙ

அல்லாஹ்வுடைய உதவியும், வெற்றியும் வரும்போதும்,(அல்குர்ஆன் : 110:1)
وَرَاَيْتَ النَّاسَ يَدْخُلُوْنَ فِىْ دِيْنِ اللّٰهِ اَفْوَاجًا ۙ

மேலும், அல்லாஹ்வின் மார்க்கத்தில் மக்கள் அணியணியாகப் பிரவேசிப்பதை நீங்கள் காணும் போதும்,(அல்குர்ஆன் : 110:2)
فَسَبِّحْ بِحَمْدِ رَبِّكَ وَاسْتَغْفِرْهُ ؕ اِنَّهٗ كَانَ تَوَّابًا

உம்முடைய இறைவனின் புகழைக் கொண்டு (துதித்து) தஸ்பீஹு செய்வீராக; மேலும் அவனிடம் பிழை பொறுக்கத் தேடுவீராக - நிச்சயமாக அவன் “தவ்பாவை” (பாவமன்னிப்புக் கோருதலை) ஏற்றுக் கொள்பவனாக இருக்கின்றான்.,(அல்குர்ஆன் : 110:3)

திருக்குர் ஆனின் 110 ஆம் அத்தியாயம், அந்நஸ்ர் (உதவி) ஆகும்.நபி (ஸல்) அவர்களின் மதீனா வாழ்க்கையில் அருளப்பெற்ற 'மதனீ அத்தியாயமான இதில் மூன்று திருவசனங்கள் இடம்பெறுகின்றன. அருளப்பெற்ற வரிசையில் 114 ஆவது அத்தியாயமான இது, அத்தவ்பா - பராஅத் (9) அத்தியாயத்திற்குப்பின் அருளப்பெற்றதாகும்.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், மொத்தமாக அருளப்பெற்ற அத்தியாயங்களில் இதுவே இறுதியானது (114) என்பார்கள்.

அத்தியாயத்தின் முதல் வசனத்தில், அல்லாஹ்வின் உதவியும் வெற்றியும் வரும்போது என உயர்ந்தோன் அல்லாஹ் குறிப்பிடுகின்றான். இதில் 'உதவி' என்பதைக் குறிக்க 'நஸ்ர்' எனும் சொல் மூலத்தில் ஆளப்பட்டுள்ளது. இதுவே அத்தியாயத்தின் பெயராகச் சூட்டப்பட்டுள்ளது.
ஹிஜ்ரீ 8ஆம் ஆண்டு (கி.பி.630) ரமளான் 10ஆம் நாள் மதீனா முஸ்லிம்களால் திருமக்கா வெற்றி கொள்ளப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் தலைமையில் முஹாஜிர்கள். அன்சாரிகள் 10 ஆயிரம் பேர் இந்நிகழ்ச்சியில் பங்கெடுத்துக்கொண்டனர். அத்துடன் தாயிஃப் ஹிஜாஸ் மாகாண நகரங்கள். யமன் நாட்டின் பெரும்பகுதி ஆகியனவும் முஸ்லிம்கள் கரத்தில் வந்தன.
பின்னர் ஹிஜ்ரீ 10 ஆம் ஆண்டு (கி.பி.631) நபி (ஸல்) அவர்களுடன் பெருந்திரளான மக்களும் சேர்ந்து விடைபெறும் ஹஜ் எனப்படும் புனித ஹஜ் பயணத்தை மேற்கொண்டனர். இஸ்லாமிய வரலாற்றில் இவை மகிழ்ச்சியான தருணங்கள் என்றால் மிகையாது.

இந்த ஹஜ்ஜில் துல்ஹிஜ்ஜா மாதம் அய்யாமுத் தஷ்ரீக்' எனப்படும் 11,12,13 ஆகிய நாட்களில் மினா'வில் நபியவர்கள் தங்கியிருந்தபோதுதான். இந்த அத்தியாயம் (110) அருளப்பெற்றது. அதன்பின் நபிகளார் சுமார் 80 நாட்களே உயிர் வாழ்ந்தார்கள்.
இந்த அத்தியாயத்தில் இறையுதவியும் வெற்றியும் வந்து. இறைமார்க்கத்தில் மக்கள் அணியணியாக இணைவதை (நபியே!) நீர் காணும்போது, உம்முடைய இறைவனைப் போற்றிப் புகழ்வீராக! அவனிடம் பாவ மன்னிப்புக் கோருவீராக! -என உயர்ந்தோன் அல்லாஹ் தன் தூதருக்கு வழிகாட்டுகின்றான்.
நபி (ஸல்) அவர்கள் நபியாக அனுப்பப்பட்டதன் நோக்கம், இறைமார்க்கத்தை அறிமுகப்படுத்தி அதனைச் செயல்படுத்திக் காட்டி, எதிரிகள்வரை அதைக் கொண்டுசென்று எதிர்ப்பை முறியடித்து, ஏராளமான மக்கள் அம்மார்க்கத்தைப் பின்பற்றுகிற நிலையை உருவாக்குவதுதான்.
அது நிறைவேறியது.மக்கா உள்ளிட்ட நகரங்கள் நபிகளாரின் அதிகாரத்திற்கு வந்ததுடன் அப்பகுதிகளில் இஸ்லாம் நன்கு வேரூன்றியது.
இந்த அத்தியாயம் இதையே இலைமறைவு, காய்மறைவாக உணர்த்துகிறது. நபி (ஸல்) அவர்களும் இதைப் புரிந்துகொண்டார்கள். வெற்றியும் உதவியும் கிடைத்துவிட்டது; மக்களும் கூட்டங்கூட்டமாக இறைமார்க்கத் தில் இணைய ஆரம்பித்துவிட்டனர். இனி, இஸ்லாம் எனும் மரம் வானுயர வளரும் என்ற இக்கட்டத்தில், தாம் அனுப்பப்பெற்ற நோக்கம் பூர்த்தியாகிவிட்டது; தம் தவணை நெருங்கிவிட்டது என்பதை நபிகளார் அறிந்து கொண்டார்கள்.
பொதுவாக, ஒரு பொருள் படைக்கப்பட்டதன் நோக்கம் நிறைவேறிவிட்டால், அப்பொருளுக்கு அங்கே என்ன வேலை?
எனவேதான், இந்த அத்தியாயத்தை இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தோழர்களிடம் ஓதிக் காட்டியபோது, தோழர்கள் பலரும் புளகாங்கிதம் அடைந்த வேளையில், அப்பாஸ் (ரலி) அவர்கள் அழுது விட்டார்களாம்!
"ஏன் அழுகிறீர்கள்?" என நபிகளார் வினவ, "உங்கள் இறப்பு முன்னறிவிப்புச் செய்யப்பட்டதாக அறிகிறேன்" என்றார்கள் அப்பாஸ் (ரலி) அவர்கள்.
நபியவர்கள், "நீங்கள் சொல்வதைப் போன்றுதான்!" என்று பதில் கூறினார்கள். அதன்படியே. இதன்பின் சில காலமே நபி (ஸல்) அவர்கள் வாழ்ந்தார்கள். (தஃப்சீர் அல்பஹ்ருல் முஹீத்)

அப்துல்லாஹ் இப்னு அம்ரு (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: “ஒவ்வொரு செயலுக்கும் ஒரு வரையறை இருக்கின்றது. ஒவ்வொரு வரையறைக்கும் ஒரு (இயற்கை) மார்க்கம் இருக்கின்றது. எவருடைய (இயற்கை) மார்க்கம் என் வழியாக, நடைமுறையாக இருக்கின்றதோ அவர் வெற்றி பெறுவார்; என் வழியல்லாத, நடைமுறையல்லாத மார்க்கமாக எவருடைய மார்க்கம் இருக்கின்றதோ அவர் தோல்வியைத் தழுவுவார்” என நபி {ஸல்} அவர்கள் கூறினார்கள். ( நூல்: அஹ்மத் )
இயற்கை என்பது இயல்பாக இருக்கும் தோற்றப்பாடு

என்னும் பொருள் கொண்டது. இயல்பாகத் தோன்றி மறையும் பொருட்கள், அவற்றின் இயக்கம், அவை இயங்கும் இடம், இயங்கும் காலம் மற்றும் பருவ நிலைகள் ஆகியவை அனைத்தையும் இணைத்து "இயற்கை" என்கின்றோம்.

உயிரினம், உயிரின அறிவு போன்றவையும் இயற்கையில் அடங்கும். பொதுவாக இயற்கையை ஆய்வு செய்வதென்பது அறிவியலின் மிகப்பெரிய ஒரு பகுதியாகும்.

உயிரினமோ அல்லது மனிதர்களோ இயற்கையின் ஒரு பகுதியே ஆவர். மற்ற இயற்கை நிகழ்வுகளிலிருந்து மனிதனின் நடத்தைகள் முற்றிலும் வேறுபட்ட தனியான ஒரு பிரிவு என்று பெரும்பாலும் கருதப்படுகிறது. இருப்பினும் மனிதர்களின் படைப்பும், அவர்களின் செய்கைகளும், முன்கூட்டியே கண்காணிக்கப்பட்டவைகளாக கருதப்படுகிறது என்பதை விஞ்ஞானம் ஒத்துக் கொள்ளுகிறது .

وَمَا مِنْ دَآ بَّةٍ فِى الْاَرْضِ اِلَّا عَلَى اللّٰهِ رِزْقُهَا وَ يَعْلَمُ مُسْتَقَرَّهَا وَمُسْتَوْدَعَهَا كُلٌّ فِىْ كِتٰبٍ مُّبِيْنٍ

உணவளிக்க அல்லாஹ் பொறுப்பேற்றுக் கொள்ளாத யாதொரு உயிரினமும் பூமியில் இல்லை. அவை (வாழ்ந்து) இருக்குமிடத்தையும், அவை (இறந்து) அடங்கும் இடத்தையும் அவன் அறிந்தே இருக்கிறான். இவை அனைத்தும் (லவ்ஹுல் மஹ்பூல் என்னும்) தெளிவான (அவனுடைய) பதிவுப் புத்தகத்தில் பதிவாகி இருக்கின்றன.
(குர்ஆன் : 11:6)

'வெற்றி' என்பது எந்த வெற்றியைக் குறிக்கிறது என்பதில் திருக்குர்ஆன் விரிவுரையாளர்கள் ஒரு முகமான கருத்து கூறவில்லை. பல்வேறு கருத்துக்களைக் கூறி இருக்கின்றனர். அவற்றிற் சில வருமாறு.

1.வெற்றி என்பது திருமக்காவை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கைப்பற்றியதைக் குறிக்கிறது. இது ஹிஜ்ரீ இரண்டாம் ஆண்டில் நிகழ்ந்தது. பத்தாயிரம் ஸஹாபிகள் இப்படையெடுப்பில் வீரர்களாகச் சென்றனர். இப்படையெடுப்பைக் குறித்து பைபிள் பழைய ஏற்பாடு யஸ்கியாவின் 42 வது அதிகாரத்தில் முன்னறிக்கை செய்யப்பட்டிருக்கிறது.

2.வெற்றி என்பது கைபர் வீழ்ச்சியைக் குறிக்கிறது. ஹிஜ்ரீ ஆறாம் ஆண்டில் ஹுதைபிய்யா என்ற இடத்தில் மக்கத்துக் குறைஷியருக்கும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குமிடையில் உடன்படிக்கை ஏற்பட்ட பிறகு, கைபர் மீது படையெடுக்க வேண்டிய நிர்ப்பந்த மேற்பட்டது. இங்குள்ள யூதர்கள் பலமாக எதிர்த்தனர். பெரும் போராட்டம் நிகழ்ந்தது. இறுதியாக கைபர் கோட்டைகள் ஒன்றன்பின் ஒன்றாக வீழ்ச்சியடைந்தன. இவ்வெற்றிக்குப் பிறகு பொதுவாகவே எல்லா ஸஹாபிகளுக்கும் வறுமை நிலை மாறி சுபிட்சம் உண்டாயிற்று.

3.வெற்றி என்பது, திருமக்காவை விட்டு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹிஜ்ரத்துச் செய்த பிறகு ஏற்பட்ட யுத்தங்களில், தொடர்ந்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வெற்றி பெற்றதையும் இஸ்லாமிய மகத்துவம் பலமடைந்து கொண்டே வந்ததையும் குறிக்கிறது. திருமக்கா, கைபர், தாயிஃப் ஹுனைன் முதலிய பல இடங்கள் வெல்லப்பட்டதையும், இதிலிருந்து இஸ்லாம் மார்க்கத்துக்கு ஏற்பட்ட வளர்ச்சியையும் இது குறிக்கிறதெனச் சிலர் கூறி இருக்கிறார்கள்.

4.மறைவான வெற்றிகளும், அகக்கல்விகளும், இரகசியங்களும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நாளுக்கு நாள் வெளியாகிக் கொண்டே இருந்தன.

இறுதியாக அஹதிய்யத்தின் தலைவாசலும் திறந்து இறைவனிடமிருந்து கஷ்ஃபே தாத்தியும் ஏற்பட்டது. இதன் பின்னர் இவ்வையகத்திலுள்ள பல காரியங்களும், இறைவனின் வஹ்தத் எனும் ஏகத்துவத்தை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தரிசிப்பதற்குத் தடையாக இருக்கவில்லை.

ஆரிஃபு என்னும் மெஞ்ஞானிகளும், குமலா என்னும் பரிபூரண நிலையை அடைந்தவர்களும், ஆத்மார்த்த முன்னேற்றத்தின் படித்தங்களை ஒவ்வொன்றாகக்கடந்து, இறுதியாக இந்நிலையை அடைகின்றனர். அவர்கள் மீது மறைவான உலகின் தலைவாசல்கள் திறந்து விடுகின்றன. பின்னர். அங்குள்ளவைகள் கண்கூடாக அவர்களுக்குக் காண்பிக்கப்படுகின்றன. அவ்வுலகிலுள்ளவர்களிடம்தான் அவர்களுக்கு அதிகமான நெருக்கம் கூட உண்டாகத் தொடங்குகிறது. இவ்வுலகை அலட்சியம் செய்யவும் ஆரம்பிக்கின்றனர்.

இம்மறைவான உலகிலுள்ளவர்களது அலுவல்கள், இறைவனை தஸ்பீஹ், தக்தீஸ் செய்வதாகவே இருப்பதையும், இவைகள்தாம் அவர்களுக்கு சந்தோஷத்துக்கும் மன நிம்மதிக்கும் காரணமாக இருப்பதையும் இவர்கள் பார்த்து, அதே வழியில் இவர்களும் செல்ல ஆரம்பித்து விடுகின்றனர்.
எனவேதான் இறைவன் இந்த சூரத்தின் கடைசி ஆயத்தில் ட் எனவே உமது றப்பின் புகழைக் கொண்டு தஸ்பீஹு செய்வீராக. இன்னும் அவனிடத்தில் பிழை பொறுக்கத் தேடுவீராக. நிச்சயமாக அவன் தவ்பாவை (மிகவும்) அங்கீகரிப்பவனாக இருக்கிறான் என்று கூறியுள்ளான்.
அல்லாஹுதஆலா அழிவற்றவன். அநாதியானவன். எவரிடத்திலும் எவ்விதத் தேவையுமற்றவன், மனித தத்துவத்தின் மாசுகளை விட்டும் தூயவன், தூக்கமில்லாதவன். அசதி, மறதியற்றவன், நோயற்றவன் என்பன போன்ற விஷயங்களை அதாவது அவனுடைய மகத்துவத்துக்கு ஆகாத தன்மைகளை விட்டு அவன் நீங்கியவன் என மனதால் விசுவாசித்து நாவால் உரைப்பதுதான் தஸ்பீஹு, தக்தீஸ் என்பதாகும்.
இக்கருத்துக்கள் 'ஸுப்ஹானல்லாஹி' என்ற அரபிப் பதத்தினுள் அடங்கி இருப்பதால் இப்பதத்தை தஸ்பீஹ் என்று ஷரீஅத் கூறுகிறது. தஸ்பீஹுதான் மெஞ்ஞானியான ஆரிஃபின் ஆரம்ப நிலை.

புகழத்தக்க தன்மைகளால் அகத்தை அலங்கரிக்க வேண்டும். அதாவது இறைவனுக்கு நியாயமாகவும் அவசியமாகவும் இருக்க வேண்டிய தன்மைகள் அவனுக்கு இருக்கின்றன என்பதை விசுவாசிக்க வேண்டும். நாவால் உரைக்கவும் வேண்டும். இதனைத்தான் தஹ்மீது என்று கூறப்படுகிறது. இது மெஞ்ஞானியின் இரண்டாவது நிலை. இது பலகையில் வர்ணமேற்றுவதை ஒத்திருக்கிறது.
இவ்வித தஸ்பீஹினால் ஃபனாவும் தஹ்மீதினால் பக்காவும் ஏற்படுகிறது என்றுங் கூறலாம். எனவேதான். இறைவன் இந்த ஆயத்தில் "உமது றப்பின் புகழைக் கொண்டு தஸ்பீஹு செய்வீராக" என்று தஸ்பீஹையும் தஹ்மீதையும் கூறியிருக்கிறான். இதனை அனுசரித்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி, சுப்ஹானல்லாஹில் அலிய்யுல் அளீம்" என்று அடிக்கடி கூறி வந்ததுடன் பிறரையும் இவ்வாறு கூறுமாறு தூண்டுவார்கள்.
அடியான் எவ்வண்ணம் எவ்வளவு முயற்சி செய்தாலும் அல்லாஹுதஆலாவுக்குத் தகுந்தவாறு கடமையை நிறைவேற்றுவது முடியாத காரியம்.ஏதேனும் குற்றங்குறைகள் மனிதனை அறியாமலேயே நிகழ்ந்து விடும். ஆதலால், இறைவனிடம் தனது குறையை ஒப்புக் கொள்வதும் அதற்காக மன்னிப்புக் கேட்பதும் அவசியமாகும். இவ்விதமாகத் தன்னை உணர்ந்து, இறைவனிடம் மன்னிப்புக் கேட்பதுங்கூட மிகச் சிறந்த வணக்கமேயாகும். எனவேதான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அடிக்கடி இறைவனிடம் பாவ மன்னிப்புக் கேட்டுக் கொண்டே இருந்தார்கள்."தினசரி இரவிலும் பகலிலும் எழுபதுமுறை பாவமன்னிப்புக் கேட்டு வந்தார்கள்" என்றும் ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

மேலும் இந்த ஆயத்து அருளப்பட்ட காலம், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது கடைசிக் காலம். ஆதலால், அவர்களது உம்மத்துகளின் குற்றங்களை மன்னிக்கும்படி அவர்கள் சார்பாக மன்னிப்புக் கேட்குமாறு இறைவனே கட்டளையிட்டுள்ளான் என்றும் கருத்து உரைக்கப்படுகிறது.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களுக்கு மட்டுமின்றி தங்கள் உம்மத்துகளுக்காகவும் பாவமன்னிப்புக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். இது உம்மத்துக்கள் மீது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது சந்தோஷத்தையும் திருப்தியையும் காட்டுகிறது.

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 25
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )




சூரத்துல் லஹப் (ஜுவாலை)
تَبَّتْ يَدَاۤ اَبِىْ لَهَبٍ وَّتَبَّ

அபூலஹபின் இரண்டு கைகளும் நாசமடைக; அவனும் நாசமாகட்டும். (அல்குர்ஆன் : 111:1)
مَاۤ اَغْنٰى عَنْهُ مَالُهٗ وَمَا كَسَبَ

அவனுடைய பொருளும், அவன் சம்பாதித்தவையும் அவனுக்குப் பயன்படவில்லை. (அல்குர்ஆன் : 111:2)
سَيَصْلٰى نَارًا ذَاتَ لَهَبٍ

விரைவில் அவன் கொழுந்து விட்டெரியும் நெருப்பில் புகுவான். (அல்குர்ஆன் : 111:3)
وَّامْرَاَ تُهٗ حَمَّالَةَ الْحَطَبِ

விறகு சுமப்பவளான அவனுடைய மனைவியோ,(அல்குர்ஆன் : 111:4)
فِىْ جِيْدِهَا حَبْلٌ مِّنْ مَّسَدٍ

அவளுடைய கழுத்தில் முறுக்கேறிய ஈச்சங் கயிறுதான் (அதனால் அவளும் அழிவாள்).(அல்குர்ஆன் : 111:5)

அபுலஹப் - யார் இவர்? இவர் பெயரில் ஒரு அத்தியாயமா? அப்படி என்ன இவருக்கு முக்கியத்துவம்? - மக்காவில் வாழ்ந்த மிகப் பிரபலமானவரும் செல்வந்தரும் ஆவார். பெருமானார் (ஸல்) அவர்களின் தந்தையாரின் சகோதரரும் ஆவார். இவரின் இயற்பெயர் பெயர் அப்துல் உஜ்ஜா.

உஜ்ஜா என்பது மக்காவில் கஃபத்துல்லாஹ்வில் கற்பனையால் வடிவமைக்கப்பட்டிருந்த கடவுள் சிலைகளின் ஒன்று. அந்த கற்பனை கடவுளின் அடிமை என்ற பொருள்படும் படி அமைந்திருக்கிறது இவரது பெயர்.ஆனால் இவருக்கு ஒரு சிறப்பு பெயர் இருந்தது. அது தான் அபுலஹப்.
லஹப் என்றால் தீஜுவாலை, தீச்சுடர். இது ஏனெனில், இவரது முகம் நெருப்பு மாதிரி "செக்கசெவேன்னு செவப்பா" என்பார்களே அதே போல் இருக்கும். அதாவது அவ்வளவு அழகாக இருப்பார்.
இவரின் மனைவி பெயர் உர்வா. உர்வா என்பவர் மிகப் பெரிய குடும்ப வம்சத்தில் வந்தவர்.இவர் எப்போதும் தனது குடும்ப அந்தஸ்த்தை உயர்த்தி மற்றவர்களிடத்தில் பெருமை பேசிக் கொண்டே இருப்பார்.இவருக்கும் இவரது கணவருக்கு இருந்தது போலவே இன்னொரு பெயரும் இருந்தது, அது தான் உம்மு ஜமில் (அழகிகளின் தாய்)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இறைத்தூதராக நியமிக்கப்பட்ட பின் மக்களுக்குப் பிரச்சாரம் செய்யும் எந்தக் கட்டளையும் அவர்களுக்கு வரவில்லை.

உமது நெருங்கிய உறவினரை எச்சரிப்பீராக (26.214) என்ற வசனம் அருளப்பட்ட பின் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஸஃபா எனும் குன்றின் மேல் ஏறினார்கள். குறைஷ்களின் உட்கிளைகளான பனூ ஃபஹ்ர், பனூ அதீ ஆகியோரை அழைத்தார்கள். அனைவரும் அங்கே குழுமினார்கள். வர முடியாதவர், என்ன நடக்கிறது என்பதைக் கவனிக்க தன் பிரதிநிதி ஒருவரை அனுப்பினார்.நபிகள் நாயகத்தின் பெரிய தந்தை அபூலஹபும், குறைஷ்களும் வந்தனர்.
அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் 'இந்தப் பள்ளத்தாக்கிலிருந்து குதிரைப் படை ஒன்று உங்களைத் தாக்க வந்து கொண்டிருக்கிறது என்று நான் கூறினால் என்னை நம்புவீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கவர்கள் 'ஆம் நீங்கள் உண்மையைத் தவிர வேறு எதையும் பேசியதாக நாங்கள் கண்டதில்லை' என்று கூறினார்கள்.
"அல்லாஹ் நாடியிருந்தால் இதை நான் உங்களுக்குக் கூறியிருக்க மாட்டேன். அவனும் இதை உங்களுக்கு அறிவித்திருக்க மாட்டான். உங்களிடம் இதற்கு முன் பல வருடங்கள் வாழ்ந்துள்ளேன். விளங்க மாட்டீர்களா?" என்று (முஹம்மதே!) கூறுவீராக! (அல்குர்ஆன் 10:16)

நபி (ஸல்) அவர்கள், "நான் ஒரு கடினமான (நரக) வேதனை வருமுன் உங்களை எச்சரிக்கை செய்பவனாவேன்" என்று சொன்னார்கள்.
உடனே அபூலஹப், " உன் கை நாசமாகட்டும் உண்டாகட்டும். இதைச் சொல்லத்தான் எங்களை (இங்கே) ஒன்றுகூட்டினாயா?" என்று கூறி ஒரு கல்லை எடுத்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது வீசினான்.
அல்லாஹ் அவன் கூறி வசை வார்த்தைகளிலிருந்தே அவன் மீது "அபூலஹபின் இரண்டு கைகளும் நாசமாகட்டும்..." எனும் (111:1ஆவது) வசனத்தை அருளினான்.
இது ஒரு வரலாற்று நிகழ்ச்சியானாலும் இதில் முக்கியமான முன்னறிவிப்பும் அடங்கியுள்ளது. இஸ்லாம் உண்மையான மார்க்கம் என்பதற்கு அசைக்க முடியாத சான்றுகளில் ஒன்றாகவும் இது அமைந்துள்ளது.
" கேரிமில்லர் " என்ற கிறித்தவப் பாதிரியார் இந்த அத்தியாயத்தை ஆய்வு செய்துவிட்டு, இஸ்லாத்தை ஏற்றார். அத்தகைய அற்புதமான முன்னறிவிப்பு இது.
அபூலஹபும், அவனது மனைவியும் நாசமாவார்கள் என்றும் இருவரும் நரகத்தில் நுழைவார்கள் என்றும் இதில் கூறப்பட்டுள்ளது. இஸ்லாமிய நம்பிக்கையின்படி இதன் கருத்து என்னவென்றால், அவ்விருவரும் இஸ்லாத்தை ஏற்க மாட்டார்கள். இஸ்லாத்தை ஏற்கமறுத்து அதன் காரணமாக நரகத்தை அடைவார்கள் என்பதாகும். அவ்விருவரும் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டால், அவர்கள் நரகில் நுழைய மாட்டார்கள்.
இஸ்லாத்தை எப்படியாவது ஒழித்துக் கட்ட வேண்டும் என்று ஆரம்பம் முதல் அயராது பாடுபட்டவன் அபூலஹப். 'நானும், என் மனைவியும் இஸ்லாத்தை ஏற்கிறோம்' என்று அபூலஹப் நடித்தாவது இருந்தால் அன்றோடு இஸ்லாத்தை ஒழித்திருக்க முடியும்.

'அபூலஹபும், அவன் மனைவியும் இஸ்லாத்தை ஏற்க மாட்டார்கள் என்று இறைவன் கூறியது பொய்யாகி விட்டது; எனவே இது இறைவனின் கூற்று அல்ல; முஹம்மதின் கற்பனைதான்; எனவே முஹம்மது இறைத்தூதர் அல்லர்' என்று மறைமுகமாகப் பிரச்சாரம் செய்து, இஸ்லாத்தை இல்லாது ஒழித்திருக்க முடியும்.
அவ்வாறு செய்ய வேண்டும் என்று அவனுக்குத் தோன்றக் கூட இல்லை. இது இறைவனின் கூற்றாக இருந்ததால் தான் இவ்வாறு அவனுக்கும் தோன்றவில்லை. அவனுக்குப் பக்க பலமாக இருந்த நபிகள் நாயகத்தின் எதிரிகளுக்கும் இப்படிச் செய்து இஸ்லாத்தை ஒழிக்கலாமே என்று தோன்றவில்லை.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் அவர்களை நம்பி ஏற்றுக் கொண்டவர்களில் ஓரிருவரைத் தவிர மற்ற அனைவரும் ஆரம்பத்தில் நபிகள் நாயகத்தைக் கடுமையாக எதிர்த்தவர்கள்தான்.
இவ்வாறு எதிர்த்தவர்கள் எல்லாம் தன்னுடன் வந்து இணைந்து கொண்டிருக்கும் வேளையில் குறிப்பிட்ட இருவரைப் பற்றி 'இவ்விருவரும் ஒருக்காலும் இஸ்லாத்தை ஏற்க மாட்டார்கள்' என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சுயமாக அறிவித்திருக்க முடியாது.

மற்றவர்களைப் போலவே இவர்களும் இஸ்லாத்தில் இணைவார்கள் என்று கருதுவதற்குத்தான் அதிக வாய்ப்புகள் இருந்தன.
அவ்விருவரும் இஸ்லாத்தை ஏற்க மாட்டார்கள் என்று நபிகள் நாயகம் மனதால் நினைத்தாலும் அதைச் சொல்லியிருக்க மாட்டார்கள். ஏனெனில் இவ்வாறு சொல்விட்டால் இதைப் பொய்யென்று நிரூபிக்கும் திட்டத்துடன் அவ்விருவரும் இஸ்லாத்தில் சேருவதாக அறிவித்து மற்றவர்களை இஸ்லாத்தை விட்டும் விரட்டினால்,என்ன ஆகும் என்று எண்ணி இதை வெளிப்படுத்தாமல் இருந்திருப்பார்கள்.
இறைவாக்கு நிச்சயம் நிறைவேறும். அதை எந்த மனிதனாலும் மீற முடியாது என்ற அசைக்க முடியாத நம்பிக்கையில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இதை வெளிப்படையாக மக்கள் முன்னே வைத்தார்கள்.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவர்கள் அறிவித்தவாறு அபூலஹபும், அவனது மனைவியும் இஸ்லாத்தின் எதிரிகளாகவே இருந்து மரணித்தார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இறைத்தூதர் தான் என்பதற்கு இதுவும் வலுவான சான்றாக அமைந்துள்ளது.
அரபியர் அபூ (தந்தை), இப்னு (தனயன்), அகு (சகோதரன்) என்ற பதங்களில் ஏதேனும் ஒன்றை அதனுடன் சேர்த்துக் கூறுவது வழக்கம்.
இக்கருத்தில்தான் சந்திரனுக்கு இப்னுல் லைல் (இரவின் புதல்வன்) என்றும், அரபு நாட்டைச் சேர்ந்தவனுக்கு அகுல் அரபு (அரபியரின் சகோதரன்) என்றும் வழிப்போக்கனுக்கு இப்னுஸ் ஸபீல் (பாதையின் மகன்) என்றும் அரபியர் கூறுகின்றனர். எனவே, அபூலஹப் என்பதற்கு லஹப் என்பவனின் தந்தை என்பது பொருளல்ல.
ஆனால், அவனது பெயர் அபூலஹப் என்றால் தீ ஜுவாலை, தீச்சுடர் என்று அர்த்தம்.வைக்கும் பெயருக்கும், வாழும் வாழ்க்கைக்கும் ஒரு தொடர்பு உண்டு.
நபி (ஸல்) அவர்களிடத்தில் வந்த நபர்களில் “அஸ்ரம்’ .(நன்மைகளை முறிப்பவர்) என்று கூறப்படும் ஒரு மனிதர் இருந்தார்.
அவரிடம் நபி (ஸல்) அவர்கள் "உன் பெயர் என்ன என்று கேட்டார்கள். அதற்கவர் “அஸ்ரம்’ (நன்மைகளை முறிப்பவர்) என்று கூறினார்.
அதற்கு நபியவர்கள், இல்லை. நீ “சுர்ஆ” (விளைவிக்கும் பூமி) என்றுகூறி (அவருக்கு பெயர் சூட்டி)னார்கள்)
அறிவிப்பவர்: உஸாமா பின் உஹ்தர் (ரலி), அபூதாவூத் 4303
மக்கா வெற்றியின் போது ஆஸி (இறைவனுக்கு மாறு செய்பவர்) என்ற பெயர் கொண்ட ஒருவர் இஸ்லாத்தைத்தழுவினார்.
நபியவர்கள் அவரின் பெயரை முதீவு (இறைவனுக்கு கட்டுப்படக்கூடியவர்) என்று மாற்றினார்கள். அவருக்கு பெயர் மாற்றம் செய்ததையும், இறைவனுக்கு மாறுசெய்பவர் இஸ்லாத்தை தழுவ மாட்டார்; கட்டுப்படுபவர்தான் இஸ்லாத்தை தழுவுவார் என்பதையும் குறிக்கும் வகையில் நபியவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்.
மக்கா வெற்றி நாளின் போது நபி (ஸல்) அவர்கள் கூற முதீவு (ரலி) அவர்கள் செவியேற்றார்கள்:
(நபியவர்கள் கூறினார்கள்) இந்த நாளுக்குப் பிறகு குரைஷிகள் சித்ரவதையினால் கொல்லப்படமாட்டார்கள்.
(இறைவனுக்கு) மாறு செய்பவர்களான குறைஷிகளில் இறைவனுக்கு வழிபடக்கூடியவரை “(முதீவு)” தவிர வேறுயாருக்கும் இஸ்லாம் சென்றடையவில்லை.
அவரின் பெயர் “ஆஸி” (இறைவனுக்கு மாறு செய்பவர்) என்று இருந்தது. அவருக்கு நபியவர்கள் 'முதீவு'(கட்டுப்படக்கூடியவர்) என்று பெயர் சூட்டினார்கள். நூல்: அஹ்மத் 15446
பஷீர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து தன்னுடைய பெயர் ஸஹ்ம் (நெருக்கடி) என்று கூறினார்.
நபி(ஸல்) அவர்கள் அவருக்கு பஷீர் (நற்செய்தி) என்று பெயர் சூட்டினார்கள் அறிவிப்பவர்: பஷீர் (ரலி), நூல்: அஹ்மத் 20950
சில பெயர்கள் அழகிய பொருளுடையதாக இருந்தாலும் அந்தப் பெயரைக் கூறி அழைக்கும் போது, அவர் இல்லை என்று பதில் வந்தால்,அந்த அழகிய தன்மையே இல்லாமல் போய்விட்டதோ என்று எண்ண வேண்டியநிலை ஏற்படும். இதன் காரணமாக இது போன்ற சில பெயர்களை வைப்பதைத் தடை செய்தார்கள்.

அபூலஹப் என்றால் தீ ஜுவாலை பெயருக்கு தக்கவாறு அவன் (நரக) நெருப்பிற்கு சொந்தமானான்.

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 26
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )
## ( சூரத்துல் இக்லாஸ் - ஏகத்துவம் (பகுதி - 1)




بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

قُلْ هُوَ اللَّهُ أَحَدٌ ﴿١﴾ اللَّهُ الصَّمَدُ ﴿٢﴾ لَمْ يَلِدْ

وَلَمْ يُولَدْ ﴿٣﴾ وَلَمْ يَكُن لَّهُ كُفُوًا أَحَدٌ ﴿٤﴾

______________________________________

قُلْ هُوَ اللّٰهُ اَحَدٌ

(நபியே) நீர் கூறுவீராக: அல்லாஹ் அவன் ஒருவனே.(அல்குர்ஆன் : 112:1)

اَللّٰهُ الصَّمَدُ

அல்லாஹ் (எவரிடத்தும்) தேவையற்றவன்.(அல்குர்ஆன் : 112:2)

لَمْ يَلِدْ ۙ وَلَمْ يُوْلَدْ ۙ

அவன் (எவரையும்) பெறவுமில்லை; (எவராலும்) பெறப்படவுமில்லை.(அல்குர்ஆன் : 112:3)

وَلَمْ يَكُنْ لَّهٗ كُفُوًا اَحَدٌ

அன்றியும், அவனுக்கு நிகராக எவரும் இல்லை.(அல்குர்ஆன் : 112:4)

1) சூராவின் அற்புத கட்டமைப்பு :-

______________________________________

இக்லாஸ் அத்தியாயத்தில் இறைவனின் ஏகத்துவத்தை வலியுறுத்தும் ' அஹத் 'என்ற சொல்லின் ஈற்றெழுத்தாகிய "தால் '' பின்வரும் நான்கு தொடர்களுக்கும் கூட ஈற்றெழுத்தாக அமைந்தது.
" லா இலாஹ இல்லல்லாஹ் " - என்ற கலிமாவில் "இல்லை" வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர என்று ஒரே ஒரு ' இல்லை 'யை சொன்னவன் , இக்லாஸ் அத்தியாயத்தில் , தேவை ' இல்லா'தவன் (1). ( யாரையும் ) பெறவும் 'இல்லை' (2), ( யாராலும்) பெறப்படவும் 'இல்லை ' ( 3 ) , (யாரும்) அவனுக்கு நிகரானவராக 'இல்லை' (4) - ஆக நான்கு இல்லை .
கலிமாவில் கூட சொல்லப்படாத ' அஹது ' என்ற ஒற்றைச் சொல்லுக்குரியவனுக்கு நான்கு ' இல்லை ' சிறப்பு கவனத்தைப் பெறுகிறது.
இக்லாஸ் அத்தியாயத்தில் ஏழெழு எழுத்துக்களாலும், பதினேழு சொற்களாலும் ஆக்கப்பட்டுள்ள இச்சிறு அத்தியாயத்தின் சீரும் சிறப்பும் அளவிடற் கரியதாகும்.
இந்த அத்தியாயத்தின் நான்கு வசனங்களில் அமைந்துள்ள ஐந்து தொடர்களும் "தால்" என்னும் ஈற்றெழுத்துடன் முடிவடைவதில் பல நுட்பங்கள் இருப்பதாக ஆய்வாளர்கள், தத்துவ ஞானிகள் நீண்ட அத்தியாயங்களில் கூட இதுபோன்ற தொடை நயம் - ஒலி இயைபு- (RHYME) அமைந்து திருமறையின் ஓசை நயத்தை உயர்வுபடுத்தக் காணலாம்.

இவ்வடிப்படையில் இக்லாஸ் அத்தியாயத்தில் இறைவனின் ஏகத்துவத்தை வலியுறுத்தும் "அஹத்' என்ற சொல்லின் ஈற்றெழுத்தாகிய "தால்" பின்வரும் நான்கு தொடர்களுக்கும் கூட ஈற்றெழுத்தாக அமைந்தது.
முதல் தாலுடன் முடிவடையும் 12 எழுத்துக்களும் தவ்ஹீதின் தாரக மந்திரமாகிய கலிமாவின் 12 எழுத்துக்களுக்கும்,
قُولُوا : لَا إِلَهَ إِلَّا اللَّهُ ؛ تُفْلِحُوا
இரண்டாவது தாலுடன் முடிவடையும் எழுத்துக்கள் ஈமான், இஸ்லாம் ஆகியவற்றிற்கும்,
மூன்றாவது தாலுடன் முடிவடையும் ஐந்து எழுத்துக்கள் மண், தண்ணீர், காற்று, நெருப்பு, ஆகாயம் ஆகிய அனாசிர்கள் எனப்படும் ஐம்பூதங்களுக்கும்,
நான்காவது தாலுடன் முடிவடையும் ஏழு எழுத்துக்கள் இன்ஸானின் ஏழு சிபத்துக்களுக்கும்,
இறுதியிலுள்ள 15 எழுத்துக்கள் இறைவனின் 14 சிபத்துக்களுக்கும், தாத்துக்கும் இஷாராவாக அமைந்தனவெனத் தத்துவ விளக்கம் தந்துள்ளனர் மெய்ஞ் ஞானிகள்.
திருமறையின் 114 அத்தியாயங்களில், 'குல்" (சொல்வீராக)ன்னும் சொல்லுடன் தொடங்குவன ஐந்து. இவை ஆத்மீகத் துறையில் பயன்படும் விதத்தைத் தத்துவஞான மேதைகள் தக்கவாறு எடுத்துக் காட்டியுள்ளனர்.
கோமான் நபியவர்களை நோக்கிக் "கூறுவீராக" இறைவன் சொல்வது, திருமறை என இறைவனின் அருளுரையே என்பதற்குப் போதுமான சான்றாகும்.
"அல்லாஹு அஹத்" (இறைவன் ஒருவனாயிருக்கும்) என்பதில் ''அல்லாஹ்' என்னும் எழுவாய்க்கு "அஹத்" என்பது பயனிலையாக அமைந்தது. ஆகவே அதற்கு முன்னால் அமைந்துள்ள "ஹுவ" என்னும் சொல் தேவையற்று அமைந்ததோவெனின், அவ்வாறன்று. அச்சொல்லில் பலவாம். அமைந்துள்ள சிறப்புக்கள்
ஹுவக என்பதற்கு "அது '', "அவன்" என்னும் சுட்டுப் பொருட்கள் இருப்பினும், மெய்ஞ்ஞானத் துறையில் அச்சொல்லுக்கு அமைந்துள்ள ஆற்றல்கள் பலவாம்.
"யா ஹூ" என்னும் சொல்லே யூதர்கள் இறைவனைக் குறிப்பதற்குப் பயன் படுத்திய 'யாஹோவா" என அமைந்ததெனக் கூறுவர் சொல்லாராய்சியாளர்கள்.
ஹூ என்பதை இறைவனின் தாத்துக்குரிய குணிப் பெயராகக் ஞான மேதைகள் அதற்கு உருவேற்றி உயர்வு பெற்றுள்ளனர்.

இருதயங்களுக்கு கஷ்பென்னும் வெளிப்பாட்டைத் தருவது "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்னும் திக்ராகுமென்றும் ஆன்மாக்களுக்கு அத்தகைய வெளிப்பாட்டைத் தருவது, ''அல்லாஹ்' என்னும் திக்ராகுமென்றும், அஸ்ரார் எனப்படும் இரகசியங்களுக்கு அத்தகைய வெளிப்பாட்டைத் தருவது "ஹூ" என்னும் திக்ராகுமென்றும் ஞான மேதைகள் நவின்றுள்ளனர்.
ஹக்கென்னும் சிப்பிக்குள் அமைந்த முத்துக்களுக்கு
நிகரானவை, மேற்குறிப்பிட்ட இதயம்,ஆத்மா, சிர்ரு ஆகிய மூன்றுமெனக் கருதுவர்.
'ஹூ' என்னும் ஒலி, அஸ்ராருகளுக்கு உணவாகவும் காந்தமாகவும் அமைந்து பல சிறந்த பயன்களை விளைவிக்கின்றது. சிறப்பான தொரு பொருளை எடுத்துரைப்பதற்கு முன்னர் செவிமடுப்போரின் கருத்தைத் திருப்புவதற்காக, "ஹுவ" என்னும் சொல்லைப் பயன் படுத்துவது அரபி மொழி மரபாகவும் அமைந்துள்ளது.
தமிழ் மொழிப் பேச்சு வழக்கிலும், சிலர், சில தருணங்களில் கேட்போரின் கவனத்தைக் கவர்வதற்காகக் காரணமின்றியும் "அதாவது" என்பன போன்)ற சொற்.களைப் பயன்படுத்தப்
பார்கின்றோம். இதனை அரபி மொழி இலக்கணத்தில் '
''ளமீர் ஷான்" என்றுரைப்பர்.
அடுத்தபடியாக இறைவனின் ஏகத்துவத்தைக் குறிக்கும். "அஹத்" என்னும் சொல்லும் ஆழ்ந்த பொருளைக்கொண்டது. அதற்கிணையானதோர் சொல்லைப் பிறமொழிகளில் காண்பதரிது.

எண்ணிக்கையில் ஒன்று அல்லது ஒருவன் என்பதைக் குறிக்க 'வாஹித்” என்ற சொல்லேபயன்படுத்தப்படும். எண்ணிக்கையில் மட்டுமின்றி, எவ்வகையில் நோக்கினும் தனிச்சிறப்புடன் ஏகனாகத் திகழும் இறைவனுக்கு மட்டுமே "அஹத்" என்னும் சொல் உரியதாகும்.
இறைவனின் அழகிய திருப்பெயர் வரிசையில் "அல் வாஹிதுல் அஹத்" என்பதாக இவ்விரு சொற்களும் ஒன்றாகச் சேர்த்தே அமைக்கப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது.
பாருலகில் இடம் பெற்றுவிட்ட பழுதுபட்ட பல்வேறு கடவுட் கொள்கைகளை, நான்கே வசனங்களில் கண்டித்துரைத்து இறைவனின் ஏகத்துவத்தையும், தூய்மையையும்
நிலைநாட்டுகின்ற இவ்வத்தியாயத்திற்குரிய பல பெயர்களே இதன் சிறப்புக்குச் சான்றாகும்.
இவ்வத்தியாயத்தைத் திருமறையின் முடிவுரை எனக் குறிப்பிடுதல் குற்றமாகாது. ஏனெனில் இதன் பின்னர் இடம் பெற்றுள்ள இரு அத்தியாயங்களும் இறைவனிடம் பாதுகாப்புத் தேடும் பிரார்த்தனைகளாகவே அமைந்துள்ளன, திருமறையினும் நுவலப்படும் பொருட்களை வரலாறு பற்றியன; சட்டதிட்டங்கள் பற்றியன; நம்பிக்கை பற்றியன என முப்பெரும் பிரிவுகளாகக் கொள்வர். நம்பிக்கை அனைத்திற்கும் அடிப்படையாகவுள்ள இறைநம்பிக்கையை உறுதிப்படுத்துவதற்குரிய கருத்துக்கள் இவ்வத்தியாயத்தில் கூறப்படுவதால் இவ்வத்தியாயம் திருமறையிள் மூன்றில் ஒருபகுதிக்கு நிகரானதெனக் கூறப்படுகிறது.

அபு சயீத் அல் குத்ரி (ரலி) கூறினார்கள்: நபி (ஸல்) அவர்கள் தன் தோழர்களிடம், ‘உங்களில் யாராவது ஒரே இரவில் குர்ஆனின் மூன்றில் ஒரு பகுதியை ஓத முடியுமா?’என கேட்டார்கள்.
அவர்கள், ‘இறைதூதர் அவர்களே, எங்களில் யாருக்கு இது சாத்தியம்?’என கேட்டார்கள். அதற்கு, நபி (ஸல்) அவர்கள், ‘குல் ஹுவல்லாஹு அஹத், அல்லாஹுஸ்ஸமத் (சூரத்துல் இக்லாஸ்) குர்ஆனின் மூன்றில் ஒரு பகுதி.’என கூறினார்கள். (அல் புகாரி)
மிகக்கொடிய பாவமாகிய "ஷிர்க்' என்னும் இணை வைப்பதிலிருந்து மக்களைத் தடுக்கும் ஏகத்துவத்தை அழுத்தமாகக் கூறுவதால், இதற்கு "இக்லாஸ்" என்னும் பெயர் அமைந்தது.
மேலும் இறைவனைத் தூய்மைப்படுத்திக் காட்டுவதனால், "அடிப்படை" என்னும் பொருள் தரும் "அஸாஸ்" என்னும் பெயரினைப் பெற்றது. மேலும் இதற்கு தவ்ஹீது; தஜ்ரீது,
தலஸீல், விலாயத், மஃரீயத் நிஸ்பத், ஜமால், ஸமது, பரர்த், நூர்,முக் ஷபத் , முஅவ்வதத், முதக்கிரத், முனப்பிரத், முஹ்தளர் போன்ற எத்தனையோ சிறப்புப் பெயர்கள் அமைந்துள்ளன.
ஒருமுறை இவ்வத்தியாயத்தை ஓதுபவருக்கு பரக்கத் உண் டாகுமென்றும், இருமுறை ஓதின் அவருக்கும் அவர் குடும்பத் திற்கும் பரக்கத் உண்டாகுமென்றும், மும்முறை ஓதின்
அவருக்கும், அவர் குடும்பத்தினருக்கும், அண்டை அயலாருக்கும் பரக்கத் உண்டாகுமென்றும்,
நூறு தடவைகள் ஓதின் ஐம்பது ஆண்டு பாவங்கள் மன்னிக்கப்படுமென்றும், ஆயிரம் தடவைகள் ஓதின் சுவனபதியில் ஓதுபவருக்குரிய இருப்பிடத்தைக் கண்டா லன்றி அவர் மரணமடைய மாட்டாரென்றும் நபி மொழிகள் எடுத் துரைக்கின்றன.

வாழ்வில் தோன்றும் இடுக்கண்களுக்கும், வறுமைக்கும் இவ்வத்தியாயம் மாமருந்தாகுமென்றும், வீட்டில் நுழையுங்கால் வீட்டாருக்கு ஸலாம் கூறி இதனை ஓதுவோரை வறுமை அணுகாதென்றும், மரணவேளையில் ஓதினால் மண்ணறையில் வேதனைகள் அகலுமென்றும் அண்ணல் பெருமானார் (ஸல்) அவர்களே அருளியுள்ளார்கள்.
படுக்கையில் படுத்துறங்குவதற்கு முன்னர் வலப்பக்கம் ஒருக்கணித்துப் படுத்து இவ்வத்தியாயத்தை நூறு முறை ஓதிவரின், மறுமையில் இறைவன் அவரை நோக்கி, "உம்முடைய வலப்பக்கமாகவே சென்று சுவனத்தை அடைவீராக!" என இயம்புவானெனவும் நாயகமவர்களே நவின்றுள்ளார்கள்.

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 27
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )

( சூரத்துல் இக்லாஸ் - ஏகத்துவம் (பகுதி - 2)
اَللّٰهُ الصَّمَدُ

"அஸ்ஸமத் " _ அல்லாஹ் தேவையுமற்றவன். (குர்ஆன் : 112:2)

___________________________________________________________

"அல்லாஹுஸ்ஸமத்"(அல்லாஹ் யாருடையதேவையுமற்றவன்
என்னும் தொடரிலுள்ள "ஸமத்" என்னும் சொல்லும் ஆழ்ந்த பொருளைக் கொண்டது. எதற்கும் பிறரின் தேவைப்படாது. ஆனால் எல்லோருக்கும் அவனுடைய ஆதரவு ஆகரவு தேவைப்படுகின்ற ஒருவனே ஸமதானவன். 'அஸ்ஸமத்' என்பதற்கு அவசியமான நேரங்களில் அகராதி தரும் பொருளாகும். அதன்பால் நாட்டம் நாடப்படுவோன் என்பது "ஸமத இலைஹி" என்பதற்கு செலுத்தினான் என்பது பொருளாகும். தலைவன்; தன்னிகரில்லாத் தலைவன்; தன்னைவிடச் சிறந்தோரில்லா உயர்வுடையோன்; நிறைவான அறிவுடையோன் என இதற்குப் பல பொருட்கள் உள்ளன.
"அஸ்ஸமத் - படைப்புகள் யாவும் தம் தேவைகளிலும் கோரிக்கைகளிலும் அவனிடமே தேவையாகின்றன . ஆனால் அவனுக்கு யாரிடமும் எந்தத் தேவையும் கிடையாது" - இப்னு அப்பாஸ் (ரலி)
"அஸ்ஸமத் " எனும் சொல் , எல்லா அதிகார எல்லையைத் தொட்டு விட்ட எஜமானைக் குறிக்கும் " - அஃமஷ் (ரஹ்)
" அஸ்ஸமத் " தேவையற்றவன் என்கிற இவ்வசனம் இவ்வசனத்திற்கு அடுத்த வசனமான " அவன் யாரையும் பெற்றெடுக்கவில்லை .அவன் யாராலும் பெற்றெடுக்கப்படவுமில்லை " என்னும் வசனத்திற்கு விளக்கவுரையாக "அஸ்ஸமத் " என்கிற வசனம் அமைந்திருக்கிறது - ரபீஉ பின் அனஸ் (ரஹ்) .
இப்னு மஸ்ஊத் (ரலி) , ளஹ்ஹாக் , சுத்தீ (ரஹ்) ஆகியோர் ..." அஸ்ஸமத் " எனும் சொல் , வயிறு இல்லாத தன்னிறைவானவனைக் குறிக்கும் . காரணம் வயிறுதான் தேவையின் ஆரம்பமே " என்கிறார்கள் .
ஷஅபீ (ரஹ்) அவர்கள் : " அஸ்ஸமத் " என்பது , உணவு உட்கொள்ளாத , குடிபானம் அருந்தாதவனைக் குறிக்கும் "
"வயிறுதான் தேவையின் ஆரம்பமே " என்றால் வயிற்றை பற்றி ...மனித உடலில் முக்கியமான உறுப்புகளில் ஒன்று வயிறு. உண்ணும் உணவை உடைத்து செரிக்கச் செய்வதும், உணவிலுள்ள சத்துகளை கிரகித்து உடலுக்கு வழங்கும் முக்கிய பணியிலும் வயிறு ஈடுபடுகிறது.
செறித்த உணவில் இருந்தே விந்தணும் உற்பத்தியாகி அம்மனிதனின் வமிச வழிக்கு உதவுகிறது . ("அவன் யாரையும்
பெற்றெடுக்கவில்லை . அவன் யாராலும் பெற்றெடுக்கப்படவுமில்லை ")

வெறும் இரைப்பை மட்டும் வயிறு அல்ல. சிறு குடல், பெருங்குடல், கல்லீரல், பித்தப்பை, கணையம் , மண்ணீரல், சிறுநீரகம் , விந்துப்பை போன்ற அனைத்தும் சேர்ந்ததே வயிறு ஆகும்.
சில விலங்கினங்களில் வயிற்று பகுதியில் கூடுதல் துணை உறுப்புகள் சேரும். சில விலங்கினங்களுக்கு வயிறு பல பகுதிகளாக பிரிந்து காணப்படும். உதாரணமாக மாடு போன்ற அசைபோடும் விலங்கினங்களுக்கு வயிறு 4 பகுதிகளாக பிரிந்திருக்கும்.அதனுள்ளே பாலை சுரப்பதற்குரிய வழிவகை செய்யப்பட்டிருக்கிறது .
" (ஆடு, மாடு, ஒட்டகம் ஆகிய) கால்நடைகளிலும் உங்களுக்கு ஒரு படிப்பினை உண்டு. இரத்தத்திற்கும் சாணத்திற்கும் இடையில் அதன் வயிற்றில் இருந்து கலப்பற்ற பாலை (உற்பத்தி செய்து) நாம் உங்களுக்குப் புகட்டுகிறோம். அது அருந்து பவர்களுக்கு மிக்க இன்பகரமானது."(அல்குர்ஆன் : 16:66)

வயிறு முதல் பணியாக தற்காப்பு வேலையுடனே தனது பணியைத் தொடங்குகிறது. அதாவது நமது நோய் எதிர்ப்பு மண்டலத்தை பாதிக்கும் காரணிகளை முதலில் அப்புறப்படுத்துவதே வயிற்றின் முக்கியப்பணி.

இரைப்பையில் உள்ள ரசாயனமான ஹைட்ரோகுளோரிக் அமிலம் சிறந்த நுண்ணுயிர்க் கொல்லியாகும். இதனால் உணவுப் பொருட்களில் இருக்கும் பெரும்பாலான கிருமிகள் வயிற்றுப் பகுதியில் கொல்லப்பட்டு விடுகின்றன. உணவுப் பொருட்களை உடைத்து துகள்களாக சிதைக்கவும் இந்த அமிலம் பெரிதும் துணை புரிகிறது.

வயிற்றுத் திரவமான ஹைட்ரோகுளோரிக் அமிலம், அரிக்கும் தன்மை உடையது. உணவுப் பொருட்களுடன் உலோக துணுக்குகள், எலும்புத்துகள்கள் கலந்து சென்றாலும் அதை அரித்துச் சிதைத்துவிடும் திறன் இதற்கு உண்டு.

தொழிற்சாலைகளிலும்கூட உலோகத் துரு அகற்ற இதே ரசாயனத்தையே பயன்படுத்துகிறார்கள். நமது இரைப்பை ஒவ்வொரு நாளும் 3 லிட்டர் செரிமான திரவத்தை சுரக்கிறது. இதைவிட அதிகமாக சிலருக்கு சுரக்கும் அவர்கள் எந்நேரமும் எதையாவது சாப்பிட்டுக் கொண்டே இருப்பார்கள்.

" அஸ்ஸமத் " இவை யாவற்றை விடவும் அவன் தேவையற்றவன் . அவன் மஹா தூய்மையானவன் .

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 28
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )

(சூரத்துல் இக்லாஸ் - ஏகத்துவம் (பகுதி - 3)

அவன் யாரையும் பெறவில்லை; யாராலும் பெறப்படவுமில்லை)

---

"லம் யலித்; வலம் யூலத்" அவன் யாரையும் பெறவில்லை; யாராலும் பெறப்படவுமில்லை முதுமைப் பருவத்தில் மனிதர்களுக்கு ஆதரவாக இருப்பதற்கு, மக்கள் தேவைப்படுகின்றனர்.

அனைத்து ஆற்றல்களையும் பெற்று மரணமின்றித் திகழும் மாபெரியோனுக்குப் பெற்றோர்கள் உண்டென உரைத்தல் இறைவனைப் படைக்கப்பட்ட பொருளாகக் கொண்டு மாசுபடுத்துவதாகும். மேலும் இறைவனின் பெற்றோர்களை யார் எந்த இறைவன் படைத்தான் ? என்கிற பகுத்தறிவு கேள்வி கேட்கும்

கிறிஸ்தவர்கள் இறைவனைப் பிதாவாகவும், குமாரனாகவும் கருதும் கொள்கையையும், அக்கால மக்காவாசிகள், மலக்குமார்களை அல்லாஹ்வின் புதல்விகளாகப் பூசித்து வந்ததையும் இவ்வசனம் மறுத்துரைக்கின்றது.

'வலம் யகுன்லஹு குஃப்வன் அஹத்' மேலும் யாரும் ஒப்பாக இல்லை என்னும் அவனுக்குச் சமமாக தனக்குவமையில்லாத் தனிச்சிறப்புகள் வாய்க்கப்பெற்ற இறைவனின் உயர்வை எடுத்துரைத்து, இவ்வத்தியாயத்திற்கு மட்டுமன்றி, திருமறைக்கே உரிய பொருத்தமான முடிவுரையாக இலங்குகின்றது. படைக்கப்பட்ட பொருளை இறைவனாகக் கருதுகின்ற அவதாரக கொள்கை, இறைவனுக் கெதிராகத் தீமைகளை உருவாக்கும் தேவதைகளை நம்புகின்ற மஜூசிக் கொள்கை, ஆகிய இரண்டினையும் இந்நான்காவது வசனமானது கண்டித்துரைக்கின்றது.

அறிவிலோ, ஆற்றலிலோ, ஆக்குவதிலோ, அளிப்பதிலோ. அழிப்பதிலோ, ஆள்வதிலோ இறைவனுக்கு ஒப்பாக எவரையும் கருத முடியாதென்பதை இவ்வசனம் தெளிவாக்கிவிடுகின்றது.

இவ்வத்தியாயத்தின் நான்கு வசனங்களும் நான்கு வகை யான 'ஷிர்க்' கென்னும் இணை வைத்தலுக்கு மறுப்பாகும் எனக் கொள்ளலாம். எனவேதான் சூரத்துல் இக்லாஸ் - ஏகத்துவம் என்ற பெயரை இறைவன் சூட்டினானோ ?

மனிதனைப் போன்றே கடவுளும் இருந்தால், மனிதனுக்கும் கடவுளுக்கும் இடையில் வேறுபாடு இல்லாமல் போய்விடுமே!? நமக்குறிய பலவீனங்கள் அவரிடமும் இருந்துவிடுமே!? எனவே இறைவன் நம்மிடமிருந்து மாறுபட்டுத்தான் இருக்க வேண்டும் என்று நமது பகுத்தறிவு கூறுகிறதல்லவா?

மனிதர்களே! ஒரே ஆண் ஒரே பெண்ணிலிருந்து தான் உங்கள் எல்லோரையும் நாம் படைத்தோம்.
(அல்குர்ஆன் 49:13)

1) நாம் உணவு உட்கொள்கிறோம். எனவே இறைவன் உணவு உட்கொள்ளாதவனாக இருக்க வேண்டும். மேலும் அவன் நமக்கு உணவு அளிப்பவனாக இருக்க வேண்டும்.
2) நாம் பிறரிடத்தில் தேவையுடையவராக இருக்கிறோம். இறைவன் எவரிடமும் தேவையற்றவனாக இருக்கவேண்டும்.
3) நாம் தாயின் வயிற்றில் பிறக்கின்றோம், எனவே இறைவன் தாய், தந்தை இல்லாதவனாக இருக்க வேண்டும். அவன் யாராலும் பெறப்படாதவனாகவும் யாரையும் பெற்றெடுக்காதவனாகவும் இருக்க வேண்டுமல்லவா?
4) நமக்கு மரணம் உண்டு, எனவே இறைவன் மரணமடையாதவனாக - நித்திய ஜீவனான- இருக்க வேண்டும்.
5) நாம் ஓய்வு எடுக்கின்றோம். உறங்குகின்றோம். உழைப்பிற்குப் பிறகு நமக்கு களைப்பு ஏற்படுகிறது. நமக்கு மாற்றமாக இறைவன் ஓய்வு தேவையற்றவனாக, உறங்காதவனாக, களைப்பற்றவனாக இருக்க வேண்டும்.
6) நமக்கு அழிவு ஏற்படுகின்றது. எனவே இறைவன் அழியாதவனாக (என்றும் நிலைத்தவனாக) இருக்கவேண்டும்.
7) நாமும் ஏனய பொருட்களும் படைக்கப்பட்டவைகளே! எனவே இறைவன் படைக்கப்படாதவனாக அதே சமயம் அனைத்தையும் அனைவரையும் படைத்தவனாக இருக்க வேண்டும்.
😎நாளை நடப்பதை நாம் அறியமுடியாது. ஆனால் இறைவன் நாளை நடப்பதை அறிபவனாக இருக்க வேண்டும். மறைவானவற்றின் மீது அவனுக்கு முழு அறிவு இருக்க வேண்டும்.
9) நாம் நினைப்பதையெல்லாம் நம்மால் செயல்படுத்த முடியாது. எனவே இறைவன் (நமக்கு மாற்றமாக) அவன் நினைத்ததை முடிப்பவனாக இருக்கவேண்டும்.
இப்படிப்பட்ட குணாதிசயங்களைக் கொண்ட இறைவன் நம்மிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும், பகுத்தறிவு எப்படி எதிர்பார்க்கிறது?!
10) இறைவன் கருணையாளனாக, அன்பானவனாக இருக்கவேண்டும். நாம் நன்மை செய்தால் நமக்கு பரிசளிக்கவும் நாம் தீமை செய்தால் நம்மை தண்டிக்கும் குணங்களைப் பெற்றிக்க வேண்டும். செய்த தீமைகளுக்கு மனம் வருந்தினால் நம்மை மன்னிக்கும் குணம் உடையவனாகவும் இருக்கவேண்டும்.
11) நமக்கோ பாதுகாப்புத் தேவைப்படுகிறது. எனவே இறைவன் பாதுகாப்புத் தேவைப்படாதவனாக அதேநேரம் நமக்கு பாதுகாப்பு அளிப்பவனாக இருக்க வேண்டும்.
...இப்படி மனிதனுக்கு தேவைப்படுகிற அத்தனை விஷயமும் இறைவனுக்கு தேவை இல்லாமல் இருக்க வேண்டும்.

قُلْ اِنَّمَاۤ اَنَا مُنْذِرٌ ‌ وَّمَا مِنْ اِلٰهٍ اِلَّا اللّٰهُ الْوَاحِدُ الْقَهَّارُ‌

(நபியே! இவர்களிடம்) கூறும்: “நான் எச்சரிக்கை செய்பவன் ஆவேன். அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய உண்மையான இறைவன் வேறு யாரும் இல்லை. அவன் ஏகன்; அடக்கியாள்பவன்; (குர்ஆன் : 38:65)

**அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 29**
**(விஞ்ஞானத் தஃப்ஸீர் )**
**(சூரத்துல் இக்லாஸ் - ஏகத்துவம் (பகுதி - 4)**

அன்றியும், அவனுக்கு நிகராக எவரும் இல்லை.

---

وَلَمْ يَكُنْ لَّهٗ كُفُوًا اَحَدٌ

அன்றியும், அவனுக்கு நிகராக எவரும் இல்லை.(அல்குர்ஆன் : 112:4)
அல்லாஹ்விற்கு எவரும் எவ்விஷயத்திலும் நிகராக - சமமாக இருந்ததுமில்லை. இருக்கவும் முடியாது. அவனது உள்ளமையிலும் அவனது அறிவு ஞானத்திலும் அவனது
சக்தியிலும் அவனது படைப்புகளில் எதுவும் அணுவிலும் அணுவளவு கூட நிகராக -சமமாக ஆகிவிட முடியாது. எத்தனை பெரிய சக்தியுள்ளவனாக மனிதன் இருந்தபோதிலும் அவனுடைய சக்திக்கு எல்லையுண்டு. அன்றியும், அந்த சக்தி கூட அல்லாஹ்வினால் அருளப்பட்டதுதான்.

ஆனால் அல்லாஹ்வின் சக்திக்கு முடிவோ, தளர்ச்சியோ, பலவீனமோ எதுவும் கிடையாது. ஆகையால் எந்த இலக்கணங்களை எடுத்துக்கொண்ட போதிலும் அதில் இம்மியளவும் அல்லாஹ்விற்கு நிகராக முடியாதென்பதைத்தான், 'எவரும் அவனுக்கு நிகராக சமமாக இல்லை" என இறைவன் இங்கு குறிப்பிடுகிறான். "வலம் யகுன்லஹுகுபுவன் அஹத்' (அவனுக்குச் சமமாக வேறுயாருமே இல்லை) என்பது, இறைவனுடைய உண்மையான அந்தஸ்தை மிகவும் தெளிவாக விளக்கிக் காட்டுகிறது. உலகத்திலுள்ள பல மதத்தவர்கள் இறைவனுடைய யதார்த்த நிலையைத் தெரிந்து கொள்ளாமல் அவனைப் பற்றித் தங்கள் மனம் போனபடி கற்பனை செய்து கொண்டார்கள். மனதில் தோன்றக்கூடிய எல்லாவிதக் கற்பனைகளை விட்டும், அவன் பரிசுத்தமானவன் என்பதை மேற்கண்ட வாக்கியம் நன்கு எடுத்துக் காட்டுகிறது.

இவ்வத்தியாயம் மனிதன் எப்போதும் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டிய முக்கியமான அத்தியாயமாகும். மனிதன் இவ்வுலகத்தில் எந்த நோக்கத்திற்காக படைக்கப்பட்டானோ அந்த நோக்கம் நிறைவேறி முடிவில் அவன் வெற்றி பெறுவதும் நோக்கம் நிறைவேறாமல் தோல்வியடைவதும், இறைவனைப்பற்றி அவன் கொண்டுள்ள விசுவாசத்தைப் பொறுத்தேயிருக்கும்.
உதாரணமாக, இறைவன் மறைவான, பகிரங்கமான எல்லா விஷயங்களையும் அறிபவன், சர்வ சக்தியுள்ளவன். அவனுடைய உதவி எல்லோருக்கும் எக்காலமும் தேவையானது. அவன் மனிதர் ஒவ்வொருவரும் செய்யும் நன்மை தீமைகளுக்குத் தகுந்த கூலி கொடுப்பவன் என்ற விஷயங்கள் இறைவனைப் பற்றியுள்ள உண்மையான கொள்கைகளாகும்.
இக்கொள்கைகள் உண்மையானவை என்று ஒரு மனிதன் பூரணமாய் விசுவாசம் கொண்டிருந்தால், அவன் பாவ காரியங்களைச் செய்ய மாட்டான். கெட்ட எண்ணங்கள் மனதில் உண்டாவதற்கும் இடங்கொடுக்க மாட்டான். இறைவனுக்கு வழிபட்டு நடப்பான்.
மேற்கொண்ட கொள்கைகள் உண்மையானவை என்று ஒரு மனிதன் விசுவாசம் கொள்ளாமலிருந்தால் மனம் போனபடி நடந்து பாவத்தில் வீழ்ந்து தன் வாழ்க்கையைக் கெடுத்துக் கொள்வான்.
இறைவனின் யதார்த்த நிலையையும் அவனுக்குரிய இலட்சணங்களையும் பற்றியுள்ள உண்மையான அஸ்திவாரக் கொள்கைகளை இவ்வத்தியாயம் சில வசனங்களைக் கொண்டு நன்கு விளக்குகின்றது. அத்துடன் இறைவனைப் பற்றி உலகத்திலுள்ள பற்பல மதங்கள் கொண்டிருக்கும் தப்பான கொள்கைகளை மறுக்கின்றது. உலகத்திலுள்ள பல மதங்களில் முதலாவது: நாஸ்திக மதம், அதாவது இயற்கைவாத மதத்தை எடுத்துக் கொள்வோம். நாஸ்திகர்கள் உலகத்தையும் மற்றும் பொருள்களையும் யாரும் படைக்க வில்லையென்றும் அவைகள் தாங்களாகவே உண்டாகி விட்டன என்றும் கடவுள் உண்டென்று சொல்வது கட்டுப்பாடான பொய் என்றும் சொல்லுகிறார்கள். தனக்கு நிகரில்லாத சர்வசக்தியுள்ள உண்மை ஒன்று உண்டென்பதை அல்லாஹ் என்ற பதமே ஸ்தாபித்து நாஸ்திகத்தை நிராகரித்து விட்டது.
கடவுள் உண்டென்று சில மதங்கள் ஒப்புக் கொண்ட போதிலும் அவர்கள் ஒன்றுக்கதிகமான பல கடவுள்கள் உண்டென்றும், கடவுளுக்கே தனிச் சொந்தமான சிறப்பு இலக்கணங்கள் பல கடவுள்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன என்றும் அம்மதத்தைச் சார்ந்தவர்கள் விசுவாசம் கொண்டிருக்கிறார்கள்.

மஜூஸிகள் என்னும் பாரசீகத்தார், "யஸ்தான்" என்ற ஒளிக் கடவுளும் "அஹ்ரமன்" என்ற இருள் கடவுளும் ஆக இரண்டு கடவுள்கள் உண்டென்றும்,
யஸ்தானுக்கு நல்ல பொருட்களைப் படைப்பதும் நல்ல காரியங்கள் நடைபெறச் செய்வதும் தொழில் என்றும் அஹ்ரமனுக்குக் கெட்ட பொருட்களைப் படைப்பதும் கெட்ட காரியங்கள் நடைபெறச் செய்வதும் தொழில் என்றும் இரு கடவுள்களுக்கும் அடிக்கடி சண்டை நடக்குமென்றும், சிலவேளை யஸ்தானும் சிலவேளை அஹ்ரமனும் ஜெயமடைவர் என்றும் விசுவாசம் கொண்டிருந்தார்கள்.

இந்தியாவிலும் ஒரே கடவுள் உண்டென்ற விசுவாசம் இருந்தபோதிலும் பெரும்பான்மையான மக்கள் பல கடவுள்கள் மீதே விசுவாசம் கொண்டிருந்தார்கள். பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மூன்று கடவுள் உண்டென்றும், படைப்பது ஒருவர் தொழில் என்றும், காப்பாற்றுவது ஒருவர் தொழில் என்றும், அழிப்பது ஒருவர் தொழில் என்றும் விசுவாசம் கொண்டிருந்தார்கள்.

அத்துடன் அக்கடவுள்களுக்கு மனைவி மக்கள் உண்டென்றும் மற்ற படைப்புகளைப் போல் அக்கடவுள்களும் ஆசாபாசங்களில் சிக்கியிருந்தார்கள் என்றும் நம்பியிருந்தார்கள்.

இவர்களில் சில பிரிவார் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் முதலியவைகளும் கடவுள்களென்றும், மழை பொழியச் செய்வது ஒரு கடவுள் என்றும், நெருப்பு எரியச் செய்வது ஒரு கடவுள் என்றும், காற்று வீசச் செய்வது ஒரு கடவுள் என்றும் கல்வி அறிவு கொடுப்பது ஒரு கடவுள் என்றும் எண்ணியிருந்தார்கள்.

அக்கடவுள்களை விக்கிரக ரூபங்களாக்கி அவைகளைப் பூஜித்தும் வந்தார்கள். அவைகளைத் திருப்தி செய்ய உணவு படைத்தும், காணிக்கைகள் சமர்ப்பித்தும், பலி கொடுத்தும் வந்தார்கள். மனிதர்களையும் மிருகங்களையும் கடவுளாகக் கருதி வணங்கி வந்தார்கள்.

இந்தியாவில் ஒரே கடவுள் உண்டென்று விசுவாசித்திருந்தவர்களும் கடவுள் எப்படி ஆரம்பமில்லாத அநாதியோ அப்படியே ஆத்மாவும் அநாதியென்றும் நம்பியிருந்தார்கள்.

இவ்விதமான பல தெய்வக் கொள்கைகளும், விக்கிரக வணக்கங்களும் நபி பெருமான் (ஸல்) அவர்கள் தோன்றும் போது, உலகத்தின் பல பாகங்களிலும் பரவியிருந்தன. இந்தியா, கிரீஸ் தேசம், ரோம ராஜ்யம், அரேபியா முதலிய நாடுகளில் இக்கொள்கைகள் நிலைபெற்றிருந்தன.

இறைவனே இல்லையென்ற நாஸ்திகமும், ஒன்றுக்கு அதிகமான பல தெய்வங்கள் உண்டென்பதும் ஒரே தெய்வத்திற்கே தனிச் சொந்தமான பூரண சுப இலட்சணங்கள் மற்றவர்களுக்கும் உண்டென்பதுமான தப்பான கொள்கைகள்,

"அல்லாஹுு அஹத்' அல்லாஹ் (எல்லா வகையிலும்) தனித்தவன்' என்ற வாக்கியத்தாலேயே நிராகரிக்கப் பட்டுவிட்டது. அத்துடன் அவ்வாக்கியத்தாலேயே ஏகதெய்வத் தன்மையும் சர்வ பூரண சுப லட்சணங்களும் அல்லாஹ்விற்கு மட்டுமே சொந்தமானவை என்ற உண்மையும் நிருபிக்கப்பட்டு விட்டது.

தௌஹீத் என்னும் ஒரே கடவுள் விசுவாசமே இஸ்லாத்தின் அஸ்திவாரமாகும். ஒரே கடவுள் வணக்கத்தை நிலைநாட்டி மனிதனுக்கு நேர்வழி காட்டுவதற்காகவே திருக்குர்ஆன் வெளியாயிற்று.

ஒரே கடவுளைப் பற்றிய மூலாதாரமான கொள்கைகள் இவ்வத்தியாயத்தில் சுருக்கமாக விளக்கப்பட்டிருக்கின்றன. அக்கொள்கைகள் பற்றிய போதனைகள் இவ்வத்தியாயத்தைக் கொண்டே முடிவு பெற்றிருக்கின்றன.

திருக்குர் ஆன் முடிவில் இதற்குப் பின்னுள்ள (113, 114 ஆகிய) இரண்டு அத்தியாயங்களும் திருக்குர்ஆனில் கூறப்படும் கோட்பாடுகளுக்கு பங்கம் வராமல் பாதுகாக்கும்படி இறைவனிடமே வேண்டுதல் செய்யும் பிரார்த்தனைகளாயிருக்கின்றன. இக்காரணத்தால் இவ்வத்தியாயம் திருக்குர் ஆனில் மிகவும் விசேஷமான அத்தியாயமாகும்.

அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 30

(விஞ்ஞானத் தஃப்ஸீர் )

( சூரத்துல் ஃபலக் _ அதிகாலை ( பதிவு 1 )

___________________________________________________

قُلْ اَعُوْذُ بِرَبِّ الْفَلَقِۙ

(நபியே!) நீர் சொல்வீராக: அதிகாலையின் இறைவனிடத்தில் நான் காவல் தேடுகிறேன். (குர்ஆன் : 113:1)

அதிகாலை என்பது மாற்றத்தின் நேரம் உலகில் பல மாற்றங்களை அல்லாஹ் அதிகாலை நேரத்திலேயே செய்கின்றான். எனவேதான் அதிகாலைத் தொழுகையை நிறைவேற்றுபவர்களை இஸ்லாம் வாழ்த்துகின்றது.

நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் இவ்வாறு துஆ கேட்டார்கள். “யா அல்லாஹ்! எனது சமூகத்திற்கு அதிகாலை நேரத்தில் அருள்வளத்தை நல்குவாயாக!” (அபூதாவூத்)
பாத்திமா(ரலி) அறிவிக்கின்றார்கள் : "அதிகாலை நேரத்தில் நான் படுக்கையில் புரண்டு படுத்துக் கொண்டிருந்தேன். அந்நேரம் நபி(ஸல்) என்னருகே வந்து தங்களது பாதங்களால் என்னை உசுப்பிவிட்டு இவ்வாறு கூறினார்கள்:
”அருமை மகளே! எழு! அல்லாஹ்வின் வாழ்வாதாரங்கள் வழங்கப்படும் நேரத்திற்கு சாட்சியாளராக இரு. அலட்சியப்படுத்துபவராக மாறி விடாதே. அதிகாலை நேரத்திற்கும் சூரிய உதயத்திற்கும் இடையே இறைவன்(ரிஸ்க் எனும்) வாழ்வாதாரத்தை வழங்குகின்றான்”. (நூல்: பைஹகீ)
உபை இப்னு கஅப்(ரழி) அறிவிக்கின்றார்: ஒரு நாள் நபி(ஸல்) அவர்கள் ஸுபுஹ் தொழுகை முடித்த பின் எங்களை நோக்கித் திரும்பியவாறு கேட்டார்கள்: “இன்ன மனிதர் தொழுகைக்கு வந்தாரா?” மக்கள் “இல்லை” என்று கூறினார். மீண்டும், ”இன்னவர் வந்தாரா?” என்று கேட்க, மக்களும் ”இல்லை” என்று கூற, நபி(ஸல்) அவர்கள் வேதனையுடன் இவ்வாறு கூறினார்கள்:
“நயவஞ்சகர்களுக்கு இந்த இரு தொழுகைகளும் (ஸுபுஹ், இஷா) கடினமானவையாக இருக்கும். இந்த இரு தொழுகைகளில் கிடைக்கும் நன்மைகளை இவர்கள் அறிந்து கொண்டால் தவழ்ந்தேனும் இதற்காக வருவார்கள் (நூல்:புஹாரி, முஸ்லிம்)

அதிகாலை பொழுதில் அப்படி என்ன இருக்கிறது ?
டெக்சாஸ் பல்கலைக்கழகம் நடத்திய ஆய்வில்,அதிகாலையில் எழுந்து படித்த குழந்தைகள், கல்வியில் சிறந்து விளங்கியதாகக் குறிப்பிடுகிறது.
இரவில் அதிக நேரம் கண் விழிப்பவர்களுக்கு ‘சோர்வுற்ற மனநிலை’ (Depression) எனும் மனநோய் வருவதற்கான சாத்தியம், அதிகாலையில் துயில் எழுபவர்களைவிட மூன்று மடங்கு அதிகம் என ‘The Psychiatry and Clinical Neurosciences’ எனும் நூலில் வெளியான ஆய்வு முடிவுகள் தெரிவிக்கின்றன
ஹஜ்ரத் ஸக்ர் ஙாமிதிய்யி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள், (اَللَّهُمَّ بَارِكْ لِأُمَّتِي فِي بُكُورِهَا) யாஅல்லாஹ், என்னுடைய சமுதாயத்தினருக்கு அதிகாலையில் பரக்கத் செய்வாயாக!” என்று ரஸூலுல்லாஹி (ஸல்) அவர்கள் துஆச் செய்துள்ளார்கள்.
மேலும், அன்னார் சிறிய படை அல்லது பெரும்படையை அனுப்பிவைக்கும் போது அவர்களைக் காலை நேரத்தில் அனுப்பிவைப்பார்கள்.
ஹஜ்ரத் ஸக்ர் (ரலி) அவர்கள் வியாபாரியாக இருந்தார்கள், அவர்கள் தமது வியாபாரப் பொருட்களைக் காலைப் பொழுதில் தன் வேலையாட்கள் மூலம் விற்பனைக்கு அனுப்பி வைப்பார்கள். அதனால் அவர்கள் செல்வந்தரானார்கள், (அவர்களின் செல்வம் பெருகிவிட்டது). (அபூதாவூத்)

"என்னுடைய சமுதாயத்தினர் அதிகாலையில் பயணம் செய்யட்டும், உலகம் அல்லது மார்க்கம் சம்பந்தமான வேலைகளில் அந்நேரத்தில் எதைச் செய்தாலும் அதில் அவர்களுக்கு பரக்கத் கிடைக்கும்” என்பது இந்த ஹதீஸில், ரஸூலுல்லாஹி (ஸல்) அவர்கள் செய்துள்ள துஆவின் நோக்கமாகும்.
இன்றைய இளைஞர்கள் பலர் இரவில் 1 மணி, 2 மணி வரை செல்லிடப் பேசியை பயன்படுத்திக் கொண்டிருக்கின்றனர். அதனால், அவர்கள் காலையில் தூங்குவதை விரும்புகின்றனர்.
ஆனால், இரவில் அதிக நேரம் கண் விழிப்பவர்களுக்கு சோர்வுற்ற மனநிலை எனும் மனநோய் வருவதற்கான சாத்தியம், அதிகாலையில் துயில் எழுபவர்களைவிட மூன்று மடங்கு அதிகம் என்ற அதிர்ச்சியான விஷயத்தைச் சமீபத்தில் வெளியான ஆய்வு முடிவுகள் தெரிவிக்கின்றன.

கதிரவன் உதித்த பின் எழுவதால் உடலுக்கு அசதியும், சோம்பலும், மயக்கமும் ஏற்படும். அன்றைய நாள் முழுவதும் சோர்வும் பகலுறக்கமும் உண்டாகும். காலையில் தாமதமாக கண் விழிப்பவர்களுக்கு ஒற்றைத் தலைவலி உள்ளிட்ட நோய்கள் அதிக அளவில் ஏற்படலாம் என்று மருத்துவர்கள் எச்சரிக்கின்றனர்.
அதிகாலை விழிப்பின் பின்னணியில், நோய்களைப் போக்கும் மிகப்பெரிய அறிவியல் இருக்கிறது. அதிகாலையில் நம்மீது விழும் கதிர்வீச்சு நமது உடலுக்கு நன்மை அளிக்கும்.மேலும், அதிகாலையில் விழிப்பவர்களிடம் நேர்மறை எண்ணங்கள், எளிதாகத் திருப்தியடையும் மனப்பான்மை, வாழ்வின் மீது அதிக நம்பிக்கை போன்ற நற்குணங்கள் கூடுதலாக இருப்பதாக ஆராய்ச்சியாளர்கள் தெரிவிக்கின்றனர்.
ஒவ்வொரு நாளும் வானவர்கள் இரு தடவை இந்தப் பூமிக்கு வருகை தருகின்றார்கள்; அவர்கள் அனைவரும் அஸர் தொழுகையிலும் ஸுபுஹ் தொழுகையிலும் சந்தித்துக் கொள்கின்றார்கள்.
பணி முடிந்துத் திரும்பும் வானவர்களிடம் அனைத்தையும் அறிந்து வைத்திருக்கும் அல்லாஹ் கேட்கின்றான் "எனது அடியார்களை எந்த நிலையில் சந்தித்தீர்கள்? எந்நிலையில் விட்டு வந்தீர்கள்?"
அதற்கு வானவர்கள் கூறுவார்கள். "அவர்கள் தொழுகையில் இருக்கும் நிலையில் சந்தித்தோம். தொழுகையில் இருக்கும் நிலையில் விட்டுவந்தோம்." (நூல்: திரிமிதி)

اَقِمِ الصَّلٰوةَ لِدُلُوْكِ الشَّمْسِ اِلٰى غَسَقِ الَّيْلِ وَقُرْاٰنَ الْـفَجْرِ اِنَّ قُرْاٰنَ الْـفَجْرِ كَانَ مَشْهُوْدًا
(நபியே!) சூரியன் சாய்ந்ததிலிருந்து இரவின் இருள் சூழும் வரையில் (ளுஹர், அஸர், மஃரிப், இஷா ஆகிய நேரத்) தொழுகைகளைத் தொழுது வாருங்கள். ஃபஜ்ர் தொழுகையும் தொழுது வாருங்கள். ஏனென்றால், நிச்சயமாக ஃபஜ்ர் தொழுகையானது மலக்குகள் கலந்துகொள்ளும் தொழுகையாகும்.(குர்ஆன் : 17:78)
அதிகாலை சூரியன் உதயமாகும் வரை தூங்குபவர்களைக் குறித்து நபி(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு நபிகளாரின் பதில் இது: “அந்த மனிதரின் காதுகளில் ஷைத்தான் சிறு நீர் கழித்து விட்டான்” என்றார்கள். கற்பனை செய்து பாருங்கள்! இருபது முப்பது ஆண்டுகளாய் ஒருவரின் காதுகளில் தொடர்ந்து ஷைத்தான் சிறு நீர் கழிக்கின்றான் என்றால் அவன் எப்படிப்பட்ட துர்பாக்கியவானாக இருக்க வேண்டும்.
உலகில் பெரும் மாற்றங்களை எல்லாம் அதி காலை நேரத்திலேயேதான் அல்லாஹ் ஏற்படுத்தி உள்ளான். உலகில் அழித்து நாசமாக்கப்பட்ட சமூகங்கள் எல்லாம் அதிகாலை நேரத்தில்தான் அழித்து ஒழிக்கப்பட்டிருக்கின்றன. ஹூத்(அலை) அவர்களின் ஆத் கூட்டத்தை அழித்ததைக் குறித்து அல்லாஹ் கூறுகிறான்: இறுதியில் அவர்களின் நிலைமை என்னவாயிற்று எனில் அவர்கள் வசித்த இல்லங்களைத் தவிர வேறு எதுவும் அதிகாலையில் தென்படவில்லை” (46:25)

ஸாலிஹ் நபி(அலை) அவர்களின் சமூகக் கூட்டத்தைக் குறித்து இறைவன் குறிப்பிடுகிறான்: "திடுக்குறச் செய்கின்ற ஒரு நிலநடுக்கம் அவர்களைப் பிடித்துக் கொண்டது. அதிகாலையில் அவர்கள் தம் இல்லங்களில் முகங்குப்புற (உயிரற்றவர்களாக) வீழ்ந்து கிடந்தார்கள்” (7:91)
(தண்டனைக்குரிய) நம் கட்டளை வந்த போது, ஷுஐபையும் அவருடன் ஈமான் கொண்டவர்களையும் நமது ரஹ்மத்தை கொண்டு நாம் காப்பாற்றினோம்; அநியாயம் செய்தவர்களை (பேரிடியின்) முழக்கம் பிடித்துக் கொண்டது; அவர்கள் தம் வீடுகளில் இருந்தவாறே அதிகாலையில் (இறந்து) கிடந்தனர்.(குர்ஆன் : 11:94)
அச்சமற்றுப் பாதுகாப்பாக வாழலாம் எனக்கருதி, அவர்கள் மலைகளைக் குடைந்து வீடுகளை அமைத்துக் கொண்டார்கள்.
ஆனால், அவர்களையும் அதிகாலையில் பேரிடி முழக்கம் பிடித்துக் கொண்டது, (குர்ஆன் : 15:82, 83)
ஷீஐப் (அலை) அவர்களின் கூட்டத்தைக் குறித்து இறைவன் கூறுகின்றான்: “இறுதியில், ஒரு கடும் நிலநடுக்கம் அவர்களைப் பிடித்தது. அவர்கள் தம் வீடுகளிலேயே அதிகாலையில் குப்புற வீழ்ந்து மடிந்தார்கள்” (29:37)
இவ்வாறு ஒவ்வொன்றாக நாம் கூறிக் கொண்டே போகலாம். மண்ணோடு மண்ணாக்கப்பட்ட அத்தனை சமூகங்களும் அநேகமாக அதிகாலை நேரத்தில்தான் அழிக்கப்பட்டுள்ளனர்.

ஆகவேதான், மக்கத்து சமூகமும் நபி(ஸல்) செய்தியை ஏற்றுக் கொள்ளாமல் ஏளனம் செய்தபோது அல்லாஹ்வின் எச்சரிக்கை இவ்வாறு இருந்தது: “என்ன, இவர்கள் நம்முடைய தண்டனைக்காக அவசரப்படுகின்றார்களா? அது அவர்களின் முற்றத்தில் இறங்கிவிடுமாயின், எவர்களுக்கு எச்சரிக்கை செய்யப்பட்டு விட்டதோ அவர்களுக்கு அந்நாளின் அதிகாலை மிகவும் கெட்டதொரு நாளாகிவிடும்” (37:176,177)
(இப்போது கூறப்பட்ட அத்தனை வசனங்களிலும் ஸுபுஹ் என்னும் அரபி சொல்தான் பயன் படுத்தப்பட்டுள்ளது)
எனவேதான் இவ்வத்தியாயத்தின் ஆரம்ப வசனத்தில் (நபியே!) நீர் சொல்வீராக: அதிகாலையின் இறைவனிடத்தில் நான் காவல் தேடுகிறேன். (குர்ஆன் : 113:1)
அதிகாலை என்பது மாற்றத்தின் நேரம். அது பரக்கத்தான நேரமாக நல்ல மாற்றமாக இருக்க இறைபெரியோன் கிருபை செய்யட்டும்.

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 31
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )

مِنْ شَرِّ مَا خَلَقَۙ

அவன் படைத்தவற்றின் தீங்கை விட்டும்-(அல்குர்ஆன் : 113:2)

---

ஈர்வுலகத்தில் கண்களுக்கு தெரிந்த, தெரியாத அனைத்து படைப்புகளையும் அல்லாஹ் படைத்துள்ளான். நீர், நிலம், நெருப்பு , ஆகாயம்,காற்று, தாவரம், விலங்கு, சூரியன், சந்திரன், மலக்கு, மனிதன், ஜின், ஷைத்தான் அனைத்துயும் படைத்துள்ளான். அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்.
அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் படைத்தவன். அவன் ஒவ்வொரு பொருளுக்கும் பொறுப்பாளன். (குர்ஆன் (39:62)
அனைத்தையும் படைத்துவிட்டு மனிதனை சிறப்பித்துள்ளான்.
மழையாலும் வெள்ளத்தாலும், பூகம்பகத்தாலும் வறட்சியாலும் வெப்பத்தாலும் நெருப்பாலும், வெயின் வெப்பத்தாலும் விண்வீழ் கற்களாலும், கடுங்குளிராலும் புயற்காற்றாலும் போன்ற படைப்புகளால் ஏற்படும் தீங்கை காட்டிலும் ஷைத்தான் என்ற படைப்பின் தீங்குகளால்தான் பெருமளவு மனிதன் பாதிக்கிறான்
முதல் மனிதராகிய ஆதமை இறைவன் படைத்தவுடன் அவரது திறமையை வெளிப்படுத்திக் காட்டி அவருக்கு “ஸஜ்தா’ செய்யுமாறு வானவர்களுக்கு கட்டளையிட்டான்.
“ஆதமுக்குப் பணியுங்கள்!” என்று நாம் வானவர்களுக்குக் கூறிய போது இப்லீஸைத் தவிர அனைவரும் பணிந்தனர். அவனோ மறுத்துப் பெருமையடித்தான். (நம்மை) மறுப்பவனாக ஆகி விட்டான். (குர்ஆன் (2:34)
ஆதமை படைத்து அவருக்கு பணியும்மாறு மலக்குமார்களுக்கு அல்லாஹ் கட்டளையிட்ட போது, ஜின்களின் தலைவனான ஷைத்தான் அல்லாஹ்விடத்தில் தன்னை நீ நெருப்பால் படைத்தாய் இந்த ஆதமை கருப்பு களிமண்ணால் படைத்து இருக்கிறாய். நான் அவரை விடச் சிறந்தவன் நான் எப்படி அவருக்கு சிர வணக்கம் செய்வேன் என்று பெருமையடித்தான். (குர்ஆன் 38:76)

ஷைத்தான் அல்லாஹ்விற்கு எதிராக பெருமையடித்த காரணத்தினால் கண்ணியமிக்க இடத்தை விட்டும் இழிவு ஏற்பட்டவனாகவும், விரட்டியடிக்கப்பட்டவானகவும் வெளியேற்றப்பட்டான். மறுமையிலும் இழிந்தவனாக அல்லாஹ் கொண்டுவருவான்.
“இங்கிருந்து நீ இறங்கி விடு! இங்கே நீ பெருமையடிப்பது தகாது. எனவே வெளியேறு! நீ சிறுமையடைந்த வனாவாய்” என்று (இறைவன்) கூறினான். (குர்ஆன் (7:13)

“இங்கிருந்து இழிவு படுத்தப்பட்டவனாகவும், விரட்டப்பட்டவனாகவும் வெளியேறி விடு! (மனிதர்களாகிய) அவர்களிலும் (ஜின்களாகிய) உங்களிலும் உன்னைப் பின் பற்றுவோர் அனைவரையும் போட்டு நரகத்தை நிரப்புவேன்” என்று (இறைவன்) கூறினான்.(அல்குர்ஆன் (7:18)
ஷைத்தானை கண்ணியமிக்க இடத்திலிருந்து வெளியேற்றி போது மறுமை நாள் வரை என்னை அழிக்க கூடாது என்று அல்லாஹ்விடத்தில் தன்னுடைய ஆணவத்தை அடக்கிக் கொண்டு அவகாசம் கேட்கிறான்.
“அவர்கள் உயிர்ப்பிக்கப்படும் நாள் வரை எனக்கு அவகாசம் அளிப்பாயாக!” என்று அவன் கேட்டான். (குர்ஆன் 7:14)
அல்லாஹ் தஆலா ஷைத்தானின் அடிப்படிதலை கண்டு அவனுடைய கூட்டாத்திற்கு உயிர் பிச்சை தருகிறான். மறுமையை நாள் வரை உன்னையும் உனது கூட்டாத்தாரையும் அழிக்க மாட்டோன் என்று உத்திர வாதம் தந்துள்ளான். இதுவரை ஷைத்தானின் இனம் அழியப்படவில்லை.(அல்குர்ஆன் (7:15)

இப்லீஸ் என்பது ஷைத்தான்களின் தந்தைப் பெயராகும். இவன் நெருப்பால் படைக்கப்பட்டான். ஜின் இனத்தை சார்ந்தவன். இப்லீசுக்கு சந்ததிகளும், சேனைகளும் உண்டு. மனித இனத்தை கண்ணுக்குத் தெரியாமல் இருந்து கொண்டு வழிகெடுப்பதே இவர்களின் முக்கிய பணியாகும்.
இப்லீஸின் சிம்மாசனம் நீரில் உண்டு. அவன் தன் படைகளை அனுப்பி, மனிதர்களை குழப்படையச் செய்கிறான். இப்பணியில் முன்னணியில் இருக்கும் ஷைத்தான்களுக்கே இப்லீஸிம் முதல் தர மரியாதை கிடைக்கும்.
அல்லாஹ் அவகாசம் அளித்த பிறகு நீ கருப்பு களிமண்ணால் படைத்த இந்த மனிதர்களில் சிலரை வழிக்கெடுப்பேன் என்று அல்லாஹ்விடத்தில் சவால் விட்டான்.
“நீ என்னை வழி கெடுத்ததால் அவர்களுக்காக உனது நேரான பாதையில் அமர்ந்து கொள்வேன்” என்று கூறினான்.”பின்னர் அவர்களின் முன்னும், பின்னும், வலமும், இடமும் அவர்களிடம் வருவேன். அவர்களில் அதிகமானோரை நன்றி செலுத்துவோராக நீ காண மாட்டாய்” (என்றும் கூறினான்).(குர்ஆன் 7:16,17)

ஒவ்வொரு மனிதனுக்கும் வானவர் ஒருவரும் ஷைத்தான் ஒருவனும் நியமிக்கப்பட்டுள்ளனர். அந்த வானவர் நல்லதையே எண்ணுமாறும் நல்லதையே செய்யுமாறும் மனிதனுக்குக் கட்டளையிட்டுக்கொண்டிருக்கிறார்கள். அந்த ஷைத்தான் கெட்டதையே எண்ணுமாறும் கெட்டதையே செய்யுமாறும் மனிதனைத் தூண்டிக்கொண்டிருக்கிறான்.
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலிரி) அவர்கள் கூறியதாவது:அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “ஜின் இனத்தைச் சேர்ந்த கூட்டாளியொருவன் (ஷைத்தான்) தம்முடன் நியமனம் செய்யப்படாமல் உங்களில் எவரும் இல்லை” என்று கூறி னார்கள்.
அப்போது, “தங்களுடனுமா, அல்லாஹ்வின் தூதரே?” என்று மக்கள் கேட்டனர். அதற்கு அவர்கள், “”என்னுடனும்தான். ஆயினும் அல்லாஹ், அவனுக்கெதிராக எனக்கு உதவி செய்துவிட்டான். அவன் (எனக்குப்) பணிந்துவிட்டான். ஆகவே, எனக்கு அவன் நல்லதையே கூறுவான்” என்று சொன்னார்கள்.நூல் : முஸ்லிம்-5421

நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம் தங்கியிருந்த நாளில்) ஓர் இரவில் என்னிடமிருந்து புறப்பட்டுச் சென்றார்கள். அவர்கள் மீது எனக்கு ரோஷம் ஏற்பட்டது. பிறகு அவர்கள் (திரும்பி)வந்து என் நடவடிக்கையைக் கண்டபோது,
“ஆயிஷா! உனக்கு என்ன நேர்ந்தது? ரோஷம் கொண்டு விட்டாயா?” என்று கேட்டார்கள். அதற்கு நான், “”என்னைப் போன்ற ஒருத்தி (பல துணைவியர் உள்ள) தங்களைப் போன்ற ஒருவர் மீது ரோஷம் கொள்ளாமல் எப்படி இருக்க முடியும்?” என்று சொன்னேன்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “உன் ஷைத்தான் உன்னிடம் வந்து விட்டானா?” என்று கேட்டார்கள்.
நான், “அல்லாஹ்வின் தூதரே! என்னுடனும் ஷைத்தான் உள்ளானா?” என்று கேட்டேன்.

அதற்கு அவர்கள், "ஆம்' என்றார்கள்.
"ஒவ்வொரு மனிதனுடனும் (ஷைத்தான்) உள்ளானா?" என்று கேட்டேன்.
அதற்கும் அவர்கள் "ஆம்' என்றார்கள்.
நான், "தங்களுடனுமா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டேன்.
அதற்கு அவர்கள் "ஆம். ஆயினும், என் இறைவன் அவனுக்கெதிராக எனக்கு உதவி செய்துவிட்டான். அவன் (எனக்குப்) பணிந்துவிட்டான்" என்று சொன்னார்கள். நூல் : முஸ்லிம்-5422

ஸஃபிய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது: நபி (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் (இஃதிகாஃப்) இருந்தார்கள். அவர்களுடன் அவர்களின் மனைவியரும் இருந்துவிட்டுத் திரும்பினர்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் என்னிடம், "அவசரப்படாதே! நானும் உன்னோடு வருகிறேன்!" என்றார்கள்.
என் அறை உசாமாவின் வீட்டிற்குள் இருந்தது. நபி (ஸல்) அவர்கள் என்னுடன் வெளியே வந்தார்கள். அப்போது, அன்ஸாரிகளைச் சேர்ந்த இருவர் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து, அவர்களைக் கூர்ந்து பார்த்துவிட்டுக் கடந்து சென்றனர்.
நபி (ஸல்) அவர்கள் அவ்விருவரையும் நோக்கி, "இங்கே வாருங்கள்! இவர் (என் மனைவி) ஸஃபிய்யாவே ஆவார்!" எனக் கூறினார்கள்.
அவ்விருவரும் "சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்) அல்லாஹ்வின் தூதரே!" என்று (வியப்புடன்) கூறினார்கள்.
அப்போது நபி (ஸல்) அவர்கள், "நிச்சயமாக ஷைத்தான் மனிதனின் ரத்த நாளங்களில் ஓடுகிறான்; உங்கள் உள்ளங்களில் அவன் தவறான எண்ணங்களைப் போட்டுவிடுவான் என நான் அஞ்சினேன்" என்று தெளிவுபடுத்தினார்கள். புகாரி-2038
அல்லாஹ் ஷைத்தானை வெளியேற்றிய பிறகு
அல்லாஹ்விடத்தில் மனிதர்களை நான் வழிகெடுப்பேன் என்று சவால் விடுகிறான்.ஆனால் இறை நம்பிக்கையாளர்களை என்னால் வழிகெடுக்க முடியாது என்று தன்னுடைய தோல்வியை ஒப்புக்கொண்டு சவால் விடுகிறான்.
"என் இறைவா! என்னை நீ வழி கெடுத்ததால் பூமியில் (தீமைகளை) அழகாக்கிக் காட்டுவேன். அவர்களில் உன்னால் தேர்ந்தெடுக்கப்பட்ட உனது அடியார்களைத் தவிர (மற்றவர்கள்) அனைவரை யும் வழி கெடுப்பேன்" என்று கூறினான் குர்ஆன் (15:39, 40)

ஷைத்தான் மனிதர்களை வழிகெடுப்பதெல்லாம் அடிப்படையான கொள்கை விஷயத்தில்தான். ஏனென்றால் கொள்கையை ஏற்றுக் கொண்டால், அந்த மனிதர் சொர்க்கம் சென்று விடுவார். முதலில் கொள்கையில் வழிகெடுக்க முயற்சிப்பான். அதில் தோல்வியடைந்தால் மற்ற விஷயத்தில் முயற்சி செய்வான், அடிப்படையான கொள்கை விஷயத்தில் மனிதனை வழிகெடுத்து விட்டால் அந்த மனிதன் சொர்க்கம் செல்ல மாட்டான்.
அதற்காக கொள்கை விஷயத்தில் வழிகெடுக்க முயற்சிப்பான். மனிதரிடத்தில் படைப்பினங்களை பற்றி சிந்தனை ஊட்டுவான், இந்த பைக்,செல்போன், அழகிய கார், இது போன்ற பொருட்களை யார் படைத்தான் என்று சிந்தனை ஊட்டுவான், சிந்தனையை ஏற்படுத்திய பிறகு இவை அனைத்தும் மனிதன்தான் உருவாக்கினான் என்று உரத்த சிந்தனையை ஏற்படுத்துவான்.
பிறகு இந்த இயற்கை, செடி, மரம், விலங்கினங்கள், மனிதனை யார் படைத்தான் ? என்று சிந்தனை ஏற்படுத்துவான். இந்த சிந்தனையை ஏற்படுத்திய பிறகு இவை அனைத்தையும் அல்லாஹ் தான் படைத்தான் என்று நம்புவான்.
அதை நம்பிய பிறகு அல்லாஹ்வை யார் படைத்து இருப்பார்கள் என்று சிந்தனையை ஏற்படுத்துவான் இப்படிப்பட்ட மோசமான சிந்தனை ஏற்படுத்தும்போது விரட்டி அடிக்கப்பட்ட ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடத்தில் பாதுகாப்பு தேட வேண்டும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவரிடம் (அவர் மனத்திற்குள்) ஷைத்தான் வந்து, “இதைப் படைத்தவர் யார்? இதைப் படைத்தவர் யார்?” என்று கேட்டுக் கொண்டே வந்து, இறுதியில், “உன் இறைவனைப் படைத்தவர் யார்?” என்று கேட்கின்றான். இந்தக் (கேள்வி கேட்கும்) கட்டத்தை அவன் அடையும்போது அவர் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடட்டும். (இத்தகைய சிந்தனையிலிருந்து) விலகிக்கொள்ளட்டும்" - இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். புகாரி-3276
நம்மிடத்தில் கொள்கை விஷயத்தில் ஷைத்தான் தோற்று விட்டால், பிறகு தொழுகை விஷயத்தில் நம்மை வழிகெடுக்க வழிவகுப்பான்.

இஸ்லாம் என்பது அல்லாஹ்வையும் அவனது தூதரையும் ஈமான் கொண்ட பிறகு தொழுகையை கடைபிடிக்க வேண்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியிருக்கிறார்கள்.
தொழுகையை கடைபிடித்தால் நம்முடைய சிறிய பாவங்களை அல்லாஹ் மன்னித்து விடுவான். அதனால் தொழுகை வீணாக்குவதற்குகாக அதிகமான முயற்சிகளை செய்வான். தொழுகையை தடுப்பதற்கு என்ன என்ன தீமையான விஷயங்கள் இருக்கிறதோ அவை அனைத்தையும் மனிதர்களிடத்தில் அழகாக அலங்கரித்து காட்டுவான். இதை நம்பி நல்ல அமல்களை விட்டு விடுகிறார்கள்.
மது, மற்றும் சூதாட்டம் மூலம் உங்களுக்கிடையே பகைமையையும், வெறுப்பையும் ஏற்படுத்தவும், அல்லாஹ்வின் நினைவை விட்டும், தொழுகையை விட்டும் உங்களைத் தடுக்கவுமே ஷைத்தான் விரும்புகிறான். எனவே விலகிக் கொள்ள மாட்டீர்களா? (குர்ஆன் (5:91)
பஜருடைய பாங்கு சப்தத்தை நாம் கேட்கும் போது தூக்கத்திலிருந்து எழுந்திருக்காமல் சோம்பேறி தனமாக இருந்து கொண்டு பஜர் தொழுகைக்கு நாம் வரமால் தூங்கி விடுகிறான். இப்படி தூக்கத்தை ஏற்படுத்தி நன்மையை செய்ய விடாமல் ஷைத்தான் நாடுகிறான்.
ஆனால் ஷைத்தானுக்கு நாம் கட்டுபடாமல் தூக்கத்திலிருந்து நாம் எழுந்திருத்து துஆவை ஒதி, உளு செய்து, தொழுதால், அன்றைய தினம் சுறுசுறுப்பவனாக அடைகிறான். ஆனால் நாம் பஜர் தொழுகையில் தொழாமல் இருந்தால் அன்றைய தினத்தில் சோம்போறிவுடையவனாக அடைகிறான்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் உறங்கும்போது உங்கள் தலையின் பின்பக்கத்தில் ஷைத்தான் மூன்று முடிச்சுகளைப் போட்டுவிடுகிறான்.
ஒவ்வொரு முடிச்சின்போதும் “இன்னும் உனக்கு நீண்ட இரவு (ஓய்வெடுக்க எஞ்சி) இருக்கிறது. ஆகவே, நீ உறங்கு’ என்று கூறி (உங்களை விழிக்கவிடாமல் உறங்க வைத்து) விடுகிறான்.
நீங்கள் (அவனது கூற்றை ஏற்காமல்) கண்விழித்து அல்லாஹ்வை நினைவு கூர்ந்தால், ஒரு முடிச்சு அவிழ்ந்து விடுகிறது.

நீங்கள் அங்கசுத்தி (உளூ) செய்தால் மற்றொரு முடிச்சு அவிழ்ந்துவிடுகிறது.
நீங்கள் தொழுது விட்டால் முடிச்சுகள் முழுவதும் அவிழ்ந்து விடுகிறது. நீங்கள் சுறுசுறுப்புடனும் உற்சாகத்துடனும் காலைப் பொழுதை அடைவீர்கள். இல்லையெனில் மனக்குழப்பத்துடனும், சோம்பலுடனும் காலைப் பொழுதை அடைவீர்கள். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் புகாரி-1142
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது: நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் பொழுது விடியும் வரை (தொழுகைக்கு எழாமல்) உறங்கிக் கொண்டேயிருப்பது பற்றிக் கூறப்பட்டது. அப்போது நபி (ஸல்) அவர்கள், “அவரது காதில் ஷைத்தான் சிறுநீர் கழித்துவிட்டான்” என்று கூறினார்கள்.
புகாரி-1144
ஷைத்தான் தூக்கத்தின் மூலமாக நம்மை வழிக்கெடுக்க முயற்சிக்கும் போது அந்த செயலை நாம் முறியடித்துவிட்டால், அவனுடைய முயற்சி வீணாகி விடுகிறது. பிறகு வேற வழிமுறைகளை கையாளுவான். அல்லாஹ்வின் அடியார்கள் தொழுகைக்கு வரும் போது தொழுகை முறியடிப்பதற்காக சில வழிமுறைகளை கடைபிடிப்பான். அடியார்கள் தொழுகைக்காக தக்பீர் கட்டும் போது பல சிந்தனைகளை நினைவு படுத்துவான்.

தொழுகையில் நிற்கும் போது இவரிடத்தில் இவ்வளவு ரூபாய் பணம் கொடுத்தேனே இல்லையா என்று நினைத்து பார்ப்பான். ஆனால் தொழுகையில் கவனத்தை செலுத்தாமல் விட்டுவிடுகிறான்.
அல்லது நம்முடைய கடையில் வியாபாரம் என்ன ஆகுமோ என்று நினைத்து பார்ப்பான் இப்படி பல சிந்தனைகளை ஏற்படுத்தி நம்முடைய தொழுகையை வீணாக்க முயற்சி செய்வான். இப்படிப்பட்ட சிந்தனை நமக்கு வரும் போது உடனே சுதாரித்துக் கொள்ள வேண்டும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: தொழுகைக்காக பாங்கு சொல்லப்பட்டால் பாங்கு சப்தம் தனக்குக் கேட்காமல் இருப்பதற்காக ஷைத்தான் பின் துவாரத்தின் வழியாகக் காற்றுவிட்டவனாக ஓடிவிடுகிறான். பாங்கு முடிந்ததும் திரும்பிவருகிறான்; இகாமத் கூறப்பட்டதும் மீண்டும் ஓடுகிறான்.
இகாமத் முடிந்ததும் மீண்டும் வந்து தொழுபவரின் உள்ளத்தில் ஊடுருவி, "இதை இதையெல்லாம் நினைத்துப்பார்" எனக் கூறி, அவர் இதுவரை நினைத்துப் பார்த்திராத வற்றையெல்லாம் நினைவூட்டி அவர் எத்தனை ரக்அத்கள் தொழுதார் என்பதை மறக்கடித்துவிடுகிறான்.
உங்களில் ஒருவருக்குத் தாம் தொழுத ரக்அத்கள் மூன்றா அல்லது நான்கா என்று தெரியாவிட்டால் (கடைசி) இருப்பில் இரண்டு சஜ்தாச் செய்துகொள்ளட்டும்.''அபூஹுரைரா (ரலி) புகாரி-1231
தொழுகையில் இருக்கும் போது ஷைத்தான் பல சிந்தனைகளை ஏற்படுத்தும் போது அதனை நாம் முறியடித்தால் ஷைத்தானின் முயற்சி வீணாகி விடுகிறது. இந்த விஷயத்திலும் அவன் தோல்வியடையும் போது வேற வழிமுறைகளை கையாளுவான்.

நாம் தொழுகும் போது சிலர் குறுக்கே செல்வதின் மூலமாக நம்முடைய தொழுகை வீணாக்க முயற்சி செய்வான். குறுக்கே செல்லும் போது அவன் செல்ல விடாமல் அவர்களை தடுக்க வேண்டும், இப்படி செய்யும் போது அவனுடைய முயற்சிகள் வீணாகி விடுகிறது.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நீங்கள் தொழுது கொண்டிருக்கும் போது உங்கள் முன்னால் எவராவது நடந்து செல்ல முனைந்தால் அவரைத் தடுங்கள். அவர் (விலகிக் கொள்ள) மறுத்தால் அப்போதும் அவரைத் தடுங்கள். அவர் (மீண்டும் விலக) மறுத்தால் அப்போது அவருடன் சண்டையி(ட்டுத் த)டுங்கள். ஏனெனில், அவன்தான் ஷைத்தான். அபூஹுரைரா (ரலி) புகாரி-3274
நமது தொழுகையில் திரும்பி பார்ப்பதின் மூலமாக நம்முடைய தொழுகையை வீணாக்குவதற்கு ஷைத்தான் சில
வித்தைகளை கையாளுகிறான்.
நாம் தொழுதுக் கொண்டிருக்கும் போது நமக்கு முன்னால் சிலர் பேசிக்கொண்டும், விளையான்டு கொண்டும் இருப்பார்கள். அவர்களின் செயல்களை பார்ப்பதின் மூலமாக நம்முடைய தொழுகை வீணாகி விடுகிறது. நாம் தொழுவும் போது நமக்கு முன்னால் என்ன நடந்தாலும் அந்த செயல்களை கண்டுக்கொள்ளாமல் தொழ வேண்டும்.
ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது: நான் நபி (ஸல்) அவர்களிடம் தொழுகையில் ஒருவர் திரும்பிப் பார்ப்பது குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள், "அது (திரும்பிப் பார்க்கும் அந்த நேரம்) உங்கள் தொழுகையிலிருந்து ஷைத்தான் திருட்டுத்தனமாகப் பறித்துக் கொள்வதாகும்" என்று பதிலளித்தார்கள்.புகாரி-3291
தொழுகையில் அவனால் வழிகெடுக்க முடியவில்லை யென்றால் தொழுகைக்கு வெளியே நல்ல அமல் செய்ய விடாமல் வழிகெடுக்க முயற்சிப்பான்.
தொழுகை முடித்த பிறகு சில திக்ருகளை ஓதும்மாறு கற்றுதந்துள்ளார்கள். ஆனால் நாம் தொழுகையை முடித்த பிறகு திக்ருகள் செய்யும் போது நம்மிடத்தில் சிலர் திக்ருகளை செய்ய விடாமல் பேசிக் கொண்டும், விளையாடிக் கொண்டும் இருப்பார்கள்.
ஏனென்றால் தொழுகைக்கு பின்னால் நாம் திக்ருகள் ஓதினால் நம்முடைய சிறிய பாவங்கள் கடல் நுறையளவு இருந்தாலும் அல்லாஹ் மன்னித்து விடுவான். அல்லாஹ் மனிதனை மன்னிப்பது ஷைத்தானுக்கு பிடிக்காமல்

நல்ல அமல்களை செய்ய விடாமல் தடுப்பான். அந்த நேரத்தில் இந்த செயல் ஷைத்தானின் ஊசலாட்டம் என்று நினைத்து சுதாரித்துக் கொள்ள வேண்டும்.
ஷைத்தான் அவர்களை மிகைத்து விட்டான். அல்லாஹ்வின் நினைவை அவர்களுக்கு மறக்கச் செய்தான். அவர்களே ஷைத்தானின் கூட்டத்தினர். கவனத்தில் கொள்க! ஷைத்தானின் கூட்டத்தினரே நஷ்டமடைந்தவர்கள். (குர்ஆன் 58: 19)
நல்ல விஷயங்களை கேட்க விடாமல் நம்மை தடுப்பான். எத்தனையே ஊர்களில் இஸ்லாத்தை பற்றி அறிவதற்காக சில மார்க்க பிரசாரங்களை நடத்துகிறார்கள். பிரச்சாரத்தை கேட்காமல் சிலர் பேசிகொண்டு இருப்பார்கள். இப்படி உபதேசத்தை கேட்காமல் ஷைத்தான் அவர்களை தடுக்கிறான்.
அல்லது ஜும்ஆ நாளில் இமாம் உரை நிகழ்த்தும் போது கையில் எதையாவது வைத்து விளையாடிக் கொண்டும், பிறரிடத்தில் பேசிக் கொண்டும் இருப்பார்கள்.

இவை அனைத்தும் ஷைத்தானின் வீர விளையாட்டுகளாகும். ஜும்ஆவில் பேசாமல் இருந்தால் நம்முடைய சிறிய பாவங்கள் மன்னிக்கப்படும். நம்முடைய பாவங்கள் மன்னிக்கப்படுவதை ஷைத்தான் விரும்ப மாட்டான். அதை நாம் முறியடித்தோம் என்றால் அவனுடைய முயற்சி வீணாகிவிடும். இமாம் ஜும்ஆவில் உரை நிகழ்த்தும் போது நாம் யாரிடமும் பேசாமலும், விணான விளையாட்டில் ஈடுபடாமலும் இருக்க வேண்டும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஜுமுஆ நாளில் இமாம் சொற்பொழிவு நிகழ்த்தும்போது உன் அருகில் இருப்பவரிடம் நீ “மௌனமாக இரு!’ என்று கூறினாலும் நீ வீணான காரியத்தில் ஈடுபட்டுவிட்டாய்"அபூஹுரைரா (ரலி), நூல் : புகாரி-934

நல்ல நண்பர்களுக்கு மத்தியில் பிரிவினை ஏற்படுத்துவதற்காக பல முயற்சிகளை செய்வான். அதாவது நல்ல நண்பர்களுக்கு மத்தயில் ஒருவரோடு ஒருவரை மோதிவிட்டு வேடிக்கை பார்ப்பவன்தான் ஷைத்தான். ஏனென்றால் அல்லாஹ்வுக்காக ஒன்று சேர்ந்து அவனுக்காக பிரிந்த இரு நல்ல நண்பர்களை மறுமை நாளில் தன்னுடைய அர்ஷின் நிழலை தருகிறான். மறுமை நாளில் நிழல் கிடைக்க கூடாது என்பதற்காக இவ்வுலகத்தில் நல்ல நண்பர்களுக்கு மத்தியில் பிரிவினை ஏற்படுத்தி, அல்லாஹ்வுக்காக நேசிக்க விடாமல் தடுத்து விடுகிறான்.
(முஹம்மதே!) அழகியவற்றையே பேசுமாறு எனது அடியார்களுக்குக் கூறுவீராக! ஷைத்தான் அவர்களிடையே பிளவை ஏற்படுத்துவான். ஷைத்தான் மனிதனுக்குப் பகிரங்க எதிரியாவான். (குர்ஆன் 17: 53)
சுலைமான் பின் சுரத் (ரலி) அவர்கள் கூறியதாவது: நான் நபி (ஸல்) அவர்களுடன் அமர்ந்து கொண்டிருந்தேன். அப்போது இரண்டு மனிதர்கள் ஒருவரையொருவர் திட்டிக் கொண்டிருந்தனர்.

அவர்களில் ஒருவரின் முகம் (கோபத்தால்) சிவந்து விட்டது. அவருடைய தொண்டை நரம்பு புடைத்துக் கொண்டது. உடனே, நபி (ஸல்) அவர்கள், “எனக்கு ஒரு (பிரார்த் தனை) வார்த்தை தெரியும். அதை இவர் சொல்வாராயின் இவருக்கு ஏற்பட்டுள்ள கோபம் போய் விடும்,
“ஷைத்தானிட மிருந்து அல்லாஹ்விடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன்’ என்று இவர் பிரார்த்தித்தால் இவருக்கு ஏற்பட்டுள்ள கோபம் போய் விடும்” என்று கூறினார்கள். ஆகவே, மக்கள் அந்த மனிதரிடம், “நபி (ஸல்) அவர்கள், “ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரு’ என்று கூறினார்கள்” எனத் தெரிவித்தார்கள்
அதற்கு அவர், “எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா?” என்று கேட்டார். புகாரி-3282
ஷைத்தானின் தீங்கிலிருந்து பாதுகாப்புக் கோருவது பைத்தியத்தைத் தெளியவைக்கத்தான் என்று தவறாக அவர் புரிந்து கொண்டதாலேயே இவ்வாறு கேட்டார். உண்மையில் கோபமும் ஷைத்தானின் தூண்டுதலாலேயே உண்டாகிறது. கோபத்திலிருந்து விடுபட, ஷைத்தானின் தீங்கிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோர வேண்டும்.

ஸஃபிய்யா பின்த்து ஹுயை (ரலி) அவர்கள் கூறியதாவது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பள்ளிவாசலில் தங்கி) இஃதிகாஃப் இருந்தார்கள். ஓர் இரவில் அவர்களைச் சந்திப்பதற்காக அவர்களிடம் நான் சென்றேன். நான் அவர்களிடம் (சிறிது நேரம்) பேசி விட்டு திரும்பிச் செல்ல எழுந்தேன்.
அப்போது நபி (ஸல்) அவர்களும் என்னைத் திருப்பியனுப்புவதற்காக என்னுடன் வந்தார்கள். உஸாமா பின் சைத் (ரலி) அவர்களின் வீடே அவர்களின் இருப்பிடமாக இருந்தது
அப்போது அன்சாரிகளில் இருவர் அந்த வழியாகச் சென்றார்கள். அவர்கள் நபி (ஸல்) அவர்களைக் கண்டவுடன் விரைந்து நடக்கலானார்கள்.
உடனே, நபி (ஸல்) அவர்கள், "நிதானமாகச் செல்லுங்கள். இவர் (என் மனைவி) ஸஃபிய்யா பின்த்து ஹுயை தான்" என்று சொன்னார்கள்.
இதைக் கேட்ட அவ்விருவரும், "அல்லாஹ் தூயவன். அல்லாஹ்வின் தூதரே! (தங்களையா நாங்கள் சந்தேகிப்போம்?)" என்று சொன்னார்கள்.
நபி (ஸல்) அவர்கள், "ஷைத்தான் மனிதனின் இரத்த நாளங்களில் (கூட) ஓடுகிறான். உங்கள் உள்ளங்களில் அவன் தீய எண்ணம் எதையேனும் போட்டு விடுவான் ...அல்லது உங்கள் உள்ளங்களில் (சந்தேகம்) எதையாவது அவன் போட்டு விடுவான்... என்று நான் அஞ்சினேன்" என்று சொன்னார்கள்.புகாரி-3281

நபி (ஸல்) அவர்கள் யாரோ அன்னியப் பெண்ணைச் சந்திக்கிறார்கள் என்ற சந்தகேத்தை ஷைத்தான் உங்கள் உள்ளங்களில் ஏற்படுத்தி விடக் கூடாதே என்பதற்காகவே நான் அப்படிக் கூறினேன் என்று நபி ஸல் அவர்கள் விளக்கினார்கள்.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: கொட்டாவி ஷைத்தானிடமிருந்து வருவதாகும். உங்களில் எவரேனும் கொட்டாவி விட்டால் தம்மால் முடிந்த வரை அவர் அதை அடக்கிக் கொள்ளட்டும். ஏனெனில், எவரேனும் "ஹா' என்று (கொட்டாவியால்) சத்தம் போட்டால் ஷைத்தான் சிரிக்கின்றான். அபூஹுரைரா (ரலி) அவர்கள் புகாரி-3289
நம்மிடத்தில் அதிகமான செல்வங்கள் இருந்து அதனை தர்மம் செய்யும் போது நாம் ஏழையாகிவிடுவோம் என்று ஷைத்தான் நமக்கு பயமுறுத்துவான். அந்த நேரத்தில் இந்த எண்ணத்தை ஷைத்தான் தான் ஏற்படுத்துகிறான் என்று எண்ணவேண்டும்.
இன்னும் வெட்ககோடான தீய எண்ணத்தையும் நமது உள்ளத்தில் ஏற்படுத்துவான்.
அரைகுறை ஆடையை உடுத்த வேண்டும் என்று ஷைத்தான் தீய எண்ணத்தை ஏற்படுத்துவான்.
ஷைத்தான் வறுமையைப் பற்றி உங்களைப் பயமுறுத்துகிறான். வெட்கக் கேடானதை உங்களுக்குத் தூண்டுகிறான். அல்லாஹ்வோ தனது மன்னிப்பையும், அருளையும் வாக்களிக்கிறான். அல்லாஹ் தாராளமானவன்; அறிந்தவன். (குர்ஆன் 2:268)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "இரவின் இருள் படரத் தொடங்கி விட்டால் உங்கள் குழந்தைகளை (வெளியே திரிய விடாமல்) தடுத்து விடுங்கள். ஏனெனில், ஷைத்தான்கள் அப்போதுதான் (பூமியெங்கும்) பரவி விடுகின்றன. இரவு வேளையில் சிறிது நேரம் கழிந்து விட்டால் அவர்களை (வெளியே செல்ல) விட்டு விடுங்கள்.
மேலும், (இரவு நேரத்தில்) உன் கதவை மூடிவிடு. (அப்போது) அல்லாஹ்வின் பெயரைச் சொல். (உறங்கச் செல்கையில்) உனது விளக்கை அணைத்து விடு.(அப்போதும்) அல்லாஹ்வின் பெயரைச் சொல். உன் தண்ணீர்ப் பையைச் சுருக்கிட்டு மூடி விடு. (அப்போதும்) அல்லாஹ்வின் பெயரைச் சொல். உனது பாத்திரத்தை மூடி வை. (அதை முழுவதும் மூட இயலா விட்டாலும்) அதன் மீது எதையாவது குறுக்காக வைத்தேனும் மூடி விடு. (அப்போதும்) அல்லாஹ்வின் பெயரைச் சொல். ஜாபிர் (ரலி) புகாரி-3280

ஷைத்தான் பகலில் வழிகெடுப்பதை போன்று இரவிலும் வழிகெடுக்கிறான். பகலில் மனிதன் அதிகமான நன்மைகளை செய்கிறான். ஆனால் இரவில் அதிக நன்மை செய்யாமல் உறங்குகிறான். அந்த நேரத்திலும் அவர்களை வழிகெடுக்க வேண்டும் என்று ஷைத்தான் நினைக்கிறான்.

நல்ல கனவு அல்லாஹ்விடமிருந்து வருவதாகும்; கெட்ட (அச்சுறுத்தும்) கனவுகள் ஷைத்தானிடமிருந்து வருவனவாகும். உங்களில் எவரேனும் அச்சுறுத்தும் தீய கனவைக் கண்டால் அவர் தன் இடப் பக்கத்தில் எச்சில் துப்பட்டும்; அல்லாஹ் விடம் அக்கனவின் தீங்கிலிருந்து பாதுகாப்புக் கோரட்டும். ஏனெனில், (இப்படிச் செய்தால்) அது அவருக்குத் தீங்கு செய்ய முடியாது. கதாதா (ரலி) புகாரி-3292

ஷைத்தானின் நம்முடைய நன்மைகளை அழிப்பதற்காக பல வழிகளை கையாளுவான். மனித இனத்தையே நரகத்தில் கொண்டு செல்ல வேண்டும் என்று கங்கணம் கண்டிக் கொண்டு இருக்கிறான். ஆனால் மனித இனத்தின் அனைவரையும் வழிகெடுக்க முயற்சிக்கும் போது நல்லயடியார்கள் சுதாரித்துக்கொள்ளவார்கள். இந்த தீயச் செயல் ஷைத்தானின் ஏற்பாடாகும். இவைகளை விட்டு தவிர்த்துக்கொள்ள வேண்டும்.

(இறைவனை) அஞ்சுவோருக்கு ஷைத்தானின் தாக்கம் ஏற்பட்டால் உடனே சுதாரித்துக் கொள்வார்கள்! அப்போது அவர்கள் விழித்துக் கொள்வார்கள். (குர்ஆன் 7:201)

ஷைத்தான் இது போன்ற தீய காரியங்களை ஏற்படுத்தி தீமையை செய்யுமாறு நமக்கு ஏவுகிறான். நம்முடைய உள்ளத்தில் ஊசலாட்டத்தை ஏற்படுத்துவான். ஷைத்தான் ஊசலாட்டத்தை ஏற்படுத்தும் போது அந்தசெயல்களை நம்முடைய வாழ்க்கையில் கொண்டு வராத வரை அல்லாஹ் நம்மை தண்டிக்க மாட்டான்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: என் உம்மத்தினரின் உள்ளங்களில் ஊசலாடும் தீய எண்ணங்களை, அவர்கள் அதன் படி செயல்படாதவரை அல்லது அதை (வெளிப்படுத்தி)ப் பேசாதவரை எனக்காக அல்லாஹ் மன்னித்து விட்டான்.அபூஹுரைரா(ரலி) புகாரி-2528

பகல் நேரத்தில் அதிகமான நன்மைகளை செய்கிறான். அதிகமான நன்மைகளை செய்வதை ஷைத்தான் விரும்ப மாட்டான். பகல் நேரத்தில் ஷைத்தானின் தீண்டல் அதிகமாக இருக்கும்.

அதனால் காலையிலிருந்து மாலைவரை ஷைத்தான் நம்மை தீண்டாமல் இருக்க வேண்டுமென்றால் நபி (ஸல்) அவர்கள் சிறிய துஆக்களை கற்றுத்தத்துள்ளார்கள். அந்த துஆவை நாம் ஓதினால் காலையிருந்து மாலை வரை ஷைத்தான் நம்மை தீண்டமுடியாது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை யாரும் இல்லை. அவனுக்கே ஆட்சியதிகாரம் உரியது. அவனுக்கே புகழ் அனைத்தும் உரியது. அவன் எல்லாவற்றிற்கும் வலிமையுடையவன்.

"லா இலாஹ இல்லல்லாஹ், வஹ்தஹு லாஷரீக்க லஹு, லஹுல் முல்க்கு வ லஹுல் ஹம்து, வ ஹுவ அலா குல்-ஷய்இன் கதீர் " என்று எவர் ஒரு நாளில் நூறு முறை சொல்கிறாரோ அவருக்கு, அது பத்து அடிமைகளை விடுதலை செய்வதற்குச் சமமா(க நற்பலன் பெற்றுக் கொடுப் பதா)கும்.

மேலும், அவருக்கு நூறு நன்மைகள் எழுதப்படும். அவரது கணக்கிலிருந்து (அவர் செய்த ) நூறு தீமைகள் அழிக்கப்படும். மேலும், அவருடைய அந்த நாளில் மாலை நேரம் வரும் வரை ஷைத்தானிடமிருந்து (பாதுகாக்கும்) அரணாக அது அவருக்கிருக்கும். மேலும், அவர் புரிந்த சிறந்த நற்செயலை எவரும் செய்ய முடியாது; ஒருவர் இதை விட அதிகமான (தடவைகள் இதை ஓதினால் அல்லது மிக முக்கியமான) ஒரு நற்செயல் புரிந்தாலே தவிர. அபூஹுரைரா (ரலி), புகாரி-3293

பகல் நேரத்தில் ஷைத்தானின் தீண்டல் இருப்பதைப் போன்று இரவில் நேரத்திலும் ஷைத்தான் தீண்டுவான். இரவில் தூங்கும் போது ஷைத்தான் கெட்ட கணவை ஏற்படுத்தி பயமுறுத்துகிறான். இரவு நேரத்திலும் ஷைத்தானின் தீண்டல் இல்லாமல் இருக்க வேண்டுமென்றால் நபி ஸல் அவர்கள் சில ஆயத்துகளை கற்றுத்துள்ளார்கள்.

அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது: ரமளானுடைய ஸகாத் பொருளைப் பாதுகாத்திடும் பொறுப்பை அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் ஒப்படைத்தார்கள். அப்போது (இரவில்) ஒருவன் வந்து அந்த (ஸகாத்) உணவுப் பொருளை அள்ளலானான். உடனே, நான் அவனைப் பிடித்துக் கொண்டேன்; “உன்னை அல்லாஹ்வின் தூதரிடம் இழுத்துச் சென்று முறையிடுவேன்” என்று கூறினேன்.

(அறிவிப்பாளர் முழு நிகழ்ச்சி யையும் விபரமாகச் சொல்கிறார்.) இறுதியில் அவன், "நீங்கள் படுக்கைக்குச் செல்லும் போது ஆயத்துல் குர்ஸீயை ஓதுங்கள். (அவ்வாறு ஓதினால்) உங்களுடன் பாதுகாவலர் (வானவர்) ஒருவர் இருந்து கொண்டேயிருப்பார். காலை நேரம் வரும் வரை ஷைத்தான் உங்களை நெருங்க மாட்டான்" என்று என்னிடம் சொன்னான்.
(இதை நபி (ஸல்) அவர்களிடம் சொன்ன போது,) "அவன் பொய்யனாயிருந்தும், உங்களிடம் உண்மை பேசியுள்ளான். அவன் ஷைத்தான்தான்" என்று கூறினார்கள். புகாரி-3275
அவன் படைத்தவற்றில் மிகப் பெரும் தீங்குகளை ஏற்படுத்தும்
ஷைத்தானின் தீண்டலிருந்து நம்மை பாதுகாத்து மறுமையில் அனைவரும் வெற்றி பெற வேண்டும்.

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 32
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )

وَمِنْ شَرِّ النَّفّٰثٰتِ فِى الْعُقَدِۙ
இன்னும், முடிச்சுகளில் (மந்திரித்து) ஊதும் பெண்களின் தீங்கை விட்டும், (குர்ஆன் : 113:4)
திருமதீனாவில் லபீதுப்னு அஃஸம் என்ற யூதன், தன் புதல்விகள் மூலமாக, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு சூனியம் செய்வித்து, தர்வான் என்ற பாழுங்கிணற்றில் ஒரு கல்லுக்கு அடியில்வைத்து விட்டான்.
இதனால் நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சில நாட்கள் வரை உடல் நலமில்லாமலிருந்தார்கள்.
இதனைக் குறித்து ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தகவல் தெரிவித்ததன் காரணமாக,
ஹளரத் அலீ ரலியல்லாஹுதஆலா அன்ஹு, தல்ஹா ரலியல்லாஹுதஆலா அன்ஹு ஆகியவர்களை அனுப்பி, அக்கிணற்று நீரை இறைத்து, குறிப்பிட்ட கல்லுக்கு அடியில் வைக்கப்பட்டிருந்த பொருட்களை எடுத்துக் கொண்டு வந்தார்கள்.
அது ஒரு முடியினாலான நூலில் பதினோரு முடிச்சுக்கள் போடப்பட்டிருந்தன. அவற்றின் முடிச்சுக்களை இந்த ஃபலக் சூரத்திலும் இதற்குப் பின்னருள்ள னாஸ் சூரத்திலுமுள்ள பதினோரு ஆயத்துகளையும் ஓதி அவிழ்த்து விட்டார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் பூரண குணமடைந்தார்கள்.
இச்சூனியத்தைச் செய்தது இன்னார்தான் என்பது தெரிந்து விட்டதால், அவர்களைத் தண்டிக்க வேண்டாமா? என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்டதற்கு, வேண்டாம் என மறுத்து விட்டார்கள்.
அதாவது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள். தங்களது சொந்தக் காரியத்தில் தீங்கு செய்பவர்களை மன்னித்து விடுவார்கள். அல்லாஹுதஆலாவின் காரியத்தில் தீங்கு செய்பவர்களை மன்னிப்பதில்லை.
பில்லி சூனியம் பற்றி இந்திய மொழிகளில் ஏகப்பட்ட புத்தகங்கள் வந்துள்ளன படிக்க படிக்க ரொம்பவம் திகிலுடன் கூடிய சுவாரசியமாக இருக்கின்றன
இந்த சூனிய வேலையெல்லாம் வாமாசாரம் என்று சொல்லப்படும் தந்த்ரா சாஸ்திரம் மற்றும் மிக பழைய சாஸ்திரமான அதர்வன வேதங்களைச் சார்ந்தது எழுதப்பட்டுள்ளது
இதெல்லாம் இருக்கட்டும் சூனியம் என்றால் என்ன . ?
பொறாமையும் போட்டியும் நிறைந்த உலகில் ஒருவன் நன்றாக வாழ்வதை காணப் பொறுக்காதவன் அவனை நேரடியாக தாக்காமல் மறைமுகமாகத் தாக்க விரும்புகிறான் மறைமுக சித்து வேலையில் நம்பிக்கை கொண்டு செயல் வினைத் துவக்குகிறான். இதை செய்வினை ஒன்றும் வெளியே தெரியாத சூனியம் என்கிறார்கள்
சரி, விஞ்ஞானம் என்ன சொல்கிறது ?

பிரபஞ்சத்தின் அத்தனை அங்கங்களும் ஒன்றுடன் ஒன்று இணைந்தவை அதாவது ஒரு புல்லை வெட்டும் போது இந்த பிரபஞ்சத்தையே அசைக்கிறோம் இது குவாண்டம் இயற்பியலின்படி நிஜம்
ஒரு மரத்தின் நான்கு கிளைகளை வெட்டினால் அந்த இடத்தில் நான்கு செ.மீ மழை குறைவாக பெய்கிறது காரணம் அந்த இடத்தில் செய்யப்பட்ட செயல் வினை மரத்தின் கிளையை வெட்டியதற்காக மழை குறைகிறது.
அடுத்து ஒரு பொருளைப் பற்றி சிந்திக்கும் அந்தச் செயலே அந்தப் பொருளையும் உங்கள்களையும மாற்றி விடுகிறது என்பதாக குவாண்டம் இயற்பியல் ஆதாரத்துடன் நிரூபிக்கிறது
இதையே இஸ்லாம் கண் திருஷ்டி ( Evil Eye ) என்பது கண் படுதல் எனப்படும். சிலர் பொறாமையோடு அல்லது ஏக்கத்தோடு ஒரு பொருளைப் பார்க்கப்படும்போது பார்க்கப்படும் பொருளில் இறைவன் சில பாதிப்புகளை ஏற்படுத்துகிறான். இதனால் உண்ணப்படும் பொருளானால் அது விஷத் தன்மை உடையதாக மாறி அதை உண்பவர்க்கு ஏதேனும் தீங்கு நேரலாம் இத்தகைய கண் பார்வை உடையயோர் ஒருவரைப் பார்த்தால் அவர்க்கு ஏதேனும் தொல்லை நேரலாம்
பொறாமையுடன் பார்ப்வரின் கண்ணிலிருந்து ஒரு வகை நச்சுக் கதிர் வெளியேறி காற்றில் கலந்து எதிராளியின் உடலை அடைந்து கேடு செய்கிறது
பைபிளில் பல இடங்களில் பேய்கள் விரட்டப்படுகின்றன என் பெயர் நாமத்தால் பேய்களை ஓட்டுவர்.புதிய மொழிகளைப் பேசுவர். பாம்புகளைக் கையால் பிடிப்பர்.கொல்லும் நஞ்சைக் குடித்தாலும் அது அவர்களுக்கு தீங்கிழைக்காது என்று இயேசு பிரான் சொல்வதாக வருகிறது
ஆதாரம்: பைபிள் மார்க் 16 : 17,16 : 18 , 3 : 15 , 6 : 13
ராஸீ ரஹ் அவர்கள் தமது விரிவுரையில் " முஅதஸியா "
என்னும் பிரிவினர் " சூனியம் " ஒன்று இருப்பதை மறுத்தார்கள் சூனியத்தை நம்பினால் அவரை "இறை மறுப்பாளர் " என்று கூட அவர்கள் கூறினார்கள்
ஆனால் நபி வழி நடப்போனரான அஹ்லுஸ் ஸுன்னத்தார்கள் "ஆகாயத்தில் பறப்பதற்கும் மனிதர்களை கழுதையைப் போன்றும் ., கழுதையை மனிதனைப் போன்றும் மாற்றுவதற்கு ஒரு சூனியகாரனுக்கு முடியும் என்கிறார்கள்
எனினும் சூனியக்காரன் அந்த மந்திரங்களையும் குறிப்பிட்ட வார்த்தைகளையும் உச்சரிக்கும் போது அல்லாஹ் அவ்வாறே படைக்கின்றான்
ஆதாரம் : தஃப்ஸுர் இப்னு கஸுர் பாகம் .1 பக்கம் 338
இதைத்தான் குவாண்டம் விஞ்ஞானமும் சொல்கிறது
கேட்டால்தானே . . ஒரே முரண்டு பிடித்தால், துள்ளுகிற மாடு ஒரு நாள் பொதி சுமக்கும் அப்போது தெரியும் சூனியம்ன என்ன என்று .

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 33
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )

وَمِنْ شَرِّ حَاسِدٍ إِذَا حَسَدَ

பொறாமைக்காரன் பொறாமை கொள்ளும் போதுண்டாகும் தீங்கை விட்டும் (காவல் தேடுகிறேன்).
(குர்ஆன் : 113:5)

---

பொறாமைக்காரன் பொறாமை கொள்ளும்போது அவனாலுண்டாகும் தீங்கிலிருந்தும் பாதுகாவல் தேடும்படி ஏவப்பட்டிருக்கிறது.

தீய குணங்களில் பொறாமை மிகவும் கெட்டது. பொறாமை என்பது மற்றொருவன் நல்ல நிலைமையிலிருப்பதைப் பார்க்க மனம் சகியாமல் அவன் கெட்டுப் போக வேண்டுமென்று எண்ணுவதாகும். அந்த எண்ணம் மற்றொருவனுக்குக் கெடுதியுண்டாக்கவும் தூண்டுகிறது.

பொறாமை நெருப்பைப் போன்றது. அது பட்ட இடத்தில் யெல்லாம் எரித்துவிடும். அதேபோல் பொறாமையும் பொறாமை கொண்டவனுக்கும் யார்மீது பொறாமை கொள்கிறானோ அவனுக்கும் ஆக இருவருக்கும் தீங்கு உண்டாக்கும்.

இப்லீஸானவன் பொறாமையின் காரணமாக இறைவனுடைய கட்டளையின்படி நபி ஆதம் (அலை) அவர்களுக்குச் சிரவணக்கம் செய்யாமலிருந்ததே விண்ணுலகில் தோன்றிய முதல் பாவச்செய்கையாகும். இப்லீஸானவன் தானும் கெட்டுப் போனதுடன் ஆதம் (அலை) அவர்களையும் வழிகெடுத்து விட்டான்.

இதேபோல் ஆதமுடைய மகன் காபில் தன் சகோதரன் ஹாபில் மீது பொறாமை கொண்டு அவரைக் கொன்றதுதான் இப்பூவுலகில் தோன்றிய முதலாவது பாவச் செய்கையாகும். பொறாமை பல பாவங்களுக்கும் தீங்குகளுக்கும் மூலகாரணமாக இருப்பதால் அதனால் ஏற்படும் தீங்கிலிருந்து தப்புவதற்கு இறைவனுடைய பாதுகாவல் இன்றியமையாதது.

மனிதர்களுக்குப் பொறாமை இன்றியமையாதது என்று கூறுகிறார் ஸ்டான்போர்டு பல்கலைக்கழக உளவியல் துறைத் தலைவராயிருந்த லூதர் மேயர். சரிதான், வசிட்டரைப் பார்த்துப் பொறாமைப்பட்ட காரணத்தால்தானே கடும் தவம் புரிந்து விசுவாமித்திரர் பிரும்ம ரிஷியாக முடிந்தது!

பறவைகளிலும் பாலூட்டி விலங்குகளிலும் கூடப் பொறாமையுணர்வு தென்படுகிறது. புலிகளிலும் சிங்கங்களிலும் ஆண்கள் தமது சாம்ராஜ்ய எல்லைக்குள் வேறு ஆண்கள் நுழைய அனுமதிப்பதில்லை.

வாலில்லாக் குரங்கு இனத்தைச் சேர்ந்த கொரில்லா, சிம்பன்சி, கிப்பன் வகையறாக்களில் கூட்டத் தலைவருக்கு மட்டுமே மற்ற பெண்களை அனுபவிக்கும்
உரிமையிருக்கிறதே என்ற பொறாமை, கூட்டத்தில் உள்ள பிற ஆண் குரங்குகளுக்கு இருப்பதை ஜேன் உடால் என்ற விலங்கு நடத்தை ஆய்வாளர் சுட்டிக்காட்டுகிறார்.

தலைவர் அயர்ந்திருக்கும் வேளைகளில், கூட்டத்திலுள்ள இளம் ஆண் குரங்குகள் அவருடைய அந்தப்புரத்திலிருந்து பெண் குரங்குகளை ஆசை காட்டி அழைத்து மகிழுமாம். ஆனால், அவை அதற்காக மனிதர்களைப் போலத் தலைவருக்கு எதிராகச் சூழ்ச்சிகளிலும் உள்ளடி வேலைகளிலும் ஈடுபடுவதில்லை.

மூளையில் ஹைபோதாலமஸ் பகுதியில் சுரக்கும் பல்வேறு ரசாயனங்களே மகிழ்ச்சி, கோபம், துக்கம், பொறாமை போன்ற உணர்ச்சிகளைத் தூண்டுகின்றன. மனிதர்கள் மட்டுமே அந்த உணர்ச்சிகளுக்கு வெளிப்படையான நீண்ட கால மறுவினைகளைக் காட்டுகிறார்கள்.

பொறாமை உணர்வு மூளையின் செல்களில் உருவாகிறது என ஆய்வர்கள் கருதுகிறார்கள். அதில் ஜீன் அமைப்புக்கும் பாரம்பரியத்துக்கும் சிறிது தொடர்பு இருக்கலாம்.

ஒரு ஆய்வின்போது இரண்டு ஆறு மாதக் குழந்தைகளை ஒரே கட்டிலில் படுக்க வைத்தார்களாம். ஒன்றின் வாயில் ஒரு நிப்பிள் வைக்கப்பட்டது. மற்ற குழந்தை சில நிமிஷங்களுக்கு அதையே பார்த்துக்கொண்டிருந்த பிறகு, தன் கையை நீட்டி நிப்பிளைப் பறித்துத் தன் வாயில் வைத்துக்கொண்டதாம். இதுபோல அது ஆறு முறை நிப்பிளைப் பறித்துக் கொண்டேயிருந்ததாம். இதன் மூலம் புரிவது என்ன?

பொறாமை என்பது நேர்மையான வகையில் மற்றவரை விஞ்ச வேண்டும் என்ற வேட்கையைத் தூண்டுவதாயிருந்தால் அது வரவேற்கத்தக்கதே என்கிறார் லூதர் மேயர்.

அதே சமயம், எப்போதும் எதிராளி பெற்ற லாபத்தைப் பற்றியோ புகழைப் பற்றியோ பொறாமையுடன் எண்ணிக்கொண்டிருந்தால் மூளையில் பாதகமான விளைவுகள் ஏற்படும். முன்கோபம், நரம்புத் தளர்ச்சி, தூக்கமிழப்பு, செயலிழப்பு, கவனச் சிதறல் போன்ற உளவியல் கோளாறுகள் ஏற்பட்டு, உடல் மற்றும் மனம் பாதிக்கப்படும் என்கிறார்.

அது சரி, எல்லா நாட்டு இலக்கியங்களிலும் பொறாமையில் பீடிக்கப்பட்ட கதை மாந்தர்கள் அனைவருக்கும் இறுதியில் துன்பமும் தண்டனையும்தானே கிட்டுகின்றன?

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 34
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )

قُلْ اَعُوْذُ بِرَبِّ النَّاسِۙ

(நபியே!) நீர் கூறுவீராக: மனிதர்களுடைய றப்பைக் கொண்டு நான் காவல் தேடுகிறேன். (குர்ஆன் : 114:1)

___________________________________________

மனிதனுக்கு அவனுடைய ஜீவியத்தில் பிரதானமாக மூன்று நிலைகள் ஏற்படுகின்றன.
ஒன்று தாயின் கர்ப்பத்தில் பிண்டமாக உருவாகி, உயிருள்ள பூர்த்தியான குழந்தையாகி, மடிப்பிள்ளையாகி பாலகனாக இருத்தல். இக்காலத்தில் குழந்தைக்கு எவ்வித ஸ்தூல சக்தியும் உடலில் இல்லை. அறிவுமில்லை. குழந்தை வளர்வதற்கு இறைவனது போஷணையும் பரிபக்குவப்படுத்துகையுமே பிரதானமாக இருக்கிறது. தாயின் கற்பத்தில் சிசு இருக்கும் காலத்தில் தாயும் கூட எதுவும் செய்வதற்கில்லை. முற்றிலும் இறைவனது பராமரிப்பிலேயே கர்ப்பம் இருக்கிறது. பின்னர் பிறந்தவுடன் இறைவன் தாயின் ஸ்தனபாரத்தில் அமுதை ஏற்படுத்தி விடுகிறான். இவ்வாறு ஏற்படுத்துவது அவ்வல்லோனின் கிருபையாகும்.
அன்று பிறந்த குழந்தையை தாயின் மடியில் வைத்து, குழந்தையின் வாயில் தனது மார்பின் நுனியை வைத்தவுடன் குழந்தை தானாக சுவைக்கத் தொடங்குகிறது. குழந்தைக்கு இப்பழக்கத்தை எவரும் கற்றுக் கொடுக்கவில்லை. இறைவன்தான் அந்த அறிவை ஏற்படுத்தி, அற்புதமாக குழந்தையைக் காப்பாற்றுகிறான். குழந்தையின் வயிற்றிலுள்ள ஜீரண சக்தியையும், குழந்தைக்கு அவசியமான உணவையும், தாயின் அமுதிலுள்ள சத்தையும், அவ்வமுதவின் உற்பத்தியும் சொல்லி முடியாத அற்புதம்

.

கர்ப்ப காலம் முடிந்து குழந்தை பிறந்ததும்,அதுவரை வெளிவராத தாய்ப்பால் சுவிட்ச் போட்டாற் போல் சுரக்கும் அதிசயம் தாய்ப்பால். பெண்ணின் மார்பகங்கள் பால் உற்பத்தி செய்யும் அதிசய தொழிற்சாலை.
குழந்தை பிறப்பதற்கு சில விநாடிகள் முன்பே இந்தத் தொழிற்சாலை பால் சுரப்பிக்கான அனைத்துக்கும் தயாராகிவிடும். பிரசவ நேரம் நெருங்கியதும் பெண்ணின் உடலுக்குள் சில வினோதங்கள் நிகழ ஆரம்பிக்கின்றன. ஹைப்போதலமஸின் தயாரிப்பான ஈஸ்ட்ரோஜன், ப்ராகஸ்ட்ரோன் போன்ற சில ஹார்மோன்களின் அளவு இரத்தத்தில் குறைய ஆரம்பிக்கிறது.
உடனேயே ஹைப்போதாலமஸ் டெலிவரி டைம் நெருங்கி சுரபிக்குத் தகவல் அனுப்ப, பிட்யூட்டரியிலிருந்து ப்ரோலாக்டினை என்ற ஹார்மோன் வெளிப்படுகிறது. இந்தப் பிரசவ கால ஹார்மோன்தான் மார்பகங்களுக்குப் பாய்ந்து பால் சுரப்பை துவக்கி வைக்கிறது.

பெண்ணின் மார்பகங்களுக்குள் ஆரஞ்சு சுளைகள் போல் குட்டி குட்டியாய் அல்வியோல் என்ற பெயரில் சுரப்பிகள் இருக்கின்றன. க்ரூப்பாக வேலை பார்த்து, தாய்ப்பாலைச் சுரப்பவை இவைதான், ஒவ்வொரு அல்வியோலும் கறந்த பால், அதிலிருந்து கிடைத்த கிளைப் பாதைகளில் வெளியேறி பிரதான சாலைக்கு வந்து நிப்பிளை அடைய குழந்தை பசியாற உறிஞ்சிக் கொள்கிறது. இப்படி பிறந்த குழந்தைக்கு குறைந்த பட்சம் 600 மில்லி பால் ஒரு நாளைக்கு வேண்டும்.
எவ்வாறாயினும் உலகிலுள்ள எம்மனிதனும் அரசன், ஆண்டி, படித்தவன், பாமரன், ஆத்திகன், நாத்திகன், விசுவாசி, விசுவாசமற்றவன், யோக்கியன், அயோக்கியன், ஆண், பெண் ஆகிய சகலரும் குழந்தையாகவும் கர்ப்பத்தினுள் சிசுவாகவும் இல்லாமல் வந்து விடவில்லை.
அவர்கள் யாவரையும் இறைவன் மேற்கண்ட விதத்தில் போஷித்துப் பரிபக்குவப்படுத்தியுள்ளான். ஆகவே, அவன் மனிதருக்கு றப்பு என்று இங்கு கூறியிருப்பதை எவரும் சந்தேகிக்கவோ ஆட்சேபிக்கவோ முடியாது.

அடுத்து றப்பு என்றால் என்ன ?
عَرَفْتُ رَبِّيْ بِرَبِّيْ

எனது 'றப்பு' இரட்சகனை எனது 'றப்பு' இரட்சகன் மூலமே அறிந்தேன்

இவ்வாறு இறை ஞானி ஒருவர் உரைத்துள்ளார்கள். இவ்வசனம் ஸூபீ மகான்களின் நூல்களில் பதிவாகியுள்ளது. இவ்வசனத்தின் வெளித் தோற்றம் மூலம் இது தருகின்ற கருத்தைப் புரிந்து கொள்வது கடினம்.

"றப்பு" என்ற சொல் இறைவனைக் குறிக்கும். பெற்றோரையும் குறிக்கும். "பைஅத்"வழங்கிய ஞான குருவையும் குறிக்கும். இச்சொல் வருகின்ற இடத்தையும், அதன் முன் பின் தொடரையும் கருத்திற் கொண்டே பொருள் சொல்லவும் வேண்டும். விளக்கம் சொல்லவும் வேண்டும்.

உதாரணமாக ஒருவன் "யா றப்பீ யா அல்லாஹ்" எனது இரட்சகனே! அல்லாஹ்வே! என்று சொன்னால் இவ்விடத்தில் "றப்பு" என்ற சொல் இரட்சகன் என்ற பொருளில் இறைவனுக்கு பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஒருவன் பின்வரும் திருக்குர்ஆன் வசனத்தை ஓதினால் ஒரே வசனத்திலேயே ஓர் இடத்தில் "றப்பு" என்ற சொல் இறைவன் என்ற பொருளிலும், இன்னோர் இடத்தில் அதே சொல் பெற்றோர் என்ற பொருளிலும் பயன் படுத்தப்பட்டுள்ளது விளங்கும். உதாரணமாக
رَبِّ ارْحَمْهُمَا كَمَا رَبَّيَانِيْ صَغِيْرًا

இத்திருவசனத்தில் முதலில் வந்துள்ள றப்பி" என்ற சொல் இறைவன் என்ற பொருளுக்கும், "கமாறப்பயானீ" என்ற வசனத்தில் வந்துள்ள "றப்பயா" என்ற சொல் பெற்றோர் என்னை வளர்த்தார்கள் என்ற பொருளுக்கும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

தமிழகம் காயல்பட்டணத்தில் வாழ்ந்து அங்கேயே அடக்கம் பெற்றுள்ள மகான் ஸெய்யிதுனா உமர் வலீ நாயகம் தங்களின் பாடல் ஒன்றில்
رُبَّ رَبِّ رَبَّهُ لَمْ يَعْرِفَنْ وَلَمْ يَرُبْ

என்று கூறினார்கள் رُبَّ رَبِّ எத்தனையோ றப்புகள் – அதாவது எத்தனையோ குருமார்கள் என்ற பொருளுக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

தலைப்பில் நான் எழுதியுள்ள عَرَفْتُ رَبِّيْ بِرَبِّيْ எனது "றப்பு"வை எனது "றப்பு" கொண்டு அறிந்தேன் என்ற வசனத்தில் முதலில் வந்துள்ள "றப்பீ" என்ற சொல்லுக்கு அல்லாஹ் என்றும், இறண்டாவதாக வந்துள்ள "றப்பீ" என்ற சொல்லுக்கு எனது குரு என்றுமே பொருள் கொள்ள வேண்டும்.

எனது "றப்பு" இரட்சனை எனது குருவைக் கொண்டு அறிந்தேன் என்றால் அவர் இவருக்கு சொல்லிக் கொடுத்த இறை ஞான விளக்கம் மூலம் இவர் இறைவனை அறிந்து கொண்டார் என்பதாகும்.

இவ்விடத்தில் இன்னுமொரு கருத்து விளங்கப்படுகிறது. அதாவது عَرَفْتُ رَبِّيْ بِرَبِّيْ என்றால் عَرَفْتُ الله بِالله அல்லாஹ்வைக் கொண்டு அல்லாஹ்வை அறிந்தேன் என்பதாகும். இதன் சுருக்கம் என்னவெனில் ஒருவன் அல்லாஹ்வை அறிவதாயின் அவன் அல்லாஹ்வில் "பனா" முழுமையாக தன்னை அர்ப்பணித்து இவன் அவனாகினால் இவன் அவனை அறிந்தவனாகி விடுகிறான் என்பதாகும்.

ஒவ்வொரு மனிதனும் அவனுடைய முயற்சி மூலம் அல்லாஹ்வை அறிய முற்படும் போது, (எனதடியான் என் பக்கம் ஒரு சாண் நெருங்கி வந்தானாயின் நான் அவன் பக்கம் ஒரு முழம் நெருங்குவேன் என்றும், அவன் என் பக்கம் ஒரு முழம் நெருங்கி வந்தானாயின் நான் அவன் பக்கம் ஒரு பாகம் நெருங்குவேன் என்றும், அவன் என் பக்கம் நடந்து வந்தானாயின் நான் அவன் பக்கம் ஓடிச் செல்வேன்) என்றும் ஹதீதுக் குத்ஸி கூறுகிறது.

இதன் சுருக்கம் என்னவெனில் அடியான், அல்லாஹ்வைக் கண்டு மகிழ எந்த அளவு அவன் பக்கம் நெருங்குகிறானோ அதை விட வேகமாக அல்லாஹ் அடியான் பக்கம் நெருங்குகிறான் என்பதாகும்.

எவ்வாறேனும் அடியானின் இலட்சியம் அல்லாஹ்வை அறிவதும், அவனை நெருங்குவதும், அவனை அடைவதுமேயாகும்.

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 35
## (விஞ்ஞானத் தஃப்ஸீர் )

مَلِكِ النَّاسِۙ

(அவனே) மனிதர்களின் அரசன்; (குர்ஆன் : 114:2)
اِلٰهِ النَّاسِۙ

(அவனே) மனிதர்களின் நாயன். (குர்ஆன் : 114:3)

---

மனிதர்களின் இரட்சகன், மனிதர்களின் அரசன், மனிதர்களின் இறைவன் ஆகிய இம்மூன்று இலக்கணங்களும் உலகையாளும் எந்த மன்னரிடமும் காண முடியாது. இறைவனான ஏகச் சக்கரவர்த்தியாகிய அல்லாஹ் ஒருவனுக்குத்தான் இத்தகைய இலக்கணங்கள் உண்டென்பதை எடுத்துக்காட்டும் பொருட்டே இவ்வத்தியாயத்தின் முற்பகுதியில் இம்மூன்றையும் ஒருங்கே அல்லாஹ் கூறுகின்றான்.

மனிதர்களின் இரட்சகன் :-

தாய் வயிற்றிலிருந்து மனிதன் இவ்வுலகிற்கு வருவதற்கு முன்னும், வந்து இவ்வுலகத்தில் வாழ்ந்திருக்கும் காலத்தும் மனிதனைப் போஷித்துப் பாதுகாத்தது யார்? வெளித் தோற்றத்தில் உணவு, தண்ணீர், காற்று முதலியவைகளும் தாய் தகப்பனுமே மனிதனைப் போஷிப்பதாகத் தெரிகிறது. உணவு தானியத்தையும் தண்ணீரையும் காற்றையும் தாய் தகப்பனையும் உண்டாக்கியது யார்?

தாய் தகப்பனுடைய மனதில் பிள்ளையின் மீது அன்பையும் பிள்ளையைப் பாதுகாக்கும்படியான எண்ணத்தையும் உண்டாக்கியது யார்? மழையின்மையால் பஞ்சமேற்பட்டு உயிர்வாழ வழியின்றி மக்கள் வாடும்போது மழையைப் பொழியச் செய்து நாட்டை செழிப்பாக்கிப் பஞ்சத்தைப் போக்குவது யார்?

அது அல்லாஹ்வேயன்றி வேறு யாருமில்லை. ஆகவே அல்லாஹ்வே உண்மையில் மனிதர்களின் இரட்சகனாயிருக்கின்றான்.

மனிதர்களின் அரசன் :-

அரசாட்சியை விட்டு நீங்குவதும் அல்லாஹ்வின் கையில்தானிருக்கின்றன. அல்லாஹ் நாடினால் ஒரு வினாடியில் வியாதியைக் கொண்டோ, மரணத்தைக் கொண்டோ, யுத்தத்தைக் கொண்டோ, கலகத்தைக் கொண்டோ அவ்வரசனை அரசாட்சியிலிருந்து நீக்கிவிடலாம்.

இன்றைக்கு அரசராகப் போற்றப்படும் ஒருவர், நாளைக்கு சாதாரணப் பிரஜையாகவோ, பிரஜா உரிமை பறிக்கப்பட்டு நாட்டை விட்டு விரட்டப் பட்டவராகவோ ஆகிவிடுகிறார். மற்ற மனிதர்களைப் போல் மனித அரசனும் நியாயத் தீர்ப்புநாளில் தான் செய்த ஒவ்வொரு காரியத்திற்கும் அல்லாஹ்வின் சமூகம் பதில் சொல்லியே ஆகவேண்டும்.

ஆனால், அல்லாஹ்வோ அப்படியல்ல. அவனது ஆட்சி தனிச்சிறப்புப் பெற்றது. யாருடைய ஆதரவும் உதவியும் இன்றி என்றென்றும் நிலைத்திருப்பது, எவராலும் அதைக் கவிழ்க்க முடியாது; எவருக்கும் எத்தகைய பதில் கூறவேண்டிய அவசியமுமில்லாதது. இத்தகைய சக்தி வாய்ந்த அல்லாஹ்வே உண்மையில் மனிதர்களின் அரசனாயிருக்கின்றான்.

மனிதர்களின் அல்லாஹ் :-

மனிதர்களை இரட்சிப்பவனாயும் மனிதர்களுக்கு அரசனாயும் அல்லாஹ் இருப்பதுடன் தனக்கு நிகரில்லாத சர்வ சக்தியுள்ளவனாயுமிருக்கிறான். அவனது ஆதரவில்லாமல் யாரும் வாழ முடியாது.எதையும் செய்ய முடியாது. ஆகவே அவனே எல்லோராலும் வணங்கப்படுவதற்குத் தகுதியானவனாயிருக்கிறான். ஆதலால், அவனே மனிதர்களின் இறைவன்.

இவ்வத்தியாயத்தின் முதல் மூன்று வாக்கியங்களில் மனிதர்களின் இரட்சகன் மனிதர்களின் அரசன், மனிதர்களின் இறைவன் என்ற மூன்று பெயர்கள் கொண்டு தன்னிடம் பாதுகாவல் தேடும்படி கூறிய அல்லாஹ், எத்தகைய தீங்கிலிருந்து நாம் பாதுகாவல் தேடவேண்டும் என்பதை அடுத்தாற்போலக் குறிப்பிடுகின்றான்

## அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் - 36(விஞ்ஞானத் தஃப்ஸீர் )

مِنْ شَرِّ الْوَسْوَاسِ ۙ الْخَنَّاسِ ۙ

பதுங்கியிருந்து வீண் சந்தேகங்களை உண்டாக்குபவனின் தீங்கை விட்டும் (இறைவனிடத்தில் நான் காவல் தேடுகிறேன்).(குர்ஆன் : 114:4)
الَّذِىْ يُوَسْوِسُ فِىْ صُدُوْرِ النَّاسِۙ

அவன் மனிதர்களின் இதயங்களில் வீண் சந்தேகங்களை உண்டாக்குகிறான்.(குர்ஆன் : 114:5)
مِنَ الْجِنَّةِ وَالنَّاسِ

(இத்தகையோர்) ஜின்களிலும், மனிதர்களிலும் இருக்கின்றனர். (குர்ஆன் : 114:6)

---

மனம் சதா சிந்தித்திக் கொண்டேயிருக்கும்.மனம் யானையின் துதிக்கையைப் போன்றது யானையின் துதிக்கை சிறிது நேரம் கூட சும்மா இருக்காது.யானைப் பாகன் ஒரு கட்டையை துதிக்கையில் வைத்து விட்டால் யானை துதிக்கையை சுழற்றுவதை நிறுத்திக் கொள்ளும்

சில நேரங்களில் மனது ஒரே விஷயத்தை பல கோணங்களில் அரைத்துக் கொண்டே இருக்கும்.கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தால், மனது என்பது நமது எண்ணங்களின் கலவைதான்.
சில நேரங்களில் எண்ண ஓட்டம் குறைவாக இருக்கும்பொழுது, மனம் ஓரளவு அமைதியாக இருக்கும். அதிக எண்ண ஓட்டங்களின் பொழுது அமைதியின்மை இருக்கும். இதை தான் கவலை, மனஉளைச்சல் என்கிறோம். மனம் ஒன்று, நடந்த ஒரு சம்பவத்தை நினைத்து உளைச்சலில் இருக்கும், அல்லது நடக்க போகும் சம்பவத்தை பற்றி அசை போட்டுக் கொண்டு இருக்கும். நன்றாக கவனியுங்கள், ஒன்று பிற்காலத்தில் (past) இருக்கும் அல்லது எதிர்காலத்தில் (future) இருக்கும், இந்த தருணத்தில் (now) இருப்பதில்லை.
மனித மனத்தின் முக்கியமான இயல்பு அது எப்போதுமே பிரிந்து பிரிந்துதான் இயங்குகிறது .
'மரத்தைத் தறிக்க வேண்டுமென்றால் மனம் உளியாகவும் , இன்னொரு மனம் சுத்தியலாகவும் ஒரே சமயம் மாறும் '
'தன் மனம் ஒரு செயலை செய்யும்போது அச்செயலை வேறு ஒரு மனம் அதை வேடிக்கைப் பார்க்கிறது '
எந்த பதற்றத்திலும் எந்த அச்சத்திலும் அது வேடிக்கை பார்க்காமல் இருப்பது இல்லை .கொடூரத்தை தான் செய்யும் போது தன்னில் ஒரு பகுதி அதில் ஈடுபடுவதில்லை என்பதை மனவியல் ஆய்வாளர்கள் நிரூபித்திக்கிறார்கள் .
" ஒரு கிளி பழம் தின்கிறது.பிறிதொன்று அதைப் பார்க்கிறது " என்ற உபநிடத வாக்கியத்தில் உள்ளது.இது சிந்திக்க வைக்கும் வைர வரி.
"நிச்சயமாக மனிதனின் இரத்தம் ஓடும் இடத்திலெல்லாம் ஷைத்தான் ஓடுகிறான் (புகாரி , முஸ்லிம் )
என்ற நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களின் திருவாக்குப்படி ஷைத்தான் மனிதர்களின் நெஞ்சங்களில் இதயங்களில் புகுந்துகொண்டு பற்பல வீண் சந்தேகங்களைக் கிளப்பிவிட்டு வேடிக்கை பார்க்கின்றான்.
"பாங்கு' 'தக்பீர்' (அல்லாஹு அக்பர் போன்ற) சப்தத்தைக் கேட்டால் ஷைத்தான் வெகுதூரம் ஓடிவிடுகிறான்". (புகாரி)
என்ற நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களின் திருவாக்கிற்கிணங்க ஊசாட்டங்கள், வீண் சந்தேகங்களை உற்பத்தி செய்யும் ஷைத்தான், அல்லாஹ்வை நினைவூட்டும் வாக்கியங்களைச் செவியுற்றதும் தலைதெறிக்க ஓடிவிடுகிறான்.

இத்தகைய விஷமத்தனத்தை வீண் சந்தேகத்தைக் கிளப்பிவிடும் தொழிலை யதார்த்த (அசல்) ஷைத்தானும் மனித ஷைத்தானும் செய்யமுடியும் என்பதை அடியார்களுக்கு இவ்வத்தியாயத்தின் பிற்பகுதியில் அல்லாஹ் விளக்கி வைக்கிறான்.

மனிதனுக்குத் தெரியும் வழிகளிலிருந்தும் தெரியாத வழிகளிலிருந்தும் தீங்குகள் வரலாம். தெரியாத வழிகளிலிருந்து வரும் தீங்கிலிருந்து மனிதன் தப்ப முடியாது.
மனிதனுக்கு இவ்வுலகில் வரும் தீங்குகளும், அவற்றால் ஏற்படும் கஷ்டங்களும் பிரமாதமானவையல்ல; அவை சொற்பகாலம் இருக்கக் கூடியவை. ஆனால் மனிதன் இவ்வுலகத்தில் பாவச்செயலைச் செய்து, அதன் விளைவாக மறுமையில் அடையும் தண்டனை மிகக் கடுமையானது, அது நீடித்திருப்பது. அத்தண்டனை வராமலிருக்க வேண்டுமானால் மனிதன் பாவம் செய்யாமலிருக்க வேண்டும்.
மனிதனின் மனதிலுண்டாகும் எண்ணங்கள் தாம் மனிதனைப் பாவம் செய்யும்படித் தூண்டுகின்றன.
மனிதனின் மனதில் அந்த எண்ணங்களை உற்பத்தி செய்வது கன்னாஸ் என்னும் ஷைத்தானுடைய வேலையாயிருக்கின்றது. ஆகவே ஷைத்தானே, மனிதன் மறுமையில் தண்டனையடைவதற்கு மூல காரணமாயிருக்கின்றான்.
அவனுடைய தீங்கே மனிதனை அதிகம் பாதிக்கின்றது. அத்தகைய தீங்கிலிருந்து மனிதன் தன் சொந்த முயற்சியினால் தப்பமுடியாது. அல்லாஹ்வின் பாதுகாவல் இருந்தால்தான் தப்ப முடியும்.
கண்ணுக்குத் தெரியாத ஜின்னுடைய கோலத்திலிருந்து கொண்டு மனிதர்கள் மனதில் கெட்ட நினைவுகளையும் வீண் சந்தேகங்களையும் கிளப்பிவிட்டு அவர்களை தப்பான வழியில் செல்லும்படி ஷைத்தான் செய்து விடுகிறான்.
அதேபோல் மனிதக் கோலத்தில் வந்து சீர்திருத்தக்காரர்கள், நவீன கொள்கை சித்தாந்தக்காரர்கள் போலவும் மக்களின் நலனை விரும்புபவர்கள் போலவும் வெளியில் காட்டி, இஸ்லாத்தின் அடிப்படையான கொள்கையில் மக்களுக்குச் சந்தேகம் வரும்படியான போதனைகளைச் செய்து, அவர்களை வழிகெடுத்து விடுகின்றார்கள்.
மனித மனத்தின் முக்கியமான இயல்பு அது எப்போதுமே பிரிந்து பிரிந்துதான் இயங்குகிறது என்பதாக அறிவியலாளர் குறிப்பிடுவதால், கூட்டத்திலிருந்து பிரிந்து போய் மேயும் காட்டு மாட்டை புலி எளிதாக வேட்டையாடி கொல்லும். பிரிந்த மனதில் கெட்ட கொள்கைகளை பலஹீனமான ஈமானியர்களிடம் சொல்லி அவர்கள் மனதில் குழப்பத்தை உண்டுபண்ணி தொழுகையை விட்டுவிடும்படி செய்து விடுகின்றார்கள்.
இவ்விதம் ஜின்னுடைய கோலத்திலிருந்தும் மனிதக் கோலத்திலிருந்தும் மனிதனைக் கெடுத்துவிடும் ஷைத்தான்களின் தீங்குகளிலிருந்து தப்புவதற்கு அல்லாஹ்வின் பாதுகாவல் இன்றியமையாதது.

இதைக்குறித்து நபி பெருமானார் (ஸல்) அவர்களின் பல ஹதீஸ்களிருக்கின்றன. அவற்றின் ஒன்றிரண்டின் கருத்துக்களை மட்டும் இங்கு குறிப்பிடுவோம்.
1. "ஆதமுடைய மகனின் இதயத்திற்குள் ஷைத்தானும் பிரவேசிப்பான்; மலக்கும் பிரவேசிப்பார்.
ஷைத்தான் பிரவேசித்தால், தீய காரியங்களைச் செய்யும்படியும் நியாயமாய்ச் செய்ய வேண்டியதைச் செய்யாதிருக்கும்படியும் தூண்டுவான்.
மலக்கு பிரவேசித்தால் நல்ல கருமங்களைச் செய்யும்படியும் உண்மையை நிலைநிறுத்தும்படியும் தூண்டுவார்.
யாருக்காவது இம்மாதிரியான (மலக்கு பிரவேசிக்கும் படியான) பாக்கியம் கிடைத்தால் அவன் இறைவனுக்கு நன்றி செலுத்தட்டும்.
(ஷைத்தான்) பிரவேசிக்கும்படியான சந்தர்ப்பம் ஏற்பட்டால் "துரத்தப்பட்ட ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடட்டும்' ( திர்மிதி, தப்ஸீர் ஹக்கானீ)
2. "இந்தப் பொருளை யார் உண்டாக்கியது?" என்ற கேள்வியை ஷைத்தான் மனிதனின் மனதில் போடுகிறான்.
இப்படியாக இதை யார் உண்டாக்கியது ? அதை யார் உண்டாக்கியது ?என்ற கேள்விகளைப் போட்டுக் கொண்டே வந்து கடைசியாக, "அல்லாஹ்வை உண்டாக்கியது யார்"? என்று கேட்கிறான்.

இம்மாதிரியான நிலைமைக்கு வரும்போது (மனிதன்), "நான் அல்லாஹ்வின் மீதும் அவனுடைய ரசூலின் மீதும் ஈமான் (விசுவாசம்) கொண்டேன்" என்று சொல்லிவிட வேண்டும்.
(அதாவது:- அல்லாஹ்வை யாரும் உண்டாக்கவில்லை. அவன் தன்னால் நிலைத்திருப்பவன் என்று அல்லாஹ்வும் அவனது ரசூலும் கூறியவைகளை நான் பூரணமாக விசுவாசம் கொண்டேன்" என்பது கருத்தாகும்.) (புகாரீ, முஸ்லிம் - தப்ஸீர் ஹக்கானீ)
அல்லாஹ்வே! நான் உன் இரட்சிப்பிலுள்ளவன், உன் அரசாங்கத்திற்கு உட்பட்டவன்; உனது அடியான்-உனது கிருபை சதா காலமும் தேவைப்படுபவன். வெளிப்படையான தீங்குகளிலிருந்து பாதுகாப்பதுபோல், ஜின்னுடைய கோலத்திலும், மனிதக் கோலத்திலும் வந்து எனக்குத் தெரியாமலே என் மனதிற்குள் தீய எண்ணங்களைப் போட்டு வழிகெடுக்கும் ஷைத்தான்களின் தீங்கிலிருந்து பாதுகாக்கும்படி உன்னை நான் வேண்டுகிறேன்.
குறிப்பு :- ஷைத்தான்களுடைய தீங்குகளிலிருந்து தப்புவதற்கு இந்த சூராவை ஓதி வர வேண்டியது அவசியம். நபிபெருமானார் (ஸல்) அவர்களும் இதை அதிகமாக ஓதி வந்திருக்கிறார்கள்.

இத்துடன் அறிவியல் ரீதியாக அல்-குர்ஆனின் விரிவாக்கம் -
(விஞ்ஞானத் தஃப்ஸீர் ) நிறைவடைகிறது

## திருக்குர்ஆன் கூறும் பாதுகாவலராய் பகா எண்கள் 1

2 3 5 7 11 13 17 19 23

29 31 37 41 43 47 53 59 61

67 71 73 79 83 89 97

பள்ளிகளின் கணித வகுப்புகளில் 1,2,3,4,.............................. என்பவை இயல் எண்கள் என்றும் இதில் சில எண்களுக்கு ஒன்று மற்றும் அதே எண்ணைத் தவிர வேறு காரணிகள் இல்லையெனில் அந்த எண்கள் பகா எண்கள் அல்லது முதன்மை எண்கள் (Prime numbers) என்றும்
மற்ற எண்கள் அதாவது இரண்டுக்கு மேற்பட்ட காரணிகளை உடைய எண்கள் பகு எண்கள் அல்லது கலப்பின எண்கள்(Composite Numbers) என்றும் கற்பிக்கப்படுகிறது.
பகா எண்கள் : 2,3,5,7,11,13,17,19,....................................
பகு எண்கள் : 4,6,8,9,10,.................................................
பல சுவாரஸ்யமான தகவல்கள் இந்தப் பகாஎண்களின் பின்னால் மறைந்துள்ளன.
இயல் எண்களில் எண்ணற்ற பகா எண்கள் உள்ளன. பகா எண்களின் எண்ணிக்கையை நிர்ணயிப்பது என்பது பிரபஞ்சத்தின் எல்லையைக் காண்பது போன்றது.
மாபெரும் பகா எண்களைக் கண்டறிவது அவ்வளவு எளிதல்ல. அதற்குக் கடின உழைப்பும் நீண்ட காலமும், அதிசக்தி வாய்ந்த கணினிகளும் மென்பொருளும் தேவை.
இயல் எண்களில் பகா எண்கள் ஒரு குறிப்பிட்ட இடைவெளியில் தொடர்ந்து அமையவில்லை.
உதாரணமாக 2 மற்றும் 3 க்கும் இடைவெளி ஒன்று, 5க்கும் 7க்கும் இடைவெளி இரண்டு, 23க்கும் 29க்கும் இடைவெளி 6. இயல் எண்களின் ஊடே மேலே செல்லச் செல்லப் பகா எண்களின் எண்ணிக்கை குறைவாகவும் அவ்வெண்களுக்கு இடையேயான இடைவெளி அதிகமாகவும் உள்ளது.
பகா எண்களின் சிறப்பு

1) ஒன்று என்ற எண் பகு எண்ணோ அல்லது பகா எண்ணோ அல்ல.

2) ஒரே இரட்டை படை பகா எண் 2 மட்டுமே.

3) தொடர்ச்சியாக அடுத்தடுத்த எண்கள் பகா எண்களாக அமைந்தவை 2,3 மட்டுமே.

4) (5,7),(11,13),(17,19).........இது போன்ற இரட்டைகள் இரட்டை பகா எண்கள் எனப்படுகின்றன. அதாவது அடுத்தடுத்த பகா எண்களுக்கிடையேயான இடைவெளி 2 ஆக இருக்கும்.

5) எந்த ஒரு இயல் எண்ணையும் பகா எண்களின் பெருக்குத் தொகையாக எழுத இயலும். 15=3x5, 20=2x2x5.................

6) எந்த ஒரு இரட்டை படை எண்ணையும் இரு பகா எண்களின் கூட்டுத் தொகையாக எழுத இயலும். 32=3+29, 50=7+43,

பகா எண்களில் அழகு

31

331

3331

33331

333331

3333331

33333331

இந்த எண்கள் 18ம் நூற்றாண்டு வரை நிரூபணம் ஆன பகா எண்கள். ஆனால் அடுத்த எண் 333333331 பகா எண் அல்ல. காரணம் 17 x 19607843 = 333333331.

பகா எண்களின் பயன்பாடு:-

பகா எண்கள் இன்று நம்மைக் காக்கும் பாதுகாவலராக விளங்குகின்றன. வங்கிகளில் நடைபெறும் பணப்பரிவர்த்தனை, பங்கு சந்தை, ATM மையங்கள் எனப் பல இடங்களில் சங்கேதக் குறியீடுகள் (passwords) அத்தியாவசியமாக உள்ளன.

இந்தச் சங்கேதக் குறியீடுகளை மற்றவர்கள் உடைத்துக் கண்டுபிடிப்பதைத் தவிர்க்க இரு பகா எண்களின் பெருக்குத் தொகையை கொண்டு அமைக்கிறார்கள். இவ்வாறு அமைக்கப்படும் சங்கேதக் குறியீடுகளில் உள்ள இலக்கங்களின் எண்ணிக்கையைப் பொருத்து அதைக் கண்டுபிடிக்கச் சில நூறு ஆண்டுகள் முதல் ஆயிரம் ஆண்டுகள் வரை ஆகலாம் எனவும் கனணி கணிதவியலாளர்களால் கூறப்படுகிறது

இந்தப் பகா எண்கள் குறித்து இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட கணித மேதை யூக்ளிட், அதன் பின்னர் வந்த ஆய்வாளர் கோல்ட்பெக் முதல் தமிழகக் கணித மேதை இராமானுஜர் வரை பலர் பல உண்மைகளையும், தேற்றங்களையும் வழங்கியிருந்தாலும். பகா எண்கள் என்பது கணித அறிஞர்களுக்கு இன்னமும் ஆழ்கடல் ஆய்வாகத்தான் உள்ளது.

திருக்குர்ஆனிலும் நரகத்தின் காவலாளியாக பாதுகாப்பாளராக 19 மலக்குகளை ஏற்படுத்தி இருப்பதாக...
عَلَيْهَا تِسْعَةَ عَشَرَ

(அவனை வேதனை செய்ய) அதில் பத்தொன்பது பேர்கள் இருக்கின்றனர். (குர்ஆன் : 74:30)
وَمَا جَعَلْنَاۤ اَصْحٰبَ النَّارِ اِلَّا مَلٰٓٮِٕكَةً وَّمَا جَعَلْنَا عِدَّتَهُمْ اِلَّا فِتْنَةً لِّلَّذِيْنَ كَفَرُوْا ۙ لِيَسْتَيْقِنَ الَّذِيْنَ اُوْتُوا الْكِتٰبَ وَيَزْدَادَ الَّذِيْنَ اٰمَنُوْۤا اِيْمَانًا وَّلَا يَرْتَابَ الَّذِيْنَ اُوْتُوا الْكِتٰبَ وَالْمُؤْمِنُوْنَ ۙ وَلِيَقُوْلَ
الَّذِيْنَ فِىْ قُلُوْبِهِمْ مَّرَضٌ وَّالْكٰفِرُوْنَ مَاذَاۤ اَرَادَ اللّٰهُ بِهٰذَا مَثَلًا ؕ كَذٰلِكَ يُضِلُّ اللّٰهُ مَنْ يَّشَآءُ وَيَهْدِىْ مَنْ يَّشَآءُ ؕ وَمَا يَعْلَمُ جُنُوْدَ رَبِّكَ اِلَّا هُوَ ؕ وَمَا هِىَ اِلَّا ذِكْرٰى لِلْبَشَرِ

நரகத்தின் காவலாளிகளாக மலக்குகளையேயன்றி (மற்றெவரையும்) நாம் ஏற்படுத்தவில்லை.

நிராகரிப்பவர்களைச் சோதிப்பதற்காகவே (இவ்வாறு) இவர்களுடைய தொகையை(ப் பத்தொன்பதாக) நாம் ஏற்படுத்தினோம்.

வேதத்தையுடையவர்கள் இதனை உறுதியாக நம்பவும். நம்பிக்கை கொண்டவர்களின் நம்பிக்கையை இது அதிகப்படுத்தும். வேதத்தை உடையவர்களும், நம்பிக்கையாளர்களும் (இதைப் பற்றிச்) சந்தேகிக்கவே வேண்டாம்.

எனினும், எவர்களுடைய உள்ளங்களில் நோய் இருக்கின்றதோ அவர்களும், நிராகரிப்பவர்களும் இந்த உதாரணத்தைக் கொண்டு, அல்லாஹ் என்ன அறிவிக்க நாடினான்? என்று கூறுவார்கள்.
(நபியே!) இவ்வாறே, அல்லாஹ் தான் நாடியவர்களைத் தவறான வழியில் விட்டுவிடுகின்றான். தான் நாடியவர்களை நேரான வழியில் செலுத்துகின்றான். (நபியே!) உங்கள் இறைவனின் படைகளை அவனைத் தவிர மற்றெவரும் அறியமாட்டார்கள். இவை மனிதர்களுக்கு நல்லுபதேசங்களேயன்றி வேறில்லை. (குர்ஆன் : 74:31)

## வான் மறையும், பகா எண்ணில் வான்வெளி நிகழ்வுகளும் 2
## ( பகா எண்ணை கண்டறிய எளிய வழிமுறை )




எண்களில் பகா எண்கள் (Prime numbers - ப்ரைம் நம்பர்ஸ்) என்பது ஒரு வகை.இவை, இரு வகுத்திகளை (Divisors - டிவைசர்ஸ்) மட்டுமே கொண்டவை. அதாவது, இந்த எண்கள், 1 என்ற எண்ணாலும், தன்னாலும் மட்டுமே வகுபடும்.
உதாரணமாக 2,3,5,7,11,13 போன்ற எண்கள். இவை எண் ஒன்றாலும், தன்னாலும் மட்டுமே வகுபடும். பிற எண்களால் மீதம் இல்லாமல் வகுபடாது.
பகா எண்களைப் பற்றிய ஆய்வுகள், பல நூற்றாண்டுகளாக நடந்து வருகின்றன. இவ்வளவு சிறப்பு வாய்ந்த எண்களைப் பற்றித்தான், நீங்கள் 6ம் வகுப்பில் கற்க நேர்கிறது.
முதல் நூறு எண்களில் தோன்றும் பகா எண்களை கண்டுபிடிக்க ஒரு எளிய முறை
*அந்த எண்கள் 2, 3, 5, 7 ஆகிய நான்கு எண்களால் வகுபடுகிறதா? என கண்டறிய வேண்டும்!
*இந்த நான்கு எண்களில் ஏதேனும் ஒன்றால் வகுபட்டால், அந்த எண் பகு எண்ணாகிவிடும்.
* 2, 3, 5, 7 ஆகிய நான்கு எண்களில், எந்த எண்ணாலும் வகுபடாமல் இருந்தால், அது பகா எண்ணாக விளங்கும்.
உதாரணமாக, நாம் தேர்ந்தெடுக்கும் எண் 91 எனக் கருதுவோம். இது 2, 3, 5 ஆகிய மூன்று எண்களால் வகுபடாது. ஆனால்,7 × 13 = 91 என்பதால் இந்த எண் ஏழால் வகுபடும். எனவே 91 பகு எண்.
அதேபோல், 71 என்ற எண்ணை எடுத்துக் கொள்வோம். இது
2, 3, 5, 7 ஆகிய நான்கு எண்களில் எந்த எண்ணாலும் வகுபடாது. எனவே, 71 என்ற எண், பகா எண்ணாகும்.
2, 3, 5, 7 ஆகிய நான்கு எண்கள் சிறிய எண்களாக இருப்பதால், கொடுத்த எண் இந்த எண்களால் வகுபடுமா என, எளிமையாகக் கண்டறிந்து விடலாம். மேலும், நான்கு எண்களை வைத்துக்கொண்டு, நூறுக்கு குறைவான அனைத்து எண்களையும் பகுத்து ஆராய்ந்து, அவை பகு எண்ணா, அல்லது பகா எண்ணா என, வெகு விரைவில் கூறிவிடலாம். ஆக, நான்கு எண்கள், மற்ற 94 எண்களின் நிலையை அறிய உதவுகின்றன.
அமெரிக்க விண்வெளி ஆய்வு மையத்தின் ஆய்வாளரான கார்லு செகன் தான் எழுதிய கான்டேக்டு புதினத்தில் பகா எண்களின் மூலம் வேற்றுக் கிரக உயிரிகளிடம் தொடர்பு கொள்ள முடியும் என எழுதி இருந்தார்.
Carl Pomerance, Prime Numbers and the Search for Extraterrestrial Intelligence

திருக்குர்ஆனில் வான்வெளி நிகழ்வுகளையும் இறைவன் பகா எண்களில் பதிவு செய்துள்ளது சற்று கவனிக்கத்தக்கது

இரண்டு , ஏழு :-

பின்னர் (அந்த புகையை) இரண்டு நாள்களில் ஏழு வானங்களாக முடிவு செய்து திட்டமிட்டு, ஒவ்வொரு வானத்திலும் நடைபெற வேண்டிய விஷயங்களை (அவைகளுக்கு) அறிவித்தான். (குர்ஆன் : 41:12)

(சூரியன், சந்திரன் இரண்டும்) உதிக்கும் இரு திசைகளுக்கும் அவனே சொந்தக்காரன். மேலும், (அவைகள்) மறையும் இரு திசைகளுக்கும் அவனே சொந்தக்காரன். (குர்ஆன் : 55:17)

மூன்று :-

மூன்று கிளைகளையுடைய (நரகத்தின்) புகையின் நிழலின் பக்கம் நீங்கள் செல்லுங்கள்"(என்றும் கூறப்படும்). (குர்ஆன் : 77:30)

ஐந்து :-

“நிலம், நீர், காற்று, நெருப்பு, வெட்டவெளி ஆகிய ஐம்பூதங்களும், இந்த உடலின் அடிப்படையாக இருக்கிறது, இந்த பூமியின் அடிப்படையாக இருக்கிறது மற்றும் படைப்பு முழுவதற்குமே கூட அடிப்படையாக இருக்கின்றன.”

ஒரு சாம்பார் தயாரிக்கக் கூட பதினேழு மூலப்பொருட்கள் தேவை. ஆனால் ஐந்தே ஐந்து மூலப்பொருட்களுடன், என்ன ஒரு படைப்பு!

பஞ்ச பூதங்களாகிய நிலம், நீர், காற்று, நெருப்பு, வெட்டவெளி ஆகியவை இந்த உடலுக்கு அடிப்படையாக இருக்கிறது, பூமிக்கு அடிப்படையாக இருக்கிறது, படைப்பு முழுவதற்குமே அடிப்படையாக இருக்கிறது.

ஒட்டுமொத்த படைப்பும் இந்த ஐந்து மூலப்பொருட்களால்தான் உருவாக்கப்பட்டுள்ளது.

இந்த ஐந்து மூலக்கூறுகளும் ஒரு குறிப்பிட்ட விதமாக கூட்டுச் சேர்ந்தால், அந்த விளையாட்டிற்கு மண் எனப்படுகிறது. அவைகளின் விளையாட்டு சற்றே மாறுபட்டால், அதுவே உணவாக உருவாகிறது. அவைகளே வேறொருவிதமாக விளையாடினால், அது மனிதனாகிறது.

ஐம்பூதங்களும் இன்னொரு விதமாக ஒரு வித்தியாசமான விளையாட்டு நிகழ்த்தினால், மிருகங்களாக , பறவைகளாக மாறுகிறது. படைப்பில் நீங்கள் காணுகின்ற ஒவ்வொன்றும் இந்த ஐந்து விஷயங்களின் வித்தைதான்.

இந்த 5 பஞ்ச பூதங்களைக் கொண்ட படைப்புகளைப் பற்றி இறைவன் திருக்குர்ஆனில் ,

(ஆகவே இறைவன் இப்லீஸை நோக்கி) "நான் உனக்குக் கட்டளையிட்ட சமயத்தில், நீ (சிரம்) பணியாதிருக்கும்படி உன்னைத் தடை செய்தது எது?" என்று கேட்க, (அதற்கு இப்லீஸ்) "நான் அவரைவிட மேலானவன். (ஏனென்றால்,) நீ என்னை நெருப்பால் படைத்தாய். அவரை களிமண்ணால் படைத்திருக் கின்றாய். (களிமண்ணை விட நெருப்பு உயர்ந்தது)" என்று (இறுமாப்புடன்) கூறினான். (குர்ஆன் : 7:12)

மேலும், எல்லா உயிர்ப் பிராணிகளையும் அல்லாஹ் நீரிலிருந்து படைத்துள்ளான்; தான் நாடியதை அல்லாஹ் படைக்கிறான்; நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவனாக இருக்கின்றான்.
(குர்ஆன் : 24:45)

வானவர்களை ஒளியினால் படைக்கப்பட்டார்கள் (ஹதீஸ்)

ஏழு :-

அந்நரகத்திற்கு ஏழு வாசல்கள் இருக்கின்றன. ஒவ்வொரு வாசலிலும் (செல்லக்கூடிய வகையில்) அவர்கள் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு விடுவார்கள். (குர்ஆன் : 15:44)

அல்லாஹ் தான் ஏழு வானங்களையும் இன்னும் பூமியிலிருந்து அவற்றைப் போலவும் படைத்தான்; நிச்சயமாக அல்லாஹ் எல்லாப் பொருட்கள் மீதும் சக்தியுடையவன் என்பதையும், மேலும் நிச்சயமாக அல்லாஹ் தன் ஞானத்தால் எல்லாப் பொருளையும் சூழ்ந்தறிகிறான் என்பதையும் நீங்கள் அறிந்து கொள்வதற்காக, அவற்றின் (வானங்கள், பூமியின்) இடையே அவன் கட்டளையிறங்கிக் கொண்டேயிருக்கிறது.
(குர்ஆன் : 65:12)

பதினொன்று :-
யூஸுஃப் தம் தந்தையாரிடம்: “என் அருமைத் தந்தையே! பதினோரு நட்சத்திரங்களும், சூரியனும், சந்திரனும் - (இவை யாவும்) எனக்குச் சிரம் பணிவதை மெய்யாகவே (கனவில்) நான் கண்டேன்” என்று கூறியபொழுது. (குர்ஆன் : 12:4)

## குர்ஆன் கூறும் பகா எண் ஏழு ( பதிவு 3 )

பகா எண் ஏழு வேத மரபில் மிக உயர்ந்த அந்தஸ்தத்தைப் பெற்ற ஓர் எண். இந்த எண் ஏழைப் பற்றி இஸ்லாத்தில் மிக உயர்ந்த நிலையில் அதனைப் பயன்படுத்தப்படுகின்றன .
அதே நேரத்தில் குர்ஆனிலும் எண் ஏழு மறைவான அர்த்தத்தில்தான் பயன்படுத்தப்பட்டிருக்கிறது என்பதற்கு நபி யூசுப் (அலை) அவர்களின் கனவின் விளக்கம் குறித்து குர்ஆன் பிரஸ்தாபிக்கிறது. இதைப் பற்றியும் சொல்லி இருக்கிறேன்.
எண் 7-ன் சிறப்புகள் :-
1) ஹஜ்ஜில் கஃபாவைச் சுற்றி ஏழு முறை தவாபு செய்ய வேண்டும்
2) தொங்கலோட்டம் ஏழு தடவை ஓட வேண்டும்.
3) சைத்தானுக்கு ஏழு கற்களை கொண்டு எறியப்பட வேண்டும்
4) தொழுகைக்கு அழைக்கும் பாங்குக்கு 7 சொற்றொடர்கள்
5) தொழுகையில் சஜ்ஜா செய்யும் போது ஏழு உறுப்புக்கள் ( நெற்றி இரண்டு உள்ளங்கை , இரண்டு மூட்டு, இரண்டு கால் பெருவிரல்கள் ) பூமியில் பட வேண்டும்
6) தொழுகையில் ஏழு நிலைகள் பின்பற்றப்படுகின்றன.
7) நரகத்தின் வாசல்கள் 7 (குர்ஆன் 15 : 44)
😎குர்ஆனை ஏழு மன்ஜில்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.
9) குர்ஆனில் 25 நபிமார்களை பற்றி சொல்லப்பட்டிருக்கிறது 25 என்ற இரு எண்களின் கூட்டுத்தொகை 7
10) பூமிக்கு இறைவன் அனுப்பிய மொத்தம் நபிமார்களின் எண்ணிக்கை 1,24,000 . இதன் கூட்டுத் தொகையும் 7.
11) குர்ஆனை அக்கால மக்கள் அவரவர் வட்டார மொழிகளில் ஏழு விதமாக ஓதினார்கள். உமர் (ரலி) அவர்கள்தான் குர்ஆனில் உள்ள எழுத்துக்களுக்கு சேர் , பேஸ் குறியீடுகளை கொடுத்து ஒரே மாதிரி தொனியில் குர்ஆனை உலக மக்கள் யாவரும் விளங்கிக் கொள்ளும் வகையில் அமைத்தார்கள்
12 ) குர்ஆனில் திரும்ப திரும்ப ஓதக்கூடிய ஏழு வசனங்களைக் கொண்ட சூரத்துல் ஃபாத்திஹாவை ஒவ்வொரு தொழுகையிலும், ஒவ்வொரு ரக்அத்திலும் ஓதும்படி அல்லாஹ் அருளியுள்ளான். இது பற்றி குர்ஆனிலேயே (15: 87) வசனத்தில் இறைவன் குறிப்பிடுகிறான்.
இந்த ஏழு வசனங்களை திருக்குரானின் தலை வாயில்களாக அமையப்பட்டுள்ளது இந்த ஏழு வசனத்திற்கு உரிய விளக்கங்கள் இன்னும் முழுமையாக யாரும் விளங்கிட முடியாத சிறப்பைப் பெற்று நிகழ்கிறது.
13) சூரா ஃபாத்திஹாவில் அரபி நெடுங்கணக்கில்
இருளெருத்துக்கள் (ஃதே, ஜீம், கே, ஸே, ஷீன்,ளே, ஃபே ) ஆகிய ஏழு எழுத்துக்கள் தவிர்க்கப்பட்டுள்ளன.
14) ஏழு வானங்களையும், அடுக்கடுக்காக எவ்வாறு அல்லாஹ் படைத்திருக்கின்றான் என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா ? (குர்ஆன் : 71:15)
1வது வானம் வக்கீஃ (பச்சை மரகதம்),
2 வது வானம் அர்ஃபலூன் (வெள்ளி)
3 வது வானம் ஃகைத்தூம் (சிவப்பு மாணிக்கம் )
4 வது வானம் மா ஊன் (வெண்முத்து)
5 வது வானம் தப்ஃகாஉ (தங்கம்)

6 வது வானம் வஃபனாஉ (மஞ்சள் மாணிக்கம் )
7 வது வானம் அருபாஉ ( இலங்கும் ஒளி)
15) சூரியனின் வெள்ளொளியில் 7 வர்ணங்கள் உள்ளன.
எகிப்திலுள்ள பிரதம அரசர் ஆண்டுக்கொரு முறை எகிப்து நீர் நதிக் கரையில் ஒரு திருவிழாவை நடத்துவது வழக்கம். இதற்கு அந்நாட்டிலுள்ள மனிதர்களில் இயல்புள்ள யாவரும் வருவது வழக்கம்.
அவர்கள் யாவருக்கும் அரசர் அறுசுவை உணவளித்து பஞ்சாமிர்தங்கள் உள்ள பானங்களையும் குடிக்கக் கொடுப்பதும், இவர்கள் உணவருந்து வதையும் பானங்களைக் குடிப்பதையும் பார்த்து மகிழ்வதும் வழக்கம்.
இவ்வாறான திருவிழாவை நடத்தும் போது ஒருநாள் அரசர் வெள்ளிக்கிழமை இரவில் ஒரு கனவு கண்டார்.
அதாவது, ஏழு கொழுத்த மாடுகள் அந்த ஆற்றிலிருந்து (கடலிலிருந்து என்றுஞ் சிலர் கூறுவர்) வெளிவந்தன.
அவற்றிற்குப் பிறகு ஏழு மெலிந்த மாடுகள் வெளிவந்து, கொழுத்த அந்த ஏழு மாடுகளையும் விழுங்கி விட்டன.
அவ்வேழு மாடுகளின் எந்தப் பாகமும் வெளிக்குத் தெரியாதவாறு மெலிந்த மாடுகளின் வயிற்றினுள் அடங்கி விட்டன.
அத்துடன் ஏழு பசுங்கதிர்கள் வந்தன. அவற்றைப் பின்தொடர்ந்து உலர்ந்த பழுத்த ஏழு கதிர்கள் வந்து அவற்றை மறைத்து விட்டன.
"இன்னும் "நிச்சயமாக நான் கொழுத்த ஏழு மாடுகளை மெலிந்த ஏழு (மாடுகள்) புசிப்பதாகவும், பசுமையான ஏழு கதிர்களையும் வேறு காய்ந்தவைகளையும் கனவு கண்டேன், கூட்டத்தினரே! எனது கனவில் எனக்குத் தீர்ப்பு கூறுங்கள், கனவுக்குப் பயன் கூறுகிறவர்களாக நீங்கள் இருந்தால்" என்று அரசன் கூறினான். குர்ஆன் (12 : 43)
இவ்வாறு அரசர் கனவு கண்டு, பயந்து விழித்தார். தமது அரசுக்கு ஏதோ கெடுதல் வந்தாலும் வரக்கூடும்.
ஆதலால், படித்த அறிஞர்களையும், குறி சொல்வோரையும், கனவுகளுக்கு விளக்கங் கூறுவோரையும் அழைத்து, அவர்களிடம் இக்கனவுக்குப் பலன் கேட்க வேண்டுமென விரும்பினார்.
இத்திருவிழாவுக்கு ஏற்கனவே இவ்வகுப்பினர் வந்திருந்ததால் அவர்களை மிகச் சுலபமாக ஒன்று கூட்ட முடிந்தது.
அவர்கள் ஒன்று கூடியபோது அரசர் தாம் கண்ட கனவைக் கூறி, "நீங்கள் கனவுக்கு பலன் கூற முடியுமானால் என் கனவுக்கு விளக்கமான பலனைக் கூறுங்கள்" என்று கேட்டுக் கொண்டார். இவ்விபரம் இந்த ஆயத்தில் கூறப்பட்டிருக்கிறது.

ஹளரத் யூசுஃபு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் சிறைக்கூடம் புகுந்து, சிறைக் கைதிகளிருவருக்கு கனவின் பலன் கூறி, இவர்களில் விடுதலையடையக் கூடிய கைதியிடம், தம்மைக் குறித்து அரசனிடம் கூற வேண்டுமெனக் கேட்ட அற்ப தவறுக்காக, அவர் மற்றவர்களால் அடியுடன் மறக்கப்பட்டு பின்னர் #ஏழு வருடகாலம் சிறையிலேயே இருந்தார்கள்.
இனி அவர்கள் சிறையிலிருந்து வெளியில் வரவேண்டுமென்ற நாட்டம் இறைவனுக்கு உண்டாயிற்று. ஆதலால், ஹளரத் யூசுஃபு அலைஹிஸ்ஸலாம் அவர்களை நினைவூட்டுவதற்கான புறக் காரணத்தை, மனிதரின் உள்ளத்தில் தோன்றும் விதமாக மேற்கண்ட கனவின் மூலம் ஏற்படுத்தி விட்டான்.
(சிறையில் யூஸுஃபை கண்ட) அவர், “யூஸுஃபே! உண்மையாளரே! ஏழு கொழுத்த பசுக்களை, ஏழு மெலிந்த பசுக்கள் தின்பதையும்; பசுமையான ஏழு கதிர்களையும் வேறு (ஏழு) காய்ந்து (சாவியாகிவிட்ட) கதிர்களையும் (கனவில் கண்டால் அக்கனவுக்குப் பலன் என்ன என்பதை) எனக்கு அறிவிப்பீராக; மக்கள் அறிந்து கொள்வதற்காக அவர்களிடம் திரும்பிப் போய்(ச் சொல்ல) வேண்டியிருக்கிறது” (என்று கூறினார்). (குர்ஆன் : 12:46)
“நீங்கள் தொடர்ந்து ஏழு ஆண்டுகளுக்கு (நல்லபடியாக) விவசாயம் செய்வீர்கள்; பிறகு நீங்கள் அறுவடை செய்த - (விளைச்ச)லில், நீங்கள் உண்பதற்கு வேண்டிய ஒரு சிறிய அளவைத்தவிர, அதனை அதற்குரிய கதிர்களிலேயே விட்டு வையுங்கள். (குர்ஆன் : 12:47)

“பின்னும், அதற்கப்பால் கடினமான (பஞ்சத்தையுடை வருடங்கள்) ஏழு வரும்; நீங்கள் பஞ்சமான ஆண்டுகளுக்காக பத்திரப்படுத்தி முன்னமேயே வைத்திருப்பதில் சொற்ப (அளவை)த் தவிர மற்றதை அவை (அந்த பஞ்ச ஆண்டுகள்) தின்றுவிடும். (குர்ஆன் : 12:48)
பின்னும், அதற்கப்பால் ஓராண்டு வரும், அதில் மக்களுக்கு நல்ல மழை பெய்யும்; அதில் (விளையும் கனிகளிலிருந்து) அவர்கள் பழரசங்கள் பிழிந்து (சுகமாக) இருப்பார்கள்” என்று கூறினார். (குர்ஆன் : 12:49)

## சில்வண்டுகள் அறிவிக்கும் பகா எண் கணிதம் (பதிவு 4 )




கணித பாடத்தில் காரணிகள் (factors) பகு எண்கள் (composite numbers), பகா எண்கள் (prime numbers) பற்றி படித்திருப்பீர்கள்
ஒரு எண்ணை மீதம் இல்லாமல் வகுக்கக் கூடிய எல்லா எண்களும் அந்த எண்ணுக்குக் காரணிகள் தான் 6 அப்டிங்கற எண்ணுக்கு 1,2,3,6 இதெல்லாம் காரணிகள். இப்படி இரண்டுக்கும் மேற்பட்ட காரணிகள். இருக்கறதெல்லாம் பகு எண்.
இதுவே 11 என்ற எண்ணை எடுத்துக் கொள்வோம். அதை 1 மற்றும் 11 ஆகிய இரு எண்களையும் தவிர வேற எந்த எண்ணும் மீதி இல்லாமல் வகுக்காது. இப்படி இருப்பதெல்லாம் பகா எண்.
சரி, அப்படியே காலாற ஒரு காட்டுக்குள் போவோம். காதுகளைக் கூர்மையாக்கிக்கொள்ளுங்கள். கவனமாய்த் தடம் வையுங்கள். நீங்கள் மிதிக்கிற இலைக்குக் கீழ் ஒரு பூச்சி தன் உணவைத் தேடிப் போய்க்கொண்டிருக்கலாம். ஒரு சிலந்தி தன் இரையைப் பிடிக்க விரித்த வலையின், அதிர்வு அறியும் இழையை அறுத்து, அதை ஏமாற்றி விட்டிருக்கலாம்.
அவ்வளவு பெரிய காட்டுக்குள் நாம அற்பம். அது பிரம்மாண்டம். சாவகாசமாக ஆனால் மிகுந்த ரசனையோடு வேலைசெய்யும் ஒரு தேர்ந்த சிற்பி போன்றது. அந்தக் காடு.
அந்தக் காடு உயிர்ப்புடன் இருக்கிறது என்பதை அறிவிப்பதே சத்தமும் அசைவுகளும்தான். அங்கு ஒரு கர்நாடக இசைக்கச்சேரியின் சுருதிப்பெட்டி போல சிள்வண்டுகளின் ரீங்காரம் கேட்கும். தன் இருத்தலைச் சொல்லி, தன் தேவையைக் கூவிக் கேட்கும் உயிரி அது. ஆனா நம்மில் நிறைய பேர் ஒரு சிள்வண்டைப் பார்த்திருக்கமாட்டோம். ஆனால், அதன் ரீங்காரத்தைக் கேட்டிருப்போம்.
அந்தச் சில்வண்டுகளில் ஏகப்பட்ட உட்பிரிவுகள் உண்டு. அதில் இரண்டு வகைகளுக்கு தனிச்சிறப்பு உண்டு. அவைதான் பதினேழு அப்புறம் பதிமூன்று வருடச் சிள்வண்டுகள் (17 and 13 year cicadas). மண்ணுக்குள்ளேயே

மறைந்திருந்து அத்தனை வருடங்களுக்கு ஒருமுறை வெளியில் வந்து இனப்பெருக்கம் செய்வதால் தான் அந்தப் பெயர்.
பெரும்பாலான உயிரினங்களின் வாழ்க்கைச் சுழற்சி பகு எண்களில்தான் இருக்கும். ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையிலான வருடங்களில் அந்த உயிரினத்தின் தொகை உச்சத்தைத் தொடும். பின் உணவு அரிதாகி, இனப்பெருக்கம் சுருங்கி ஒரு குறைவான எண்ணை அடையும். அதனால் என்ன என்று கேட்கிறீர்களா சொல்கிறேன்.

நமக்குத்தான் சிள்வண்டுகளைத் தெரியாதே தவிர காட்டில் வாழும் பெரும்பான்மை உயிரிகள் சில்வண்டுகளைச் சாப்பிடும். அப்படி இந்தச் சில்வண்டுகளின் வாழ்க்கைச் சுழற்சி ஒரு பகு எண்ணாய் அமைந்துவிட்டால் அது மொத்தமாய் அழிவை நெருங்குகிற வாய்ப்பு அதிகம்.
உதாரணமாக பன்னிரெண்டு வருடங்களுக்கு ஒருமுறை முட்டையிடும் என்று வைத்துக்கொள்வோம். அப்படி வைத்துக்கொண்டால் 2,3,4,6,12 வருடங்களில் தொகை உச்சம் அடையும் உயிரினங்களின் சுழற்சியோடு அவற்றின் அதிகபட்சத் தொகை இருக்கும் வருடம் ஒத்துப் போய்விடும். அப்போது இனப்பெருக்கம் நடக்க வாய்ப்பில்லாமல் வேட்டையாடப்பட்டு அத்தனையும் இறந்து போகும்.
இந்த ஒன்றோடொன்று பின்னிப்பிணைந்த வாழ்க்கைச் சுழற்சியை எப்படிக் கண்டுபிடித்தார்கள் என்றால் சுமார் 1700களின் லிங்க்ஸ் lynx என்னும் ஒரு வகை சிவிங்கிப்புலித் தோலுக்காக அதைப் பிடிப்பதற்கு ஹட்ஸன் Hudson பகுதியில் திரிவார்கள். அப்படி வருடக்கணக்காகத் திரிகையில் ஒரு வருடம் அனேகம் சிவிங்கிப் புலிகள் கிடைக்கும்; அடுத்த வருடம் சிவிங்கிப் புலிகளே கிடைக்காதாம்.
இதைப்பற்றிய ஆராய்ச்சியில் இறங்குகையில், இந்த சிவிங்கிப் புலிகளின் எண்ணிக்கை மாறக் காரணம் அந்தச் சிவிங்கிப் புலிகளின் பிரதான உணவான snowshoe hare என்னும் முயலின் வாழ்க்கைச் சுழற்சிதான் என்று கண்டறிகிறார்கள்.
பெரும்பாலும் இந்தக் கொறித்துண்ணி வகை விலங்குகள், மிகக் குறுகிய கால பெருமளவு பெருகுகிற திறனுள்ளவை. இரண்டு எலிகள் அளவில் பதினெட்டே மாதத்தில் ஆயிரம் எலியாகப் பெருகிவிடும். அப்படி snowshow hare முயலெல்லாம் உணவு மிகுதியாகக் கிடைக்கையில் ஏகத்துக்கும் இனப்பெருக்கம் செய்து பெருகினால், உணவு கிடைக்கும் அளவு குறைந்துவிடும்.
இப்படி மிகுதியாக இவை திரியும்போது இவற்றை வேட்டையாடும் சிவிங்கிப் புலிகள் உணவு மிகுதியால் அதிகம் செய்யும். முயல்களின் எண்ணிக்கை குறையும் போது சிவிங்கிகளின் எண்ணிக்கையும் குறையும்.
இயற்கை தன்னுடைய சமநிலையை நிலைநிறுத்திக் கொள்ளவே பார்க்கும். வேதியியலில் இதை லு ஷாட்டலியே கோட்பாடு என்று சொல்வார்கள் (Le Chatelier's principle).

நாம் முயல்-புலி கதைக்கு வருவோம். இந்த இரண்டாம் கட்ட உண்ணிகள் (secondary consumers) ஆன புலி போன்ற வற்றின் வாழ்க்கைச் சுழற்சி இரண்டில் இருந்து பத்து வருடங்களுக்குள்தான் அமையும். அதாவது அந்தக் குறிப்பிட்ட கால இடைவெளியில் அவற்றின் தொகை, மிக அதிகம், மிகக் குறைவு என இரண்டு நிலைகளையும் கடக்கும்.
அந்தப் புரிதலோடு நாம் அப்படியே சிள்வண்டு கதைக்கு வருவோம். பகு எண்களின் ஒன்றான 12 போன்ற எண்களை வாழ்க்கைச் சுழற்சியாகக் கொண்ட சில்வண்டுகள் என்ன ஆகும்?
உதாரணமாக ஒரு கீரி வகை மூன்று ஆண்டுகளில் அதிகத் தொகையை எட்டும்; ஒரு குள்ள நரி நாலு ஆண்டுகளில் எட்டும்; ஒரு பறவை இனம் ஆறு வருடங்களில் எட்டும் என்று வைத்துக்கொள்வோம். இவை எல்லாமே சில்வண்டுகளைச் சாப்பிடும்.
2016ல் அதிகத் தொகையில் இருக்கும் கீரி வகை அடுத்து 2019,2022,2025, 2028,2031 வருடங்கள்ல உச்சமடையும். அதே நரி வகை 2016, 2020, 2024, 2028, 2032 என உச்சமடையும், பறவை இனத்துக்கு 2022, 2028, 2034 எனப் போகும்.

இந்த வருஷத்துக்கு பின் 2028ல் ஒரு மாமாங்கத்துக்குப் பின் எட்டிப்பார்க்கும் சிள்வண்டுகள் ஒரே நேரத்தில் உச்சத் தொகை கொண்ட மூன்று உயிரிகளாலும் தாக்குதலுக்கு உள்ளாகும்.
ஆனால் 17 வருடங்களுக்கு ஒருமுறை வரும் சில்வண்டுகள் ஒரு கீரியின் வாழ்க்கைச் சுழற்சியுடன் பொருந்த 17 × 3 = 51 வருடங்களும், நரியுடன் பொருந்த 17× 4 = 68 வருடங்களும், பறவையினத்துடன் பொருந்த 17 X 6 = 102 வருடங்களும் ஆகும். இதுவும் கணிதம்தான் மீச்சிறு பொது மடங்கு LEAST COMMON MULTIPLE).
மேலும் தனித்தனியாகத் தாக்கப்படுவதால் இடைப்பட்ட காலத்தில் இனத்தொகையை ஈடு செய்ய நேரம் இருக்கும். தொகையும் சமாளிக்கக்கூடிய அளவு வளர்ந்துவிடும். இந்த வருடக்கணக்கை மண்ணுக்கு அடியில் இருந்து நாட்காட்டி இல்லாமல் கணக்கிடும் திறமையை இயற்கை அவற்றுக்குக் கொடுத்திருக்கிறது.
" நீங்கள் பார்க்கவில்லையா? இவைகளில் ஒவ்வொன்றும் (அவைகளுக்கு அவன்) குறிப்பிட்ட திட்டப்படியே நடக்கின்றன". (குர்ஆன் : 31:29)
"திண்ணமாக அல்லாஹ் ஒவ்வொரு பொருளுக்கும் ஓர் அளவை உண்டாக்கி வைத்திருக்கின்றான்".(குர்ஆன் : 65:3)
சூரியனின் முகத்தில் பகா எண் 11 அடிப்படையில் கரும்புள்ளிகள். ( பதிவு 5 )
எண்களில் பகா எண்கள் (Prime numbers - ப்ரைம் நம்பர்ஸ்) என்பது ஒரு வகை.இவை, இரு வகுத்திகளை (Divisors - டிவைசர்ஸ்) மட்டுமே கொண்டவை. அதாவது, இந்த எண்கள், 1 என்ற எண்ணாலும், தன்னாலும் மட்டுமே வகுபடும்.

உதாரணமாக 2,3,5,7,11,13 போன்ற எண்கள். இவை எண் ஒன்றாலும், தன்னாலும் மட்டுமே வகுபடும். பிற எண்களால் மீதம் இல்லாமல் வகுபடாது.
சூரியனின் முகத்தில் இப்போது எள்ளும் கொள்ளும் வெடிக்கிறது. அவ்வப்போது அது தனது சீற்றத்தைக் காட்டுகிறது. சூரியனுக்கு இது கோபாவேச சீசன். காரணம் சூரியனில் தோன்றியுள்ள கரும்புள்ளிகள்.
விஞ்ஞானிகள் பயன்படுத்தும் விசேஷக் கருவிகள் மூலம் பார்த்தால் சூரியனில் நிறையக் கரும்புள்ளிகள் (Sun Spots) தெரிகின்றன (சூரியனை வெறும் கண்ணால் பார்க்க முயலக்கூடாது. கண் பார்வை பாதிக்கப்படும் ஆபத்து உள்ளது).
2011 அக்டோபர் 4 ஆம் தேதி சூரியனில் 126 கரும்புள்ளிகள் காணப்பட்டன. இந்த மாதம் 21 ஆம் தேதி கரும்புள்ளிகளின் எண்ணிக்கை 207 ஆக அதிகரித்தது. கரும்புள்ளிகள் அதிகரிக்கும் போது தான் சூரியனின் குணம் மாறுகிறது.
கரும்புள்ளி அதிகமாக இருக்கும் சமயங்களில் சூரியன் சீறுகிறது. இது மட்டுமின்றி, சூரியனில் இருந்து அப்போது சிஎம்இ (CME- Coronal Mass Ejection) எனப்படும் ஆற்றல் மொத்தைகள் தூக்கி எறியப்படுகின்றன. சில சமயங்களில் இவை பூமியைத் தாக்குகின்றன.

கரும்புள்ளி என்றால் அது கருப்பான புள்ளி அல்ல. சூரியனின் மேற்பரப்பில் மற்ற இடங்களைக் காட்டிலும் ஓரிடத்தில் வெப்பம் குறைவாக இருந்தால் அந்த இடம் நமக்குக் கரும் புள்ளியாகத் தெரிகிறது.
கரும்புள்ளியைச் சுற்றி உள்ள இடத்தில் வெப்பம் 6000 டிகிரி செண்டிகிரேட் என்றால் கரும்புள்ளி உள்ள இடத்தில் வெப்பம் சுமார் 4200 டிகிரி செண்டிகிரேட் அளவுக்கு இருக்கலாம்.
சூரிய ஒளித் தட்டின் ஒரு பகுதியில் கரும்புள்ளிகள் பூமியிலிருந்து பார்த்தால் சிறியதாகத் தெரிகிறதே தவிர, மற்றபடி ஒரு கரும் புள்ளிக்குள் பூமியைப் போட்டு நிரப்ப முடியும். சூரியனில் தென்படும் கரும் புள்ளிகள் நிரந்தரமானவை அல்ல. சில நாட்களில் மறைந்து விடலாம்.
சூரியனில் கரும்புள்ளிகளே இல்லாத கட்டம் ஏற்படுவது உண்டு. கரும் புள்ளிகளின் எண்ணிக்கை உச்சத்தை எட்டுகிற கட்டமும் உண்டு. இதில் ஒரு வகையான கால ஒழுங்கு உள்ளது.
குறிப்பிட்ட ஆண்டில் கரும்புள்ளிகள் எண்ணிக்கை உச்சத்தை எட்டும். பிறகு படிப்படியாகக் குறைய ஆரம்பிக்கும். அதாவது, சுமார் ஐந்தரை ஆண்டுகளுக்குப் பிறகு கரும்புள்ளிகள் மிகக் குறைந்தபட்ச அளவில் இருக்கும், அல்லது கரும்புள்ளிகளே இருக்காது.

அதற்கு அடுத்த ஐந்தரை ஆண்டுகளில் படிப்படியாகக் கரும்புள்ளிகளின் எண்ணிக்கை அதிகரிக்கும். பிறகு அவற்றின் எண்ணிக்கை உச்சத்தை எட்டும்.
ஒரு தடவை உச்சத்தை எட்டிய 11 ஆண்டுகளுக்குப் பிறகு அடுத்த உச்சம் தோன்றுகிறது.
கடந்த 2000-ல் கரும்புள்ளிகளின் எண்ணிக்கை உச்சத்தை எட்டியது. இந்தக் கணக்குப்படி பார்த்தால், 11 ஆண்டுகள் கழித்துதான் அடுத்து உச்சத்தை எட்டியிருக்க வேண்டும். ஆனால், 2002-ல், அதாவது அடுத்த 2 ஆண்டுகளிலேயே மறுபடி இரண்டாவது உச்சம் ஏற்பட்டது. இப்படி குறுகிய கால இடைவெளியில் இரு உச்சங்கள் ஏற்படுவது அபூர்வமே.

கடந்த 2008 ஆம் ஆண்டில் சூரியனில் கரும்புள்ளிகளே காணப்படவில்லை. பின்னர் இது படிப்படியாக அதிகரித்து ஆரம்பித்தது. சுமார் ஐந்தரை ஆண்டுக் காலம் இவ்விதம் அதிகரித்துக் கொண்டே போகும்.பின்னர் படிப்படியாகக் குறைய ஆரம்பிக்கும்.
அடுத்த ஐந்தரை ஆண்டுகளுக்குப் பிறகு சூரியனில் அனேகமாகக் கரும்புள்ளிகளே இராது. இப்படியாக ஒரு சுற்று முடிவடைவதற்கு சராசரியாக 11 ஆண்டுகள் ஆகின்றன. இதைக் கரும்புள்ளிக் காலவட்டம் (SunSpot Cycle) என்று குறிப்பிடுகிறார்கள்.
அதன் பிறகு, 2013-ல் கரும்புள்ளிகளின் எண்ணிக்கை உச்சத்தை எட்டியது.
கரும்புள்ளிகளின் எண்ணிக்கை தினம் தினம் மாறலாம். விஞ்ஞானிகள் மாத சராசரி எவ்வளவு என்பதை முக்கியமாகக் கவனிக்கின்றனர். 1958 மார்ச் மாதத்தில் கரும்புள்ளிகளின் எண்ணிக்கை 285 ஆக இருந்தது. 2008 டிசம்பரில் இது வெறும் 2 மட்டுமே.

கரும்புள்ளிகள் அதிகரித்து வரும் காலத்தில் கூட கரும்புள்ளிகளின் எண்ணிக்கை ஏறுவதும் இறங்குவதுமாக இருக்கும். கரும் புள்ளிகள் தனித்தனியே இருக்கின்ற அதே நேரத்தில் ஒரே இடத்தில் பல கரும்புள்ளிகள் அடை அடையாக இருக்கும். இவ்விதம் பல இடங்களில் இருக்கும்.
கரும்புள்ளிகளின் எண்ணிக்கையைக் கணக்கிடுவதில் உலகில் இரு அமைப்புக்ள் முக்கிய பங்கு வகிக்கின்றன. இவை தனி பார்முலா அடிப்படையில் கரும்புள்ளிகளைக் கணக்கிடுகின்றன. மேலே கரும்புள்ளிகள் பற்றி அளிக்கப்பட்ட தகவல் அமெரிக்க NOAA அமைப்பின் ஒரு பிரிவு தெரிவித்ததாகும்.
எனினும், தகுந்த கருவிகளைக் கொண்டு சூரியனை தினமும் கவனித்து வருவதற்கென்றே தனி நிபுணர்கள் இருக்கிறார்கள். சூரியனைக் கவனித்து வருவதற்கென்றே விசேஷமான செயற்கைக் கோள்களும் உள்ளன. அப்படி கவனிக்க வேண்டிய காரணம் உள்ளது.

சூரியனின் முகத்தில் அவ்வப் போது கரும்புள்ளிகள் தோன்றுகின்றன. பின்னர் அவை மறைகின்றன. சூரியனில் கரும்புள்ளிகள் தோன்றுவது சூரியனின் காந்த மண்டலத்துடன் தொடர்புடையது.
சூரியனின் கரும்புள்ளிகளின் விளைவாக பூமியின் காற்று மண்டலம் பாதிக்கப்பட்டு அது விரிவடைகிறது. காற்று மண்டலம் பூரி போல உப்புகிறது. அதுவரை காற்று மண்டலத்துக்கு வெளியே அமைந்திருந்த செயற்கைக் கோள்கள் காற்று மண்டலத்துக்குள் வந்துவிடும் நிலை ஏற்படுகிறது. இதனால் செயற்கைக் கோள்களின் வேகம் பாதிக்கப்பட்டு, நீண்ட கால அளவில் அவற்றின் ஆயுள் குறைகிறது.
ரேடியோ ஒலிபரப்புகளும் பாதிக்கப்படுகின்றன. தவிர, பூமியில் மின்கட்டமைப்பும் பாதிக்கப்படுகிறது. கனடா வில் ஒருமுறை, மின்விநியோகம் கடுமையாக பாதிக்கப்பட்டு, பெரும் பகுதி இருளில் மூழ்கியது.
பூமியில் நிலத்துக்கு அடியில் புதைக்கப்பட்டுள்ள எரிவாயுக் குழாய்கள், கச்சா எண்ணெய்க் குழாய்களும் பாதிக்கப்படுவது உண்டு.
ஆனால், சூரியனில் ஏற்படும் சீற்றமோ, சூரியனில் இருந்து வீசி எறியப்படும் ஆற்றல் மொத்தைகளோ மக்களை நேரடியாக பாதிப்பதில்லை.
சூரியனில் கரும்புள்ளிகள் நிறைய இருக்கும்போதுதான் இத்தனை பிரச்சினைகளும் ஏற்படுகின்றன.

கரும்புள்ளிகள் அதிகரித்துக் காணப்படும் கால கட்டத்தில் சூரியனில் ஏற்படும் கிளர்வுகள் பூமியை- மனிதனின் பல செயல்பாடுகளைப் பாதிக்கின்றன்.
ஆகவே தான் நிபுணர்கள் சூரியன் மீது ஒரு கண் வைத்திருக்கிறார்கள்.விசேஷ செயற்கைக்கோள்களும் சூரியனைத் தொடர்ந்து கவனித்து தகவல்களை அளிக்கின்றன.
هُوَ الَّذِىْ جَعَلَ الشَّمْسَ ضِيَآءً وَّالْقَمَرَ نُوْرًا وَّقَدَّرَهٗ مَنَازِلَ لِتَعْلَمُوْا عَدَدَ السِّنِيْنَ وَالْحِسَابَ مَا خَلَقَ اللّٰهُ ذٰ لِكَ اِلَّا بِالْحَـقِّ يُفَصِّلُ الْاٰيٰتِ لِقَوْمٍ يَّعْلَمُوْنَ
அவன்தான் சூரியனைச் (சுடர்விடும்) பிரகாசமாகவும், சந்திரனை ஒளிவுள்ளதாகவும் ஆக்கினான். ஆண்டுகளின் எண்ணிக்கையையும், காலக்கணக்கையும் நீங்கள் அறிந்து கொள்ளும் பொருட்டு(ச் சந்திரனாகிய) அதற்கு மாறி மாறி வரும் பல படித்தரங்களை உண்டாக்கினான்; அல்லாஹ் உண்மை(யாக தக்க காரணம்) கொண்டேயல்லாது இவற்றைப் படைக்கவில்லை - அவன் (இவ்வாறு) அறிவுள்ள மக்களுக்குத் தன் அத்தாட்சிகளை விவரிக்கின்றான். (குர்ஆன் : 10:5)

## ஒரு அழகிய கருத்தை யார் கூறினாலும் அதை ஏற்க வேண்டும். ( பகுதி 1 )

ஷரீத் (ரளி) அவர்கள் கூறுகிறார்கள்; "ஒரு நாள் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குப் பின்னால் (வாகனத்தில்) அமர்ந்து பயணம் செய்தேன். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் (என்னிடம் ஷரீதே!) உங்களிடம் உமய்யத்துப்னு அபிஸ்ஸல்த் என்பவரின் கவிதையில் ஏதேனும் இருக்கிறதா? என்று கேட்டார்கள்.
அதற்கு நான்; ஆம்! என்றேன். அக்கவிதையை பாடுங்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
உடனே நான் நபி (ஸல்) அவர்களுக்கு ஒரு பாடலைப் பாடினேன். பின்பு மறுபடியும் இன்னும் பாடுங்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். பின்பு மீண்டும் நான் ஒரு பாடலைப் பாடினேன். இறுதியாக நான் 100 பாடல்களை பாடும் வரை இன்னும் பாடுங்கள், இன்னும் பாடுங்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறிக்கொண்டே இருந்தார்கள்.
பின்பு நபி (ஸல்) அவர்கள்; உமய்யத்துப்னு அபிஸ் ஸல்த் அவரின் கவிதையில் அவர் முஸ்லிமாகுவதற்கு நெருக்கமான விஷயங்களைக் கூறியுள்ளார் எனக் கூறினார்கள்.அறிவிப்பாளர் : ஷரீத் (ரளி), நூல் : முஸ்லிம் 4185
உமய்யத்துப்னு அபிஸ் ஸல்த் என்பவர் கிறிஸ்தவர் என்று இமாம் இப்னு ஹஜர் அஸ்கலானீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

உமய்யத்துப்னு அபிஸ் ஸல்த் என்பவர் சத்திய மார்க்கத்தைத் தேடி அலைந்தவர்களில் ஒருவராகும். மேலும் அவர் பல வேதங்களை ஆய்வு செய்துள்ளார். இவர் நஸ்ரானீ மதத்தைச் சார்ந்தவர் என்று கூறப்படுகிறது.
இவர் தனது கவிதைகளில் ஏகத்துவத்தைப்பற்றியும், கியாமத் நாளில் இறந்தவர்கள் உயிருடன் எழுப்பப்படுவதையும் பற்றியே அதிகமாக பாடியுள்ளார். இவர் யஹூதியாகும் என்று கலாபாதீ என்ற அறிஞர் கருதுகிறார். நூல் : ஃபத்ஹுல் பாரி லி இப்னி ஹஜர், பாகம் 11, பக்கம் 158
உமய்யத்துப்னு அபிஸ் ஸல்த் காஃபிராக இருந்த காரணத்தினால் தான் மேற்படி ஹதீஸில் அவரைப்பற்றி 'உமய்யத்துப்னு அபிஸ் ஸல்த் அவரின் கவிதையில் அவர் முஸ்லிமாகுவதற்கு நெருக்கமான விஷயங்களைக் கூறியுள்ளார்' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
மேலும் பின்வரும் ஹதீஸ்களும் இதற்கு அமைந்துள்ளன.
(காஃபிரான) கவிஞர்கள் சொன்ன சொல்லில் மிக உண்மை யானது; 'அல்லாஹ்வைத் தவிர மற்ற அனைத்துப் பொருள்களும் அழியக்கூடியதே! என்ற லபீத் என்பவரின் சொல்லாகும். மேலும் 'உமய்யத்துப்னு அபிஸ் ஸல்த் (அவரின் கவிதையில்) அவர் முஸ்லிமாகுவதற்கு நெருக்கமான விஷயங்களைக் கூறியுள்ளார்' நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர் : அபூ ஹுரைரா (ரளி), நூல் : புகாரி 3841, 6147
ஒரு தடவை உமய்யத்துப்னு அபிஸ் ஸல்துடைய சகோதரி அல்ஃபாரிஆ பின்த் அபிஸ் ஸல்த் என்பவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, உமய்யாவுடைய கவிகளை நபி (ஸல்) அவர்களுக்கு பாடிக் காண்பித்தார்கள்.

அப்பொழுது நபி (ஸல்) அவர்கள்; உமய்யாவின் கவிதை ஈமான் கொண்டுவிட்டது. எனினும் அவரின் உள்ளம் இறைவனை நிராகரித்துவிட்டது என்று கூறினார்கள் என இப்னு அப்பாஸ் (ரளி) அவர்கள் அறிவித்ததாக ஃபாக்கிஹீ மற்றும் இப்னு மன்தா ஆகிய அறிஞர்கள் அறிவிப்பதாக இப்னு ஹஜர் அஸ்கலானீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். நூல் : ஃபத்ஹுல் பாரி, பாகம் II, பக்கம் 158

மேற்சென்ற ஹதீஸ்கள் உணர்த்துவது என்ன?

* ஒரு அழகிய கருத்தை யார் கூறினாலும் அதை ஏற்க வேண்டும்.

• அக்கருத்தைக் கூறியவர் காஃபிராக இருந்தாலும் சரியே!

. அழகியக் கருத்தைக் காஃபிர் கூறினாலே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றால் ஒரு அழகியக் கருத்தைக் கூறியவர் யார் என்றே தெரியாவிட்டாலும் அதையும் ஏற்பதே மிகப்பொருத்தமாகும்.

* ஒரு அழகிய கருத்தை சொன்னவர் யார் என்று பார்க்கத்தேவையில்லை. மாறாக என்ன சொல்லப்பட்டது என்பதைப் பார்ப்பதே சிறந்தது மட்டுமல்ல, அதுதான் அறிவுடையாகும்

எனவே உமய்யத்துப்னு அபிஸ் ஸல்த் என்ற ஒரு காஃபிர் பாடிய கவிதைகளையே நபி (ஸல்) அவர்கள் விரும்பி கேட்டுள்ளார்கள் என்றால் முஹம்மது இப்னு முஹம்மத் இப்னி முஹம்மத் என்ற ஒரு முஸ்லிம் நபியைப் புகழ்ந்து பாடியதை நாம் பாடுவதும், அதைக் கேட்பதும் மிகவும் சரியான காரியம் தான். இதற்கு முரணாக அதை நாம் பாடக்கூடாது, அதை நாம் கேட்கக்கூடாது என்று கூறுவது நபி வழிக்கு முரணாகும்.

- சுப்ஹான மவ்லித் (தவறான வாதங்களும் , தக்க பதில்களும்)

மவ்லவி அல்ஹாஃபிழ் A. முஹம்மது முஸ்தபா மஸ்லஹி M.A

## ஒரு அழகிய கருத்தை யார் கூறினாலும் அதை ஏற்க வேண்டும். ( பகுதி 2)

சுப்ஹான மவ்லிதை இயற்றியவர் யாரென்றே தெரியாதா?

விமர்சனம் 1:

எழுதியவர் யார்? என்றே தெரியவில்லை. எனவே சுப்ஹான மவ்லிதை ஓதக்கூடாது என்ற ஒரு விதண்டாவாதத்தை வஹ்ஹாபிகள் கூறுகின்றனர். இது சம்பந்தமாக பி.ஜே. கூறுவதை கீழே பாருங்கள்.

மவ்லிதின் முகப்பு அட்டையில் 'இது கஸ்ஸாலி எழுதியது' கதீப் அவர்கள் எழுதியதாகவும் கூறப்பட்டுள்ளது என்று எழுதியுள்ளனர். இவர்தான் எழுதினார் என்று கூட குறிப்பிட எந்தக் குறிப்பும் இல்லை. கஸ்ஸாலியோ, கதீபோ எழுதியிருந்தால் உலகம் முழுவதுமுள்ள அவர்களின் அபிமானிகள் இதை அறிந்திருக்க வேண்டும்.

மேற்கண்ட இருவரது நூல்களின் பட்டியலில் சுப்ஹான மவ்லிது என்பது இடம் பெறவே இல்லை.

இந்த மவ்லிதுகள் சுமார் 300 ஆண்டுகளாகத்தான் தமிழகம் மற்றும் கேரளாவில் நடைமுறையில் உள்ளது.

சுமார் 300 ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட எந்த நூலிலும் இது பற்றி எந்தக் குறிப்பும் இல்லை என பி.ஜே. கூறியுள்ளார்.

நூல் : சுப்ஹான மவ்லிது ஓர் ஆய்வு, ஆசிரியர் : பி.ஜே. பக்கம் 8

'ளஹ்ஹாக் இப்னு கைஸ்' உடைய சகோதரி ஃபாத்திமா பின்த் கைஸ் (ரளி) அவர்கள் கூறுகிறார்கள்;

நபி (ஸல்) அவர்களுக்குரிய அழைப்பாளரின் அழைப்பை நான் கேட்டேன். 'மக்களே! தொழுகைக்கு வாருங்கள், அதுவுமோ (மக்களை) ஒன்று கூட்டக்கூடியதாக இருக்கிறது என்று அவர் அழைத்துக் கொண்டிருந்தார். உடனே நான் பள்ளிக்குச் சென்று நபி (ஸல்) அவர்களுடன் தொழுதேன்... நபி (ஸல்) அவர்கள் தனது தொழுகையை முடித்த பொழுது சிரித்த நிலையில் மிம்பர் படியில் அமர்ந்து, ஒவ்வொரு மனிதரும் அவரவர் தொழுத இடத்தில் அமருங்கள் என்று கூறினார்கள்.

பின்பு 'உங்களை எதற்காக ஒன்று கூட்டினேன்' என்பதை நீங்கள் அறிவீர்களா? என்று கேட்டார்கள்.

அல்லாஹ்வும், அவனின் தூதரும் நன்கு அறிவார்கள் என்று அனைவரும் பதிலளித்தனர்.

நிச்சயமாக நான் அல்லாஹ்வின் மீது சத்தியமாக ஆசை கொள்ளப்படுகிற விசயத்திற்காகவோ அல்லது (எதிரிகளின்) பயத்திற்காகவோ உங்களை நான் ஒன்று கூட்டவில்லை. மாறாக (தம்முத்தாரி என்பவரைப் பற்றி

உங்களுக்கு சொல்வதற்காகவே) உங்களை ஒன்று கூட்டினேன். ஏனெனில் தமீமுத்தாரி என்பவர் நஸ்ரானி மதத்தைச் சார்ந்த மனிதராகும். அவர் என்னிடம் வந்து, பைஅத்துச் செய்து, இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டார். மஸீஹுத் தஜ்ஜாலைப்பற்றி நான் உங்களுக்குச் சொன்ன செய்திக்கு ஒத்துப் போகின்ற ஒரு செய்தியை அவர் எனக்குச் சொன்னார்.

லக்ம், ஜுதாம் என்கிற கிளையைச் சார்ந்த 30 ஆண்களுடன் நீரில் செல்லும் கப்பலிலே அவர் (கடல்) பயணம் செய்தார். கடலிலே ஒரு மாதமாக கடல் அலை அவர்களுடன் விளையாடி விட்டது. பின்பு சூரியன் மறையும் நேரத்தில் கடலிலுள்ள ஒரு தீவின் பக்கம் அவர்கள் ஒதுங்க நாடினார்கள்.

எனவே ஒரு சிறிய படகிலே அவர்கள் அமர்ந்து அத்தீவுக்குள் சென்றார்கள். அப்பொழுது கடுமையான அதிக ரோமங்களைக் கொண்ட ஒரு விலங்கு அவர்களை சந்தித்தது. அதிகமான முடியின் காரணத்தினால் அவ்விலங்கின் முன் புறம் எது? பின் புறம் எது? என்பதைக்கூட அவர்கள் விளங்கிக் கொள்ளவில்லை.எனவே அவர்கள் அவ்விலங்கிடம் உனக்கு நாசம் உண்டாவதாக! நீ யார் என்று கேட்டார்கள்.

அதற்கு அது 'நான் ஜஸ்ஸாஸா' என்று கூறியது. ஜஸ்ஸாஸா என்றால் என்ன என்று அதனிடம் கேட்டார்கள். அதற்கு அது; "ஓ கூட்டத்தார்களே! இந்த கோட்டைக்குள் இருக்கக்கூடிய இந்த மனிதரிடம் செல்லுங்கள். நிச்சயமாக அவர் உங்களின் செய்தியை கடுமையான ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார் என கூறியது.

அவ்விலங்கு எங்களிடத்தில் ஒரு மனிதரைப்பற்றி கூறிய பொழுது அது ஷைத்தானாக (ஜின்னாக) இருக்குமோ என்று எண்ணி நாங்கள் பயந்தோம். எனவே விரைந்து அந்த கோட்டைக்குள் சென்றோம்.

அப்பொழுது அந்த கோட்டையில் மிகப்பெரும் மனிதர் இருந்தார். அவனை போன்ற (மிகப்பெரிய) ஒரு படைப்பை நாங்கள் கண்டதேயில்லை. மேலும் அவன் மிகக்கடுமையாக கட்டப்பட்டு இருந்தான். அவனுடைய இரு கரங்களும் அவனின்

கழுத்து வரைக்கும், அவனின் இரு முட்டுக் கால்களுக்கு மத்தியிலுள்ளவை அவனின் இரு கரண்டை கால்கள் வரைக்கும் இரும்புச் சங்கிலியால் ஒன்று சேர்த்து கட்டப்பட்டு இருந்தன.

உனக்கு நாசம் உண்டாவதாக! (உன் செய்தி) என்ன? நீ (யார்?) என்று நாங்கள் அவனிடம் கேட்டோம். அதற்கவன்; என் செய்தியைப் பற்றி நிச்சயம் நீங்கள் அறிவீர்கள். அதற்கு முன் உங்களுடைய செய்தியைப் பற்றி எனக்குக் கூறுங்கள் என்றான்.

அதற்கு நாங்கள்; 'நாங்கள் அரபு நாட்டைச் சார்ந்த மக்களாகும். நாங்கள் கப்பலிலே பயணம் செய்தோம். கடும் புயலால் கடலில் வழமையான எல்லையை கடந்துவிட்டோம்.

அப்பொழுது ஒரு மாத காலமாக கடல் அலை எங்களுடன் விளையாடிவிட்டது.

பின்பு உன்னுடைய இந்த தீவுக்கு ஒதுங்குவதற்கு நாடினோம். எனவே சிறிய படகில் அமர்ந்து இந்த தீவுக்குள் நுழைந்துவிட்டோம். அப்பொழுது மிகக் கடுமையான அதிக ரோமங்களுடைய ஒரு விலங்கு எங்களை சந்தித்தது. அதற்கு அதிக முடி இருந்த காரணத்தினால் அதனுடைய முன் புறம் எது? அதனுடைய பின் புறம் எது? என்று எங்களால் அறிய முடியவில்லை. அவ்விலங்கிடம்; உனக்கு நாசம் உண்டாகட்டும்! நீ யார்? என்று கேட்டோம். அதற்கு அது; நான் 'ஜஸ்ஸாஸா' என்று கூறியது. ஜஸ்ஸாஸா என்றால் என்ன? என்று நாங்கள் கேட்டோம். அதற்கு அது; இக்கோட்டையிலுள்ள மனிதரிடம் செல்லுங்கள். ஏனெனில் அவர் உங்களுடைய செய்தியை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார் என்று கூறியது.

அது ஷைத்தானாக (ஜின்னாக) இருக்குமோ என்று பயந்துபோய் உன்னிடத்தில் விரைந்து வந்தோம். ஆனால் இப்பொழுது (உன்னைப்பார்த்தால்) நீயும் ஷைத்தானாக (ஜின்னாக) இருப்பாயோ என்று நாங்கள் பயப்படுகிறோம் என்று கூறினோம்'.

பின்பு அவன்; (ஷாம் நாட்டிலுள்ள) பைஸான் என்ற ஊருடைய பேரீத்தமரத் தோட்டங்களைப்பற்றி எனக்குக் கூறுங்கள் என்றான். அதற்கு நாங்கள்; அத்தோட்டத்தின் எந்த விஷயத்தைப்பற்றி நீ செய்தி கேட்கின்றாய்? என்று கேட்டோம். அதற்கவன்; அவ்வூரின் பேரீத்த மரங்கள் நன்கு பழம் கொடுக்கின்றதா? என்பதைப்பற்றி

கேட்கின்றேன் என்றான். அதற்கு நாங்கள்; ஆம்! என்று பதிலளித்தோம். பின்பு அவன்; நிச்சயமாக அது கூடிய விரைவில் பழம் தராது என்று கூறினான்.
பின்பு அவன்; (உர்துன் நாட்டிலுள்ள) தபரிய்யா என்ற ஊருடைய ஏரியைப்பற்றி எனக்கு கூறுங்கள் என்றான். ஏரியுடைய எந்த நிலையைப்பற்றி நீ செய்தி கேட்கின்றாய்? என்று நாங்கள் அவனிடம் கேட்டோம். அதற்கவன்; அந்த ஏரியில் தண்ணீர் இருக்கிறதா? என்று கேட்டான். அது அதிக தண்ணீரைவுடையதாக இருக்கிறது என்று நாங்கள் கூறினோம். அதற்கவன் நிச்சயமாக அதனுடைய தண்ணீர் வெகு விரைவில் அழிந்துவிடக்கூடும்! என்றான்.
பின்பு அவன்; (ஷாம் நாட்டிலுள்ள) சுகர் என்ற ஊரின் நீரூற்றைப்பற்றி எனக்கு கூறுங்கள் என்றான். அந்த நீரூற்றினுடைய எந்த நிலையைப்பற்றி நீ செய்தி கேட்கின்றாய்? என்று நாங்கள் அவனிடம் கேட்டோம். அதற்கவன்; அந்த நீரூற்றில் தண்ணீர் இருக்கிறதா? அவ்வூர் மக்கள் அத்தண்ணீரைக் கொண்டு விவசாயம் செய்கிறார்களா? என்று கேட்டான். அதற்கு நாங்கள்; ஆம்! அது அதிகமான தண்ணீரைவுடையதாக இருக்கிறது. அவ்வூர் மக்கள் அதனுடைய தண்ணீர் மூலமாகத்தான் விவசாயம் செய்கிறார்கள் என்று கூறினோம்.
பின்பு அவன்; எழுதப்படிக்கக் கற்றுக் கொள்ளாத அரபு மக்களுக்கு அனுப்பப்பட்ட நபியைப்பற்றி எனக்கு கூறுங்கள். (நபித்துவத்திற்குப் பின் இதுவரை) அவர் என்ன செய்துள்ளார்? என்று கேட்டான். அதற்கு நாங்கள்; அவர் மக்காவிலிருந்து வெளியேறி மதீனாவுக்கு சென்றுவிட்டார் என்று கூறினோம்.
அதற்கவன்; அரபு மக்கள் அவருடன் யுத்தம் புரிந்தார்களா? என்று கேட்டான். ஆம்! என்று நாங்கள் கூறினோம். அதற்கவன்; அவர் அம்மக்களுடன் எப்படி நடந்து கொண்டார்? என்று கேட்டான். அதற்கு நாங்கள்; அவரை நெருங்கிய அரபிகள் அனைவரையும் வெற்றி கண்டார். அரபு மக்கள் அவருக்கு கட்டுப்பட ஆரம்பித்துவிட்டனர் என்று நாங்கள் கூறினோம். அதற்கவன்; உண்மையிலேயே அது நடந்து விட்டதா? என்று எங்களிடம் கேட்டான். ஆம்! என்று கூறினோம்.
அதற்கவன்; அம்மக்கள் அவருக்கு கட்டுப்பட்ட காரணத்தினால் நிச்சயமாக அதுவே அவர்களுக்கு மிகச் சிறந்ததாகும். மேலும் நிச்சயமாக நான் என்னைப்பற்றி உங்களுக்கு அறிவிக்கப்போகிறேன். நிச்சயமாக நான்தான் மஸீஹு (த்தஜ்ஜால்) ஆக இருக்கின்றேன்.
வெகு விரைவில் இவ்விடத்தை விட்டு வெளியேறுவதற்கு எனக்கு அனுமதி வழங்கப்படும். அப்பொழுது (இவ்விடத்தை விட்டும்) நான் வெளியேறி, பூமியில் உள்ள எல்லா இடங்களுக்கும் (குழப்பம் விளைவிப்பதற்காக) செல்வேன். மக்கா, தய்பாவைத் தவிர்த்து எந்த ஒரு ஊரையும் அதில் 40 இரவுகள் தங்காமல் விடமாட்டேன். அவ்விரண்டு ஊர்களும் (அவற்றில் நுழைவதை) என் மீது தடுக்கப்பட்டுவிட்டது. அவ்விரண்டு ஊர்களில் ஒவ்வொரு ஊருக்குள்ளும் நுழைவதற்கு நான் நாடும் பொழுதெல்லாம் ஒரு மலக்கு என்னிடம் வருவார். அவரின் கரத்தில் உறையிலிருந்து உருவப்பட்ட வாள் இருக்கும். அதன் மூலம் அவ்வூரில் நுழைய விடாமல் என்னைத் தடுப்பார்.
நிச்சயமாக அவ்வூரை பாதுகாக்கின்ற மலக்குமார்கள் அவ்விரண்டு ஊர்களின் ஒவ்வொரு பாதையிலும் இருக்கின்றார்கள் என்று அவன் கூறினான்.
இச்செய்தியை நபி (ஸல்) அவர்கள் அறிவித்த பொழுது தனது கம்பைக் கொண்டு மிம்பர் படியின் மீது அடித்த நிலையில் தன் ஊர் மதீனாவை சுட்டிக்காட்டி இதுதான் அந்த தைபா, இதுதான் அந்த தைபா, இதுதான் அந்த தைபா' என் தோழர்களே ! இது போன்ற செய்தியை ஏற்கனவே தாள் உங்களுக்கு கூறினேனா? இல்லையா? என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அதற்கு ஸஹாபா பெருமக்கள் ஆம்! கூறினீர்கள் என்று கூறினார்கள். தஜ்ஜாலைப் பற்றியும், அவன் மக்கா, மதீனாவுக்குள் நுழைய முடியாது என்பதைப்பற்றியும் நான் ஏற்கனவே உங்களுக்கு கூறிய செய்திக்கு தமீமுத்தாரிவுடைய செய்தி ஒத்துப்போகிற காரணத்தினால் தமீமுடைய செய்தி எனக்கு சந்தோஷமளிக்கிறது. என் தோழர்களே! நிச்சயமாக தஜ்ஜால் ஷாம் நாட்டின் கடலில் அல்லது யமன் நாட்டின் கடலில் இருக்கிறான். (எனினும் கியாமத் நாளில் அங்கிருந்துதான் அவன் வெளியேறுவான் என்று) எண்ணிவிடாதீர்கள். மாறாக அவன் கிழக்குத் திசையிலிருந்துதான் வெளியேறுவான். மாறாக அவன் கிழக்குத் திசையிலிருந்துதான்

வெளியேறுவான். மாறாக அவன் கிழக்குத் திசையிலிருந்துதான் வெளியேறுவான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் தனது கரத்தின் மூலம் கிழக்குத் திசையை சுட்டிக் காட்டினார்கள்.
அறிவிப்பாளர் : ஃபாத்திமா பின்த் கைஸ் (ரளி),முஸ்லிம் 5235
இந்த ஹதீஸ் நமக்கு உணர்த்துவது என்ன?
தமீமுத்தாரி (ரளி) அவர்கள் அவர் காஃபிராக இருந்த நிலையில் கண்ட தஜ்ஜாலைப்பற்றியும், தஜ்ஜாலின் கூற்றைப் பற்றியும் நபி (ஸல்) அவர்களிடம் கூறி இஸ்லாத்தை தழுவினார்.
நபி (ஸல்) அவர்கள் அதை ஒரு காஃபிரின் கூற்றாக பார்த்து மறுக்கவில்லை. மாறாக அது தனது சொல்லுக்கு ஒத்துப்போகிறதா என்று தான் பார்த்தார்கள்.அவ்வாறு ஒத்துப்போன பொழுது அச்செய்தியை ஏற்று பிறருக்கும் சொன்னார்கள்.
_அச்செய்தி தன் சொல்லுக்கு ஒத்துப் போனதால் நபி (ஸல்) அவர்கள் சந்தோசமடைந்தார்கள்.
- எனவே ஒரு அழகிய செய்தியை யார் சொன்னார் என்று
பார்க்கக்கூடாது. அவர் என்ன சொன்னார் என்றுதான்
பார்க்க வேண்டும்.
- ஒரு நல்ல கருத்தை தன்னை விட வயதில் அல்லது அந்தஸ்ததில் சிறியவர் சொன்னாலும் அதை மறுக்காமல் ஏற்க வேண்டும். அவ்வாறு ஏற்பது பணிவின் அடையாளமாகும். அதை ஏற்காமல் மறுப்பது தற்பெருமையின் அடையாளமாகும்.
- ஒரு அழகிய சொல்லை நல்லவர் சொன்னாலும், தீயவர் சொன்னாலும், முஃமின் சொன்னாலும், காஃபிர் சொன்னாலும், முகவரியுள்ளவர் சொன்னாலும், முகவரியற்றவர் சொன்னாலும் அது நல்ல கருத்தாக இருந்தாலோ அல்லது குர்ஆன், ஹதீஸிற்கு ஒத்துப்போகக்கூடியதாக இருந்தாலோ அதை ஏற்க வேண்டும்.
எனவே ஒரு பலவீனமான ஹதீஸின் கருத்து குர்ஆனுக்கோ, ஆதாரப்பூர்வமான ஹதீஸிற்கோ முரண்படாமல் அவற்றிற்கு ஒத்துப்போனால் அதை ஏற்கலாம் என்பதற்கு மேற்படி ஹதீஸ் ஆதாரமாக இருக்கின்றது.
மேலும் அதற்கு 'உமய்யத்துப்னு அபிஸ் ஸல்த்' என்ற காஃபிருடைய கவிதை சம்பந்தப்பட்ட புகாரி 3841, 6147, முஸ்லிம் 4185 வுடைய ஹதீஸ்களும் ஆதாரமாகும்.
எனவே 'சுப்ஹான மவ்லிதை' யார் எழுதினார்கள் என்றே தெரியவில்லை எனவே சுப்ஹான மவ்லிதை பாடக்கூடாது என்ற பி.ஜே. யின் வாதம் செல்லாக்காசாகும்.
- சுப்ஹான மவ்லித் (தவறான வாதங்களும் , தக்க பதில்களும்)
மவ்லவி அல்ஹாஃபிழ் A. முஹம்மது முஸ்தபா மஸ்லஹி M.A பதிவிலிருந்து..

## ஒரு அழகிய கருத்தை யார் கூறினாலும் அதை ஏற்க வேண்டும்

## இஸ்லாத்தில் கவிதை தடை செய்யப்பட்டதா? பதிவு 3

விமர்சனம் : மவ்லிது கவிதையாகும். இஸ்லாத்திலே கவிதை கூடாது. எனவே மவ்லிதும் கூடாது என்ற குற்றச்சாட்டை பின்வருமாறு வஹ்ஹாபிகள் கூறி பரப்பி வருகின்றனர்.

கவிதையை இஸ்லாம் வெறுக்கிறது; கவிஞர்களை இஸ்லாம் வழிகேடர்கள் என்று சொல்கிறது; கவிதைக்கு இஸ்லாத்தில் இடமில்லை என்பன போன்ற குற்றச்சாட்டுகள் உண்டு. கவிஞர்களைப் பற்றி அல்லாஹ் சொல்வதைப் பார்ப்போம்.
இன்னும் கவிஞர்கள் (எத்தகையோரென்றால்) அவர்களை வழிகேடர்களே பின்பற்றுகிறார்கள்'.(குர்ஆன் 26:224) மேலும் பார்க்க 26:225, 226, 36:69) நூல் : அந்நஜாத், அக்டோபர் 1996, பக்கம்: 8

கவிதை நம்மவர்களால் மார்க்கத்தில் ஒரு முக்கிய அம்சமாக ஆக்கப்பட்டுள்ளது. எதை எடுத்தாலும் கவிதை மயமாக்க முயன்று வருகிறார்கள். இது மிகப்பெரும் வழிகேடு என்பதை குர்ஆன், ஹதீதுகள் மூலம் அறிய முடிகிறது.

'(தூதராகிய) அவருக்கு நாம் கவிதை (இயற்றக்) கற்றுக் கொடுக்கவில்லை. அது அவருக்குத் தகுமானதுமல்ல' (குர்ஆன் 36:69)

'கவிஞர்களை வீணர்களே (வழிகேடர்களே) பின்பற்றுவார்கள். நிச்சயமாக அவர்கள் பள்ளத்தாக்குகளில் அலைந்து திரிவதை நீர் பார்க்கவில்லையா? அவர்கள் செய்யாததைச் சொல்வார்கள்' (குர்ஆன் 26: 224-226)

அது குறைஷிக் காபிர்கள் நபி (ஸல்) அவர்களைக் கவிஞர் என்றும் குர்ஆனைக் கவிதை என்றும் குற்றம் சாட்டினார்கள். கற்பனை, உண்மையல்ல என்று சொல்வதே அவர்கள் நோக்கம். அல்லாஹ் அதை மறுத்துக் கவிஞரல்ல, அச்சமூட்டி எச்சரிக்கை. செய்பவர்; திருக்குர்ஆன் கவிதை அல்ல. நல்லுபதேசம். செய்யக்கூடியது என்று பல இடங்களில் வலியுறுத்திக் கூறுகிறான்.

கவிதை என்றால் அது கற்பனை, அதில் உண்மை இருக்க முடியாது. என்று குறைஷி காபிர்கள் விளங்கி இருந்ததை நம்மவர்கள் விளங்க முடியாமல் இருப்பது விந்தையாக இருக்கிறது. நூல் : அந்தஜாத், ஏப்ரல் 2005, பக்கம் 3, அந்நஜாத், ஏப்ரல் 2006, பக்கம் 6

நமது மறுப்பு:

அந்நஜாத்(?)தின் மாபெரும் மோசடி :

அந்நஜாத், அக்டோபர் 1996, பக்கம் 8-ல் கவிதையை இஸ்லாம் வெறுக்கிறது; கவிஞர்களை இஸ்லாம் வழிகேடர்கள் என்று சொல்கிறது; கவிதைக்கு இஸ்லாத்தில் இடமில்லை என்பன போன்ற குற்றச்சாட்டுகள் உண்டு.

...என்று வஹ்ஹாபிகள் கூறி அதற்கு ஆதாரமாக அல்குர்ஆன் 26:224 என்கிற வசனத்திற்கு மட்டும் மொழிபெயர்ப்புச் செய்து விட்டு பின்பு 225, 226 வது வசனத்தைப் பார்க்கவும் என்று கூறியுள்ளார்கள்.

227 வது வசனத்தை மக்களிடம் கூறாமல் இருட்டடிப்புச் செய்துவிட்டார்கள். காரணமென்னவெனில் 227வது வசனத்தில் நபி (ஸல்) அவர்களைப் புகழ்ந்து கவிபாடுபவர்களை அல்லாஹ் புகழ்ந்து கூறியுள்ளான்.

26:224க்கு மட்டும் மொழிபெயர்ப்புச் செய்து மோசடி

'இன்னும் கவிஞர்கள் (எத்தகையோரென்றால்) அவர்களை வழிகேடர்களே பின்பற்றுகிறார்கள்'. (அல்குர்ஆன் 26 : 224) மேலும் பார்க்க 26:225, 226, 36:69) நூல் : அந்நஜாத், அக்டோபர் 1996, பக்கம் 8

26:224-226 வரை மட்டும் மொழிபெயர்ப்புச் செய்து மோசடி

'கவிஞர்களை வீணர்களே (வழிகேடர்களே) பின்பற்றுவார்கள். நிச்சயமாக அவர்கள் பள்ளத்தாக்குகளில் அலைந்து திரிவதை நீர் பார்க்கவில்லையா? அவர்கள் செய்யாததைச் சொல்வார்கள் அல்குர்ஆன் 26: 224-226) நூல் : அந்நஜாத், ஏப்ரல் 2005, பக்கம் 3, அந்நஜாத், ஏப்ரல் 2006, பக்கம் 6

கவிஞர்களைப் பற்றிக் கூறும் முழுமையான வசனங்கள் :-

இன்னும் கவிஞர்களாகிறவர்கள் அவர்களை மடையர்கள் (தான்) பின்பற்றுவார்கள். (குர்ஆன் 26:224)

நிச்சயமாக அவர்கள் ஒவ்வொரு பள்ளத்தாக்கிலும் அலைந்து திரிவதை (நபியே) நீர் பார்க்கவில்லையா? (அல்குர்ஆன் 26:225)

நிச்சயமாக அவர்கள்; செய்யாததை செய்ததாகச் சொல்வார்கள். (அல்குர்ஆன் 26:226)

ஆனால் எவர்கள் ஈமான் கொண்டு, நற்செயல்கள் செய்து, அல்லாஹ்வை அதிகமாக தியானம் செய்து, தங்களுக்கு அநீதி யிழைக்கப்பட்ட பின்னர் அதற்காக பழி தீர்த்துக் கொண்டார்களோ அத்தகையவர்(களான கவிஞர்)களைத் தவிர. (அல்குர்ஆன் 26:227)

எனவே ஈமான் கொண்டு, நல்லமல் செய்து, அல்லாஹ்வை அதிகம் திக்ர் செய்து, பிறருக்கு அநீதி இழைக்காமல் வாழ்கின்ற முஃமினான கவிஞர்கள் நல்லவர்கள் என்றும், அவர்கள் மடையர்கள் அல்ல, மாறாக அறிஞர்கள் என்றும்

26:227 வசனம் உணர்த்துகிறது.

மட்டுமல்ல 26:227 வசனது வசனம் நபி (ஸல்) அவர்களைப் புகழ்ந்து கவிபாடிய கவிஞர்களான ஹஸ்ஸான் (ரளி), அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரளி), கஃப் இப்னு மாலிக் (ரளி) போன்ற நபித்தோழர்கள் விஷயமாக இறங்கியது என்று பின்வரும் ஹதீஸ்கள் தெளிவு படுத்துகின்றன.

கவிஞர்களை மடையர்கள் தான் பின்பற்றுவார்கள் என்ற வசனம் இறங்கிய பொழுது ஹஸ்ஸான் இப்னு ஸாபித் (ரளி) அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரளி) ஆகிய நபித்தோழர்கள் அழுத நிலையில் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள்
(அப்பொழுது) நபி (ஸல்) அவர்கள் அவ்விருவருக்கும் கவிஞர்களை மடையர்கள் தான் பின்பற்றுவார்கள் என்ற வசனத்தை 'ஆனால் எவர்கள் ஈமான் கொண்டு, நற்செயல்கள் செய்து, அல்லாஹ்வை அதிகமாக தியானம் செய்து, தங்களுக்கு அநீதியிழைக்கப்பட்ட பின்னர் அதற்காக பழி தீர்த்துக் கொண்டார்களோ அத்தகைய வர்(களான கவிஞர்)களைத் தவிர' என்பது வரை ஓதிக்காண்பித்து, நீங்கள் (நல்ல கவிஞர்கள்) என்று கூறினார்கள்.
இன்னொரு அறிவிப்பில் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரளி), கஃப் இப்னு மாலிக் (ரளி), ஹஸ்ஸான் இப்னு ஸாபித் (ரளி) ஆகிய நபித்தோழர்கள் அழுத வண்ணம் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள் என்று வருகிறது. நூல் : தஃப்ஸீர் இப்னு அபீ ஹாத்திம், ஹதீஸ் எண் 16830
இன்னும் கவிஞர்களாகிறவர்கள் (தான்) பின்பற்றுவார்கள்.
அவர்களை மடையர்கள் (அல்குர்ஆன் 26:224)
நிச்சயமாக அவர்கள் ஒவ்வொரு பள்ளத்தாக்கிலும் அலைந்து திரிவதை (நபியே) நீர் பார்க்கவில்லையா? (அல்குர்ஆன் 26:225)
நிச்சயமாக அவர்கள்; செய்யாததை செய்ததாகச் சொல்வார்கள் என்ற வசனங்கள் இறங்கிய பொழுது அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரளி) அவர்கள் (நபி (ஸல்) அவர்களிடம்) அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நிச்சயமாக நான் கவிஞர்களில் கட்டுப்பட்டவன் என்று திட்டமாக அல்லாஹ் அறிந்துள்ளானே ! (அப்படி யிருக்கையில் கவிஞர்களை மடையர்கள் தான் பின்பற்றுவார்கள் என்று கவிஞர்களை இகழ்கின்றானே! நானும் இகழுக்குரியவனா?) என்று கேட்டார்கள்.
அப்பொழுது 'ஆனால் எவர்கள் ஈமான் கொண்டு, நற்செயல்கள் செய்து, அல்லாஹ்வை அதிகமாக தியானம் செய்து, தங்களுக்கு அநீதியிழைக்கப்பட்ட பின்னர் அதற்காக பழி தீர்த்துக் கொண்டார்களோ அத்தகையவர்க)ளான கவிஞர்)களைத் தவிர' (அல்குர்ஆன் 26:227) என்ற வசனத்தை முழுமையாக அல்லாஹ் இறக்கினான். நூல் : தஃப்ஸீர் இப்னு அபீ ஹாத்திம், ஹதீஸ் எண் 16831
இன்னும் கவிஞர்களாகிறவர்கள் அவர்களை மடையர்கள்(தான்) பின்பற்றுவார்கள். (அல்குர்ஆன் 26:224)
நிச்சயமாக அவர்கள் ஒவ்வொரு பள்ளத்தாக்கிலும் அலைந்து திரிவதை (நபியே) நீர் பார்க்கவில்லையா? (அல்குர்ஆன் 26:225)

நிச்சயமாக அவர்கள்; செய்யாததை செய்ததாகச் சொல்வார்கள் என்று அல்லாஹ் கூறுகிறான். பின்பு 'ஆனால் எவர்கள் ஈமான் கொண்டு, நற்செயல்கள் செய்து, அல்லாஹ்வை அதிகமாக தியானம் செய்து, தங்களுக்கு அநீதியிழைக்கப்பட்ட பின்னர் அதற்காக பழி தீர்த்துக் கொண்டார்களோ அத்தகையவர்(களான கவிஞர் )களைத் தவிர' என்றுக் கூறி அக்கெட்ட கவிஞர்களிலிருந்து நல்ல கவிஞர்களை தவிர்க்கின்றான்.
அந்த நல்ல கவிஞர்கள் என்பதைக் கொண்டு ஹஸ்ஸான் (ரளி), அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரளி), கஃப் இப்னு மாலிக் (ரளி) ஆகிய (இது போன்ற) கவிஞர்களை நாடுகின்றான். (ஏனெனில்) அவர்கள் முஷ்ரிகீன்களை இகழ்ந்து, (நபி (ஸல்) அவர்களைப் புகழ்ந்து) கவி பாடுவதன் மூலம் நபி (ஸல்) அவர்களை விட்டும் (காஃபிர்களின் பழிப்பை) தடுத்துக் கொண்டிருந்தார்கள் என இப்னு அப்பாஸ் (ரளி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.
நூல் : தஃப்ஸீர் இப்னு அபீ ஹாத்திம், ஹதீஸ் எண் 16832

நிச்சயமாக அல்லாஹ் கவிதை விஷயமாக (இகழ்ந்து) எந்த வசனத்தை இறக்கினானோ அத்தகைய (26:224-226) வசனங்களை இறக்கியுள்ளானே! (அப்படியென்றால் அல்லாஹ் என்னை போன்ற கவிஞர்களையும் இகழ்கின்றானா?) என்று கஃப் இப்னு மாலிக் (ரளி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்கள்,
அதற்கு நபி (ஸல்) அவர்கள்; நிச்சயமாக முஃமின் அவரது வாளின் மூலமாகவும், அவரின் நாவின் மூலமாகவும் (இஸ்லாமிய எதிரிகளிடம்) யுத்தம் புரிவார். எனதுயிர் யாருடைய கைவசம் (ஆதிக்கத்தில்) இருக்கிறதோ அத்தகைய இறைவன் மீது ஆணையாக! நிச்சயமாக நீங்கள் கவிதையின் மூலம் அவர்களைத் தாக்குவது (அவர்கள் மீது) அம்பு மழை பொழிவதைப் போன்றாகும் என்று கூறினார்கள்.
அறிவிப்பாளர் : கஃப் இப்னு மாலிக் (ரளி) நூல் : அஹ்மது 27174, 15785
- சுப்ஹான மவ்லித் (தவறான வாதங்களும் , தக்க பதில்களும்)
மவ்லவி அல்ஹாஃபிழ் A. முஹம்மது முஸ்தபா மஸ்லஹி M.A பதிவிலிருந்து

## ஒரு அழகிய கருத்தை யார் கூறினாலும் அதை ஏற்க வேண்டும்

## இஸ்லாத்தில் கவிதை தடை செய்யப்பட்டதா? பதிவு 4

நபி (ஸல்) அவர்கள் களாவுடைய உம்ராவுக்காக மக்காவுக்குள் நுழைந்தார்கள். அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரளி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு முன்பாக நடந்து சென்று பின்வருமாறு கூறினார்கள்.
'காஃபிர்களின் மகன்களே! நபி (ஸல்) அவர்களை அவரது வழியில் விடுங்கள்.
இன்றைய தினம் அவரின் இறைமறைத் தீர்ப்பின்படி உங்களை தாக்கப்போகிறோம்!
மண்டை ஓட்டை அதன் இடத்தை விட்டும் அகற்றிவிடக்கூடிய, உற்ற நண்பனை அவனது உற்ற நண்பனை விட்டும் மறக்கடிக்கக்கூடிய முறையில் தாக்கப்போகிறோம்' என்று கவி பாடினார்கள்.
அப்பொழுது உமர் (ரளி) அவர்கள் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரளி) அவர்களிடம்; ரவாஹாவின் மகனே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னிலையில், அல்லாஹ்வின் ஹரம் பகுதியில் (புனித பூமியில்) கவி பாடுகிறீர்களா? என்று கேட்டார்கள்.
உடனே நபி (ஸல்) அவர்கள் உமர் (ரளி) அவர்களிடம்; உமரே! அவரை பாட விடுங்கள்! ஏனெனில் அக்கவிதை அவர்கள் மீது
அம்பு மழை பொழிவதை விட மிகக் கடுமையாக இருக்கும் என்று கூறினார்கள். அறிவிப்பாளர்: அனஸ் (ரளி) நூல் : திர்மிதி 2847
இமாம் திர்மிதி கூறுகிறார்; இந்த ஹதீஸ் அழகிய தரமுடையதாக, ஆதாரப் பூர்வமானதாக இருக்கிறது. மேலும் இந்த ஹதீஸை இதே போன்றே அனஸ் (ரளி) அவர்களிடமிருந்து ஜுஹ்ரியும், ஜுஹ் ரியிடமிருந்து மஃமர் அவர்களும் அறிவித்ததாகவும் இமாம் அப்துர்ரஜ்ஜாக் அறிவித்துள்ளார்கள்.
மேலும் வேறு அறிவிப்பிலே நபி (ஸல்) அவர்கள் களாவுடைய உம்ராவுக்காக மக்காவுக்கு சென்றார்கள், அப்பொழுது நபி (ஸல்) அவர்களுக்கு முன்பாக கஃப் இப்னு மாலிக் (ரளி) அவர்கள் சென்றதாக வருகிறது. சில ஹதீஸ் கலை அறிஞர்களிடத்தில் இந்த அறிவிப்பு மிக சரியானதாக இருக்கிறது. ஏனெனில் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரளி) அவர்கள் முஅத்தா யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள். களாவுடைய உம்ரா அதற்குப் பின்புதான் நடந்தது.
எனவே கவிதையை இஸ்லாம் வெறுக்கிறது; கவிஞர்களை இஸ்லாம் வழிகேடர்கள் என்று சொல்கிறது; கவிதைக்கு இஸ்லாத்தில் இடமில்லை என்பன போன்ற குற்றச்சாட்டுகள் உண்டு என்று வஹ்ஹாபிகள் கூறி மவ்லிதை (நபி புகழ் பாடுவதை) ஹராம் என்று கூறுவது மிகப்பெரும் மோசடியாகும்.
அதற்கு மாறாக நபி (ஸல்) அவர்களைப் புகழ்ந்து கவிபாடுவதையும், அவ்வாறு பாடும் கவிஞர்களையும் மேற்கண்ட வசனத்தில் இறைவன் புகழத்தான் செய்கிறான்.
கேள்வி :

நபி (ஸல்) அவர்கள் தன்னைப் புகழ்ந்து கவிபாடுவதை அனுமதித்துள்ளார்களா?
பதில் :
ஆம்! அனுமதித்துள்ளார்கள் மட்டுமல்ல, மாறாக அதைத் தூண்டியும் உள்ளார்கள்.
'ஹஸ்ஸானே! முஷ்ரிக்குகளை இகழ்ந்து (என்னைப் புகழ்ந்து) கவி பாடுங்கள். ஜிப்ரீல் (அலை) உங்களுடன் இருக்கிறார் என்று ஹஸ்ஸான் (ரளி) அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர் : பராவு (ரளி), நூல் : புகாரி 4123.
ஹஸ்ஸானே! முஷ்ரிக்குகளை இகழ்ந்து (என்னைப் புகழ்ந்து கவி பாடுங்கள். ஏனெனில் நிச்சயமாக ஜிப்ரீல் (அலை) உங்களுடன் இருக்கிறார் என்று ஹஸ்ஸான் (ரளி) அவர்களுக்கு குரைழா யுத்த தினத்தில் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர் : பராவு இப்னு ஆசிப் (ரளி) நூல் : புகாரி 4124
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஸ்ஸான் (ரளி) அவர்களுக்காக பள்ளிவாசலிலே ஒரு மிம்பரை தயார் செய்தார்கள். அதன் மீது ஹஸ்ஸான் (ரளி) அவர்கள் நின்று கொண்டு நபி (ஸல்) அவர்களைப் புகழ்ந்து கவிபாடுவார்கள். அல்லது நபி (ஸல்) அவர்கள் மீது சொல்லப்படுகிற குற்றச்சாட்டுகளுக்கு மறுப்புக் கூறி (காபிர்களை இகழ்ந்து) கவி பாடுவார்கள்.
ஹஸ்ஸான் (ரளி) அவர்கள் நபி (ஸல்) அவர்களைப் புகழ்ந்து கவிபாடும் காலமெல்லாம், அல்லது நபி (ஸல்) அவர்கள் மீது சொல்லப்படுகிற குற்றச்சாட்டுகளுக்கு மறுப்புக் கூறி (காபிர்களை இகழ்ந்து) கவி பாடும் காலமெல்லாம் ரூஹுல் குதுஸ் (ஆகிய ஜிப்ரீல் (அலைஹிஸ்லாம்) அவர்களின் மூலம் நிச்சயமாக ஹஸ்ஸானை அல்லாஹ் வலுப்படுத்துவான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர் : ஆயிஷா (ரளி) நூல் : திர்மிதி 2846, அபூதாவூத் 5015
- சுப்ஹான மவ்லித் (தவறான வாதங்களும் , தக்க பதில்களும்)
மவ்லவி அல்ஹாஃபிழ் A. முஹம்மது முஸ்தபா மஸ்லஹி M.A

## இறைவனையும் , இறைத்தூதரையும் புகழ்ந்து கவிபாடியவர்களைப் புகழ்ந்து அவர்களுக்காக துஆவும் செய்த மாநபி (ஸல்) - பதிவு 5

ஸலமத்துப்னுல் அக்வஉ (ரளி) அவர்கள் கூறுகிறார்கள்; நாங்கள் கைபர் யுத்தத்திற்காக நபி (ஸல்) அவர்களுடன் சென்றோம். இரவில் நாங்கள் நடந்து சென்று கொண்டிருந்தோம். அப்பொழுது அக்கூட்டத்தில் உள்ள ஒருவர் ஆமிர் (ரளி) அவர்களிடம்; ஆமீரே! உங்கள் கவிகளிலிருந்து ஏதேனும் ஒன்றை எங்களுக்கு பாடிக்காட்டுங்கள் என்றார்.
ஆமிர் (ரளி) அவர்கள் ஒரு கவிஞராக இருந்தார். உடனே ஆமிர் (ரளி) அவர்கள் (தனது ஒட்டகையிலிருந்து கீழிறங்கி) தன் கூட்டத்தாருக்காக ஒட்டகையை ஓட்டிய வண்ணம் பின் வரும் கவியை பாட ஆரம்பித்தார்கள்.
"யா அல்லாஹ்! நீ (எங்களை நேர்வழியில் சேர்க்கவில்லை யென்றால்) நாங்கள் நேர்வழி பெற்றிருக்க மாட்டோம். நாங்கள் தர்மமும் வழங்கியிருக்க மாட்டோம். தொழுதுமிருக்க மாட்டோம்.
(எங்கள் உயிர்களை) உமக்கு அர்ப்பணமாக்குகின்றோம். எனவே (இதுவரை மன்னிக்கப்படாமல்) எங்களிடம் நாங்கள் விட்டு வைத்திருக்கின்ற பாவங்களை நீ மன்னிப்பாயாக!
(யுத்த களத்தில் எதிரிகளை) நாங்கள் சந்திக்கும் போது எங்கள் பாதங்களை பலப்படுத்துவாயாக!
எங்கள் மீது அமைதியை இறக்குவாயாக! நாங்கள் (அசத்தியத்தின் பக்கம்) அழைக்கப்பட்டால் (அதை விட்டும்) தவிர்ந்து கொள்வோம்.
உரக்க சப்தமிட்டு எங்களை அழைத்து உதவி தேடிக் கொண்டு
இப்பொழுது யுத்தத்தின் மூலம் எங்களையே பயமுறுத்த அவர்கள் நாடுகிறார்களா?" என்று பாடினார்.
(கவிபாடி) ஒட்டகத்தை ஓட்டிச்செல்கிற இந்த மனிதர் யார்? என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வினவினார்கள்.

அவர் ஆமிர் இப்னுல் அக்வஃ என்பவராகும் என்று கூறினார்கள். அல்லாஹ் அவருக்கு அருள் புரிவானாக! என்று நபி (ஸல்) அவர்கள் துஆ செய்தார்கள்.
அப்பொழுது அக்கூட்டத்திலிருந்த ஒரு மனிதர் (உமர் ரளி) அவர்கள்; ஆமிருக்கு இறையருள் உறுதியாகிவிட்டது! எனக்கூறினார்கள். பின்பு அவர் (நபி ஸல் அவர்களிடம்) அல்லாஹ்வின் தூதரே! ஆமிரின் (வீரமிக்க கவிகளின்) மூலம் நாங்கள் சந்தோசமடைவதற்கு அவருக்கு நீண்ட ஆயுள் கிடைக்க துஆச் செய்யுங்களேன்! என்று (உமர் ரளி) அவர்கள் கூறினார்கள்.
பின்பு கைபர் வாசிகளிடம் வந்தோம். எங்களுக்கு கடும் பசி ஏற்படும் வரை அவர்களை முற்றுகை யிட்டோம். பின்பு நிச்சயமாக அல்லாஹ் அவர்களுக்கு எதிராக கைபரில் வெற்றியை தந்தான்.
வெற்றி வழங்கப்பட்ட அன்றைய தினத்தின் மாலையில் (ஸஹாபா பெரு) மக்கள் ஆனபொழுது அதிகமாக நெருப்பு மூட்டினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள்; இது என்ன நெருப்பு? எதற்காக நெருப்பு மூட்டுகிறீர்கள்? என்று கேட்டார்கள்.

இறைச்சியை சமைப்பதற்காக மூட்டினோம் என்று அவர்கள் கூறினார்கள்.
எந்த இறைச்சியை சமைப்பதற்காக? என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை சமைப்பதற்காக என்று அவர்கள் கூறினார்கள். பாத்திரத்திலுள்ள இறைச்சிகளை கீழே கொட்டி விடுங்கள். மேலும் அப்பாத்திரங்களை உடைத்து விடுங்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அல்லாஹ்வின் தூதரே! பாத்திரங்களில் உள்ள இறைச்சிகளைக் கீழே கொட்டிவிட்டு (பாத்திரங்களை உடைக்காமல்) அவற்றை நாங்கள் கழுவலாமா? என்று ஒரு மனிதர் கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள்; சரி! என்று கூறினார்கள்.
கைபர் யுத்தத்தில் (முஸ்லிம்) சமூகம் அணியில் நின்ற பொழுது ஆமிர் (ரளி) அவர்களின் வாள் சிறியதாக இருந்தது. அதன் மூலம் ஒரு யஹூதியின் கெண்டைக்காலை வெட்டுவதற்கு ஆமிர் வீசினார். அவருடைய வாளின் நுனிப் பகுதி (ஆமிர்) அவர்களை நோக்கி திரும்பி வந்து ஆமிருடைய முட்டுக்காலில் பாய்ந்தது. அதனால் அவர் மரணித்து விட்டார்.

(யுத்தம் முடிந்து ஸஹாபாக்கள் இல்லம்) திரும்புகின்ற பொழுது ஸலமா (ரளி) அவர்கள் கூறுகிறார்கள்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது கரத்தை பிடித்த வண்ணம் என்னை (கவலை நிறைந்த நிலையில் இருப்பதைப்) பார்த்து உனக்கு என்ன ஆகிவிட்டது? என்று கேட்டார்கள்.
அதற்கு நான் நபி (ஸல்) அவர்களிடம்; எனது தாயும், தந்தையும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும். (ஆமிர் தற்கொலை செய்து கொண்டார் என்றும் அதனால்) ஆமிருடைய நல்அமல் முழுவதும் அழிந்துவிட்டது என்றும் (சில) ஸஹாபாக்கள் கருதுகிறார்கள் என்று கூறினேன்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள்; யார் அதை கூறினாரோ அவர் தவறுதலாக கூறிவிட்டார். நிச்சயமாக ஆமிருக்கு இரு கூலிகள் உண்டு என்று கூறினார்கள். மேலும் தனது இரு விரல்களை ஒன்று சேர்த்தார்கள். நிச்சயமாக அவர் (நன்மையான காரியங்களில்) அதிக முயற்சி செய்பவராகவும், (எதிரிகளிடம்) யுத்தம் புரிந்தவராகவும் இருக்கின்றார். இப்பூமியில் அவரை போன்று (அழகிய குணத்துடன்) நடந்த அரபி மிகக் குறைவாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பாளர் : ஸலமத்துப்னுல் அவஉ (ரளி) நூல் : புகாரி 4196, 6148, முஸ்லிம் 3363
மேற்கண்ட ஹதிஸில் அழகிய கவிதையை பாடிய ஆமிர் (ரளி) அவர்களுக்காக நபி (ஸல்) அவர்கள் இறையருள் வேண்டி து.ஆ கேட்டுள்ளார்கள் என்றும், அவர்களைப் புகழ்ந்துள்ளதாகவும் வருகிறது.
- சுப்ஹான மவ்லித் (தவறான வாதங்களும் , தக்க பதில்களும்)
மவ்லவி அல்ஹாஃபிழ் A. முஹம்மது முஸ்தபா மஸ்லஹி M.A

**நல்ல கவிதைகள் ஹிக்மத் (ஞானம்) என்றும், அதை பாடுவதையும், கேட்பதையும் அழகிய செயலாக கருதிய நபி (ஸல்) அவர்கள் - ( பதிவு 6 )**

நிச்சயமாக (நல்ல) கவிதையில் ஹிக்மத் (ஞானம்) இருக்கிறது என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர் : உபைய்யிப்னு கஅப் (ரளி) நூல் : புகாரி : 6145, அபூ தாவூத் 5010, திர்மிதி 28444
கேள்வி : ஹிக்மத் என்றால் என்ன?
பதில் : இமாம் இப்னு ஹஜர் அஸ்கலானி (ரஹ்) அவர்கள் பின்வருமாரு விளக்கமளித்துள்ளார்கள்.
ஹிக்மத் என்றால்; சத்தியத்திற்கு தோதுபடுகிற உண்மையான சொல். ஹிக்மத் என்பதின் அகராதிப் பொருள்; தடுத்தல் என்பதாகும்.
எனவே மேற்படி ஹதீஸின் பொருள்; மடமைத்தனத்தை(யும், அசத்தியத்தையும்) தடுக்கின்ற பலனுள்ள சொல் கவிதையில் இருக்கிறது. நூல் : ஃபத்ஹுல் பாரி, பாகம் 17, பக்கம் 338
நிச்சயமாக சில பேச்சில் ஸ்ஹ்ர் (சூனியம்) இருக்கிறது. நிச்சயமாக சில கல்வியினால் அறியாமை ஏற்படுகிறது. நிச்சயமாக (நல்ல) கவிதையில் ஞானம் இருக்கிறது. நிச்சயமாக சில பேச்சில் (பாமர மக்களால் எளிதில் விளங்கிக் கொள்ள முடியாத) ஆழமான நுட்பக் கருத்து இருக்கிறது என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன் என்று புரைதா (ரளி) அவர்கள் கூறினார்கள்.

ஸஃஸஆ இப்னு சூஹான் அவர்கள் கூறுகிறார்கள்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உண்மையைத்தான் கூறினார்கள்.
'நிச்சயமாக சில பேச்சில் ஸிஹ்ர் (சூனியம்) இருக்கிறது' என்கிற நபி (ஸல்) அவர்களின் சொல்லுக்கு விளக்கமென்னவெனில் (திறமையாக பேசக்கூடிய சில) மனிதராகிறவர் அவருக்கு எதிராக சத்தியம் இருக்கும். ஆனாலும் அவர் (தன் அசத்தியக் கொள்கைக்கு சாதகமாக) பல ஆதாரங்களைத்திரட்டி அதன் மூலம் தன் அசத்தியக் கொள்கையை சத்தியத்தை போன்று மக்களுக்கு எடுத்துரைப்பதில் சத்தியத்தில் இருக்கிறவரை விட அதிகத் திறனுடையவராக இருப்பார். பின்பு பாமர மக்களை அவரின் திறமையான பேச்சின் மூலம் வஸியம் (சூனியம்) செய்துவிடுவார். பின்பு சத்தியக் கொள்கையை இல்லாமல் ஆக்கிவிடுவார்.
'நிச்சயமாக சில கல்வியினால் அறியாமை ஏற்படுகிறது' என்கிற நபி (ஸல்) அவர்களின் சொல்லுக்கு விளக்கமென்னவெனில்; சில அறிஞராகிறவர் எந்த மோசமான கல்வியை அறியக்கூடாதோ அத்தகைய கல்வியைக் கற்பதற்கு அதிக சிரமம் எடுத்துக் கொள்வார். எனவே அவரை (நல்ல கல்வியை அறியவிடாமல்) அது முட்டாளாக்கிவிடுகிறது.

'நிச்சயமாக (நல்ல) கவிதையில் ஞானம் இருக்கிறது' என்கிற நபி (ஸல்) அவர்களின் சொல்லுக்கு விளக்கமென்னவெனில்; மக்கள் நல்லுபதேசம் பெறுகிற கவிதைகளும், பழமொழிகளாகும்.
'நிச்சயமாக சில பேச்சில் (பாமர மக்களால் எளிதில் விளங்கிக் கொள்ள முடியாத) ஆழமான நுட்பக் கருத்து இருக்கிறது' என்கிற நபி (ஸல்) அவர்களின் சொல்லுக்கு விளக்கமென்னவெனில்; உனது (ஆழமான) பேச்சை அதை விளங்குவதற்கு தகுதியில்லாதவர்
நிச்சயமாக சில பேச்சில் ஸ்ஹ்ர் (சூனியம்) இருக்கிறது. நிச்சயமாக சில கல்வியினால் அறியாமை ஏற்படுகிறது. நிச்சயமாக (நல்ல) கவிதையில் ஞானம் இருக்கிறது. நிச்சயமாக சில பேச்சில் (பாமர மக்களால் எளிதில் விளங்கிக் கொள்ள முடியாத) ஆழமான நுட்பக் கருத்து இருக்கிறது என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன் என்று புரைதா (ரளி) அவர்கள் கூறினார்கள்.
ஸஃஸஆ இப்னு சூஹான் அவர்கள் கூறுகிறார்கள்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உண்மையைத்தான் கூறினார்கள்.
'நிச்சயமாக சில பேச்சில் ஸிஹ்ர் (சூனியம்) இருக்கிறது' என்கிற நபி (ஸல்) அவர்களின் சொல்லுக்கு விளக்கமென்னவெனில் (திறமையாக பேசக்கூடிய சில) மனிதராகிறவர் அவருக்கு எதிராக சத்தியம் இருக்கும்.

ஆனாலும் அவர் (தன் அசத்தியக் கொள்கைக்கு சாதகமாக) பல ஆதாரங்களைத்திரட்டி அதன் மூலம் தன் அசத்தியக் கொள்கையை சத்தியத்தை போன்று மக்களுக்கு எடுத்துரைப்பதில் சத்தியத்தில் இருக்கிறவரை விட அதிகத் திறனுடையவராக இருப்பார். பின்பு பாமர மக்களை அவரின் திறமையான பேச்சின் மூலம் வஸியம் (சூனியம்) செய்துவிடுவார். பின்பு சத்தியக் கொள்கையை இல்லாமல் ஆக்கிவிடுவார்.
'நிச்சயமாக சில கல்வியினால் அறியாமை ஏற்படுகிறது' என்கிற நபி (ஸல்) அவர்களின் சொல்லுக்கு விளக்கமென்னவெனில்; சில அறிஞராகிறவர் எந்த மோசமான கல்வியை அறியக்கூடாதோ அத்தகைய கல்வியைக் கற்பதற்கு அதிக சிரமம் எடுத்துக் கொள்வார். எனவே அவரை (நல்ல கல்வியை அறியவிடாமல்) அது முட்டாளாக்கிவிடுகிறது.

'நிச்சயமாக (நல்ல) கவிதையில் ஞானம் இருக்கிறது' என்கிற நபி (ஸல்) அவர்களின் சொல்லுக்கு விளக்கமென்னவெனில்; மக்கள் நல்லுபதேசம் பெறுகிற கவிதைகளும், பழமொழிகளாகும்.
'நிச்சயமாக சில பேச்சில் (பாமர மக்களால் எளிதில் விளங்கிக் கொள்ள முடியாத) ஆழமான நுட்பக் கருத்து இருக்கிறது' என்கிற நபி (ஸல்) அவர்களின் சொல்லுக்கு விளக்கமென்னவெனில்; உனது (ஆழமான) பேச்சை அதை விளங்குவதற்கு தகுதியில்லாதவர்களிடத்தில், அதை கேட்பதற்கு விரும்பாதவர்களாக அவர்கள் இருக்கும் நிலையில் அவர்களுக்கு நீ எடுத்துரைப்பதாகும் என்று ஸஃஸஆ இப்னு சூஹான் அவர்கள் கூறுகிறார்கள்;
அறிவிப்பாளர் : புரைதா (ரளி) அவர்கள் அபூ தாவூத் 4359, 5011
ஒரு தடவை நபி (ஸல்) அவர்கள் தனது பள்ளிவாசலில் அமர்ந் திருந்தார்கள். அப்போது குஃபாஃப் இப்னு நள்லா அஸ்ஸகஃப் (ரளி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து பின்வரும் பாடலை பாடி (முஸ்லிமா)னார்கள்.
"விசாலமான பாலைவனங்களிலிருந்தும் திறந்தவெளி தரிசு
நிலத்தில் கடும் இருளில் இளம் பெண் ஒட்டகை என்னைக்
கொண்டு சீறிப்பாய்ந்து சென்றது.
(மக்காவுக்கும், பஸராவுக்கும் இடையிலுள்ள) வஜ்ரா எனும் இடத்திலுள்ள ஜின் இனத்திலிருந்து ஒரு உதவியாளர் நிச்சயமாக என் கனவில் வந்தார்.
அவர் பல இரவுகளாக (என்னை) உங்களின் பக்கம் அழைத்தார். பின்பு நான் இனிமேல் வரமாட்டேன் என்று கூறி மறைந்துவிட்டார்.
பின்பு நாஜியா (என்று பெயரிடப்பட்ட) ஒட்டகையில் நான் பயணித்தேன். அது மேடான பகுதியில் விரைந்து ஓடியது.
உங்களை நான் பார்த்து, என் கஷ்டங்களையெல்லாம் நீங்கள் போக்க வேண்டும் என்பதற்காக சிரமப்பட்டு (இதோ) மதீனாவுக்கு நான் வந்துவிட்டேன்!" என்று அவர் பாடினார்.
நபி (ஸல்) அவர்கள் அக்கவிதையை மிக அழகானதாக கருதினார்கள். நிச்சயமாக சில பேச்சில் சூனியம் இருக்கிறது, மேலும் நிச்சயமாக சில கவிதையில் நுட்பத்தை போன்றது இருக்கிறது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
நூல் : தலாயிலுன் நுபுவ்வத் லில் பைஹகீ, பாகம் 2, பக்கம் 260, 261
எனவே நல்ல கவிதைகள் ஹிக்மத் (ஞானம்) என்றும், அதை பாடுவதையும், கேட்பதையும் அழகிய செயலாக கருதினார்கள் நபி (ஸல்) அவர்கள்.
- சுப்ஹான மவ்லித் (தவறான வாதங்களும் , தக்க பதில்களும்)
மவ்லவி அல்ஹாஃபிழ் A. முஹம்மது முஸ்தபா மஸ்லஹி M.A

## ஷைத்தானே மவ்லிது ஓதுகிறான் (பதிவு 7 )

'நாங்கள் அர்ஜ் என்னுமிடத்தில் பயணம் செய்து கொண்டிருக்கும் போது கவிஞர் ஒருவர் கவிதைகளைப்பாடிக் கொண்டு எதிரில் வந்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த ஷைத்தானைப் பிடியுங்கள். ஒரு மனிதருடைய வயிறு கவிதையால் நிரம்பி யிருப்பதை விட சீழ், சலத்தால் நிரம்பியிருப்பது நன்று எனக் கூறினார்கள்'.
அறிவிப்பாளர் : அபூசயீத் அல்குத்ரி (ரலி), நூல் : முஸ்லிம் 4548 பார்க்க : தூத்துக்குடி. த.த.ஜ. கிளை 27-01-2012 -ல் வெளியிட்ட 'மார்க்கத்திற்கு எதிரான மவ்லிதுகள்' என்ற பிட்நோட்டீஸ், பக்கம் 2.
நமது மறுப்பு:
ஷைத்தானே மவ்லிது ஓதுகிறான் என்று வஹ்ஹாபிகள் கூறி அதற்கு ஆதாரமாக முஸ்லிம் நூலிலுள்ள 4548 வது ஹதீஸை ஆதரமாக கூறியுள்ளார்கள். அந்த ஹதீஸிற்கும், மவ்லிது (நபி புகழ்) பாடுவதற்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது?!!! ஒரு வேளை அக்கவிஞன் நபி புகழ் பாடினான் என்று உளறிக் கொட்டப் போகிறீர்களா?
நபி புகழ் பாடியதால் தான் அக்கவிஞனுக்கு நபி (ஸல்) அவர்கள் 'ஷைத்தான்' எனக்கூறினார்களா?
அப்படியென்றால் நபி (ஸல்) அவர்கள் ஹஸ்ஸான் (ரளி) போன்ற ஸஹாபாக்களை தன்னைப் புகழ்ந்து கவிபாடும்படி கூறியுள்ளார்களே?!
எனவே அந்த ஸஹாபா கவிஞர்களெல்லாம் ஷைத்தான்களா? (நவூது பில்லாஹ்) நபி (ஸல்) அவர்கள் தன்னைப் புகழ்ந்து அக்கவிஞர்களை கவிபாடச் சொன்னதால் நபி (ஸல்) அவர்கள் ஷைத்தான்களை உருவாக்கினார்களா? (நவூது பில்லாஹ்) மவ்லிது நபியை இழிவு படுத்துகிறது என்றெல்லாம் கூறினீர்களே! இப்பொழுது நீங்கள்தான் நபி (ஸல்) அவர்களையும், நபித்தோழர்களான கவிஞர்களையும் இழிவுபடுத்தியுள்ளீர்கள்.
எனவே முஸ்லிம் நூலிலுள்ள 4548 வது ஹதீஸில் நபி (ஸல்) அவர்கள் எந்தக் கவிஞனை 'ஷைத்தான்' என்று கூறினார்கள் என்பதை நாம் தெரிவதற்கு முன்பு கெட்ட கவிதைகளைப் பற்றி இறைவனும், இறைத்தூதரும் என்ன கூறுகிறார்கள் என்பதை இப்பொழுது நாம் பார்ப்போம்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடத்தில் கவிதையைப்பற்றி வினவப்பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்; அது(வும்) பேச்சாகும். எனவே அதில் நல்ல கருத்துடையது நல்ல கவிதையாகும். மேலும் அதில் தீயக்கருத்துடையது தீயக்கவிதையாகும் எனக் கூறினார்கள்.
அறிவிப்பாளர்: ஆயிஷா (ரளி) நூல் : தாரகுத்னீ 4306, 4307, 4308, 4309, தப்ரானி 1488, 791
கேள்வி : தீயக்கருத்துடைய கவிகள் எது?
பதில் :
1- அல்லாஹ்வையோ, அவனது தூதரையோ, அல்லது இறை நேசர்களையோ இகழ்ந்து கவி பாடுவது.
2 - ஒரு மனிதரை நமக்குப் பிடித்தால் அவரைப் புகழ்ந்தும்,
பிடிக்கவில்லை என்றால் அவரை இகழ்ந்தும் கவி பாடுவது.
3 - தன் குலப்பெருமை அல்லது இனப்பெருமையைக் கூறி தற்பெருமையடித்து கவி பாடுவது.
4-இரு கூட்டத்தாருக்கிடையில் இனவெறி மற்றும் சண்டை
மூட்டி கவி பாடுவது.
5 - காம உணர்வைத் தூண்டக்கூடிய கவி பாடுவது.
இவைகள் அனைத்தும் தீயக்கவிதையாகும். ஏனெனில் மேற்கூறப்பட்டவைகளை உரை நடையில் பேசினால் அது தீயப் பேச்சாகும். எனவே அவற்றை கவி நடையில் பாடினால் அதுவும் தீயதே!
எந்தெந்த ஹதீஸ்களில் நபி (ஸல்) அவர்கள் கவிதையையும், கவிஞர்களையும் இகழ்ந்திருப்பார்களோ அது அனைத்தும் மேற்கூறப்பட்ட காரணங்களில் ஏதேனும் ஒன்றுக்காக இருக்கும். மேலும் இது போன்ற கவிஞர்களைத் தான் அல்லாஹு தஆலா பின்வரும் வசனத்தில் இகழ்ந்து கூறுகிறான்.
இன்னும் கவிஞர்களாகிறவர்கள் அவர்களை மடையர்கள்(தான்) பின்பற்றுவார்கள். (அல்குர்ஆன் 26:224)

நிச்சயமாக அவர்கள் ஒவ்வொரு பள்ளத்தாக்கிலும் அலைந்து திரிவதை (நபியே) நீர் பார்க்கவில்லையா? (அல்குர்ஆன் 26:225)

நிச்சயமாக அவர்கள்; செய்யாததை செய்ததாகச் சொல்வார்கள். (குர்ஆன் 26:226)

இந்த ஒரு வசனத்திலேயே அல்லாஹு தஆலா அனைத்து விதமான தீயக்கவிதைகளையும் தடை செய்துவிட்டான். ஏனெனில் திருக்குர்ஆன் பல பேரற்புதங்கள் நிறைந்ததாக இருந்தாலும் அதில் மிக முக்கியமான பேரற்புதம் என்னவெனில்; குறைவான சொல்லில் நிறைவான, விரிவான அர்த்தங்களைத் தரும் விதத்தில் அது இருக்கும். எனவே

26: 225 வசனத்திற்கு நிறைய பொருள் உள்ளன. அவை;

1-வது பொருள்; நிச்சயமாக அவர்கள் ஒவ்வொரு பள்ளத்தாக்கிலும் அலைந்து திரிவதை (நபியே) நீர் பார்க்கவில்லையா? (அல்குர்ஆன் 26:225)

இன்னும் கவிஞர்களாகிறவர்கள் அவர்களை மடையர்கள் (தான்) பின்பற்றுவார்கள். (அல்குர்ஆன் 26:224) என்கிற வசனத்திற்கு இப்னு அப்பாஸ் (ரளி) அவர்கள் பின்வருமாறு விளக்கம் கூறினார்கள். இணைவைப்பாளர்களில் சிலர் இருந்தனர். அவர்கள் நபி (ஸல்) அவர்களையும், அவர்களின் தோழர்களையும் இகழ்ந்து கவி பாடக்கூடியவர்களாக இருந்தனர். (அக்கவிஞர் களைத்தான் இவ்வசனத்தில் அல்லாஹ் கூறுகிறான்.) நூல் : தஃப்ஸீர் இப்னு அபீ ஹாத்திம், பாகம் 11, பக்கம் 45, விரிவுரை எண் 16811

எனவே அல்லாஹ்வையோ, அவனது தூதரையோ, அல்லது இறை நேசர்களையோ இகழ்ந்து கவி பாடுவது தீய காரியமாகும். மேலும் அது முஷ்ரிக்குகளின் தீய பண்பாகும்.

இன்னும் கவிஞர்களாகிறவர்கள் அவர்களை மடையர்கள் (தான்) பின்பற்றுவார்கள். மேலும் வீணான எல்லா காரியங்களிலும் அவர்கள் மூழ்குவதை நீர் காணவில்லையா? என்ற (அல்குர்ஆன் 26:224, 225) வசனங்களை ஹஸன் (ரஹ்) அவர்கள் ஓதும் பொழுது; அல்லாஹ்வின் மீது சத்தியமாக! கவிஞர்கள் ஒரு முறை ஒருவரைத்திட்டியும், இன்னொரு முறை அதே மனிதரைப் புகழ்ந்தும் வீணான காரியங்களில் மூழ்குவார்களே அத்தகைய அவர்களின் வீண் காரியங்களை நிச்சயமாக நாங்கள் பார்த்துள்ளோம் என்று கூறினார்கள்.

நூல் : தஃப்ஸீர் இப்னு அபீ ஹாத்திம், பாகம் 11, பக்கம் 47,

விரிவுரை எண் 16824

எனவே ஒரு மனிதரை நமக்குப் பிடித்தால் அவரைப் புகழ்ந்தும், பிடிக்கவில்லை என்றால் அவரை இகழ்ந்தும் கவி பாடுவது தீய காரியமாகும். மேலும் அது முஷ்ரிக்குகளின் தீய பண்பாகும்.

இரு கவிஞர்கள் ஒருவருக்கொருவர் திட்டி கவி பாடினார்கள். மேலும் அவ்விருவரிலிருந்து ஒவ்வொருவருடனும் (அவருக்கு சாதகமாக) ஒரு கூட்டம் இருந்தது .இவர்கள் விஷயமாக 26:224, 225 வசனம் இறங்கியது என்றும் விளக்கம் கூறப்படுகிறது என இப்னு ஹஜர் அஸ்கலானீ (ரஹ்) அவர்கள் புகாரி விரிவுரையில் கூறுகிறார்கள். நூல் : ஃபத்ஹுல் பாரி, பாகம் 17, பக்கம் 337

எனவே தன் குலப்பெருமை அல்லது இனப்பெருமையைக் கூறி தற்பெருமையடித்து கவி பாடுவது முஷ்ரிக்குகளின் குணமாகும்.

நிச்சயமாக மக்களில் மிகப்பெரும் இட்டுக்கட்டுபவர்; ஒரு முழு வம்சத்தையே (அநியாயமாக) இகழ்ந்து கவிபாடக்கூடிய கவிஞராகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர் : ஆயிஷா (ரளி) நூல் : அதபுல் முஃப்ரத் லில் புகாரி

இந்த ஹதீஸ் அழகிய தரமுடையதாகும் என்று இப்னு ஹஜர் (ரஹ்) கூறுகிறார்கள்.

நிச்சயமாக மக்களில் மிகப்பெரும் இட்டுக்கட்டுபவர் ; ஒரு மனிதர் இன்னொருவரை இகழ்ந்து கவிபாடுவார். அதற்கவர் ஒரு வம்சத்தையே இகழ்ந்து கவிபாடுவார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். நூல்: இப்னு மாஜா மேலும் இந்த ஹதீஸ் ஆதாரப்பூர்வமானது என்று இப்னு ஹிப்பான் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். நூல்: ஃபத்ஹுல் பாரி, பாகம் 17, பக்கம் 337

எனவே இரு கூட்டத்தாருக்கிடையில் இனவெறி மற்றும்

சண்டை மூட்டி கவி பாடுவது ஆகியவை தீய காரியமாகும்.

மேலும் அது முஷ்ரிக்குகளின் தீய பண்பாகும்.
அரபு கவிஞர்களில் பலர் பெண்களை வர்ணித்து காம உணர்வைத்தூண்டக்கூடிய கவிகளும் பாடியுள்ளார்கள். இப்படிப்பட்டவர்களையும் மேற்படி வசனம் எடுக்கும்.
நிச்சயமாக உங்களின் சகோதரர் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரளி) அவர்கள் (காம உணர்வைத்தூண்டக்கூடியதை போன்ற) அறுவறுப்பான, வீணான கவிகளை பாடமாட்டார் என்று அபூ ஹுரைரா (ரளி) அவர்கள் கூறினார்கள்.புகாரி 1155, 6151
எனவே காம உணர்வைத் தூண்டக்கூடிய கவி பாடுவது மற்றும் வீணான கவி பாடுவது தீய காரியமாகும். மேலும் அது அசிங்கமானவர்களின் தீய பண்பாகும்.
எனவே கெட்ட கவிதைகளைப் பற்றி இறைவனும், இறைத்தூதரும் என்ன கூறுகிறார்கள் என்பதை இது வரை நாம் பார்த்தோம். இப்பொழுது முஸ்லிம் நூலிலுள்ள 4548 வது ஹதீஸில் நபி (ஸல்) அவர்கள் எந்தக் கவிஞனை 'ஷைத்தான்' என்று கூறினார்கள் என்பதை நாம் விளக்கித்தான் தெரிய வேண்டும் என்ற அவசியமில்லை. ஏனெனில் தீயக்கவிதைகளை பாடும் கவிஞர்களைத் தான் இறைவனும், இறைத்தூதரும் இகழ்ந்துள்ளார்கள் என்பதால் சந்தேகமின்றி அக்கவிஞன் கெட்ட கவிதையைத்தான் பாடியுள்ளான் என்பதினால்தான் அவனை 'ஷைத்தான்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்பது நிரூபணமாகிறது.
எனவே முஸ்லிம் நூலிலுள்ள 4548 வது ஹதீஸில் கூறப்படுகிற கவிஞன் மவ்லிது ஓதியதால் அவனை 'ஷைத்தான்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று கூறி, 'ஷைத்தானே மவ்லிது ஓதுகிறான்' என்று வஹ்ஹாபிகள் கூறுவது மிகப்பெரும் அநியாயமாகும்.
- சுப்ஹான மவ்லித் (தவறான வாதங்களும் , தக்க பதில்களும்)
மவ்லவி அல்ஹாஃபிழ் A. முஹம்மது முஸ்தபா மஸ்லஹி M.A

**மவ்லிதில் நபியை இழிவாகவும், கேலியாகவும் பாடியும், ஓதியும் வருகிறார்கள் என வஹ்ஹாபிகள் குற்றம் சாட்டுகின்றனர். 'ஏகத்துவ (?) மாத இதழில்' வஹ்ஹாபிகள் செய்த விமர்சனத்தை கீழே காண்க! ( பதிவு 8 )**

டென்மார்க் பத்திரிகையும், சன்மார்க்க(?) மவ்லிதுகளும்
(நிறைய சிறப்புகளைக் கொண்ட) கண்ணியமிக்க நபி (ஸல்) அவர்களை தீவிரவாதியைப் போன்றும், முரட்டு படைத்தவரைப் போன்றும் கேலிச் சித்திரம் வரைந்து அவமரியாதை செய்யும் வகையில் (டென்மார்க்) பத்திரிக்கையில் வெளியிட்டதால் குணம் இதைக் கண்டித்து கண்டனப் போராட்டம் நடத்தினோம்.
ஆனால் அந்தக் கேலிச் சித்திரங்களை வரைந்தவர்கள், நபி (ஸல்) அவர்களை ஒரு மத போதகராகவோ, புனிதராகவோ, நபியாகவோ நம்பாதவர்கள், கேலியாகவும், நையாண்டியாகவும் சித்தரித்தவர்கள், நபியவர்களை எதிரியாகவும், பகைவராகவும் பாவிப்பவர்கள் இஸ்லாத்தின் வளர்ச்சியைக் கண்டு மனம் பொறுக்காத விஷமக்காரர்கள்.
ஆனால் அவர்களையே விட்டு வைக்காமல் உலக முஸ்லிம்கள் எல்லோரும் சேர்ந்து எதிர்த்து ஆர்ப்பாட்டங்கள், கண்டனப் பேரணிகள் மற்றும் பல வகைகளிலும் கண்டித்தோம். இதில் எல்லா மக்களும் தவ்ஹீத்வாதிகளும், சுன்னத் ஜமாஅத்தினர் எனப்படுவோரும் சேர்ந்தே எதிர்ப்பைத் தெரிவித்தோம்.
இப்படியெல்லாம் கண்டிக்கின்ற நாம் பல காலம் நம்மவர்களில் சிலர் மவ்லூத் என்ற பேரில் நபியவர்களைப் புகழ்கிறோம் என்ற ரீதியில் நபி (ஸல்) அவர்களை இழிவாகவும், கேலியாகவும் பாடியும், ஓதியும் வருகிறார்களே அவர்களை என்ன செய்வது? அதற்குள் உள்ளதை அறியாத பாமர மக்களும் நபியவர்களைக் கேலி செய்கிறார்கள். நூல் : ஏகத்துவம், ஏப்ரல் 2006, பக்கம் 36, 37
நமது மறுப்பு:

டென்மார்க் பத்திரிக்கைகாரன் நபியவர்களை இழிவுபடுத்தியதை போன்று சுன்னத் ஜமாஅத்காரர்கள் மவ்லிதில் நபி (ஸல்) அவர்களை இழிவாகவும், கேலியாகவும் பாடி நபியை இழிவு படுத்துவதாக ஒரு மாபெரும் பொய்யை கட்டவிழ்த்துள்ளனர். (அதை இன்ஷா அல்லாஹ் பிறகு விவரிப்பேன்)

மேலும் டென்மார்க் பத்திரிக்கைக்காரன் நபியவர்களை நபி என்றும், புனிதர் என்றும் நம்பாமல் இஸ்லாமிய விரோதியாக இருந்ததால் அவனை எதிர்த்தீர்களே! சுன்னத் ஜமாஅத்தினர்கள் முஸ்லிம் என்கிற காரணத்தினால் அவர்கள் மவ்லிதில் நபி (ஸல்) அவர்களை இழிவாகவும், கேலியாகவும் பாடி நபியை இழிவு படுத்தியதை எதிர்க்காமல் இருக்கிறீர்களா? என்று பொய் கூறி, அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் மீது அளவுக்கதிமான அன்பு இருப்பதை போன்று நீலிக்கண்ணீர் வடிக்கின்றனர்.

ஆனால் உண்மை என்ன? டென்மார்க் பத்திரிக்கைகாரன் நபியவர்களை இழிவுபடுத்தியதை விடவும் மேலாக இறைவனையும், இறை வேதத்தையும், இறைத்தூதர்களையும், குறிப்பாக நபி (ஸல்) அவர்களையும் கேவலப்படுத்தி த.த.ஜ. தலைவர் பி.ஜே. மிகக்கேவலமாக எழுதியும், பேசியும் வருகிறாரே! அதை எதிர்த்து அவரை ஏன் நீங்கள் கண்டிக்கவில்லை. போராட்டம் நடத்தவில்லை. சரி!

ஒரு பேச்சிற்கு கண்டிக்காமல் மவ்னமாக இருந்தாலாவது பரவாயில்லை. ஆனால் அவரின் அந்த இழிவான செயலை வஹ்ஹாபிகள் அனைவரும் சேர்ந்தல்லவா ஏற்றுக் கொள்கிறீர்கள்!

உங்கள் தலைவர்கள்; இஸ்லாமிய இளைஞர்களின் மூளையை சலவை செய்து அவர்களின் இரத்தத்தை உறிஞ்சி இரத்த தானம் செய்தும்,

வறுமை வாழ்க்கை நீங்குவதற்காக பெற்றோர்கள் தமது பிள்ளைகளை சம்பாதிப்பதற்காக வெளிநாடுகளுக்கு அனுப்பி, பின்பு தம் பிள்ளை தமக்கு பணம் அனுப்புவான், நம் வறுமை நீங்கும் என்ற கனவில் இருக்கும் போது… அந்த இளைஞர்களையும் விட்டு வைக்காமல் அவர்களுக்கும் மறக்காமல் மூளை சலவை செய்து, அதனால் அவன் வறுமையில் வாடும் தம் பெற்றோருக்கு பணம் அனுப்பாமல் மற்றோருக்கு பண உதவி (?) வழங்கச் செய்து, அதை போட்டோ எடுத்து உங்களது உணர்வு பத்திரிக்கையில் வெளியிட்டும், இன்னும் இது போன்ற சில காரியங்களை செய்வதால் அது உங்கள் கண்களை மறைத்துவிட்டதா?

இஸ்லாத்தை தூய வடிவில் தருகிறோம் என்ற பெயரில் இஸ்லாத்தையே கலங்கப்படுத்திக் கொண்டிருக்கின்ற நீங்களா சுன்னத் ஜமாஅத்தினர் நபியை இழிவுபடுத்துகிறார்கள் என்று கூறுகின்றீர்கள்.

எங்கள் தலைவரும் நாங்களும் எங்கே நபியை இழிவு படுத்தியுள்ளோம் என்பதை உங்களால் நிரூபிக்க முடியுமா? என்று நீங்கள் புலம்புவது எனக்கு நன்கு புரிகிறது. உங்கள் தலைவர் பி.ஜே. இறைவனையும், இறை வேதத்தையும், இறைத்தூதர்களையும், குறிப்பாக நபி (ஸல்) அவர்களையும் கேவலப்படுத்தி எழுதிய, பேசிய அவலங்களை இப்பொழுது கூறுகிறேன்.

நபிமார்களை இழிவுபடுத்திய த.த.ஜ.க்கள்

1. பி.ஜே. அவரின் தர்ஜமாவில் 8 வது பதிப்பில் 1248 வது பக்கத்தில் நமது பெற்றோர்களான ஆதம் (அலை), ஹவ்வா (அலை) அவர்களை சுவனத்தில் நிர்வாணிகளாக இருந்ததாக சித்தரித்துள்ளார்.

2.பி.ஜே. அவரின் தர்ஜமாவில் 8வது பதிப்பில் 646ஆம் பக்கத்தில் அல்குர்ஆன் 21/87வது வசனத்தில் யூனுஸ் (அலை) அவர்களை காஃபிராக சித்தரித்துள்ளார்.

3. பி.ஜே. அவரின் தர்ஜமாவில் 8 வது பதிப்பில் 1465 ஆம் பக்கத்தில் மூஸா (அலை) அவர்களை இனவெறிப் படுகொலை செய்தவராக சித்தரித்துள்ளார்.

4. பி.ஜே. அவரின் தர்ஜமாவில் 8வது பதிப்பில் 511ஆம் பக்கத்தில் அல்குர்ஆன் 12/24 வது வசனத்திலும், 1295வது பக்கத்திலும் யூசுஃப் (அலை) அவர்கள் அடுத்தவரின் மனைவியை விபச்சாரம் செய்ய நாடியவராக சித்தரித்துள்ளார்.

5.பி.ஜே. அவரின் தர்ஜமாவில் 8வது பதிப்பில் 1374ஆம் பக்கத்தில் தாவூத் (அலை) அவர்கள் அடுத்தவரின் சொத்தை அபகரித்ததாக சித்தரித்துள்ளார்.

6. பி.ஜே. அவரின் தர்ஜமாவில் 8வது பதிப்பில் 37ஆம் பக்கத்தில் இறைவனையும், இறைத்தூதர் (ஸல்) அவர்களையும் மொழி வெறியர்களாக சித்தரித்துள்ளார்.

7.பி.ஜே. அவரின் தர்ஜமாவில் 8 வது பதிப்பில் 1431 ஆம் பக்கத்தில் நபி (ஸல்) அவர்களை மனநிலை பாதிக்கப்பட்டவராக (அதாவது பைத்தியமாக சித்தரித்து நபி (ஸல்) அவர்களுக்கு
சூனியம் வைக்கப்பட்ட ஹதீஸை மறுத்துள்ளார். மேலும் பிப்ரவரி 2012 ல் வெளியான ஏகத்துவ(?) மாத இதழில் 56 ஆம் பக்கத்தில் மேற்படி ஹதீஸை மறுப்பதற்காக 'நபி (ஸல்) அவர்கள் ஆறு மாத காலம் பைத்தியமாக இருந்துள்ளார்கள்' என்று கூறியுள்ளனர்.
8. நபி (ஸல்) அவர்கள் உம்மு ஹராம் பின்த் மல்ஹான் (ரளி) என்ற பெண்ணின் வீட்டில் தங்கியதாக வரும் புகாரி முஸ் லிமுடைய ஆதாரப்பூர்வமான ஹதீஸை மறுப்பதற்காக பிப்ரவரி 2012 ல் வெளியான ஏகத்துவ(?) மாத இதழில் 56 ஆம் பக்கத்தில் 'நபி (ஸல்) அவர்கள் அந்நியப் பெண்ணுடன் தனியாக இருந்தார்கள் என்று கூறி நபி (ஸல்) அவர்களை ஒழுக்கக்கேட்டுடையவராக சித்தரித்துள்ளனர்.
9. நபி (ஸல்) அவர்கள் 13 ஆண்டுகளுக்கும் மேலாக நுணுக்கமான இணைவைப்பை அறியாமல் இருந்தார்கள் என்றும், அக்காலங்களில் நுணுக்கமான இணைவைப்பை அனுமதித்தார்கள் என்றும் கூறி நபி (ஸல்) அவர்களை முஷ்ரிக்காக சித்தரித்துள்ளார்.
இன்னும் ஏராளமான நபிமார்களை பி.ஜே. இழிவுபடுத்தியுள்ளார். அவை அனைத்தையும் மக்களுக்கு வெளிச்சம் போட்டு காட்டுவதற்காக 'நபிமார்களை இழிவுபடுத்தும் விஷக்கிருமிகள்' என்ற தலைப்பில் ஒரு நூலை எழுதிக்கொண்டிருக்கிறேன். இன்ஷா அல்லாஹ் கூடிய விரைவில் அந்நூல் வெளியிடப்படும்.
- சுப்ஹான மவ்லித் (தவறான வாதங்களும் , தக்க பதில்களும்)
மவ்லவி அல்ஹாஃபிழ் A. முஹம்மது முஸ்தபா மஸ்லஹி M.A

## மவ்லிதைப் பற்றி இழிவாகவும், கேலியாகவும் கிண்டலடித்தவரின் நிலை (பதிவு 9)

மவ்லித் அந்நபி ﷺ மஜ்லிஸை அவமதித்ததன் காரணமாக பக்கவாதத்தால் பாதிக்கப்பட்ட மனிதர் - பலஸ்தீனின் ஹிப்ரோன் நகரில் நிகழ்ந்த சம்பவம்
செய்யித் முஹம்மத் அலவி அல்-மாலிக்கி (றஹிமஹுல்லாஹ்) அவர்கள் சொல்கிறார்கள், அவர்களது பாட்டனார் செய்யித் அப்பாஸ் (றஹிமஹுல்லாஹ்) அவர்கள் ஒருமுறை பலஸ்தீனின் ஹிப்ரோன் நகரில் நடைபெற்ற மவ்லித் மஜ்லிஸில் கலந்து கொண்டார்கள்.
அம்மஜ்லிஸில் பலவீனமான 80 வயது மதிக்கத்தக்க ஒரு முதியவர் மவ்லித் மஜ்லிஸ் முழுவதும் நின்று கொண்டே இருந்தார்.
அது பற்றி அந்த முதியவரிடம் செய்யித் அப்பாஸ் (றஹிமஹுல்லாஹ்) அவர்கள் கேட்டார். அதற்கு அந்த முதியவர்,"மவ்லித் மஜ்லிஸில்களில் கலந்து கொள்ளும் மனிதர்களை கேலி செய்வதையும், விமர்சிப்பதையும் நான் வழக்கமாக்கி கொண்டிருந்தேன். அதிலும் முக்கியமாக அம்மஜ்லிஸ்களில் நபிகள் நாயகம் ﷺ அவர்களை நின்று கொண்டு புகழ்ந்தவர்களை கடுமையான முறையில் கேலியும், விமர்சனமும் செய்து வந்தேன். ஒரு நாள் அவர்களை பித்அத் செய்யும் கூட்டத்தினர், ஷைத்தானின் கூட்டத்தினர் என்றும் கூறி கேலி செய்தேன். அந்த நாள் இரவு தூங்கும் போது ஒரு கனவு கண்டேன், அதில் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் ஒரு மவ்லித் மஜ்லிஸிற்கு வந்தார்கள். அங்குள்ள அனைவரும் நபிகள் நாயகம் ﷺஅவர்களை வரவேற்று நோக்கில் எழுந்து நின்றார்கள். நபிகள் நாயகம் ﷺ அவர்கள் என்னிடம் வந்து , "நீங்கள் அமருங்கள்" என்று கூறினார்கள். நான் தூக்கத்தில் இருந்து விழித்த போது என்னால் எழும்ப முடியாமல் இருந்தது. நான் முழுமையாக பக்கவாதத்தால் பாதிக்கப்பட்டிருந்தேன்.
நான் பல ஆண்டுகளாக , பல மருத்துவர்களிடம் காட்டியும் குணமாகவில்லை. இறுதியில் பலஸ்தீனின் பெரும் வலியாக இருந்த, செய்ஹ் காலில் அல்-காலிதி (றஹிமஹுல்லாஹ்) அவர்களை சந்தித்து, அவர்களிடம் இது பற்றி கூறினேன்.

அதற்கு செய்ஹ் அவர்கள், "நீங்கள் நபிகள் நாயகம் ﷺ அவர்களை சங்கடத்துக்கு ஆளாக்கி இருக்கின்றீர்கள்" என்று கூறினார்கள்.
எனவே நான் மவ்லித் மஜ்லிஸில்களில் கலந்து கொள்பவர்களை ஒருபோதும் கேலியும் விமர்சனமும் செய்ய மாட்டேன் என்றும், நான் மவ்லித் மஜ்லிஸில்களில் முழுவதும் நின்ற நிலையிலேயே இருப்பேன் என்றும் எனக்குள் சத்தியம் செய்து கொண்டேன்.
அந்த முதியவர் மேலும் கூறினார். " நான் அந்த நாளில் உண்மையாகவே சத்தியம் செய்து கொண்டேன். அந்த நாள் இரவு நான் முன்பு கண்ட அதே கனவைக் கண்டேன். இந்த முறை நபிகள் நாயகம்ﷺ அவர்கள் மவ்லித் மஜ்லிஸிற்குள் வந்து , என்னிடம் வந்து "இப்போது உங்களுக்கு எழுந்திருக்க முடியும்"என்று கூறினார்கள். எனவே நான் எழுந்தேன். அல்லாஹ் ஸுப்ஹானவத்தஆலாவின் கருணையால் நான் எழுந்து நின்றேன். முழுமையாக குணமடைந்தேன். " என்றார்.
இந்த சம்பவத்தை செய்யித் முஹம்மத் அலவி அல்-மாலிக்கி (றஹிமஹுல்லாஹ்) அவர்கள் , அவர்களின் தந்தையார் செய்யித் அலவி அல்-மாலிக்கி (றஹிமஹுல்லாஹ்) அவர்களின் ஊடாகவும், செய்யித் அலவி அல்-மாலிக்கி (றஹிமஹுல்லாஹ்) அவர்கள், அவர்களின் தந்தை செய்யித் அப்பாஸ் அல்-மாலிக்கி (றஹிமஹுல்லாஹ்) ஊடாகவும் அறிவிக்கிறார்கள்.
இது புனித மக்கா நகரம் ஷெரீப் ஹுசைனின் ஆளுகையின் கீழ் இருந்த போது (1908 -1924) நடைபெற்ற நிகழ்வாகும்.
பலஸ்தீனின் பைத்துல் முகத்தஸ் வளாகத்தில் அமைந்துள்ள மஸ்ஜித் அஸ்ஸஹ்ரா பள்ளிவாசல் ( Dome of the rock) புணர்நிர்மானம் செய்யப்பட்ட பின்னர் அதனை கண்காணிப்பதற்காக ஷெரீப் ஹுசைனால் செய்யித் அப்பாஸ் அல்-மாலிக்கி (றஹிமஹுல்லாஹ்) அவர்கள் பலஸ்தீனுக்கு அனுப்பி வைக்கப்பட்டார்கள்.
அதன் பின்னர், ஹிப்ரோன் நகரில் உள்ள செய்யிதினா இப்ராஹிம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் மக்பராவை ஸியாரத் செய்ய சென்றார்கள். அந்த பயணத்தின் போதே மேற்படி இந்த சம்பவம் இடம்பெற்றது.
Murshid Shaheel பதிவிலிருந்து

## பள்ளிவாசலில் கவி பாடலாமா ? (பதிவு 10)

பள்ளியில் கவி பாடுவது கூடாது. அதை நபி (ஸல்) அவர்கள் தடுத்துள்ளார்கள். எனவே பள்ளிவாசலில் மவ்லிது கவி பாடுவது நபி (ஸல்) அவர்களின் தடையை மீறுவதாகும் என்ற குற்றச்சாட்டை பின் வருமாறு வஹ்ஹாபிகள் கூறுகின்றனர்.
பள்ளியில் பழிக்குப் பழி கொலை செய்வதையும், அதில் கவிகள் பாடுவதையும், (அல்லாஹ்வுடைய) தண்டனைகளை நிறைவேற்றுவதையும் நபி (ஸல்) அவர்கள் தடை செய்தனர். அறிவிப்பாளர் : ஹகீமுப்னு ஹிசாம் (ரழி), நூல் : அபூதாவூத்
நபி (ஸல்) அவர்கள் பள்ளியில் விற்பதையும், வாங்குவதையும், தவறிவிட்டதைத் தேடுவதையும், கவிபாடுவதையும், வெள்ளிக் கிழமை ஜும்ஆவுக்கு முன்னர் அங்கு கூட்டமாகக் கூடுவதையும் தடை செய்தனர். அறிவிப்பாளர் : அம்ருப்னு ஷுஐப் (ரழி), நூல் : ஸுனன்,
மக்களுக்கு நல்லுபதேசமாக பள்ளியிலோ, வெளியிலோ நபி (ஸல்) அவர்கள் கவிபாடியதாகவோ, கவிபாடச்சொன்னதாகவோ, தோழர்கள் பாடியதாகவோ எந்த ஆதாரமும் இல்லை. பள்ளியில் கவிபாடுவதைத் தடை செய்தார்கள் என்றுதான் ஹதீதுகளில் காணப்படுகின்றன.
நூல் : அந்நஜாத், ஏப்ரல் 2005, பக்கம் - 3,4.
அந்நஜாத், ஏப்ரல் 2006, பக்கம் - 7

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஸ்ஸான் (ரளி அவர்களுக்காக பள்ளிவாசலிலே ஒரு மிம்பரை தயார் செய்தார்கள் அதன் மீது ஹஸ்ஸான் (ரளி) அவர்கள் நின்று கொண்டு நட (ஸல்) அவர்களைப் புகழ்ந்து கவிபாடுவார்கள்.
அல்லது நபி (ஸல்) அவர்கள் மீது சொல்லப்படுகிற குற்றச்சாட்டுகளுக்கு மறுப்புக் கூறி (காபிர்களை இகழ்ந்து கவி பாடுவார்கள்.
ஹஸ்ஸான் (ரளி) அவர்கள் நபி (ஸல்) அவர்களைப் புகழ்ந்து கவிபாடும் காலமெல்லாம், அல்லது நபி (ஸல்) அவர்கள் மீது சொல்லப்படுகிற குற்றச்சாட்டுகளுக்கு மறுப்புக் கூறி (காபிர்களை இகழ்ந்து) கவி பாடும் காலமெல்லாம் ரூஹுல் குதுஸ் (ஆகிய ஜிப்ரீல் (அலைஹி ஸ்ஸலாம்) அவர்களின் மூலம் நிச்சயமாக ஹஸ்ஸானை அல்லாஹ் வலுப்படுத்துவான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
ஆயிஷா (ரளி) நூல் : திர்மிதி 2846, அபூதாவூத் 5015
ஜாபிருப்னு ஸமுரா (ரளி) அவர்கள் கூறுகிறார்கள்; நான் 100 தடவைக்கும் மேலாக பள்ளிவாசலில் நபி (ஸல்) அவர்களுடன் அமர்ந்துள்ளேன். அப்பொழுது நபித்தோழர்கள் (நல்ல) கவிதையையும், ஜாஹிலிய்யா (மடமைக்) காலத்தில் (சிலை வணக்கம் சம்பந்தமாக) நடைபெற்ற (வேடிக்கையான) விஷயங்களை நினைவுபடுத்தியும் பேசிக்கொள்வார்கள். சில சமயம் அவர்களுடன் சேர்ந்து நபி (ஸல்) அவர்களும் சிரிப்பார்கள்.
ஜாபிருப்னு ஸமுரா (ரளி) நூல்: அஹ்மது 20853, 21010, திர்மிதி
2850
- சுப்ஹான மவ்லித் (தவறான வாதங்களும் , தக்க பதில்களும்)
மவ்லவி அல்ஹாஃபிழ் A. முஹம்மது முஸ்தபா மஸ்லஹி M.A

## மவ்லிது ஓதுவதால் நன்மை கிடைக்குமா? ( பதிவு11)

தமிழக முஸ்லிம்களில் பெரும்பாலோர் மவ்லிதுகள் எனும் பாடல்களைப் புனிதமான வணக்கமாக எண்ணி ஓதி வருகின்றனர்.
எந்த ஒரு காரியமும் வணக்கமாக கருதப்பட வேண்டுமானால், அதைச் செய்வதால் மறுமையில் ஏதேனும் நன்மை கிடைக்கும் என்று நம்ப வேண்டுமானால், அந்தக் காரியம் நபி (ஸல்) அவர்களால் கற்றுத்தரப்பட்டிருக்க வேண்டும்.
அல்லது அவர்களது முன்னிலையில் அக்காரியம் நிகழ்ந்து அதை அவர்கள் அங்கீகரித்து இருக்க வேண்டும். அவ்வாறு இல்லாத எந்தக் காரியமும் ஒரு வணக்கமாக மறுமையில் நன்மையளிப்பதாக ஆக முடியாது. இது இஸ்லாத்தின் அடிப்படை விதி.
நபி (ஸல்) அவர்களுக்குப் பின் ஒரு வணக்கத்தை மற்றவர்களும் உருவாக்கலாம் என்று யாரேனும் கருதினால், நபி (ஸல்) அவர்கள் வணக்கங்களை முழுமையாகக் கற்றுத்தரவில்லை என்று அவர் கருதுகிறார். நபி (ஸல்) அவர்களுக்குப் பின் மற்றவர்களுக்கும் வஹீ வரக்கூடும் என்றும் அவர் கருதியவராகிறார்...
இன்றைய தினம் உங்கள் மார்க்கத்தை உங்களுக்காக நிறைவு செய்துவிட்டேன். எனது அருளை உங்களுக்கு முழுமைப்படுத்தி விட்டேன். இஸ்லாத்தை உங்களுக்கான வாழ்க்கை நெறியாகப் பொருந்திக் கொண்டேன்.(குர்ஆன் 5:3)
நபி (ஸல்) அவர்கள் இவ்வுலகில் வாழும் பொழுதே இம்மார்க்கத்தை முழுமைப்படுத்திவிட்டதாக அல்லாஹ் மேற்கண்ட வசனத்தில் கூறுகின்றான்.
நபி (ஸல்) அவர்கள் காலத்தில் இந்த மவ்லிதுகள் இருக்கவில்லை. அல்லாஹ்வால் நேரடியாக முழுமைப்படுத்தப்பட்ட மார்க்கத்தில் மவ்லிதுகள் இருக்கவில்லை என்பதே மவ்லிதுகளை நிராகரிப்பதற்கு போதுமான காரணமாக உள்ளது என பி.ஜே. கூறியுள்ளார்."
நூல் : சுப்ஹான மவ்லிது ஓர் ஆய்வு, ஆசிரியர்: பி.ஜே. பக்கம் 3,4,5
நமது மறுப்பு:

எந்த ஒரு காரியமும் வணக்கமாக கருதப்பட வேண்டுமானால் அதைச் செய்வதால் மறுமையில் ஏதேனும் நன்மை கிடைக்கும். என்று நம்ப வேண்டுமானால் அந்தக் காரியம் நபி (ஸல்) அவர்களால் கற்றுத்தரப்பட்டிருக்க வேண்டும். அல்லது அவர்களது முன்னிலையில் அக்காரியம் நிகழ்ந்து அதை அவர்கள் அங்கீகரித்து இருக்க வேண்டும். அவ்வாறு இல்லாத எந்தக் காரியமும் ஒரு வணக்கமாக மறுமையில் நன்மையளிப்பதாக ஆக முடியாது. இது இஸ்லாத்தின் அடிப்படை விதி என்று பி.ஜே. கூறியுள்ளார்.

அவர் கூறிய விதிப்பிரகாரமே சுப்ஹான மவ்லிதை (நபி புகழ் பாடுவதை ) நற்காரியம் என்றும், அதை பாடுவதினால் நன்மை கிடைக்கும் என்று தான் கூறவேண்டும். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் ஹஸ்ஸான் (ரளி) அவர்களிடம் தன்னை புகழ்ந்து பாடும்படி கூறியுள்ளார்கள்.

ஹஸ்ஸான் (ரளி) அவர்கள் கவிபாடும் பொழுது; நபி (ஸல்) அவர்களை புகழ்வதால் நன்மை கிடைக்கும் என்று நபிக்கு முன்னிலையிலேயே பாடியும் உள்ளார்கள்.

ஹஸ்ஸான் (ரளி) அவர்கள் கூறுகிறார்கள்:

(இறைமறுப்பாளர்களே!) முஹம்மது (ஸல்) அவர்களை இகழ்ந்து கவிபாடுகிறீர்களா? அதற்கு பதிலளிக்கும் வகையில் அவர்களை நான் புகழ்ந்து கவிபாடுவேன். மேலும் அல்லாஹ்விடத்திலே அதற்கு மகத்தான கூலி இருக்கிறது.

அறிவிப்பாளர்: ஆயிஷா (ரளி), நூல் : முஸ்லிம் 4545

மேலும் நபிபுகழ் பாடுவதினால் நபி (ஸல்) அவர்களின் நேசம் கிடைக்கிறது என்று நபி (ஸல்) அவர்களே கூறியுள்ளார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மதீனாவின் ஒரு பகுதியை கடந்து சென்றார்கள்.அப்பொழுது சில சிறுமிகள் தஃப் அடித்து பாட்டுப் பாடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பின்வருமாறு பாடினார்கள்.

நாங்கள் பனூ நஜ்ஜார் குடும்பத்தைச் சார்ந்த சிறுமிகள். முஹம்மது (ஸல்) அவர்கள் சிறந்த அண்டைவீட்டுக்காரர் ஆவார்கள்.

(இதைக்கேட்ட) நபி (ஸல்) அவர்கள்; நிச்சயமாக நான் உங்களை நேசிக்கிறேன் என்பதை அல்லாஹ் அறிகிறான் எனக் கூறினார்கள். அறிவிப்பாளர் : அனஸ் (ரளி), நூல் : இப்னு மாஜா 1899

எனவே உபரியான தொழுகை, நோன்பு, தர்மம், குர்ஆன் ஓதுதல், பிறருக்கு உதவுதல் போன்ற நற்செயல் புரிந்தால் எவ்வாறு இறைவனிடமிருந்து நன்மை கிடைக்குமோ அது போன்றே மவ்லித் (நபிபுகழ்) பாடும்போதும் இறைவனிடமிருந்து நன்மைகள் கிடைக்கின்றன.

கேள்வி : மவ்லிது ஓதுவது உபரியான வணக்கத்தைப் போன்ற
நன்மையான காரியம் என்றால் அதை தினசரி ஏன் ஓதுவதில்லை?

பதில் : அதை மவ்லிது ஓதுவது நற்காரியமாக இருந்தாலும் அதை தினசரி ஓத வேண்டும் என்கிற கட்டாயமில்லை. ஏனெனில் உபரியான வணக்கத்தைப் போன்ற நற்காரியம் என்று தான் கூறுகிறோம்.

எனவே உபரியான வணக்கத்தை தினசரி செய்வதும், ஏதேனும் நாளில் செய்வதும் அவரவர் விருப்பத்தைப் பொருத்ததாகும். அதுபோலவே மவ்லிதை தினசரி ஓதுவதும், ஏதேனும் ஒரு நாளில் ஓதுவதும் அவரவர் விருப்பத்தைப் பொருத்ததாகும்.

குர்ஆன் ஓதுவதும் வணக்கம் தான். அதையே தினசரி ஓதிக் கொண்டே இருக்க வேண்டும் என்று யாரையும் கட்டாயப்படுத்தக்கூடாது. அது போல் மார்க்கத்தை எடுத்துச் சொல்வதும் நன்மையை பெற்றுத் தருகிற நற்காரியம் தான். அதையும் மக்களிடத்தில் அடிக்கடி சொல்லி அவர்களை சடைவில் ஆழ்த்தக்கூடாது.

(இக்ரிமா (ரஹ்) அவர்களிடம்) இப்னு அப்பாஸ் (ரளி) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்; ஒவ்வொரு ஜுமுஆவிலும் ஒரு தடவை வாரம் ஒரு முறை) மக்களுக்கு மார்க்கத்தைச் சொல்லுங்கள். அதை நீங்கள் மறுத்தால் (வாரம்) இரு முறை (மக்களுக்கு மார்க்கத்தைச் சொல்லுங்கள்.) அதை விடவும் அதிகப்படுத்த நீங்கள் நாடினால் (வாரம்) மூன்று முறை (மக்களுக்கு மார்க்கத்தைச் சொல்லுங்கள்.)

(அடிக்கடி மார்க்கத்தைச் சொல்லி) இந்த குர்ஆனில் மக்களுக்கு சடைவை ஏற்படுத்திவிடாதீர்கள். ஒரு கூட்டம் அவர்களின் பேச்சிலிருந்தும் ஏதேனும் பேச்சில் ஈடுபட்டிருக்கும் நிலையில் நீங்கள் அவர்களிடம் சென்று, அவர்களிடம் மார்க்கத்தை எடுத்துச் சொல்லி, அவர்களின்
பேச்சை துண்டித்து, அதன் மூலம் அவர்களை சடைவில் நீங்கள் ஆழ்த்துபவராக உங்களை நான் ஒரு போதும் பெற்றுக் கொள்ளக்கூடாது.
எனினும் மவ்னமாக இருங்கள். அவர்கள் மார்க்கத்தை சொல்லும்படி உங்களுக்கு ஏவினால் மார்க்கப் பேச்சை கேட்பதற்கு அவர்கள் ஆசைவுடையவராக இருக்கும் நிலையில் அவர்களுக்கு மார்க்கத்தை சொல்லுங்கள்.
துஆவில் (நேரத்தை வீணடித்து சிரமப்பட்டு) எதுகை மோனையை உருவாக்குவதில் கவனமாக இருங்கள். அக்காரியத்தை விட்டும் தவிர்ந்து கொள்ளுங்கள். ஏனெனில் நிச்சயமாக நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் காலத்திலும், அவர்களின் தோழர்களின் காலத்திலும் வாழ்ந்துள்ளேன். அவர்களில் யாரும் (நேரத்தை வீணடித்து சிரமப்பட்டு எதுகை மோனையை உருவாக்குகிற) அக்காரியத்தை செய்யவில்லை என்று இப்னு அப்பாஸ் (ரளி) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பாளர் : இக்ரிமா (ரஹ்), நூல் : புகாரி 6337
- சுப்ஹான மவ்லித் (தவறான வாதங்களும் , தக்க பதில்களும்)
மவ்லவி அல்ஹாஃபிழ் A. முஹம்மது முஸ்தபா மஸ்லஹி M.A

## மவ்லிது ஓதுவது வழிகேடான பித்அத்தா ? (பதிவு 12)

மவ்லிது என்ற செயல் வழிகேடான பித்அத்தாகும் என்று வஹ்ஹாபிகள் கூறுகின்றனர். மேலும் அதற்கு கீழ் கண்டவாறு ஆதாரம் கூறுகின்றனர்.
'நமது உத்தரவின்றி யாரேனும் ஒரு அமலைச் செய்தால் அது நிராகரிக்கப்படும்' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர்: ஆயிஷா (ரலி), நூல்: முஸ்லிம் 3243
'நமது இந்த மார்க்கத்தில் இல்லாத ஒன்றை யாரேனும் உருவாக்கினால் அது நிராகரிக்கப்படும்' எனவும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர்:ஆயிஷா (ரலி), நூல்: புகாரி 2697, முஸ்லிம் 3242
மேற்கண்ட இரண்டு நபி மொழிகளும் கூறுவது என்ன? நாம் எந்த ஒரு அமலை (நல்லறத்தைச்) செய்வதாக இருந்தாலும் அதுபற்றி நபி (ஸல்) அவர்கள் ஏதும் கட்டளை பிறப்பித்துள்ளார்களா? என்று பார்க்க வேண்டும். அவர்களது கட்டளை இல்லாமல் எந்த ஒரு அமலைச் செய்தாலும் அது அல்லாஹ்வால் நிராகரிக்கப்படும் என்பதைத்தான் மேற்கண்ட நபி மொழிகள் கூறுகின்றன என பி.ஜே. கூறியுள்ளார். நூல் : சுப்ஹான மவ்லிது ஓர் ஆய்வு, ஆசிரியர்: பி.ஜே. பக்கம் 5
மேலும் கீழ் கண்ட ஹதீஸ்களையும் பி.ஜே. தனக்கு ஆதாரமாக
கூறுகிறார்;
'செய்திகளில் சிறந்தது அல்லாஹ்வின் வேதமாகும். வழிகளில் சிறந்தது முஹம்மதுடைய வழியாகும். (மார்க்கத்தில் புதிதாக உருவாக்கப்பட்டவை காரியங்களில் மிகவும் கெட்டதாகும்.ஒவ்வொரு அனாச்சாரமும் வழிகேடாகும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர். அறிவிப்பவர்: ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி), நூல்: முஸ்லிம் 1435
செய்திகளில் உண்மையானது அல்லாஹ்வின் வேதமாகும். வரிகளில் அழகியது முஹம்மதின் வழியாகும். (மார்க்கத்தில்) திதாக உருவாக்கப்பட்டவை காரியங்களில் மிகவும் கெட்டதாகும். புதிதாக உருவாக்கப்பட்ட ஒவ்வொன்றும் பித்அத் (அனாச்சாரம்) ஆகும். ஒவ்வொரு வழிகேடும் நரகத்தில் சேர்க்கும்' எனவும் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர். அறிவிப்பவர்: ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி), நூல்: நஸயீ1560
இவ்விரண்டு நபி மொழிகளும் கூறுவது என்னவென்பதை முஸ்லிம்கள் கவனமாக சிந்திக்க வேண்டும்.
நபி (ஸல்) அவர்களுக்குப் பின் புதிதாக உருவாக்கப்பட்டவை
* மிகவும் கெட்ட காரியம்.

* வழிகேடு.
* நரகத்தில் சேர்க்கும்
என்றெல்லாம் கடும் எச்சரிக்கை இதில் உள்ளது என்று பி.ஜே. கூறியுள்ளார். நூல் : சுப்ஹான மவ்லிது ஓர் ஆய்வு, ஆசிரியர் : பி.ஜே. பக்கம் 6
நமது மறுப்பு :
பித்அத் என்றால் என்ன?, பித்அத் எத்தனை வகை?, எந்த பித்அத் மறுக்கப்படும்? என்கிற ஞானம் இல்லாததினால் தான் மேற்கண்ட ஹதீஸ்களை தவறாக விளங்கியுள்ளார்.
பித்அத் என்றால் என்ன ?
யார் நமது மார்க்கத்திலே இல்லாத காரியத்தை புதிதாக உருவாக்குவாரோ அது மறுக்கப்படும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.அறிவிப்பாளர் : ஆயிஷா (ரளி), நூல் : புகாரி 2697, முஸ்லிம் 3242
நமது மார்க்க விஷயம் எந்த காரியத்தில் இல்லையோ அத்தகைய செயலை யாராவது செய்தால் அது மறுக்கப்படும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர் : ஆயிஷா (ரளி), நூல் : முஸ்லிம் 3243
மேற்கூறப்பட்ட இரு நபிமொழிகளும் நமக்கு உணர்த்தும் விஷயங்கள் என்ன?
* மார்க்கத்தில் இல்லாத காரியத்தை புதிதாக உருவாக்குவது மறுக்கப்பட வேண்டிய வழிகேடான பித்அத்.
* அப்படியென்றால் மார்க்கத்தில் உள்ள ஒரு காரியத்தை மார்க்கத்திற்கு முரணின்றி புதிதாக உருவாக்குவது வரவேற்கப்பட வேண்டிய அழகிய பித்அத் என்பதை உணர்த்துகிறது.
* நாம் ஒரு அழகிய காரியத்தை புதிதாக செய்யும் போது அதில் மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட விஷயம் இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட விஷயம் அதில் இல்லையென்றால் அது மறுக்கப்பட வேண்டிய வழிகேடான பித்அத் ஆகும்.
மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட விஷயம் அதில் இருக்குமேயானால் அது பின்பற்றப்பட வேண்டிய அழகிய பித்அத் ஆகும் என்பதை இரண்டாவது ஹதீஸ் உணர்த்துகிறது. மேலும் இக்கருத்தை பின்வரும் நபிமொழி மிகவும் வலுப்படுத்துகிறது.
ஒரு தடவை சில கிராமவாசிகள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அம்மக்களின் மேல் (வறுமையை வெளிப்படுத்தும் விதத்தில்) கம்பளி ஆடை இருந்தது. அவர்களின் மோசமான நிலையை நபி (ஸல்) அவர்கள் பார்த்தார்கள். நிச்சயமாக அம்மக்களுக்கு கடும் தேவை ஏற்பட்டிருந்தது. எனவே அவர்களுக்கு தர்மம் வழங்கும்படி (ஸஹாபா பெரு) மக்களை நபி (ஸல்) அவர்கள் தூண்டினார்கள். அவர்கள் உதவி செய்வதற்கு தாமதித்தார்கள். எனவே நபி (ஸல்) அவர்களின் முகத்தில் கவலை காணப்பட்டது.
பின்பு அன்ஸாரித் தோழர் ஒருவர் தீனார், திர்ஹம் நிறைந்த பண மூட்டையை கொண்டுவந்தார்கள். பின்பு வேறொருவர் (வேறு பல பொருட்களை) கொண்டு வந்தார். பின்பு ஒவ்வொருவராக தொடர்ந்து (பல பொருட்களை) கொண்டு வந்தார்கள். அப்பொழுது நபி (ஸல்) அவர்களின் முகத்தில் சந்தோஷம் காணப்பட்டது. பின்பு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்:
'யார் இஸ்லாத்திலே அழகிய காரியத்தை நடைமுறைப்படுத்து கிறாரோ, மேலும் அவருக்குப் பிறகு அக்காரியம் நடைமுறைப்படுத்தப்பட்டால் அதை செய்தவர்களின் கூலியை போன்று அவருக்கு கிடைக்கும். அதை செய்தவர்களின் கூலிகளிலிருந்து எந்த ஒன்றும் குறைந்துவிடாது.
மேலும் யார் இஸ்லாத்திலே தீய காரியத்தை நடைமுறைப்படுத்துகிறாரோ, மேலும் அவருக்குப் பிறகு அக்காரியம் நடைமுறைப் படுத்தப்பட்டால் அதை செய்தவர்களின் பாவத்தை போன்று அவருக்கு கிடைக்கும். அதை செய்தவர்களின் பாவங்களிலிருந்து எந்த ஒன்றும் குறைந்துவிடாது'.அறிவிப்பாளர் : ஜரீருப்னு அப்தில்லாஹ் (ரளி), நூல் : முஸ்லிம் 4830, 1691
மேற்படி ஹதீஸ் நமக்கு உணர்த்துவது என்ன?
* யார் இஸ்லாத்திலே அழகிய காரியத்தை புதிதாக நடைமுறைப்படுத்துகிறாரோ அதற்கு அழகிய பித்அத் என்று கூறலாம் என்பது மட்டுமல்ல. மாறாக அதற்கு அழகிய சுன்னத் (சுன்னத்துன் ஹஸனத்துன்) என்றும் கூறலாம்.

* யார் இஸ்லாத்திலே அழகிய காரியத்தை புதிதாக நடைமுறைப்படுத்துகிறாரோ அக்காரியம் இவ்வுலகில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் காலமெல்லாம் அதை நடைமுறைப்படுத்தியவருக்கு அதை செய்தவர்களின் கூலியை போன்று கிடைத்துக்கொண்டே இருக்கும்.
கேள்வி :
ஸஹாபாக்கள் தானதர்மம் வழங்கிய பிறகு மேற்படி ஹதீஸை நபி (ஸல்) அவர்கள் கூறியதால் அந்த ஹதீஸ் தான தர்மம் வழங்குவதை மட்டும் தான் குறிக்கும் என்று சில வஹ்ஹாபிகள் கூறுகிறார்களே அதற்கு என்ன பதில்?பதில் :
மார்க்கத்தை முழுவதுமாக கரைத்துக் குடித்துவிட்டோம். எனவே ஸஹாபாக்களுக்குக் கூட மார்க்கம் தெரியாது. எங்களுக்குத்தான் மார்க்கம் தெரியும் என்று பிதற்றித்திரிகிற இது போன்ற அறைகுறைகள் தோன்றுவார்கள் என்பதையும்,
மேலும் இந்த அரைவேக்காடுகள் புதிதாக நடைமுறைப் படுத்தப்பட்ட அழகிய சுன்னத்தை மட்டுமல்ல நபியின் சுன்னத்தையும் கூட பித்அத்தாக ஆக்க முற்படுபவர்கள் என்பதையும் நபி (ஸல்) அவர்கள் நன்கு விளங்கியிருந்ததால் தான் வேறு பல சமயங்களில் எந்த நிகழ்வுமின்றி 'யார் இஸ்லாத்திலே அழகிய காரியத்தை நடைமுறைப் படுத்துகிறாரோ' என்ற ஹதீஸை மட்டும் கூறியுள்ளார்கள்.
"யார் இஸ்லாத்திலே அழகிய காரியத்தை நடைமுறைப்படுத்து கிறாரோ, மேலும் அவருக்குப் பிறகு அக்காரியம் நடைமுறைப் படுத்தப்பட்டால் அதை செய்தவர்களின் கூலியை போன்று அவருக்கு கிடைக்கும். அதை செய்தவர்களின் கூலிகளிலிருந்து எந்த ஒன்றும் குறைந்துவிடாது.
மேலும் யார் இஸ்லாத்திலே தீய தூரியத்தை நடைமுறைப்படுத்துகிறாரோ, மேலும் அவருக்குப் பிறகு அக்காரியம் நடைமுறைப்படுத்தப்பட்டால் அதை செய்தவர்களின் பாவத்தை போன்று அவருக்கு கிடைக்கும். அதை செய்தவர்களின் பாவங்களிலிருந்து எந்த ஒன்றும் குறைந்துவிடாது. அறிவிப்பாளர் : ஜரீருப்னு அப்தில்லாஹ் (ரளி), நூல்: இப்னு மாஜா 203
யார் நல்வழியின் பக்கம் மக்களை அழைக்கின்றாரோ அவரை பின்பற்றியவர்களின் கூலிகளை போன்று கூலிகள் அவருக்கு கிடைக்கும். அதை செய்தவர்களின் கூலிகளிலிருந்து எந்த ஒன்றையும் (இறைவன்) குறைத்துவிடமாட்டான்.
யார் வழிகேட்டின் பக்கம் மக்களை அழைக்கின்றாரோ அவரை பின்பற்றியவர்களின் பாவங்களை போன்று பாவங்கள் அவருக்கு கிடைக்கும். அதை செய்தவர்களின் பாவங்களிலிருந்து எந்த ஒன்றையும் (இறைவன்) குறைத்துவிடமாட்டான் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரளி), நூல் : முஸ்லிம் 4831, அபூதாவூத் 3993, திர்மிதி 2598, இப்னு மாஜா 202
மேலும் ஸஹீஹ் முஸ்லிம் 4830, 1691 வுடைய இந்த ஹதீஸை பொது மக்கள் தவறாக விளங்கிவிடக்கூடாது என்பதற்காகத்தான் ஸஹீஹ் முஸ்லிம் நூலின் விரிவுரையாளர், ஹதீஸ்கலை அறிஞர் இமாம் நவவீ (ரஹ்) அவர்கள் பின் வருமாறு விளக்கம் கூறியுள்ளார்கள்.
பித்அத்தைப்பற்றி இமாம் நவவீ (ரஹ்) அவர்களின்
விளக்கம்
நன்மையான காரியங்களை ஆரம்பித்து வைப்பதை தூண்டுவதும், தீய காரியங்களையும், மோசமான காரியங்களையும் உருவாக்குவதிலிருந்து எச்சரிக்கை செய்வதும் இந்த ஹதீஸிலே இருக்கிறது.
மேலும் 'புதுமையாக உருவாக்கப்படுகிற அனைத்தும் பித்அத்தாகும், எல்லா பித்அத்தும் வழிகேடாகும்' என்ற நபி (ஸல்) அவர்களின் சொல்லை (குறிப்பிட்ட பித்அத் என்று) குறிப்பாக்குவதும் இந்த ஹதீஸிலே இருக்கிறது. உருவாக்கபடுகிற அனைத்தும் பித்அத்தாகும், எல்லா பித்அத்தும் 'புதுமையாக வழிகேடாகும்' என்கிற ஹதீஸின் பொருள்; தீமையான புதுமையும், பழிக்கப்படுகிற பித்அத்தும் ஆகும். நூல் : ஷர்ஹுன் நவவீ அலா முஸ்லிம், பாகம் 3, பக்கம் 461
- சுப்ஹான மவ்லித் (தவறான வாதங்களும் , தக்க பதில்களும்)
மவ்லவி அல்ஹாஃபிழ் A. முஹம்மது முஸ்தபா மஸ்லஹி M.A

## ஒரு துளி கடல், ஒரு துண்டு வானம் 1

---

ஓர் இரவைத் திறந்தேன்
ஏகப்பட்ட மூடிய விரல்கள்
அதிலொரு விரலைத் திறந்தேன்
ஏகப்பட்ட மூடிய இரவுகள் - ஸ்ரீ நேசன்

"புவியின் குறிப்பிட்ட ஓர் இடத்தில் சூரிய ஒளி இல்லாதிருக்கும் காலப்பகுதி இரவு அல்லது இருட்சூழ்வு இருள் சூழ்ந்திருக்கும் நேரமே இரவு. இது சூரியன் மறைவுக்கும், அடுத்த சூரியோதயத்துக்கும் இடைப்பட்ட காலமாகும். ஓர் இரவும் ஒரு பகலும் கொண்டது ஒரு நாள்

பூமி தனது அச்சில் சுழலும்போது ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரு பாதி சூரியனுக்கு எதிர்ப்பக்கத்தில் இருப்பதனால், அப்பக்கத்துக்கு சூரிய ஒளி கிடைப்பதில்லை. இதன் காரணமாக அப் பகுதி இருட்டாக இருக்கும். அத்தகைய பகுதிகளில் அந்த நேரம் இரவாக இருக்கும் என்கிறது விஞ்ஞானம்.

ஆனால் ஆன்மிகம் இரவைப் பற்றி...
وَهُوَ الَّذِىْ جَعَلَ لَـكُمُ الَّيْلَ لِبَاسًا وَّالنَّوْمَ سُبَاتًا وَّجَعَلَ النَّهَارَ نُشُوْرًا

அவன்தான் உங்களுக்கு இரவை ஆடையாகவும், நித்திரையை இளைப்பாறுதலாகவும் ஆக்கியிருக்கின்றான்; இன்னும், அவனே பகலை உழைப்பிற்கு ஏற்றவாறு ஆக்கியிருக்கிறான்.(குர்ஆன் : 25:47)

ஆடை மனிதரது அங்கங்களை மறைப்பது போல் உடலை மறைப்பதால், மறைத்தல் என்ற தன்மை இருளுக்கும் இருக்கிறது என்பதைக் கவனித்து இருளுக்கு ' ஆடை' எனக் கூறப்பட்டிருக்கிறது.

மேலே ஏறுகிற நீராவியின் ஈரத்தால் மூளையின் நரம்புகள் தளர்ச்சியடைவதுதான் தூக்கம். வேலையில்லாமல் ஒய்ந்திருப்பதற்கு 'ஸப்து' என்று பெயர். ஆகவே, தூங்கும் பொழுது மனிதன் வேலையற்று ஓய்ந்திருப்பதால் "தூக்கத்தை சுகம்" என்று கூறப்பட்டது.

நுஷூர் என்பதற்கு இரு விதப் பொருள்களுண்டு; ஜனங்கள் தங்களுக்குரிய ஜீவனோபாயங்களைத் தேடிச் செல்வதால் '"பரவுதல், சிதறுதல்" என்று பொருள் செய்யப்படுகிறது.

இரவு நேரங்களில் தூங்கச் சென்ற மனிதர்களும் மற்றைய ஜீவராசிகளும் காலையில் துயிலெழுவதால் 'எழும்புதல்" என்றும் பொருள் கொள்ளப்படுகிறது.

மரணித்தவர்கள் திரும்பவும் உயிர் பெற்று எழும்புதலுக்கு 'நஷ்ர்' என்று சொல்லப்படுகிறது. தூக்கமும் சிறிய மரணமாக இருக்கிறது. ஆதலால், தூக்கத்தை விட்டு எழும்புதல் மீண்டும் உயிர் பெற்றெழும்புதலுக்கு சமமாக இருக்கிறது.

தூக்கமும் விழிப்பும், மனிதரது மரணத்துக்கும்,அவர்கள் உயிர் பெற்று எழும்புவதற்கும் முன்மாதிரிகளாக இருக்கின்றன என்பது இவ்வாயத்தில் சமிக்ஞை செய்யப்படுகிறது.

ஹளரத் லுக்மான் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தமது புதல்வருக்கு "நீ தூங்கி எழும்புவதைப் போலவே, நீ மரணித்து உயிர் பெற்று எழும்புவாய்" என்று உபதேசித்துள்ளார்கள்.

பனூ இஸ்ராயீலைச் சார்ந்த ஒரு மனிதர் இரவு முழுவதும் நின்று வணங்குவார். காலை உதயமானதும் மாலை வரை எதிரியைச் சந்திக்க போர்க்களம் சென்று போராடுவார். இவ்வாறு அவர் ஆயிரம் மாதங்கள் ஈடுபட்டார்' என முஜாஹித் (ரஹ்) கூறுகிறார்.

ஒரு தடவை நபி (ஸல்) அவர்கள் கூறும் போது 'பனூ இஸ்ரவேலர்களைச் சார்ந்த நபிமார்களான அய்யூப் (அலை), ஸகரிய்யா (அலை), ஹிஸ்கீல் (அலை), யூஷஃபின்நூன் (அலை) ஆகிய நால்வரும், 80 வருடங்கள் கண்ணிமைக்கும் நேரம் கூட இறைவனுக்கு மாறு செய்யாத வண்ணம் இறைவணக்கம் புரிந்து வந்தார்கள்' என்று தெரிவித்தார்கள். இதைக் கேள்விப்பட்ட நபித்தோழர்கள் ஆச்சரியத்தில் உறைந்து போனார்கள்.

உடனே வானவர் ஜிப்ரீல் (அலை) நபிகளாரிடம் இறங்கிவந்து ‘உங்களது சமுதாயம் இந்த நால்வரைக் கண்டு ஆச்சரியப்படுகிறார்கள். எனவே இதைவிட சிறந்த ஒரு பாக்கியத்தை இறைவன் இறக்கி அருள்பாலித்திருக்கிறான்’ என்று கூறி பின்வரும் லைலத்துல் கத்ர் என்கிற மகத்தான ஓர் இரவு சம்பந்தமான அத்தியாயத்தை கூறினார்கள். அறிவிப்பாளர்: அலி பின் உர்வா (ரஹ்)

“நிச்சயமாக நாம் அதை (திருக்குர்ஆனை) கண்ணியமிக்க (லைலத்துல்கத்ர்) இரவில் இறக்கினோம்.

மேலும் கண்ணியமிக்க இரவு என்ன என்பதை உமக்கு அறிவித்தது எது? கண்ணியமிக்க (அந்த) இரவு ஆயிரம் மாதங்களை விட மிக மேலானதாகும்.

அதில் வானவர்களும், ஆன்மா எனும் (ஜிப்ரீலும்) தம் இறைவனின் கட்டளையின்படி (நடைபெற வேண்டிய) சகல காரியங்களுடன் இறங்குகின்றனர். சாந்தி (நிலவியிருக்கும்); அது விடியற்காலை உதயமாகும் வரை இருக்கும் " (குர்ஆன் 97:1-5)

“இதை (திருக்குர்ஆனை) பாக்கியம் நிறைந்த இரவில் நாம் அருளினோம். நாம் எச்சரிக்கை செய்வோராவோம். அதில் (லைலத்துல் கத்ரில்) முக்கியமான ஒவ்வொரு விஷயங்களும் தீர்மானிக்கப்படுகிறது. அக்கட்டளை நம்மிடமிருந்து வந்ததாகும்”. (குர்ஆன் 44:3,4,5).

இரவு நேரங்களில் இறைவனைத் துதித்து நான் பேரின்பம் அடைகிறேன்’ என்று சொல்கிறார் ராபியத்துல் பஸ்ரியா.

மனம் போன போக்கில் வாழ்ந்துகொண்டிருந்த ஒருவன் ‘இறைவன் என்ன செய்துகொண்டிருக்கிறான்?’ என்று கேட்டபோது – முஹ்யித்தீன் பின் அரபியின் முகத்தில் புன்னகை விளையாடிற்று.

‘இறைவன் பகல் நேரத்தில் உன்னைப் போன்ற மனிதர்கள் செய்யும் செயல்களைப் பார்த்து வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறான். இரவு நேரத்தில் எங்களோடு உரையாடிக் கொண்டிருக்கிறான்!’

ஓர் இரவைத் திறந்தேன்
ஏகப்பட்ட மூடிய விரல்கள்
அதிலொரு விரலைத் திறந்தேன்
ஏகப்பட்ட மூடிய இரவுகள் - ஸ்ரீ நேசன்

## ஒரு துளி கடல் ஒரு துண்டு வானம் 2

---

நீலத்தை சூடிக்கொண்டது வானம்
பச்சையை ஏந்திக்கொண்டது வயல்
கறுப்பை வாங்கிக்கொண்டது கொண்டல்
வெண்மையை வாங்கிக்கொண்டது பருத்தி
மஞ்சளை அப்பிக்கொண்டது சந்தனம்
பழுப்பை அணிந்துகொண்டது மரம்
சிவப்பை வரிந்துகொண்டது ரத்தம்
ஏழு வண்ணங்களிலும் கொஞ்சம் திருடி
எடுத்துக்கொண்டது இந்திர தனுசு (வானவில்)
இவனுக்கென்று இல்லாமல் போயிற்று தனி ஒரு நிறம்.
- விக்ரமாதித்யன்

மேற்கண்ட கவிதையை வாசிக்கும்போது எப்போதோ படித்த சிறுவர் கதை ஞாபகத்திற்கு வந்தது .

நீண்ட நெடுங்காலத்துக்கு முன்னர் உலகத்தில் பறவைகள் இருந்தன. ஆனால், அவை எல்லாம் ஒரே வண்ணத்தில் இருந்தன. இப்போது காணப்படுவது போல் சிவப்பு, பச்சை, மஞ்சள் வண்ணத்தில் இல்லை. சொல்லி வைத்தது போல் சாம்பல் நிறத்தில் இருந்தன.

ஒரு வசந்த காலத்தில், பறவைகளின் அரசன் பறவைகளுக்கு அழைப்பு விடுத்தது. அந்த அழைப்பை ஏற்று எல்லாப் பறவைகளும் அரசன் முன்னால் கூடின.
கூட்டமாக கூடி வந்த பறவைகளில் சில கூவின. சில பறவைகள் அகவல் ஒலி எழுப்பின. சில கிரீச் சிட்டன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமான ஒலி எழுப்பி மகிழ்ந்தன. சில பறவைகள் சில மீட்டர் வரை பறந்தன. சில தத்தி தத்தி நடந்தன. சில நொண்டிச் செல்வது போல் நகர்ந்தன. சில பெரிய மனிதர்போல் கம்பீரமாய் உலவின. அவைகள் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தன.
அரசப் பறவை, அவர்கள் எல்லாரையும் ஒரு முறை தனது கண்களைச் சுழற்றிப் பார்த்தது. பின்னர் ஓர் இறக்கையை வானத்தை நோக்கி திருப்பியது. உடனே எல்லா பறவைகளும் வானத்தை அண்ணாந்து பார்த்தன. ஆகா! வானத்தில் ஒரு பெரிய வானவில் தோன்றின. அதன் வண்ணங்களைப் பார்த்து பறவைகள் ஆச்சரியப்பட்டன. ஊதா, கருநீலம், பச்சை, மஞ்சள், காவி, சிவப்பு' என்று அவைகள் சொல்லிச் சொல்லி மகிழ்ந்தன. எழில் மிகு ஏழு வண்ணங்களைப் பார்த்து சில வாயடைத்துப் போய் நின்றன. ஏனென்றால், அப்படி ஓர் அழகான பெரிய வானவில்லை அவர்கள் அதுவரை பார்த்ததே இல்லை.
அந்த வானவில் ஏழு வண்ணங்களிலும் கொஞ்சம் திருடி
எடுத்துக்கொண்டது இந்திர தனுசு (வானவில்) என்கிறது கவிதை .
உங்கள் ஒவ்வொருவருக்கும் நான் ஒரு நிறத்தைக் கொடுக்கப்போகிறேன். உங்களுக்கு எந்த நிறம் பிடிக்குமோ அதை நீங்கள் வானவில்லில் இருந்து நீங்கள் எடுத்துக் கொள்ளலாம்,'' என்று அனுமதி வழங்கியது பறவைகளின் அரசன்.
அடுத்த வினாடி அங்கு ஒரு தள்ளு முள்ளு' ஏற்பட்டது. ஒவ்வொரு பறவையும் தனக்கு பிடித்தமான நிறத்தைப் பறிக்க முயன்றன. எனவே, அவைகள் மற்ற பறவையைத் தள்ளிவிட்டு முன் வந்தன. அதனால் ஏகப்பட்ட குளறுபடி உண்டாயிற்று.
ஒரு கிளி முன்னால் வந்தது, எனக்கு பச்சை வர்ணமே பிடிக்கும்,'' என்று சொல்லி அது பச்சை நிறத்தைப் பெற்றுக் கொண்டது. அதனால் கிளி செழிப்பான ஒரு மரத்தின் பெரிய இலை போல் காணப்பட்டது.
ஒரு குருவி ஓடி வந்தது. அது, எனக்கு மஞ்சள் நிறம்தான் பிடிக்கும்,'' என்று கிரீச்சிட்டது. பின்னர் அது மஞ்சள் நிறத்தை அணிந்து கொண்டது. அதை எல்லாரும் மஞ்சள் குருவி என்று அழைத்தனர்.
எல்லாரையும் தள்ளி விட்டப்படி ஒரு குருவி முன்னால் வந்தது. அது, எனக்கு சிவப்பு வர்ணமே விருப்பமானது,'' என்று சொல்லி அந்த நிறத்தைப் பெற்றுக் கொண்டது. அதை எல்லாரும் செங்குருவி என்று கூப்பிட்டனர்.
இப்படி எல்லா பறவைகளும் தாங்கள் விரும்பிய நிறத்தைப் பெற்றுக் கொண்டன. ஆனால், ஒரே ஒரு சின்னஞ்சிறிய குருவி மட்டும் தனக்கு நிறம் கிட்டாமல் நின்று கொண்டிருந்தது. அதனால் மற்றவர்களைத் தள்ளி விட்டு முன்னால் வர முடியவில்லை.
அரசப் பறவை அந்தக் குருவியைப் பார்த்தது.சின்னஞ்சிறு பறவையே! நீ ஏன் அமைதியாய் அங்கே நிற்கிறாய்? மற்றவர்களைப் போல் நீ ஏன் வர்ணம் கேட்க வில்லை?'' என்று கேட்டது.
வரிசையில் எனது முறை வரும் என்று நான் காத்திருந்தேன்,'' என்று சொன்னது அந்த சின்னஞ்சிறு சிறிய பறவை. எல்லா நிறங்களும் முடிந்துவிட்டதே! என்ன செய்வது?'' என்றது அரசப் பறவை.அதைக் கேட்டதும், அந்த சின்னஞ்சிறு பறவை கண்ணீர் விட்டது.
"அப்படியானால் நான் எப்போதும் இந்த சாம்பல் நிறத்தில் தான் இருக்க வேண்டுமா?'' என்றது.
சின்னஞ்சிறு பறவையே, நீ மற்றவர்களுக்கு விட்டுக் கொடுத்து மிகவும் பொறுமையைக் கடைப்பிடிக்கிறாய்! இப்படிப்பட்ட நீ எப்போதும் சாம்பல் வர்ணத்தில் இருத்தல் கூடாது,'' என்று சொன்ன பறவை, எல்லாப் பறவைகளையும் திருப்பி அழைத்தது. ஒவ்வொரு பறவையிடம் இருந்தும், அது கொஞ்சம் வர்ணத்தை எடுத்து, அந்த சிறிய பறவைக்கு கொடுத்தது. அதனால் அந்த சின்னஞ்சிறிய பறவை, இப்போது மிகவும் அழகாய் காணப்பட்டது.
அதைப் பார்த்து மகிழ்ந்த பறவையின் அரசன், அதற்கு பஞ்சவர்ண கிளி' என பெயர் வைத்தான்.

இப்போது எல்லா பறவைகளும் அந்த சிறிய பறவையைப் பார்த்து மகிழ்ச்சி அடைந்தன. ஏனென்றால், அதுதான் பறவைகளில் எல்லாம் மிக மிக எழிலுடன் திகழ்ந்தது.

وَمَا ذَرَاَ لَـكُمْ فِى الْاَرْضِ مُخْتَلِفًا اَلْوَانُهٗ‌ اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيَةً لِّـقَوْمٍ يَّذَّكَّرُوْنَ

இன்னும், பூமியில் அவன் படைத்திருப்பன பல விதமான நிறங்களையுடைய (செடி கொடிகள், பிராணிகள், பறவைகள், போன்ற)வையுமாகும்; நிச்சயமாக இதில் (அல்லாஹ்வின் அருள் கொடைகளை நன்றியுடன்) நினைவு கூறும் மக்களுக்கு(த் தக்க) அத்தாட்சியுள்ளது. (அல்குர்ஆன் : 16:13)

தன் படைப்புகளுக்கு பலதரப்பட்ட வர்ணங்களை கொடுத்திருந்தாலும் அதிலும் சிறப்புக்குரியது வானவில்லாகும் .

மழைத் துளிகளின் உள்ளே சூரிய ஒளிக்கதிர்கள் ஊடுருவிச் செல்லும்போது வானவில் தோன்றுகிறது.

வானவில்லில், ஊதா (Violet), கருநீலம் (Indigo), நீலம் (Blue), பச்சை (Green), மஞ்சள் (Yellow), ஆரஞ்சு (Orange), சிவப்பு (Red) ஆகிய ஏழு நிறங்கள் உள்ளன. இதை நினைவில் வைத்துக் கொள்ளச் சுருக்கமாக 'விப்ஜியார்' (VIBGYOR) என்கிறோம்.

வானவில்லில் ஏழு நிறங்கள் உள்ளன என்பதைக் கண்டுபிடித்தவர் ஐசக் நியூட்டன் (Isaac Newton).

அடிப்படை நிறங்கள் ஏழு என விஞ்ஞானம் கூறுவதற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் அல்குர்ஆன் இதனை சுருக்கமாகக் குறிப்பிட்டுள்ளது.

அரபு மொழியில் நிறத்தைக்கு குறிக்க “லவ்ன்” என்ற பதமும் அதன் பன்மை வடித்தில் நிறங்கள் என்பதைக் குறிக்க “அல்வான்” என்றும் பயன்படுத்தப்படுகின்றது. அல்குர்ஆனில் நிறங்கள் “அல்வான்” என மொத்தமாக ஏழு தடவைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வானவில் எப்போதும் ஏழு நிறங்களோடுதான் தோன்றும் என்பதில்லை. காலை, மாலை வேளைகளில் தோன்றும் வானவில்லில் மஞ்சள், ஆரஞ்சு, சிவப்பு நிறங்கள் மட்டுமே தோன்றும். ஊதா, கருநீலம், நீலம், பச்சை ஆகிய நிறங்கள் தோன்றாது.

பன்னிரண்டு வெவ்வேறு வகையிலான வானவில்கள் இருப்பதாக சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

ஃபிரான்ஸ் நாட்டு வானிலை ஆய்வு மையத்தைச் (நேஷனல் மீடியோரோலாஜிகல் ரிசர்ச் சென்டர் - National Meteorological Research Center) சேர்ந்த 'ஜீயான் ரிகார்' (Jean Ricard) என்ற வளி மண்டல அறிவியலாளர் ( Atmospheric Scientist) இதைக் கண்டுபிடித்து இருக்கிறார்.

வானவில்லில் நிறங்கள் தெளிவாகத் தெரிவது மழைத் துளிகளின் அளவைப் பொறுத்தது. அதன் நிறங்களை நிர்ணயிப்பதில் பெரும்பங்கு வகிப்பது தொடுவானத்துக்கும் சூரியனுக்கும் இடைப்பட்ட தூரம்தான்.

சூரியன் தொடுவானத்துக்கு மிகவும் அருகில் இருக்கும்போது தோன்றும் வானவில்லில் சிவப்பு நிறம் மட்டுமே காணப்படும். தொடுவானத்திலிருந்து சூரியன் சற்று மேலே, எழுபது டிகிரி கோணத்தில் இருக்கும்போது தோன்றும் வானவில்லில் சிவப்பு, ஆரஞ்சு, மஞ்சள் ஆகிய மூன்று நிறங்களும் தோன்றுகின்றன.

சில நேரம் வானவில்லின் அருகிலேயே சற்று மங்கிய நிலையில் இன்னொரு வானவில் இருக்கும்.

ஒளியானது மழைதுளியினுள் நுழைந்து வெளியேறும் முன்பு இரண்டு முறை பிரதிபலிப்படையும் போது இரட்டை வான வில்லானது உண்டாகிறது.

மங்கிய நிலையில் தெரியும் இரண்டாவது வானவில்லின் நிறங்கள், பளிச்சென்று தெரியும் வானவில்லின், நிறவரிசையின் தலைகீழ் வரிசையாக இருக்கும்.

இரண்டாவதாக உருவாகிய வானவில்லில் ஊதா நிறம் வெளியேயும், சிவப்பு நிறம் உட்புறமும் இருக்கிறது. அதாவது தண்ணீரில் நம்மை நாமே பார்ப்பதுபோல.

வானவில் அரை வட்டமல்ல. முழுவட்டம்தான். அரைவட்டமாக இருப்பதே இவ்வளவு பெரிதாகத் தெரிகிறதே, முழுவட்ட மென்றால் எவ்வளவு பெரிதாக இருக்கும் என்று எண்ணுகிறீர்களா? அதைப்பார்த்தால் தெரிந்துவிடுகிறது. அவ்வளவுதான்.

வானவில்லை முழுவட்டமாகப் பார்க்க முடியுமா?

நிச்சயமாக முடியும். வானவில் தோன்றுகிற சூழலில், விமானத்தில் பயணம் செய்தபடியே பார்த்தால், வானவில் பெரி...ய்ய முழுவட்டமாகத் தெரியும்.
ஒருவர் பார்க்கும் வானவில்லும் அருகில் இருப்பவர் பார்க்கும் வானவில்லும் வேறு வேறானவை என்பது உங்களுக்குத் தெரியுமா ?
ஏனெனில் ஒவ்வொரு மழைத்துளியும் சூரிய ஒளியைச் சிதறச் செய்து வானவில்லை உண்டாக்கக் கூடியவை.எனவே நாம் பார்க்கும் மழைத்துளியால் சிதறடிக்கப்பட்ட வானவில் வேறு. அருகில் இருப்பவர் பார்க்கும் மழைத்துளியால் சிறதறடிக்கப்பட்ட வானவில் வேறு. ஆக ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வானவில்.
" நான் பார்த்த வானவில்லை நீ பார்க்கவில்லை.
நீ பார்த்த வானவில்லை நான் பார்க்கவில்லை "
சூரியன் அடிவானில் இருந்து மழைத்துளி காற்றில் இருந்தால் வானில் உயரத்தில் வானவில் தோன்றும். சூரியன் உயரத்தில் இருந்து மழைத்துளி காற்றில் இருக்கும்போது வானவில் அடிவானில் தோன்றும்.
நம்மால் வானவில்லை தொட முடியாது. ஏனெனில் அது பிரதி பிம்பம். ஆகவே அதனைக் காணத்தான் முடியும்.வெப்பமண்டலங்களில் நீர்நிலைகளின் அருகில் வானவில்லை அடிக்கடிக் காணலாம்.
சூரிய குடும்பத்தில் புவியில் மட்டுமே வானவில்லானது தோன்றுகிறது. ஹவாய் தீவுகளே உலகில் அதிக வானவில் தோன்றும் இடமாகும்.
பொதுவாக வண்ணங்களைப் பற்றி...
நபியவர்கள் வெள்ளை நிறத்தை அதிகம் விரும்பினார்கள், கருப்பு நிறத்தையும் காவி நிறத்தையும் தவிர்ந்துகொள்ளுமாறு கூறினார்கள்.
விஞ்ஞானம் அடிப்படையில் 7 நிறங்கள் உள்ளதாகக் கூறுகிறது. அல்குர்ஆன் நிறம் என்ற வார்த்தையை 7 இடங்களில் பயன்படுத்தியுள்ளது.
சுவனம் பசுமையானது என்று கூறும் இஸ்லாம் அதன் நிறமான பச்சை நிறம் அல்குர்ஆனில் 8 இடங்களில் பிரயோகிக்கப்பட்டுள்ளது. நபியவர்கள் சுவனத்தின் வாயில்கள் 8 என்றும் கூறியுள்ளார்கள்.
அதேபோன்று கருப்பு நிறம் அல்குர்ஆனில் 7 இடங்களில் வந்துள்ளது. நரகின் நிறமும் கருப்பு என்பதாக நபியவர்கள் கூறினார்கள். அதன் வாயில்களின் எண்ணிக்கையும் 7 என்று அல்குர்ஆன் கூறுகின்றது.
மஞ்சள் நிறம் 5 தடவைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அல்குர்ஆனில் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ள நிறம் வெள்ளையாகும்.
صِبْغَةَ اللّٰهِ‌ۚ وَمَنْ اَحْسَنُ مِنَ اللّٰهِ صِبْغَةً وَّنَحْنُ لَهٗ عٰبِدُوْنَ
“(இதுவே) அல்லாஹ்வின் வர்ணம்(ஞான ஸ்னானம்) ஆகும்; வர்ணம் கொடுப்பதில் அல்லாஹ்வைவிட அழகானவன் யார்? அவனையே நாங்கள் வணங்குகிறோம்” (எனக் கூறுவீர்களாக). (அல்குர்ஆன் : 2:138)

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 1




உலக மதங்கள் பலவற்றில் உயிர் என்பது உயிரினம் ஒன்றின் "பொருள் தன்மை அற்ற " பகுதியைக் குறிக்கும். (கவனிக்கவும் பொருள் அற்ற ) ஆன்மா, ஆத்மா, ஆவி, ரூஹ்... போன்ற வேறு பல பெயர்களாலும் குறிப்பிடப்படும். இந்த ஆன்மாவிலேயே சிந்தனை, ஆளுமை முதலியன அடங்கியிருப்பதாகக் கருதப்படுகிறது.
இறையியலில், பொதுவாக உயிர் ஓர் உயிரினத்தின் இறப்பிற்குப் பின்னரும் தொடர்ந்து இருப்பதாக நம்பப்படுகிறது. சில மதங்கள், உயிர்கள் இறைவனால் படைக்கப்பட்டன என்கின்றன. வேறு சில மதங்களில் உயிர் எவராலும் படைக்கப்படாத நிலையானவற்றுள் ஒன்றாகக் கருதப்படுகின்றது.
இறப்பின் போது உடலை விட்டு நீங்கும் உயிர் இன்னொரு உடல் எடுத்து உலகில் மீண்டும் பிறக்கின்றது என்று மறுபிறவியில் நம்பிக்கை கொண்ட சில மதங்கள் கூறி ஆதாரத்தை காட்டுகிறது
உடல் உயிர்களுக்கான தற்காலிகத் தங்குமிடம் என்றும், இறுதியில் இறைவனைச் சென்றடைவதற்கான செயல்களில் ஈடுபடுவதற்காக உயிர்களுக்கு இறைவன் உடலைக் கொடுக்கிறான் என்பதும் சில மதங்களின் கொள்கை.
பண்டைய கிரேக்கர்கள் "alive" என்ற வார்த்தைக்கு "உயிருடன்" என்ற வார்த்தையைப் பொருளாக (அர்த்தமாக) பயன்படுத்தினர், ஆரம்பத்தில் எஞ்சியிருந்த மேற்கத்திய தத்துவ பார்வையானது, ஆன்மா உடலின் வாழ்க்கைக்கு வழங்கியதாக நம்பப்பட்டது என்பதைக் குறிக்கிறது.
ஆத்மாவானது உடல் வடிவம் இல்லாத உயிராக அல்லது ஆன்மீக "மூச்சு" என்று கருதப்பட்டது. பிரான்சிஸ் எம். கார்ன்ஃபோர்ட், பிந்தர் மேற்கோளிட்டு, மூட்டுகள் சுறுசுறுப்பாக இருக்கும்போது ஆன்மா தூங்குகிறது என்று கூறுகிறார்,
ஆனால் ஒருவர் தூங்கும்போது, ஆன்மா சுறுசுறுப்பாகவும், கனவுகளில் "மகிழ்ச்சியோ அல்லது துக்கத்தோடும் அருகாமையில்" வெளிப்படுத்துகிறது.
(Francis M. Cornford, Greek Religious Thought, p.64)

எர்வின் ரோஹ்ட் எழுதியது, ஆரம்பகால பித்தகோரையன் நம்பிக்கையின் படி உடலை விட்டு வெளியேறும் போது ஆன்மா உயிரற்றது, அது உடலுக்குத் திரும்புவதற்கான நம்பிக்கை இல்லாதால் ஹேடீஸ் எனும் கிரேக்க கடவுளுக்குள் விடைபெறுகிறது என்று எழுதியுள்ளார். (Erwin Rohde, Psyche, 1928)
அரிஸ்டாட்டில் (384 கி.மு. - 322 கி.மு) கூற்றுப்படி தாவரங்கள், விலங்குகள், மற்றும் மனிதர்களில் ஆன்மாவின் அமைப்பு
இயற்கையாக ஒழுங்கமைக்கப்பட்ட உடலின் "முதல் இயல்புநிலை" ஆன்மா அல்லது பஷு என வரையறுக்ககிறார் (Aristotle On The Soul. பக். 412)

ஆன்மாவின் புலங்களாக, ஊட்டச்சத்து, இயக்கம் (விலங்குகளில் முதன்மையானது), காரண காரியமறிதல் (மனிதப் பண்புகள்), உணர்தல் (சிறப்பு, பொது மற்றும் எதேச்சையான) மற்றும் முன்னர் பயன்படுத்தும் போது உயிருடன் இருக்கும் தன்மை "இரண்டாவது" இயல்மையை கட்டமைக்கும் திறனாகும். உதாரணமாக தூங்கிக் கொண்டிருப்பரை நம்மால் எழுப்ப முடியும். ஆனால் இறந்த ஒரு சடலத்தை எழுப்ப இயலாது.
கி.பி 350 ல் எழுதப்பட்ட டி அனிமா (ஆன்மாவின் மீது) என்ற ஆரிஸ்டாட்டிலின் புத்தகத்தில் ஆன்மா பற்றிய கலந்துரையாடல் காணப்படுகிறது.
ஆத்மாவின் அழியாமையைப் பொறுத்தவரையில் பெரும்பாலும் பிளாட்டோவின் கருத்துகளுக்கு மாறுபட்டதாக மூன்றாவது புத்தகத்தின் ஐந்தாவது அத்தியாயத்தில் ஒரு சர்ச்சை காணப்படுகிறது. இந்த உரையில் இரண்டு விளக்கங்களும் வாதிடலாம், ஆன்மா மொத்தமாக மனிதனாக கருதப்படலாம் மற்றும் "செயலில் அறிவாற்றல்" அல்லது "செயலில் உள்ள மனப்பான்மை" என்று அழைக்கப்படும் ஒரு பகுதி அழிவற்ற மற்றும் நித்தியமானது என்று கூறப்பட்டுள்ளது.
சர்ச்சையின் இரு பக்கங்களிலும் ஆதரவாளர்கள் இருக்கிறார்கள், ஆனால் இறுதி முடிவுகளைப் பற்றி நிரந்தர கருத்து வேறுபாடு இருப்பதாக புரிந்து கொள்ளப்படுகிறது,
புவியிலுள்ள அனைத்தும் ஒரு தொடர்ச்சியான மாறிலிகளாக எவற்றுக்கும் நிரந்தர நிலை இல்லாத தன்மையை வலியுறுத்தி புத்தமதம் போதிக்கிறது.

இது பிரபஞ்சத்தில் வேறு எதனையும் விட மனிதர்களுக்கு பொருந்தும். இவ்வாறு, மனிதனுக்கு நிரந்தரமான சுயவிவரம் இல்லை அனத்தா உடன்படிக்கையின்படி (பாலி, சமஸ்கிருதம்: அனாத்மம்) இந்த கோட்பாட்டின் படி - "சுயமில்லாத" அல்லது "ஆன்மா இல்லாத" - என்ற வார்த்தைகள் "நான்" அல்லது "என்னை" என்ற எந்த நிலையான விபரத்தையும் குறிப்பிடவில்லை.அவை எப்போதும் மாறிக்கொண்டிருக்கும் உட்பொருளைக் குறிப்பிடுவதற்கு அனுமதிக்கும் எளிதான வசதியான சொற்களாக அறியப்படுகிறது.
இந்து மதத்தில், சமஸ்கிருத வார்த்தைகள் மிகவும் நெருக்கமாக ஆன்மாவைக் குறிக்கின்றன, அவை ஜீவா, ஆத்மன் மற்றும் "புருஷா", அதாவது தனி நபரின் பொருள்.
இந்து தத்துவத்தில், குறிப்பாக இந்து மதத்தின் வேதாந்தா பள்ளியில், ஆத்மா முதன்மையானது, தனி நபரின் சாராம்சத்தை அடையாளம் காணாமல் தனி நபரின் உண்மையான சுயம். விடுதலை (மோட்சம்) அடைவதற்கு, ஒரு மனிதர் சுய அறிவை (ஆத்மா ஜானா) பெற வேண்டும்,அதாவது தனது உண்மையான சுய மனம் (அத்மா) பற்றி உணர வேண்டும்.
அது ஆழ்ந்த அல்லது தலைசிறந்த சுயம் அறிந்த பிராமணனுடன் ஒத்ததாக இருக்கிறது.இந்து மதத்தின் ஆறு பழங்குடிப் பாடசாலைகள் ஒவ்வொன்றிலும் ஆத்மா (ஆன்மா, சுய) இருப்பதாக நம்பபடுகின்றன,
புத்தமதத்தோடு ஒப்பிடும் போது இதில் ஆன்மா முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கிறது. புத்த மதத்தில் ஆன்மா அல்லது சுயம் இருப்பதாக நம்பபடவில்லை.
இந்து மதத்தின் அனைத்து முக்கிய மரபு சார்ந்த பள்ளிகளான - நியாயா, வைசேசிகா, சாம்க்யா, யோகா, மிமாம்சா, மற்றும் வேதாந்தாவிலும் (Nyaya, Vaisesika, Samkhya, Yoga, Mimamsa, and Vedanta) வேதங்கள் மற்றும் உபநிஷதங்களின் அடித்தளத்தை ஆதாரமாக கொண்டு "ஆத்மா என்பது உள்ளது" என்று ஏற்றுக் கொள்கிறது.

ஜெயின் மதமும் கூட இந்து மதத்தின் இந்த அனுமானத்தை ஏற்றுக்கொள்கிறது, இருப்பினும் அது ஆத்மா என்னும் சொல்லிற்கு அதன் சொந்த யோசனையையும் கொண்டுள்ளது.இதற்கு மாறாக சாவகம் என அழைக்கப்படும் உலகாயதம் என்னும் இந்தியாவில் தோன்றிய ஒரு மெய்யியல் கோட்பாடு கடவுள், மாயை, பிறவிச்சுழற்சி, ஆன்மா போன்ற சமய நம்பிக்கைகளையும் மீவியற்கை விளக்கங்களையும் இது மறுக்கிறது.
சைன மதத்தில் தாவரம் அல்லது பாக்டீரியம் முதல் மனிதன் வரையிலான ஒவ்வொரு உயிரினங்களும் ஆன்மாவை அடிப்படையாகக் கொண்டுள்ளன. இதுவே சைன மதத்தின் தத்துவமாகக் கொண்டு ஆன்மாவை (ஜீவன்) அதன் தற்போதைய நிலையில் இரு அடிப்படைகளாகப் பிரிக்கப்படுகின்றன.
முக்திபெற்ற ஆன்மா -இவ்வகை ஆன்மாக்கள் முக்தி அல்லது மோட்சம் அடைந்த ஆன்மாக்களாகும். எனவே மீண்டும் வாழ்க்கை சுழற்சியின் அங்கமாக வருவதில்லை.

முக்தி பெறா ஆன்மா- எந்தவொரு உயிரினத்தின் ஆன்மாவும் பின்வரும் 4 வடிவங்களின் வாழ்க்கைச் சுழற்சியில் பிணைக்கப்பட்டிருக்கும்.
மனுஷ்ய கதி (மனிதர்கள்) மனிதர்கள்
தேவ கதி (வானியல்) மனிதர்கள்.
திர்யஞ்ச கதி (விலங்கு) மனிதர்கள்.
நரக்க கதி (நரக) மனிதர்கள்
இப்பொழுதுவரை ஆன்மாவானது சம்சாரா (திரும்ப நிகழும் பிறப்பு மற்றும் இறப்பு சுழற்சி) விலிருந்து விடுவித்துக் கொள்ள வில்லை.
அவை மேற்கண்ட பல்வேறு வகை உடலினுள் அவர்கள் செய்த கருமம் (செயல்கள்) அடிப்படையில் பிணைத்துக்கொள்கின்றன. சைன மதத்தின் கருத்துப்படி ஆன்மாவிற்கு ஆரம்பமும் முடிவும் இல்லை ஆகையால் அது இயற்கையில் நித்தியமானது மற்றும் விடுதலை (மோட்சம்) பெறும் வரை ஆன்மா தன் வடிவத்தை மாற்றிக் கொண்டிருக்கும்.
“மானுட அனுபவத்தின் உண்மையான நோக்கம் எதுவாக இருக்கும் என்ற கேள்விக்கான பதிலை நாம் தேட முயன்றிருக்கிறோமா? கேரி ஸுகாவ் அதற்கான பதிலை முன்வைக்கிறார். ஆன்மாவின் ஆரோக்கியம்தான் அந்த உண்மையான நோக்கம் என்கிறார் அவர்.

கேரி ஸுகாவ் அமெரிக்காவின் புகழ்பெற்ற ஆன்மிக எழுத்தாளர்.1989-ம் ஆண்டு வெளிவந்த இவரது ‘தி சீட் ஆஃப் தி சோல்’ (The Seat of the Soul) என்ற புத்தகம், வாழ்க்கையில் நிறைவை உணர்வதற்கு ஆன்மாவையும் ஆளுமையையும் எப்படி இணைத்துப் பார்க்க வேண்டும் என்பதை விளக்குகிறது.
தத்துவ அறிஞர் வில்லியம் ஜேம்ஸ், உளவியல் நிபுணர் கார்ல் யுங், அறிவியலாளர் ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் போன்றவர்களின் கருத்துகளைத் தொடர்ந்து ஆய்வுசெய்துவந்தார் கேரி ஸுகாவ். அந்த ஆய்வின் முடிவில், மனித வாழ்க்கை, பிரபஞ்சம் பற்றிய சிறந்த கருத்துகள் ‘ஆளுமை’க்கு அப்பாற்பட்டு இருப்பதாக முடிவுக்கு வருகிறார் அவர்.

இந்த ஆளுமைக்கு அப்பாற்பட்டு இருக்கும் திறன் ஆன்மிக உணர்வாகவோ சமய உணர்வாகவோ இருக்கும் என்று அவர் நம்பவில்லை. அதை அவர் ‘உண்மையான ஆற்றல்’ என்று குறிப்பிடுகிறார்.
இந்த உண்மையான ஆற்றல்தான் நம்மை ஆன்மாவுடன் இணைத்து, வாழ்க்கைக்கான நோக்கத்தை உருவாக்குகிறது என்கிறார் அவர். பரிணாம வளர்ச்சியடைந்து கொண்டிருக்கும் பிரபஞ்சத்தின் சிறந்த நோக்கத்துடன் இந்த நோக்கமும் பின்னிப் பிணைந்திருப்பதாக இந்தப் புத்தகத்தில் அவர் விளக்குகிறார்.
இஸ்லாம் ஆன்மாவைப் பற்றி இறைவன் குர்ஆனில் ...
"மனிதர்கள் இறக்கும்பொழுதும், இறக்காமல் நித்திரையில் இருக்கும்பொழுதும் அல்லாஹ்வே அவர்களுடைய உயிரைக் கைப்பற்றுகிறான்.

பின்னர், எவர்கள் மீது மரணம் விதிக்கப்பட்டதோ அவர்களுடைய உயிரை(த் தன்னிடமே) நிறுத்திக் கொள்கிறான்.
மற்றவர்க(ளின் உயிர்க)ளை, குறிப்பிடப்பட்ட காலம் வரையில் வாழ அவன் அவர்களிடமே அனுப்பி விடுகின்றான். சிந்திக்கக் கூடிய மக்களுக்கு, நிச்சயமாக இதில் பல படிப்பினைகள் இருக்கின்றன. (குர்ஆன் : 39:42)
நாம் எல்லா மதத்திலும் , எல்லா தத்துவக் கோட்பாட்டிலும் ஆன்மாவின் நிதர்சனமான செயல்பாட்டைத்தான் அலசி ஆராய இருக்கிறோம்.

**ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 2**
**( மரணத்தின் விளிம்பு - Out of body experience (OOBE)**




குர்ஆன் வசனம் ஒன்று மரணத்தின் விளிம்பு நிலையைப் பற்றி கூறுவது : "
(உங்களில் மரிக்கும் ஒருவரின் உயிர்) தொண்டைக்குழியை அடைந்தால், அந்நேரத்தில் நீங்கள் (இறப்பவனுக்குச் சமீபமாயிருந்தும் ஒன்றும் செய்ய முடியாமல்) பறக்க பறக்க விழிக்கின்றீர்கள். ஆயினும் நம் அவனுக்கு உங்களை விட மிக்க சமீபமாக இருக்கின்றேன் எனினும் நீங்கள் (நம்மைப்) பார்ப்பதில்லை (குர்ஆன்.56:83-85)
உயிருடன் வாழும் நிலை நாம் அறிந்தது. காரணகாரியத்துடன் நாம் அறியாதது இறப்புக்கு பின்னுள்ள நிலை. இந்த இரண்டு துருவங்களுக்குமிடையே வாழ்நிலையிலிருந்து மரணத்திற்கு செல்லும் பாதை உள்ளது. இந்த மரண பாதையை இறந்தவர்கள் விவரிப்பது விஞ்ஞானபடி சாத்தியமில்லை. ஆனால் மரணத்தின் விளிம்பைத் தொட்டுத் திரும்பிய பலர் விவரித்துள்ளனர்.

இப்போது மரணப்பாதை அனுபவம் பற்றிய ஆய்வுகள் முக்கியத்துவம் பெற்று வருகிறது. பல நாடுகளைச் சேர்ந்த உளவியல் நிபுணர்கள் இந்த ஆய்வில் ஈடுபட்டுள்ளனர். இந்த ஆய்வில் கிடைத்த தகவலின் அடிப்படையில்.
மரணத்தை தள்ளிப்போட முடியுமா?
மரணப்பாதையை குறித்து 1975ம் வருடத்தில் அமெரிக்க மருத்துவர் ரேமாண்ட் மூடி" என்பவர் லைஃப் ஆப்டர் லைஃப் (Life after Life) என்ற புத்தகத்தை வெளியிட்டார். இந்தப் புத்தகம் தான் மரணப்பாதையை குறித்த முதல் அறிவியல் பூர்வமான என்று கூறலாம்.
"ரேமாண்ட் மூடி ஆய்வு புத்தகத்தில் கத்தில் மரணப்பாதையில் அமைதியும் மகிழ்ச்சியும் நிலவுவதாக மரணத்தை எதிர்நோக்கியுள்ள நிலையில் இது விநோதமானது மற்றும் ஆச்சரியானதும் ஆகும். மேலும்

மரணப்பாதை என்பது ஒரு நீண்ட சுரங்கப்பாதை அந்தப் பாதை இளஞ்சூடான அன்பு ஊட்டும் வெளிச்சத்தை நோக்கிச் செல்கிறது என்கிறார்,
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்; மரணம் உண்மை முஃமினுக்கு மிக அழகான கரணிக்கையாகும் - ஹஜ்ரத் இமாம் ஹுஸைன் (ரலி) நூல் : தைலமி

சிலர் தங்களது உடல்களை விட்டு விட்டு அற்புதமான உலகங்களுக்கு சென்றதாக தெரிவித்தனர். இந்த பாதையில் தங்களது கடந்த கால வாழ்க்கைச் சம்பவங்களை மீண்டும் தாங்கள் பார்த்ததாகவும் அந்த சம்பவங்கள் குறித்து புதிய மதிப்பீடுகளுக்கு வந்ததாகவும் ரேமாண்ட் முடி கூறுகிறார்,
சிலரது பயணம் தடைப்பட்டதால் மீண்டும் யதார்த்தமான உலகுக்கு திருப்பியுள்ளனர். இவர்களில் பலர் தலைகீழாக மாறி விட்டனர். கரப்பான் பூச்சிக்கு நடுங்கிக் கொண்டிருந்தவர்கள் இப்போது இறப்பைப் பற்றி பயப்படுவதில்லை. மற்றவர்களிடம் எரிந்து விழுந்து கொண்டிருந்த பலர் அன்பும், பரிவும், இரக்கமும் நிரம்பியவர்களாகிவிட்டனர். ஆன்மீகத்தில் அவர்களுக்கு அதிக நாட்டம் ஏற்பட்டது.
ரேமாண்ட் மூடி வெளியிட்ட ஆய்வுக் கருத்துக்களை பல அறிவியல் நிபுணர்கள் வெறும் கற்பனை என்று ஒதுக்கித் தள்ளினார்கள். பிரபல மருத்துவர்கள் இதனை ஏற்க முடியாது என்று கூறினார்கள். ஆனால் அமெரிக்க உளவியலில் தலைசிறந்த நிபுணர்களான கென்ரிங், புருஸ்கிரேசன் ஆகியோர் தொடர்ந்து ஆய்வுகளை மேற்கொண்டனர். அவர்கள் இருவரும் ரேமண்ட் மூடின் ஆய்வுக் கருத்துகள் ஏறத்தாழ உண்மைதான் என்று ஒரே குரலில் அடித்துக் கூறினர்.
மரணப்பாதை அனுபவங்களைப் பற்றி ஸ்பெக்ட்ரம் இதழில் ஆய்வுக்கட்டுரை எழுதிய டாக்டர் சூசன்பிளாக் மோச், இவர் உளவியல் துறை விரிவுரையாளராக யுனிவர்சிட்டி ஆப் தி பெஸ்ட் ஆஃப் இங்கிலாந்தில் பணியாற்றுகிறார்.

மரணப்பாதைப் பற்றி அனுபவ சாட்சியங்கள் தெளிவானவை. நரம்புகளுக்கு இடையிலான இணைப்புகள் மெதுவாகச் செயலிழக்கும் போதோ, ஒழுங்குமுறை அல்லது கட்டுபாடு இல்லாத வகையில் நரம்புச் செல்கள் தாக்கப்படும் போதோ மரணப்பாதை அனுபவங்கள் ஏற்படக்கூடும் என்ற சூசன் தன்னுடைய "டையிங் டு லிவ்" (Dying to live) என்ற நூலில் கூறினார்.
இத்தகைய அனுபவங்களை புரிந்து கொள்ள வேண்டுமானால் ஆக்ஸிஜன் இல்லாவிட்டால் நரம்பு செல்கள் நரம்பு இணைப்புகள் எத்தகைய பாதிப்புகளுக்கு ஆளாகும் என்பதை ஆய்வு செய்ய வேண்டும். அத்துடன் மூளை செயல்படும் போது வெளியாகும் மார்பின் போதைப் பொருள் போன்ற இரசாயனப் பொருள்கள் அளவில் மிகுதியாகும் பொழுது மூளை எத்தகைய மாற்றத்தைச் சந்திக்கிறது என்பதையும் பரிசோதிக்க வேண்டும் என்பது சூசனின் கருத்து.
பிரபல அமெரிக்க பெண் கவிஞர் - பாடகி பாம் ரேணால்ட்ஸ் என்பவருக்கு 1991-ல் வித்தியாசமான அனுபவம் நேர்ந்தது. 35 வயதான அவருக்கு மூளையில் ரத்தகட்டி வந்ததால், அவசர ஓர் ஆபரேசன் செய்தார்கள். ஏழு மணி நேர நீண்ட அறுவை சிகிச்சையின் நடுவே அதிக நேரம் மூளைக்குச் செல்லும் ரத்த சப்ளையை முற்றிலும் நிறுத்தி வைக்க வேண்டியிருந்தது. அதாவது டெக்னிக்கலாகப் பார்த்தால் அந்தச் சில நிமிடங்களில் பாம் உயிருடன் இல்லை என்றே சொல்லலாம்
ஆபரேஷன் முடிந்து கண் விழித்த பிறகு அந்த வினோத அனுபவத்தை விவரிக்கிறார் பாம்! "இசையின் ரிஷப ஸ்வரம் போல என் காதில் ஒரு சப்தம் கேட்டது அந்த நிமிடத்தில் என் உடம்பிலிருந்து விடுபட்டு நான் மேலே எழும்ப ஆரம்பித்தேன். என்னுடைய உடல் கீழே ஆபரேஷன் டேபிளில் கிடக்கிறது. நான் அந்தரத்தில் மிதந்து கொண்டே அதைப் பார்க்கிறேன்.
டாக்டர் பேசுவதெல்லாம் தெளிவாகக் கேட்கிறது. மின்சார ரம்பத்தால் என் மண்டையை அறுக்கிறார்கள். நான் ஓர்

இருட்டான நீண்ட குகை வழியாக போவதாக உணர்ந்தேன். திடீரென்று தூரத்தில் சூரியன் போல் ஒரு பிரகாசமான வெளிச்சம் ஆனால் கண்ணைக் கூசாத அழகான வெளிச்சம், அதை நோக்கிப் போக வேண்டும் போல இருந்தது.
அந்தச் சமயம் இறந்து போன என் உறவினர்கள் பலரை அங்கே பார்த்தேன் அவர்கள் என்னைத் தடுத்து நிறுத்தி உனக்கு இன்னும் வேளை வரவில்லை திரும்பிப்போ" என்று அன்புடன் சொன்னார்கள்.
என் மாமா என்னை அழைத்துக் கொண்டு வந்து ஆஸ்பத்திரி டேபிளில் விட்டார். என் உடலுக்குள் திரும்ப நுழைந்த போது ஐஸ் தண்ணீர் குளத்தில் சட்டென்று குதித்தது போல சிலீரிட்டது.
சரியாக அதே நேரத்தில் டாக்டர்கள் பாமின் நின்று இதயத்தை இயங்க வைக்க ஷாக் ட்ரீட்மெண்ட் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். திடீரென்று ஒரு குலுக்கலுடன் துடிக்க ஆரம்பித்தது இதயம்! பிறகு டாக்டர்கள் நிமிட வாரியாக எழுதி வைத்திருந்த ஆபரேஷன் குறிப்புகளைப் பார்த்தால் பாம் சொன்னதுடன் ஆச்சரியகரமாக ஒத்துப் போயிற்று.

முழுவதும் மயக்க மருந்து கொடுக்கப்பட்டுக் கண் திறக்காமல் படுத்திருந்த பேஷண்ட் தாங்கள் பேசியது, செய்தது எல்லாவற்றையும் எப்படித் தெளிவாகச் சொன்னார் என்பது அவர்களுக்கே விடை தெரியாத புதிராக இருந்தது. போன
பாமிற்கு நேர்ந்தது, ஊப் எனப்படும் (Out of body experience (OOBE) உடல் ரத்து செய்யப்பட்டு மனம் மட்டும் தனியாக இயங்குவதை விஞ்ஞானம் இன்னும் ஜீரணிக்கச் சிரமப்பட்டாலும் இதை முழுவதும் “ரீல்" என்று தள்ளிவிட முடியாத அளவுக்கு நிறையப் பேருக்கு இதை மாதிரி அனுபவம் ஏற்பட்டிருக்கிறது.
எல்லோருமே பொதுவாகச் சொல்வது அந்த இருட்டுக்குகை, அற்புத வெளிச்சம் இவைதான் மைக்கேல் சபாம் என்பவர் பாம் ரேனால்ட்ஸின் கேஸை அக்கக்காக அலசியதுடன், இதே போன்று வேறு 50 பேரின் அனுபவங்களையும் தொகுத்துப் புத்தகம் எழுதிப் பெரும் பரபரப்பைக் கிளப்பிவிட்டார்.
ஹழரத் ஹஸ்ஸானிப்னு அஸ்வத் (ரலி) அவ்கள் நபி (ஸல்) நவின்றதாக அறிவிக்கிறார்கள் :
"மரணம் ஒரு பாலம். நண்பன் அவ்வழியாக கடந்து சென்று தன் நண்பனைச் சந்திக்கிறான்" . நூல்: இப்னுஷைஃது

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 3
## ( கடைசி மூச்சு )

உடல் ரத்து செய்யப்பட்டு மனம் மட்டும் தனியாக இயங்குவதை விஞ்ஞானம் (Out of body experience (OOBE) ஊப் என்கிறது.
“ஊப்” `அனுபவத்தை செத்துப் போக அவசியமின்றி செயற்கையாக ஏற்படுத்த முடியுமா என்று பல குழுக்கள் முயற்சித்து வருகின்றன.தாளகதியுடன் கூடிய ஒருவகை ஆதிவாசி இசையைக் கேட்டால் அந்த மாதிரி ஆகிறது என்று சிலர் ரீ மிக்ஸ் செய்து சி.டி. தகடு விற்றுப் பெரும் பணக்காரர்களாகிக் கொண்டிருக்கிறார்கள்.
மற்றொரு பக்கம் “அஸ்ட்ரல் ப்ரொஜெக்ஷன்” என்று மனதை ஒருமுகப்படுத்தி, விழித்திருக்கும்போதே தத்ரூபமாகக் கனவு காணப்பயிற்சி செய்கிறார்கள். அவர்கள் சஞ்சரிக்கும் அந்த தளத்தில் நாம் பள்ளிக்கூடத்தில் படித்த எந்த இயற்பியல் விதிகளும் இங்க செல்லுபடியாகாதாம். காரணம் செயற்கையாய் ஒரு மரண தளம் இது என்கிறார்கள்.
மூளையைக் கலக்கும் “காலாண்டமைன்" போன்ற மருந்துகளை அஞ்சாமல் தனக்குள் செலுத்திக் கொண்டு (உயிரே போகவும் சின்னதாக வாய்ப்பு உண்டு) உடம்பெல்லாம் மம்மி போலபாண்டேஜ் கட்டிக் கொண்டு தொட்டி ஒன்றில் மணிக்கணக்காக படுத்துக் கொண்டு மரணத்தின் விளிம்பு வரை போய் என்னென்ன நடக்கிறது என்பதை ரொம்பவும் ஆர்வமாகத்தான் இந்த ஆபத்தான பரிசோதனையை தனக்குதானே செய்து பார்க்கிறார்கள். இதில் மரணத்தை தழுவிய விஞ்ஞானிகளும் உண்டு.

அவர் மீது மரணத்தின் மயக்கம் ஏற்பட்ட வரைப் போன்று அவர்களுடைய கண்கள் சுழன்று கொண்டிருக்கும் நிலையில் உம் பக்கம் பார்க்கக்கூடியவர்களாக அவர்களை நீர் காண்பீர்,(குர்ஆன் 33:19)
மரணத்தின் விளிம்புப் பற்றி நிறைய புத்தகங்கள் வெளிவந்து பரபரப்பாக விற்பனையாகிக் கொண்டு வருகிறது. இதில் மேத்யூ டி டுவல் எழுதிய "மை லாஸ்ட் பிரித்" (என் கடைசி மூச்சு) என்கிற புத்தகம் ஒரு வித்தியாசமான ஆய்வுகளை மேற்கோள் காட்டுகிறது.

மரணத்துக்குப் பிறகு ஆன்மா என்ற வாதத்தில் ஆன்மிகத்துக்கு எதிரான நிலையைத்தான் இதுவரை விஞ்ஞானம் எடுத்து வந்துள்ளது. மரணம் மனிதருக்கு இறுதியானது. மரணத்திற்குப் பிறகு வாழ்வு என்பதோ வினைகளுக்கு ஏற்ற சொர்க்கம் நரகம் என்பதோ கிடையாது. மூளை செயலுடன் இருக்கும் வரைதான் நினைவுகள் மற்றும் செயல்கள் யாவுமே. மூளை செயல் இழந்தால் உடலும் அழியும் அதோடு நினைவுகளும் செத்துப் போகின்றன. எனவே, மரணத்துக்குப் பின் வாழ்க்கை இல்லை. அதுபற்றி சொல்லப்படும் எல்லா மதக் கருத்துகளும் கட்டுக்கதையே என்றுதான் இதுவரை அறிவியலும், அறிவியல் அறிஞர்களும் சொல்லி வந்தனர்.
ஆனால், சென்ற ஆண்டு மரணத்துக்குப் பிந்தைய மனிதர்களின் வாழ்க்கையைப் பற்றி ஜெர்மானிய மருத்துவர்கள் குழு ஒன்று ஆய்வு செய்தனர். ஜெர்மன் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த மனநிலை ஆய்வாளர்கள் மற்றும் மருத்துவர்கள் இணைந்த குழு ஒன்று மருத்துவ பரிசோதனை மூலம் மரணத்துக்குப் பின் வாழ்க்கை உள்ளது என நிரூபித்துள்ளனர்.

மூளை தனது செயலை இழந்தாலும் வாழ்க்கை வேறு வடிவில் உள்ளது என்பதைக் கண்டறிந்து நிரூபித்தனர். இந்த மரணத்துக்குப் பிந்தைய வாழ்க்கை என்பது பற்றிய ஆய்வை, பல்வேறு வகைகளில் மரணம் அடைந்தவர்களின் மரணத் தறுவாயில் அவர்களுக்கு அருகில் இருந்தபடி அவர்களுடைய மரணம் சம்பவிக்கும் நேரத்தில் அவர்களுக்கு நேரிட்ட அனுபவங்களை நவீன ரக அறிவியல் சாதனங்களின் உதவியுடன் கண்டறிந்திருக்கின்றனர்.
கடந்த நான்கு ஆண்டுகளாக சுமார் 1000 பேரிடம் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. சிறப்பான மருந்துகளின் துணையோடு, மரணமடைந்த உடலினைச் சிதைக்காமல் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.
மரணம் நேரிட்ட பதினெட்டு நிமிடங்களுக்குப் பிறகு உடல் நினைவு இழந்த நிலையில் பரிசோதனை மேற்கொள்ளப்பட்டது. அப்போது நவீன முயற்சிகளினால் இறந்துபோன உடலின் வாக்குமூலங்களையும் தொகுத்து வைத்துள்ளனர்.
அவை பொதுவாக, உடலிலிருந்து உயிர் பிரிவது போன்ற நினைவுகள், தெய்வீக ஆற்றலால் ஆட்கொள்ளப்பட்டு மிதத்தல் போன்ற உணர்வு, ஒளியில் ஜொலிக்கும் ஆற்றல், அமைதி நிலை, சூடான பாதுகாப்பு, மரண வேளையின் அனுபவம் எனப் பல்வேறு உணர்வுகள் பகிரப்பட்டுள்ளன.

1944-ம் ஆண்டில் உலகப் புகழ் பெற்ற உளவியல் நிபுணர் கார்ல் ஜங் (Carl Jung) என்பவர் சுவிட்சர்லாந்து நாட்டில் தனக்கு உண்டான மாரடைப்பும் அப்போது உருவான அசாதாரண சூழல் பற்றியும் எழுதியுள்ளார். அதில் உடலை விட்டு அவரின் உயிர் பிரிந்து சென்றதாகவும், இந்த பூமியை சில மைல்கள் தொலைவில் மேலே இருந்து கண்டதாகவும் கூறி வியந்துள்ளார். அண்டசராசரத்தில் பார்த்த விண்வெளிக் காட்சிகள் யாவும் பின்னர் விண்வெளி ஆய்வில் உறுதிப்படுத்தப்பட்டது என்பது உண்மை.
பர்ராஃ இப்னு ஆஸிப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
இறைவிசுவாசியான அடியான் ஒருவன் உலகத் தொடர்புகளைத் துண்டித்துக்கொண்டு மறுமையை எதிர்நோக்கிக் கொண்டிருக்கையில், (சக்ராத்தின் நேரத்தில்) சூரிய ஒளிக்கு ஒப்பான பிரகாசம் கொண்ட முகத்துடன் வானத்திலிருந்து வானவர்கள் சிலர் அவரிடம் வருகை தருவார்கள்.

அவர்கள் தங்களுடன் சுவர்க்கத்து கபன் துணிகளிலிருந்து ஒரு கபன் துணியையும், சுவர்க்கத்தின் நறுமணங்களிலிருந்து ஒரு நறுமணத்தையும் வைத்துக் கொண்டு அவருடைய பார்வைக்கு எட்டும் தூரத்தில் அமர்ந்திருப்பார்கள்.
அப்பொழுது உயிரைக் கைப்பற்றும் வானவர் வந்து, அவரருகில் அமர்வார். அவரை நோக்கி, "ஓ! நல்ல ஆன்மாவே! நீ ஏக இறைவனுடைய மன்னிப்பை நோக்கியும் அவனுடைய திருப்தியை நோக்கியும் இந்த உலகிலிருந்து வெளியேறிவிடு!" என்று கூறுவார்.
தோல் பையிலிருந்து நீர் வழிந்து விடுவது போன்று (அந்த ஆன்மா உடலில் இருந்து இலகுவாக) வெளியேறி விடும். அந்த உயிரை கைப்பற்றியதும் சற்று நேரம் கூட தாமதிக்காமல் அந்தக் கபனில் (கொண்டு வந்த) மணத்தோடு வைத்து விடுவார்கள்.

உலகத்தில் இருக்கும் கஸ்தூரி வாசனையை விட மிக மணம் வீசக்கூடியதாக அது இருக்கும். (பின்பு அந்த உயிரை அல்லாஹ்விடம் கொண்டு செல்வார்கள்) வானவர்கள் இருக்கும் கூட்டத்திற்கு அருகாமையில் அந்த உயிரை கொண்டு போகும் போதெல்லாம் இது யாருடைய நல்ல உயிர்? என அவ்வானவர்கள் கேட்பார்கள்.
அதற்கு உலகில் இவருக்கு சொல்லப்பட்ட நல்ல பெயரைக் கொண்டு இன்னாருடைய மகன் இன்னார் என்று சொல்லப்படும். இவருக்காக முதல் வானத்தை, திறக்கும்படி அவ்வானவர் வேண்டுவார்.
அவருக்காக முதல் வானம் திறக்கப்படும். ஒவ்வொரு வானத்திலும் உள்ள வானவர்கள் அடுத்த வானம் வரை (அந்த உயிரை) பின் தொடருவார்கள். இப்படி ஏழு வானம் வரை அதனை எடுத்துச் செல்வார்கள்.
அப்போது எல்லாம் வல்ல அல்லாஹ், ஆன்மாவைச் சுமந்து சென்ற வானவர்களை நோக்கி "என் அடியானுடைய செயல்களை 'இல்லிய்யீனிலே' (நல்லடியார்களுடைய செயல்களின் பதிவேடுகள் இருக்குமிடத்திலே) பதிந்து விட்டு, (விசாரணைக்காக) பூமியிலுள்ள அவனுடைய உடலில் (கப்ரில் - மண்ணறையில்) அவருடைய ஆன்மாவைச் சேர்த்து விடுங்கள்!" என்று கூறுவான்.
(அந்த அடியானுக்கு மீண்டும் உயிர் கொடுக்கப்படும்) அப்போது, அவரிடத்தில் இரு வானவர்கள் வந்து அவரை அமரவைத்து...
"உன்னுடைய இறைவன் யார்? எனக் கேட்பார்கள். என் இறைவன் அல்லாஹ் என்று கூறுவார். உன்னுடைய மார்க்கம் எது? எனக் கேட்பார்கள், எனது மார்க்கம் இஸ்லாம் எனக் கூறுவார். உமக்கு அனுப்பப்பட்ட தூதர் யார்? எனக் கேட்பார்கள். அல்லாஹ்வின் தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் எனக் கூறுவார். அது உமக்கு எப்படித் தெரியும்? என அவ்விருவரும் கேட்பார்கள். நான் குர்ஆனை ஓதினேன். (அதன் மூலம்) அவர்களை ஈமான் கொண்டு உண்மைப்படுத்தினேன்!" எனக் கூறுவார்.
அப்போது வானத்திலிருந்து ஓர் அழைப்பாளர் அல்லாஹ் கூறியதாக அழைத்துச் சொல்வார் "என் அடியான் உண்மை சொல்லிவிட்டான்!
ஆகவே, அவருக்காக சுவர்க்கத்திலிருந்து ஒரு விரிப்பை விரித்து விடுங்கள். இன்னும் சுவர்க்கத்திலிருந்து ஒரு வாசலையும் திறந்து விடுங்கள்! என்று அறிவிப்புச் செய்வார்.
அதன் வழியாக அவருக்கு நல்ல வாசனைகளும், நறுமணமும் வந்து கொண்டிருக்கும். அவருடைய கண் எட்டிய தூரத்திற்கு அவருடைய கப்ரு விசாலமாக்கப்படும்.
மேலும், அவரிடத்திலே நறுமணம் வீசக்கூடிய, அழகிய ஆடை அணிந்த, அழகிய தோற்றமுள்ள ஒருவர் வந்து, இதுவே (உலகில்) உமக்கு வாக்களிக்கப்பட்ட நாளாகும்.
உமக்கு சந்தோஷம் தரக்கூடிய ஒன்றைக் கொண்டு நற்செய்தி கூறுகின்றேன் என்பார். (அதற்கு கப்ரில் அடக்கம் செய்யப்பட்டவர்) நற்செய்தி கூறுபவரைப் போன்றே உன் தோற்றம் இருக்கின்றதே! நீர் யார்? எனக் கேட்பார். நான் தான் உன் நல் அமல் என அம்மனிதர் கூறுவார்.
அப்போது அவர், "இறைவா! என் குடும்பத்தார்களிடத்திலும், என் பொருளிடத்திலும் நான் விரைந்து செல்வதற்காக, கியாமத்து நாளை (வெகு சீக்கிரம்) கொண்டு வருவாயாக! இறைவா! கியாமத்து நாளை (வெகு சீக்கிரம்) கொண்டு வருவாயாக!" எனக் கூறுவார்.

பர்ராஃ இப்னு ஆஸிப் (ரலி) அவர்கள் அறிவிக்கிற ஹதீஸின் தொடரில்....
இதே வேளையில், நிராகரிப்பாளன் ஒருவன் மரண வேளையை நெருங்கி விட்டால், கறுத்த (விகாரமான) முகத்துடன் சில வானவர்கள் வந்து அவனுடைய கண்பார்வை எட்டும் தூரத்தில் அமர்ந்து விடுவார்கள். அவர்களிடத்தில் ஒரு கம்பளித் துணி இருக்கும்.அப்பொழுது உயிரைக் கைப்பற்றக்கூடிய வானவர் வந்து அவனருகில் அமர்வார்.
அவர் அவனை நோக்கி, கெட்ட ஆன்மாவே! அல்லாஹ் அளிக்கவிருக்கும் இழிவை நோக்கியும் அவனுடைய கோபத்தை நோக்கியும் நீ வெளியேறி வா! என்று கூறுவார்.
அப்பொழுது அவ்வுயிர் ஒளிந்து கொள்வதற்காக உடல் முழுவதும் ஓட ஆரம்பித்து விடும். முள் வேலியிலிருந்து நனைத்த கம்பளி துணியை பிடுங்கி எடுப்பது போன்று உயிரைக் கைப்பற்றக்கூடிய வானவர் அவனுடைய உடலிலிருந்து (பலவந்தமாக) உயிரைப் பிடுங்கி எடுப்பார்.
(இவ்வாறு பலவந்தமாக அடித்துப் பிடுங்கி எடுத்த உயிரை) சற்று நேரம் கூட தாமதிக்காமல் அந்தக் கம்பளித் துணியில் வைத்துவிடுவார். இவ்வுலகில் வீசும் துர்நாற்றத்தை விட அதிகமான துர்நாற்றம் அதிலிருந்து வீசும்.
பின்பு அந்த உயிரை எடுத்துக் கொண்டு முதல் வானத்துக்குக் கொண்டு செல்வார் அந்த வானவர்.
வானவர்கள் இருக்கும் கூட்டத்திற்கு அருகாமையில் அந்த உயிரை கொண்டு போகும் போதெல்லாம் இந்த கெட்ட உயிர் யாருடையது? என அவ்வானவர்கள் கேட்பார்கள்.
அதற்கு உலகில் இவனுக்குச் சொல்லப்பட்ட கெட்ட பெயரைக் கொண்டு இன்னாருடைய மகன் இன்னார் என்று சொல்லப்படும்.

இவனுக்காக முதல் வானத்தை திறக்கும்படி அவ்வானவர் வேண்டுவார், ஆனால் வானம் அவனுக்காக திறக்கப்படமாட்டாது என்று கூறிவிட்டு பின்வரும்; ஆயத்தை நபி (ஸல்) அவர்கள் ஓதிக்காட்டினார்கள்.
“உறுதியாக அறிந்து கொள்ளுங்கள்! எவர்கள் நம்முடைய வசனங்களைப் பொய்ப்பித்து, அவற்றைப் புறக்கணித்து, ஆணவம் கொண்டார்களோ அவர்களுக்கு (அல்லாஹ்வின் அருளுக்குரிய) வானத்தின் (அருள்) வாயில்கள் திறக்கப்படமாட்டாது, மேலும் ஊசியின் துவாரத்தில் ஒட்டகம் நுழையும் வரையில் அவர்கள் சுவனத்தில் நுழையமாட்டார்கள், மேலும், குற்றவாளிகளுக்கு நம்மிடம் இத்தகைய கூலி தான் கிடைக்கும். (குர்ஆன் 7:40)

வல்ல நாயன் அல்லாஹ், உயிரைச் சுமந்து வந்த வானவரைப் பார்த்து, “அவனுடைய செயல்களை பூமியின் அடிப்பாகத்திலுள்ள “ஸிஜ்ஜீன்” (ஸிஜ்ஜீன் என்றால் தீயவர்களின் செயல்கள் பதிவு செய்யப்படும் இடமாகும்) என்ற இடத்தில் பதியுமாறு உத்தரவிடுவான். பின்னர், அந்த உயிர் (முதலாம் வானத்திலிருந்து ஸிஜ்ஜீன் என்ற இடத்துக்கு) எறியப்படும்.
பிறகு பின்வரும் ஆயத்தை நபி (ஸல்) அவர்கள் ஓதிக்காட்டினார்கள்.
“இன்னும், எவன் அல்லாஹ்வுக்கு இணைவைக்கின்றானோ அப்பொழுது அவன், வானத்திலிருந்து (முகங்குப்புற) விழுந்து பறவைகள் அவனை இராய்ஞ்சிக் கொண்டு சென்றதைப் போன்றோ அல்லது (பெருங்) காற்று அவனை வெகு தூரத்தில் உள்ள இடத்திற்கு அடித்துக் கொண்டு சென்றதைப் போன்றோ இருக்கின்றான். (குர்ஆன் 22:31)
இவ்வாறு ஸிஜ்ஜீனில் அவனுடைய செயல்கள் பதியப்பட்டு, பின்னர் அவனது உயிர் அவனுடைய உடலில் ஊதப்படும்.

அவனிடத்தில் இரு மலக்குகள் வந்து அவனை அமரவைத்து உன்னுடைய இறைவன் யார்? எனக் கேட்பார்கள். “கை சேதமே, கை சேதமே எனக்குத் தெரியாது” என்பான். உன்னுடைய மார்க்கம் எது? எனக் கேட்பார்கள், “கை சேதமே, கை சேதமே எனக்குத் தெரியாது” என்பான். உமக்கு அனுப்பப்பட்ட தூதர் யார்? எனக் கேட்பார். “கை சேதமே, கை சேதமே எனக்குத் தெரியாது” என்பான்.

அப்போது வானத்திலிருந்து ஓர் அழைப்பாளர் அல்லாஹ் கூறியதாக அழைத்துச் சொல்வார் ”என் அடியான் பொய் சொல்லிவிட்டான்!
ஆகவே அவனுக்கு நரகத்திலிருந்து ஒரு விரிப்பை விரித்து விடுங்கள்! இன்னும் நரகத்திலிருந்து ஒரு வாசலையும் திறந்து விடுங்கள்!” என்று சொல்லப்படும்.
அதன் வழியாக அவனுக்கு அதன் சூடும் விஷக்காற்றும் வந்து கொண்டிருக்கும். அவனுடைய விலா எலும்புகள் ஒன்றோடு ஒன்று சேரும் அளவு கப்ரு அவனை நெருக்கும். இன்னும் அவனிடத்திலே கோர முகமுடைய, மோசமான ஆடை அணிந்த, துர்நாற்றமுள்ள ஒருவர் வந்து, இதுவே (உலகில்) உமக்கு வாக்களிக்கப்பட்ட நாளாகும்.
உமக்கு கவலை தரக்கூடிய ஒன்றைக் கொண்டு கெட்ட செய்தி கூறுகின்றேன் என்பார். (அதற்கு கப்ரில் அடக்கம் செய்யப்பட்டவர்) கெட்ட செய்தி கூறுபவரைப் போன்றே உன் தோற்றம் இருக்கின்றதே! நீ யார்? எனக் கேட்பார். நான்தான் உன்னுடைய கெட்ட செயல்கள் என அம்மனிதர் கூறுவார். அப்போது அவன், இறைவா! மறுமை நாளை கொண்டு வந்துவிடாதே என்று கூறுவான்.
( நூல்: ஷரஹ் அகீதா அத் தஹாவிய்யா, பாடம்: அதாபுல் கப்ரி வ நயீமிஹி )

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 4
## ( அகத்தின் குரல் )




அகத்தின் குரல் ஒன்று தனக்குள் ஒலித்ததைக் கேட்டு, உளவியலாளர் ஹெலன் ஷுக்மன் ‘எழுதிய’தாகச் சொல்லப்படும் புத்தகம் ‘ஏ கோர்ஸ் இன் மிராக்கில்ஸ்"
( A Course in Meracles) இந்தப் புத்தகம் பிரபஞ்சத்தில் மனிதனாக வாழ்வதற்கான விதிமுறைகளை விளக்குகிறது. இந்தப் பிரபஞ்சத்தை இயக்கும் கொள்கைகளை முன்வைக்கிறது. அற்புதப் பாடங்களின் பின்னணியில், இந்தப் புத்தகம் மனித வாழ்க்கையைப் பின்தொடர்கிறது.
ஹெலன் ஷுக்மன், வில்லியம் தெட்ஃபோர்ட்

இவர்கள் இருவரும் அமெரிக்காவைச் சேர்ந்த உளவியல் ஆராய்ச்சி நியூயார்க்கில் அமைந்திருக்கும் கொலம்பியா-பிரஸ்பைடிரியன் மருத்துவ மையத்தில் இவர்கள் இருவரும் இணைந்து பணியாற்றியிருக்கிறார்கள்.
முற்றிலும் நம்பமுடியாத வகையில், 1965-ம் ஆண்டிலிருந்து 1972-ம் ஆண்டுவரை, ஏழு ஆண்டுகளுக்கு ஷுக்மனின் ஆன்மாவின் அகத்திலிருந்து ஒலித்த ஒரு குரலைக் கேட்டு, அவர் எழுதியதுதான் ''ஏ கோர்ஸ் இன் மிராக்கல்ஸ் " என்ற 1200 பக்கள் கொண்ட புத்தகம்.
ஷுக்மன் எழுதிய கையெழுத்துப் பிரதியை வில்லியம் தெட்ஃபோர்ட் தட்டச்சு செய்து புத்தகமாகத் தொகுத்திருக்கிறார். 1975-ம் ஆண்டில் வெளியான இந்தப் புத்தகம், லட்சத்துக்கும் மேற்பட்ட பிரதிகள் விற்பனையானது.

ஓர் அற்புதம் பல வகையான வடிவங்களில், உடல், மனம் சார்ந்து எப்படி வேண்டுமானாலும் வெளிப்படலாம். ஆனால், நமது தவறான கண்ணோட்டத்திலிருந்து உடனடிச் சுதந்திரம் வழங்குவது அதன் அடிப்படையான அம்சமாக இருக்க வேண்டும். இந்தப் புத்தகம் அற்புதத்தைப் பற்றி இப்படி விளக்குகிறது “தடைகளைத் தாண்டி, அன்பின் இருப்பைப் பற்றி விழிப்படைதல்.” இது ‘புனித கணம்’ என்று விவரிக்கப்படுகிறது.
இந்தத் தருணம் நிகழும்போது, நாம் இறைவனின் அமைதியை உணர்வோம். அப்போது அகந்தையும் அறியாமையும் நம்மைவிட்டு விலகியிருக்கும். இந்த அற்புதத் தருணம் நிரந்தரமானது. அது நிகழ்ந்ததை நாம் மறந்துவிடலாம். ஆனால், அதை நினைவுபடுத்தும் ஒவ்வொரு தருணமும், அதே உணர்வை நம்மால் பெற முடியும்.
உறவுகளைப் பற்றி முன்வைத்திருக்கும் கருத்துகள் இந்தப் புத்தகத்தின் சிறப்பம்சங்களாக இருக்கின்றன.
‘சிறப்பு’ உறவுகள், ‘புனித’ உறவுகள் என இரண்டு வகையாக இந்தப் புத்தகம் உறவுகளை விவரிக்கிறது.
இந்தச் ‘சிறப்பு’ உறவு என்பது அகந்தையின் ஆசைகளால் கட்டமைக்கப்படுகிறது. இந்த வகையான உறவையே பெரும்பாலானவர்கள் தொடர்கிறோம். ஆனால், இந்த வகையான உறவு, இறைவனிடமிருந்து நம்மைப் பிரித்துவிடுகிறது. இதற்கு மாறாக, ‘புனித’ உறவு நம்மை இறைவனிடம் கொண்டு சேர்க்கிறது.
நம்முடைய உறவுகள் தன்னலத்திலிருந்தே கட்டமைக்கப்படுவதாக இந்தப் புத்தகம் விளக்குகிறது. ஒரு சாதாரண உறவில் நாம் எதிர்பார்த்தது கிடைக்கவில்லையென்றால், அதை முறித்துவிட முயல்கிறோம்.
‘நமது தேவை’ என்ற அகந்தையை முன்வைப்பதே இதற்குக் காரணம். நம்முடைய உறவுகளுக்கு உறுதியான அடித்தளம் இல்லாததும் இந்தப் பிரச்சினைகளுக்குக் காரணமாக இருக்கிறது. ஆனால், இறைவன் நம்முடைய உறவுகளுக்கு நிச்சயமான இலக்கை நிர்ணயித்திருக்கிறார்.
ஆன்மாவின் இருப்பை நம் உறவில் உணரும்போது, நமக்கு உறவுகளின் மீது நம்பிக்கை பிறப்பதாக இந்தப் புத்தகம் விளக்குகிறது. அப்போது நம்மிடமிருந்து நம் உறவுகளைக் காப்பாற்றிக்கொள்ள முடியும். அத்துடன், மன்னிப்பதன் பரிமாணங்களையும் இந்தப் புத்தகம் விளக்குகிறது. “மன்னித்தலின் வழியாகவே நாம் நினைவுகூர முடியும். மன்னித்தலின் மூலம் உலகம் தலைகீழாக மாறுகிறது” என்ற கருத்தை இந்தப் புத்தகம் வலியுறுத்துகிறது.

இந்தப் புத்தகத்தில் ‘அன்பு மட்டுமே நிஜமானது’ என்ற கருத்து தொடர்ந்து முன்வைக்கப்படுகிறது. அதன் மூலம், மற்றவை எல்லாம், இந்த முழு உலகமும் மாயை என்ற கருத்து சொல்லப்படுகிறது. இந்த உண்மையைப் பற்றிய தவறான கண்ணோட்டத்திலிருந்து வெளிவரவே இறை வழிபாடும் தியானமும் தேவையாக இருக்கிறது. நமது கேள்விகளுக்கான அற்புத பதில்களை முரண்பாடுகளிலிருந்து தேட முடியாது.
ஓர் அற்புத பதில் என்பது இறைவனின் பரிசாக, ஒரு கணத்தின் விழிப்பாக அமைந்திருக்கும். அந்த பதில் என்பது இன்றும் சரியானதாக இருக்கும், நாளையும் சரியானதாக இருக்கும். நாம் உண்மையை உணரும்போது அதுவே அற்புதமாகத் தோன்றும். இறைவனிடமிருந்து நாம் விலகியிருப்பதாக நினைப்பதே ஒரு மாயை என்று இந்தப் புத்தகம் விளக்குகிறது.

“தன்னைத்தானே” எழுதிக்கொண்ட எழுத்துகளுக்கு உதாரணமாகப் பல புத்தகங்கள் இருக்கின்றன. அதில், இந்தப் புத்தகம் மக்களால் அதிக அளவில் வாசிக்கப்பட்டது. பைபிள் மற்றும் மற்ற வேதங்களின் கருத்துகளின் தாக்கம் இந்தப் புத்தகம் முழுவதும் இருக்கிறது. உலகில் அற்புதங்கள் நிகழ்வது ‘சாதாரணம்’ என்ற கருத்தை இந்தப் புத்தகம் முன்வைக்கிறது.
ஆனால், இந்தப் புத்தகம் வெளியானவுடன் அற்புதங்களைப் பற்றிய தவறான நம்பிக்கைகளை முன்வைப்பதாகக் குற்றச்சாட்டுகளும் எழுந்தன. மனித வாழ்வின் மகிழ்ச்சிக்கான ஆன்மிக விதிகளை எளிமையாகப் புரிந்துகொள்ள இந்தப் புத்தகத்தை வாசிக்கலாம்.
இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் மூன்றாவது ஜனாதிபதி உமர், தனது மாளிகை உப்பரிகையில் நண்பர்களுடன் அமர்ந்திருந்தார்.அப்போது யாரோ ஒருவரின் இறுதி ஊர்வலம் சென்று கொண்டிருந்தது. அதைப் பார்த்த உமர் “இவர் ஒரு சொர்க்கவாதி” என்றார்.
அடுத்து வந்த இறுதி ஊர்வலத்தைப் பார்த்ததும், “இவர் ஒரு நரகவாதி” என்றார்.
பக்கத்தில் இருந்த தோழர் கேட்டார்:
“இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! இருந்த இடத்திலிருந்தே இவ்வளவு உறுதியாக இவர் சொர்க்கவாதி, இவர் நரகவாதி என்று எப்படிச் சொல்லுகிறீர்கள்?”
“அந்த ஊர்வலத்தில் செல்லும் மக்களின் உணர்வுகளைப் பார்த்துத்தான் சொன்னேன்” என்றார் உமர்.
ஆம், மரணம் ஒரு மனிதனுக்கு முற்றுப்புள்ளியல்ல. மனிதநேயம் கொண்டவர்களின் மரணம், வாழும் மக்களுக்கும், இனி வாழ வேண்டிய இளைய தலைமுறைக்கும், வருங்கால சந்ததிகளுக்கும் சரித்திரம்.
“மரணத்திற்குப்பின் மனிதனோடு வருவது அவன் செய்த நல்ல செயல்களே. அச்செயல்களே அவனை இறைவனின் சிறப்பு விருந்தாளியாக மறுமையில் சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்லும்” என்கிறது குர்ஆன்.
“அவனே (இறைவனே) மரணத்தையும் வாழ்வையும் உண்டாக்கினான்; உங்களில் யார் மிகச் சிறந்த செயல் செய்கிறார்கள் என்பதைச் சோதிப்பதற்காகவே” (67:2).

அப்படியெனில் சோதனைக்குப் பின் மற்றொரு உலகம் உள்ளது; அதுவே மறுமையெனும் இறை சந்திப்பு. அதற்காக உனது இறைவன் அளித்துள்ள இந்த வாழ்க்கையை புண்ணிய மிக்கச் செயல்களால் அழகாக்கிக் கொள் என்பது தானே இதன் பொருள்.
இறைவன் மீதுள்ள நேசத்தின் காரணமாகத் தமக்கு விருப்பமான பொருளை உறவினர்களுக்கும், அநாதைகளுக்கும்,வறியவர்களுக்கும், வழிப்போக்கர்களுக்கும், யாசிப்போருக்கும், (கடனில்) அடிமையானவர்களை மீட்பதற்கும் வழங்க வேண்டும். மேலும், தொழுகையை நிலை நாட்டி, ஏழைகளுக்கான ஸகாத் எனும் தானத்தைக் கொடுக்க வேண்டும் - இவையே புண்ணியச் செயல்களாகும்.
மேலும் வாக்குறுதி அளித்தால் அதை நிறைவேற்ற வேண்டும். வறுமையிலும் துன்பத்திலும், சத்தியத்திற்கும் அசத்தியத்திற்கும் இடையே நடக்கும் போராட்டத்தின்போதும் பொறுமையுடன் நிலைத்து நிற்க வேண்டும். இப்படிச் செய்பவர்களே புண்ணியவான்கள்! இவர்களே உண்மையாளர்கள்; இவர்களே இறையச்சம் உடையவர்கள்” என்று குர்ஆன் (2:177) ஓர் அற்புத விளக்கத்தைத் தருகிறது
இப்படிப்பட்ட புண்ணிய வாழ்வை வாழ்ந்து மறைந்தவர் மரணத்திற்காக உலகமே கண்ணீர் விடும். அவர்கள் வாழும்போதும் அமைதி நிலவும். மறைந்த பின்னும் அமைதி நிலவும். வெறும் கையோடு வந்த அவர்கள் வெறும் கையோடு இவ்வுலகை விட்டு மறைவார்கள்.

ஆனால் மக்கள் அவர்களை மண்ணறையோடு மறந்து விடமாட்டார்கள். வாழும் காலமெல்லாம் தங்கள் இதய சிம்மாசனத்தில் வைத்து அவர்களின் வாழ்க்கைப்படி வாழ முயலுவார்கள். இவர்கள்தான் சாலிஹின்களான நல்லோர்கள் என்கிறது இஸ்லாம்.

**ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 5**
**( இறந்தபின் கண்பார்வை பெற்றார் )**




லியோன் ஹெயின் (Leon Huygen) பிறப்பிலே கண் பார்வை இழந்தவர். 11.07.1994 அன்று அவரது வீட்டுக்குள் புகுந்த கொள்ளையர்கள் அவரது தலையில் துப்பாக்கியால் சுட்டதால் அவர் மரண நிலையில் இருந்தார்.
இவரது உடல் படுக்கை நிலையில் இருக்கும்போது இவரது உடலுக்குமேல் இவர் மிதந்து கொண்டிருப்பதை அங்கு விசாரணைக்குச் சென்ற போலீஸார் கண்டனர். சிறிது நேரத்தில் அவ்வுடல் மேலே சென்று மறைந்துவிட்டது.
இவரது உடலுக்கு தீவிர சிகிச்சை அளிக்கப்பெற்று உயிர் பெற்றார். கண்பார்வை இழந்த இவர் அந்த அறையில் தான் கண்ணால் கண்ட அனைத்தை யும் விவரமாகக் கூறினார். உயிர் பெற்று மீண்டும் வழமைக்குத் திரும்பியபின் முன்பு எப்படிப் பார்வையில்லாமல் இருந்தாரோ அதே நிலையில்தான் இருந்தார்.
(ஒருவர் தான் இழந்த இழந்த உறுப்புக்களை, புலன்களை இறந்தபின் திரும்பப் பெற்றுக்கொள்கிறார் என இறந்தவர்களுடைய திபெத்திய நூல் (Tibefian book of the dead) விளக்குகிறது. அத்தியாயம் - 36)
(அதற்கு நபியே!) நீங்கள் கூறுங்கள்: "அல்லாஹ் நாடியதையன்றி யாதொரு நன்மையோ தீமையோ நான் எனக்கே தேடிக்கொள்ள சக்தியற்றவன். ஒவ்வொரு வகுப்பாருக்கும் ஒரு குறிப்பிட்ட தவணையுண்டு. அவர்களுடைய தவணை வரும் சமயத்தில் ஒரு நாழிகையும் பிந்தவும் மாட்டார்கள்; முந்தவும் மாட்டார்கள்." அத்தவணையில் அவர்கள் காரியம் முடிவு பெற்றுவிடும்.
(அல்குர்ஆன் : 10:49)

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 6
## ( மற்றொரு கோணம் )

இயக்குநர் சீமான் :
நிற்பவை. நடப்பவை, பறப்பவை எல்லாமே சாகின்றன. மண்ணில், நீரில், காற்றில் கரைகின்றன.
மனிதன் உயிர் மட்டும் மோட்சத்திற்கும் நரகத்திற்கும் ரிசர்வ் செய்துகொண்டு பயணப்படுவதாக சொல்கிறார்களே... உடலை விட்டுப் பிரித்து செல்லும் உயிர்ப் பயணத்தை விஞ்ஞானப் பூர்வமாய் உங்களால் விவரிக்க முடியுமா?

---

சற்குரு ஜக்கி வாசுதேவ் :
ஒரு வெட்டுக்கிளி செத்துப் போகிறதென்றால் அதற்குள்
இன்னும் சாகாமலிருப்பது பரிணாம நிலையின் அடிப்படைத் தன்மை. அது பெரும்பாலும் பூமியிலேயே தங்கிவிடுகிறது.
இரவு நேரங்களில் புல் வெளிகளில் நடக்காதீர்கள் என்று இந்தியாவில் சொல்வார்கள். ஒரு காரணம் சில பூச்சிகளை, பாம்புகளை நீங்கள் மிதித்து அது உங்களை கடித்துவிடக்கூடாது என்பதற்காக.
இன்னொரு காரணம் என்னவென்றால் அப்போதுதான் செத்துப்போன பூச்சிகள், உயிரினங்கள் எல்லாம் இடம் மாறுகிற நிலையில் அங்கே பூமியைப் பற்றிக் கொண்டேயிருக்கும்
ஒரு வெட்டுக் கிளி செத்துப்போகிறதென்று வைத்துக் கொள்ளுங்கள். உடனடியாக இன்னொரு உடம்பைத் தேட ஆசைப்படும். ஒரு சிறு கால இடைவெளி இருக்கும். அவை பூமியிலேயே சுற்றிக் கொண்டிருக்கும்.
பெரும்பாலும் விலங்குகளும் பூச்சிகளும் இரவில்தான் சாகின்றன. குறிப்பாக அடிப்படை நிலையில் இருக்கிற சிறிய உயிரினங்கள் சிலவற்றைப் பறவைகளோ, விலங்குகளோ சாப்பிட்டுச் சாகலாம் அது வேறு விஷயம். இதைத் தவிர அது பெரும்பாலும் இரவில்தான் சாகின்றன.
அவை மிகக்குறுகிய காலம்தான் உடலற்ற நிலையில் இருக்கும். முழுக்க முழுக்க உந்துசக்தியின் அடிப்படையில் அவை போவதால் அடுத்த நிலைக்கு மிக வேகமாகப் போகும்.
ஆயிரமாயிரம் ஆண்டுகள் பின்புலம் கொண்ட இந்து வாழ்க்கைமுறை ஒரு விதத்தில் பார்த்தால் மிகவும் தந்திரமானது. எல்லாவற்றிலிருந்தும் எதையாவது பெற வேண்டும் என்று அவர்கள் கருதியிருக்கிறார்கள்.
மரணம் நிகழ்கிறது என்றாலும் கூட அதை எப்படிப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று பார்த்திருக்கிறார்கள், எனவே இறந்து கொண்டிருப்போர்களுக்கும்,இறந்தவர்களுக்கும் பல சடங்குகளை அவர்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள்.
மரணம் நெருங்குகிற வினாடியில் அது குறித்து தெரிந்தவர்கள் பொதுவாகவே இறந்துகொண்டிருக்கிற மனிதரை வீட்டிற்கு வெளியே கொண்டுபோய், வடக்கு தெற்காக உடம்பை கிடத்துகிறார்கள். தலை வடக்குப்புறமாக வைக்கப்படுகிறது. ஒருவித சுலபத்தோடு மரணம் நிகழ வேண்டுமானால், மரணம் உறுதியென்றாகி விட்டப் பிறகு அந்த உடலை வெளியே கொண்டுபோகிறார்கள்.
ஏனென்றால் ஒரு கட்டிடத்துக்குள் இருக்கிறபோது அவ்வளவு சுலபமாக உயிர் பிரியாது. எனவே ஒரு கட்டிடத்திற்கு வெளியில் வடக்கு தெற்காக அந்த மரணமடையப் போகிறவனுடைய உடல் கிடத்தப்படுகிறபோது, எளிதாக அந்த உயிர் உடம்பிலிருந்து பிரிகிறது.
மரணம் நிகழ்ந்த பிறகு கூட, அந்த பிராணசக்தி ஸ்தூல உடலைவிட்டு முழுவதும் அகன்றுபோய் விடுவதில்லை. எனவே அந்த உயிர் உடலை சுற்றிக் கொண்டே இருக்கிறது
அந்த உடலை வடக்கு தெற்காக வைப்பீர்களேயானால் காந்த ஈர்ப்பு காரணமாக அந்த உயிர் உடம்பை விட்டு விலகிப்போய் விடுகிறது.

அந்த உடலில் சில மாற்றங்கள் நிகழ்கின்றன எனவே அந்த உடலைச் சுற்றிக் கொண்டிருப்பது பயன் தராது என்று அந்த உயிருக்குத் தெரிகிறது. உடலை வடக்கு, தெற்காக வைத்துவிட்டால் மறுபடியும் உடலுக்குள் நுழைய முடியாது.

என்று உயிர் தெரிந்து கொள்கிறது.

இந்தியாவில் அடுத்து நடைபெறுகிற ஒன்று. ஒரு மனிதன் இறந்தவுடன் அவர்களுடைய இரண்டுகால் கட்டை விரல்களும் ஒன்றாகக் கட்டப்படுகின்றன. ஏன் தெரியுமா?

அப்படிக் கட்டப்படாவிட்டால் மீதமிருக்கிற பிராணசக்தி மூலாதாரம் வழியே வெளியேற முயலும். உடலினுடைய பின்புறத் துவாரம் திறந்திருக்குமேயானால் அதன் வழியாக அந்த உயிர் மீண்டும் நுழைய முயலும். அது அந்த உயிருக்கும் நல்லதில்லை. அந்த சூழலுக்கும் நல்லதில்லை. மிகவும் எதிர்மறையான சூழலை ஏற்படுத்தும்.

எனவே கால் கட்டை விரல்களைக் கட்டுவதன் மூலம் மூலாதாரம் மூடப்படுகிறது. நீங்கள் உங்கள் கால்கட்டை விரல்களை மூடினால் உங்கள் பின்புறத் துவாரம் இறுக்கமாக மூடப்பட்டிருக்கிறது.

நான்குமணி நேரத்திற்குள் உடலை எரிக்க வேண்டும். ஏனென்றால் அந்த உடலை நீங்கள் சிதைக்கிற வரையில் எரிக்கிற வரையில் அந்த உயிர் அதைச் சுற்றியே அலைந்து கொண்டிருக்கும். மேல்நோக்கிப் போகாது. அந்த உயிருக்கு என்ன நிகழ வேண்டுமோ அது நிகழாது.

ஏனென்றால் எல்லாம் முடிந்துவிட்டது என்று அந்த உயிருக்கு இன்னும் தெரியவில்லை. எனவே எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் அந்த உட லை எரித்து விட வேண்டும். பழைய காலங்களில் மரணம் நிகழ்ந்து ஒன்றரை மணி நேரத்தில் எரித்துவிட வேண்டும் என்று ஒரு விதி இருந்தது.

இன்று அந்த உடலை வீட்டிலேயே 2 நாட்கள்கூட வைத்திருக்கிறீர்கள். அது இறந்தவருக்கும் நல்லதில்லை. உயிரோடு இருப்பவர்களும் நல்லதில்லை.

(நபியே!) ரூஹைப் பற்றி (யூதர்களாகிய) அவர்கள் உங்களிடம் கேட்கிறார்கள். அதற்கு நீங்கள் "அது எனது இறைவனின் கட்டளையால் ஏற்பட்டது. (அதைப் பற்றி) வெகு சொற்ப ஞானமேயன்றி உங்களுக்குக் கொடுக்கப்படவில்லை. (ஆதலால், அதன் நுட்பங்களை நீங்கள் அறிந்துகொள்ள முடியாது)" என்று கூறுங்கள். (குர்ஆன் : 17:85)

**ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 7**
**( இல்மெ ரூஹானி பகுதி 1 )**




இறந்துபோன ஆத்மாவின் மனதிலுள்ள செய்திகளை அறிதல்:
எந்த ஆத்மாவின் மனதின் செய்திகளை அறியவேண்டுமோ, அந்த ஆத்மாவின் சமாதிக்கு அருகில் சென்று, அந்த ஆதமாவும் நம் ஆத்மாவும் ஏக-ஒரே வெட்டவெளி அல்லது ஆகாயமாயிருக்கிறதெனச் சிந்தித்து, மனதின் அசைவுகளை நீக்கி ஒரே நினைவாக இருந்தால், நமது மனதின் முயற்சியன்றி ஓடிவருகிற எண்ணம் அந்த ஆத்மாவின் மனதின் செய்திகளாயிருக்கும்!
உயிராயிருப்பவனின் ஆத்மாவைவிட மரித்தவனின் ஆத்மா சரீரத்தின் தடை இல்லாததினால் அது சீக்கிரத்தில் நம்மோடு சம்பந்தப்படும். சில சமயங்களில் அது வெகு தூரத்திலிருக்கும். நம் சம்பந்தத்தை எட்டிக்கொள்ளாத வரையில் அது நம்மோடு சம்பந்தப்படுகிறதில்லை! ஆகையால், நம் மனவெளியை அதிக விசாலமாக்கிக் கொண்டிருக்கவேண்டும்!

ஓர் ஆத்மாவின் தத்துவங்களை நம் ஆத்மாவில் எடுத்துக்கொள்ளும் விதம்:
எந்த ஆத்மாவின் தத்துவத்தை நம் ஆத்மாவில் எடுக்க வேண்டுமோ, அந்த ஆத்மா மரித்திருந்தாலும், உயிராயிருந்தாலும் அந்த ஆத்மாவுடன் தம் ஆத்மாவை சம்பத்தப்படுத்தவேண்டும்.
அஃதாவது அத்த ஆத்மாவும் நம் ஆத்மாவும் ஆகாயத்தைப்போல் ஒரே வெட்ட வெளியாயிருக்கின்றதெனச் சிந்தித்து "அந்த ஆத்மாவே நான்! அதன் தத்துவமே என் தத்துவமாயிருக்கின்றது" எனக் கருதவும்.
நமக்குத் திடமும் நம்பிக்கையும் உண்டானால் அதன் சம்பந்தம் உண்டாய்விட்டது. நம்மால் இயலாத காரியத்தை அதன் உதவியைக் கொண்டு செய்யலாம்.

பெரிய காரியங்களுக்கு மஹான்களின் ஆத்மாவின் சம்பந்தம் அல்லது கடவுளின் சம்பந்தத்தை உண்டாக்கிக் கொள்ளலாம்! இதற்கு நாமும் மகாப் பரிசுத்தமான ஞானியாயிருக்க வேண்டும்.
இறந்தவுடன் சூச்சுமத்திற்குச் சரீரத்தை விட பத்துப்பங்கு வலு அதிகமாய் விடுகிறது. சிலவற்றுக்கு அதன் ஞானத்திற்குத் தக்கபடி இன்னமும் அதிகமாயிருக்கும். இவ்வித சம்பந்தத்தை ஓர் ஆத்மாவுடன்

உண்டாக்கும்பொழுது, அது மரித்திருந்தால் தம்மோடு சம்பந்தப்பட்டவுடன் அது சீக்கிரத்தில் வந்து நமக்கு மட்டும் தன் ரூபத்தைக் காட்டி நம்மோடு பேசுனதும் உண்டு!
மரித்தும்போன மனிதனின் கெட்ட ஆவிகளுடன் இவ்வித சம்பந்தத்தை உண்டாக்கிக் கொள்ளுவது மகா பயங்கரம். வலுவான சித்தமுள்ள ஞானிகளுக்குக் குற்றமில்லை
(ஆதார நூல் : மவுலவி மஷாயிஹ் முஹம்மத் தாஹிர் ஹஸனீ காதிரீ அவர்களின் சம்பூரண சுயம் பிரகாசம் நூலிருந்து... )

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 8
## ( இல்மெ ரூஹானி 2 )

கடவுளின் அம்சமே ஆத்மா! ஆத்மாவின் அம்சமே ஆகாயம்! ஆகாயமானது முடிவில்லாத அகண்டமாயிருக்கின்றது. விசாலத்தை இதன் எவராலும் மட்டுப்படுத்த முடியாது! ஆனால் ஆகாயத்தைவிட ஆன்மா அதிக சூக்குமமாகவும் ஆத்மாவை விடக் கடவுள் அதிகத் தூய்மையாகவும் இருக்கலாம். ஆகையால், சுத்த வெட்ட வெளியை அதற்கு ஒப்பிடுவது வழக்கம்!
வெட்ட வெளியை அதற்கு ஒப்பிடுவதில்லை கடவுளின் அம்சமோ எந்த வஸ்துவின் சுயத்தை விட்டும் ஒழியாது. ஆகையால், ஆகாயத்தை ஆன்மா என்றாவது, ஆன்மாவைக் கடவுளென்றாவது சொல்லலாம். கடவுளுக்கு மேற்பட்ட இந்த வலுவான வஸ்து ஒன்றுமில்லை!
ஆகையால், இந்த ஞானத்தில் ஒவ்வொரு காரியததையும் கடவுளாகவே இருந்து செய்ய வேண்டும் இல்லாவிட்டால் தம் சித்தத்திற்கு அதிக வலுவிராது. நம் காரியத்தைக் கட்டாயம் சாதிக்க முடியாது! இதில் நமக்குச் சந்தேசுமற்ற நம்பிக்கை இருக்கவேண்டும். நாம் நாடியபடி நமது ஆத்மா நமக்கு முடித்துத் தருமென்பதை ஞாபகத்தில் வைக்க வேண்டும்!

பூமியானது ஆகாயத்தில் ஒரு பந்தைப் போல் சுழலுகின்றது. அவ்வாறே சந்திரன்,சூரியன், நக்ஷத்திரம் முதலிய எல்லாக் கோளங்களும் ஆகாயத்தில் சுற்றுகின்றன. அவற்றின் எல்லையைக் கடக்காமல், கடவுளின் பிரதிநிதியாகிய ஆத்மாவானது அடக்கி ஆய்கின்றது. பூமியும் ஒரு கோள். "சந்திரனைச் சூழ ஆகாயமிருப்பது போல்" பூமியைச் குழ ஆகாயயிருக்கிறது.

சுத்த வெளியாகிய ஆகாயத்தை உண்டென்றும் இல்லையென்றும் சொல்ல முடியாது! அதனைப் பார்க்கவும் முடியாது! அதிலுள்ள இருளையும், வெளிச்சத்தையும் பார்க்கலாம். அதனை அறியவும் முடியாது! அதில் பஞ்ச வர்ணத்தில் ஏதாவதொன்றைப் பார்க்கலாம். அறியலாம்.
ஆகாயத்தில் பறக்கும் பக்ஷிகளுக்கு யாதொரு தடையும் ஏற்படாத குறிப்பைக் கொண்டு அதனை உண்டென்று நம்பலாம். அதனை பிரம்மத்திற்கு ஒப்பிடலாம். அதன் விசாலத்தின் முடிவை எட்டிக் கொள்ள (சென்று அடைய) முடியாது. அதற்கு முடிவும் இல்லை!
ஆத்மாவின் பிரதிநிதி மனம். மனத்தின் கீழ் அதன் காரியதரிசி கனாகிய அநேக ஆவிகள் இருக்கின்றன. அதன் சம்பந்தத்தினால் மனிதன் அநேக தொழில்களுக்கு அருகனாவான்! ஆத்மாவோ ஆனந்தமயமானது! மனம் விரும்பியதை அளிப்பதும், அதனைப் பரவசப்படுத்துவதும் அதற்குச் சொந்தமானது. இந்தக் காலத்தில் ஜால வேலைகள் ஏற்பட்டு உண்மையான வேலைகளுக்குப் பஞ்சம் ஏற்பட்டு விட்டது. எதார்த்தமான ஞானம் மறைந்திருக்கின்றது!
(ஆதார நூல் : மவுலவி மஷாயிஹ் முஹம்மத் தாஹிர் ஹஸனீ காதிரீ அவர்களின் சம்பூரண சுயம் பிரகாசம் நூலிருந்து... )

**ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 9**

**( இல்மெ ரூஹானி 3 )**

1. பிறர் மனதின் செய்திகளை அறிதல்:

எவன் மனதின் சங்கதிகளை அறியவேண்டுமோ, "அவன் மனதும் நம் மனதும் ஒன்று அல்லது அவன் ஆத்மாவும் நம்

ஆத்வும் ஒன்று நாங்கள் இருவரும் ஏக-ஒரே முடிவில்லாத-வெட் வெளியாயிருக்கிறோம். எங்கள் இருவருக்கும் யாதொரு பேதமில்லை " என-தமது மனதின் உதிப்புக்களைத் தடுத்து, தம மனதின் பல எண்ணங்களை நீக்கி, ஒரே மனதாய் எண்ணம் அசையாமல்-வெகு உறுதியோடு வலுவான சித்தமுள்ளவனாய் இருப்போமாயின், நமது மன முயற்சியன்றி அவன் மனதிலுள் செய்திகள் நம் மனதில் வெளியாகும்!

2. ஓர் ஆத்மாவில் நம் மனதின் செய்திகளைப் போட்டு விடுதல் அல்லது நம் ஆத்மாவின் தத்துவத்தை அளித்தல் விபரம் :

அந்த ஆத்மாவையும் நம் ஆத்மாவையும் ஆகாயத்தைப்போல் ஏக ஒரே வெட்ட வெளியாகச் சிந்தித்து, நம் எண்ணம் அதன் எண்ணமென்றும், நம் தத்துவம் அதன் தத்துவமென்றும் கருத வேண்டும். இவ்விதம் சலனமற்று ஒரே நினைவாக இருந்தால், நம் எண்ணமாகிய மனதின் செய்திகளும், நமது தத்துவங்களும் அதில் வெளியாய்விடும்!

3.நடக்கப்போகிற செய்திகளை முந்தியே தெரிந்துகொள்ளும் விதம்:

நம்மை முடிவில்லாத ஆகாயத்தைப் போல் சுத்த ஏக வெட்ட வெளியாகச் சிந்தனை செய்து மனதின் அசைவில்லாமல் இருப்போமாகில், கனவிலாவது, அசரீர வாக்கினாலாவது அவ்விஷயம் நிகழ்கிறவிதத்தைப் பிரத்யக்ஷரை ரூபமாகவாவது விளக்கிக்காட்டப்படும். இது சில சமயம் ஏழு நாளைக்குள் தெரியவரும். நாம் விடாமல் அரைமணி நேரமாவது சாதித்துவர வேண்டும்!

4. தூரதிருஷ்டியை உண்டாக்கிக்கொள்ளும் விதம் :

நம்மை சுத்த சூனியமாக கீழ், மேல், முன், பின், இடதுபுறம், வலதுபுறம், நம் சரீரம் உள்பட இல்லையெனக் கருதி யாதொரு ரூபமில்லாமல், முடிவில்லாத ஒரே ஆகாயமாய்ச் சிந்தனை செய்து 'அலையற்ற சமுத்திரம்போல்" இருந்தால்-"களங்கமற்ற கண்ணாடியில் எதிரிலுள்ள பொருள்கள் தோற்றுவது போல்" தொலைவிலுள்ள நக்ஷத்திரமாகிய உலகங்கள் நம் மன 'ஆகாயத்தில் தோன்றும். அதற்குப்பின்னால் எந்த இடத்தையும் நோக்கினால் அது தடையின்றித் தெரியும்!

5. இறந்துபோன ஆத்மாவைக் கூப்பிட்டுப் பேசுதல்:

எந்த ஆத்மாவைக் கூப்பிட்டுப் பேசவேண்டுமோ, அந்த ஆத்மாவையும், நம் ஆத்மாவையும் ஒன்றாகச் சிந்தித்து ''ஆகாயத்தைப் போல்" அருபமாகக் கருதி, நம் அரூப அம்சம் அதில் மோதும்படியாக மன ஆகாயத்தை விசாலமாக்கிக்கொண்டே போகவேண்டும்.

ஏனெனில், அது சில சமயங்களில் வெகு தூரத்திலிருக்கும். அல்லது வேறு கிரகங்களிற் சென்றிருக்கும். அதனை நம் நாட்டத்தால் நாடி கவர்ச்சி செய்துகொண்டேயிருந்தால், நமது அருப அம்சம் அதில் மோதினவுடன் அஃது எவ்வளவு தூரத்தியிருந்தபோதிலும் உடனே வந்து நம்மோடு பேசும்!

இவ் விதம் பேசுவதில்-சுமார் மூவாயிரம் பேர்களுக்கு முன் வந்து பேசியும் சிலருக்குத் தெரிந்தது, சிலகுக்குத் தெரியவில்லை. தெரியாத காரணம் : ஹிருதயப் பரிசுத்தக் குறைவென்று எண்ணப்பட்டது.

6. எந்த ஜீவனையும் வசியமாக்குதல்:

நம் ஆத்மாவையும் அந்த ஜீவனின் ஆத்மாவையும் "ஆகாயத்தைப் போல" ஒன்றென்று கருதி, நம் சித்தத்திற்குக் கீழ்ப்படியும்படியாக நம் மனதினால் நாடி வருஷிக்கவும் (ஈர்க்கவும்) உடனே வசியமாய்விடும்!

7. பிணியையும் வறுமையையும் அகற்றிச் சுகத்தையும் செல்வத்தையும் உண்டாக்கிக்கொள்ளுதல்:

"நான் ஆகாயத்தைப்போல் சுத்த வெட்டவெளியாய் இருக்கிறேன். நான் அரூபத்திற்கு அரூபமான சுத்த பிர்மம்; மாமிசம் எலும்புமில்லை, என் ஜடம் எனக்கு மெய்யான வடிவல்ல! எனக்குப் பிணியில்லை, வறுமையில்லை.

உலகம் என் வசமிருக்கிறது. எல்லாச் சுகமும் எல்லாச் செல்வமும் எனக்கே!" என்று இவ்விதம் ஒரு நாளைக்கு இருமுறையாக காலையும், மாலையும் கால் கால் மணி நேரம் கருதி வந்தால் போதும்!
8.ஓர் ஆத்மாவின் பிணியையும், வறுமையையும் அகற்றிச் சுகத்தையும், செல்வத்தையும், மோக்ஷத்தையும் அளித்தல்:
'"நான் ஆகாயத்தைப்போல் அழிவில்லாத, முடிவற்ற சுத்த பிரமமாயிருக்கிறேன். சதாவும் நான் மோக்ஷ Sத்திலிருக்கிறேன். இந்த ஆத்மாவும் நானும் ஒன்று. இந்த ஆத்மாவை பூமியிலிருந்து மேலே உயர்த்துகிறேன். இதன் பிணியையும் வறுமையையும் அகற்றிவிட்டேன். இதற்குச் சுகத்தையும், செல்வத்தையும், மோக்ஷத்தையும் அளித்துவிட்டேன்!" எனக் கருதவும். இதற்கு நமக்கு அசரீர வாக்காக மறுமொழி ஓமென்று வந்தால் போதும்' இல்லையென வருமாகில், பிரமத்தால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை யென மனதைத் திடப்படுத்திக்கொண்டு, மறுபடியும் ஆமென்று வருகிறவரையில் முயற்சிக்கவும். மரித்த ஆளிகளைக் கீழ்ப்ப தவில் விருந்து மேல் பதவிக்குக் கொண்டுபோகிறதாயிருந்தால் அதுவே நமக்குப் 'போதும்-பற்றாது' எனத் தெரிவிக்கும்!
9. சூக்குமம் எடுக்கும் விதம்:
தம் சொரூபத்தைக் கேசாதி பாதமுதல் செவ்வையாக ஒரு கண்ணாடியில் நோட்டமிட்டுத் திட்டப்படுத்திக்கொள்ளவும்.
பின்பு தமது சரீரத்தை மன ஆகாயத்தில் அழித்து நாமும் மன ஆகாயமாயிருந்துகொண்டு, கண்ணாடியில் பார்த்துத் திட்டப்படுத்தின நமது ரூபத்தை நாம் ஆகாய வடிவாயிருந்துகொண்டு செவ்வையாக நோட்டமிடவும்.
பின்பு நமது சிநேகிதன் ஒருவனிடம் நிதகாலம் போய்க்கொண்டும், பேசிக்கொண்டிருப்பதாயும், நம் கொல்லைக்குத் தண்ணீர் இறைப்பது போலும், நாம் ஆலயத்தில் போய்த் தொழுவது போலும் மனோ பாவனையாக, நாம் ஆகாயமாயிருந்து கொண்டு கண்ணாடியில் திட்டப்படுத்தின ரூபத்தைக்கொண்டே செய்யவேண்டும். இதில் சூக்குமம் வெளியாய்விடும்!
எந்த சாதனையும் 40 நாள் செய்தால் அனேகமாகப் போதும். ஒரு நாளைக்கு 24 மணி நேரம் ஆகையால், நாளொன்றுக்கு ஒரு மணி நேரம் அப்பியாசித்தால், 24 நாளைக்கு ஒரு நாள் அப்பியாசந்தான் ஆகும். ஒரு நாளைக்கு மூன்று மணி
நேரத்திற்கு மேல் அப்பியாசிக்கக் கூடாது !
(ஆதார நூல் : மவுலவி மஷாயிஹ் முஹம்மத் தாஹிர் ஹஸனீ காதிரீ அவர்களின் சம்பூரண சுயம் பிரகாசம் நூலிருந்து... )

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 10
## ( ஆன்மாக்களோடு தொடர்பு 1 )

சுவிடன் நாட்டு ஜிர்கென்சன் என்ற ஆய்வாளர் எழுதிய புத்தகம் அண்ட வெளியில் குரல்கள்
( VOICE FROM THE UNIVERSE ) ரொம்பவும் சுவராசியமானது .
இறந்தவர்களை புதைத்தப் பிறகோ , அவர்கள் மண்ணோடு மண்ணாகி மக்கிய பின்போ அவர்களின் குரல்களை நீங்கள் கேட்டிருக்கிறீர்களா ?
அதெப்படி அவர்களால் பேச முடியும் ? அதை நாம எப்படி கேட்க முடியும் ? என்று நீங்கள் கேட்பது புரிகிறது . ஆனால் "முடியும் " என்கிறார் ஜிர்கென்சன் .
இந்த ஆய்வு நூலின் விஞ்ஞானி ஜிர்கென்சன் இசை ஆர்வம் உள்ளவர். மனித சஞ்சாரமற்ற காடுகளிலும் மலைப் பிரதேசங்களிலும் பல சப்த ஒலிகளை டேப் ரிக்கார்டு மூலம் பதிவு செய்தார் .
அவற்றை பொறுமையாக வீட்டில் போட்டுக் கேட்ட பொழுது சில வித்தியாசமான குரல்கள் ஒலிப்பதைக் கேட்டார் . நிச்சயமாக அது பறவைகளின் குரல்கள்களோ, மிருகங்களின் குரல்களோ அல்ல என்பதையும் மெல்ல மெல்ல புரிந்து கொண்டார் .

மீண்டும் ஏகாந்தமான பல வனாந்திர வெளியில் பறவைகள் இல்லாத இடங்களில் டேப்பை ஓடச் செய்தார். இப்படி நூற்றுக்கணக்கான முறை ஆய்வு செய்தார் .அதில் பல வித்தியாசமான குரல்கள் டேப்பில் பதிவானது. சில சமயங்களில் ஆராய்ச்சியாளரது இறந்து போன நண்பர்கள் மற்றும் உறவினர் குரல்களும் பதிவாயின . மேலும் முகம் தெரியாத பல மனித குரல்களும் பதிவாயின. மற்ற விஞ்ஞானிகள் இவரின் ஆய்வை பரிசோதனை செய்து ஒத்துக் கொண்டுள்ளனர். ஜிர்கென்சன் தாம் செய்த ஆய்வை நம்மையும் செய்யத் தூண்டுகிறார் . நீங்கள் தயாரா ?

"(நிராகரித்துக் கொண்டிருக்கும்) அவர்களில் எவனுக்கும் மரணம் வந்தாலோ (அவன் தன் இறைவனை நோக்கி) "என் இறைவனே! என்னை (உலகத்திற்கு) திரும்ப அனுப்பிவிடு.

நான் விட்டு வந்த அ(ந்த உலகத்)தில் (இனி) நல்ல காரியங்களையே நான் செய்து கொண்டிருப்பேன்" என்று கூறுவான். (எனினும்,) அது ஆகக்கூடிய காரியமன்று. (இத்தகைய சந்தர்ப்பங்களில்) அவன் கூறக்கூடியது வெறும் வார்த்தையே (யன்றி வேறில்லை) அவர்களுக்கு முன் ஓர் அரண் ஏற்பட்டு விடும். (உயிர் கொடுத்து) எழுப்பப்படும் நாள் வரையில் அதில் தங்கிவிடுவார்கள் ." (குர்ஆன் : 23: 99,100)

நாம் உலகில் ரூஹும் உடலும் இணையப் பெற்று வாழ்வதைப் போன்று, அவர்களும் ஆலம் பர்ஜக்கேற்ற (மண்ணறையில்) முறையில் ரூஹும் , உடலும் இணையப் பெற்று வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் எனினும் அது நம் உடலைப் போன்று அல்ல .

நபி (ஸல்) அவர்கள் ஒருவரை இஸ்லாத்தின்பால் அழைத்த போது, அவர் குழந்தை பருவத்தில் இறந்து போன தனது மகளை உயிர் பெறச் செய்தால் ஈமான் கொள்வதாக கூறினார்.

அக்குழந்தையின் கபுருக்கு சென்று நாயகம் (ஸல்) அவர்கள் குழந்தையை கூப்பிட்டு அழைத்தார்கள். உடனே அக்குழந்தை, "அடிபணிந்தேன் "என்று மறுமொழி கூறியது.

"திரும்பி உலகுக்கு வரக்கூடிய எண்ணம் உண்டா ? என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.

" அல்லாஹ்வுடைய ரசூலே ! ஆண்டவன் மீது சத்தியமாக எனக்கு அத்தகைய எண்ணம் இல்லை. இந்த இம்மையை விட மறுமையே மேலாக காண்கிறேன் " என்று பதில் கூறியது . இந்த குழந்தையின் குரலை தகப்பனாரும் கேட்டார்.

இவ்வரலாற்றை இமாம் பைஹகீ (ரஹ்) அவர்கள் தலாயிலில் சொல்வதாய் ஹுஜ்ஜத்துல்லாஹி அலல் ஆலமீன் 422 வது பக்கத்தில் அல்லாமா ஷெய்கு யூசுபுன்னபஹானீ ரஹ்மத்துல்லாஹி கூறுகிறார்கள்.

**ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 11**

**( ஆன்மாக்களோடு தொடர்பு 2 )**




ESP - Extrasensory perception என்னும் சிறப்புத் திறமை கொண்ட மனிதர்களில் மிகவும் முக்கியமானவர் டேனியல் டங்க்ளஸ் ஹியூம் (daniel douglas home).இவர் ஸ்காட்லாந்தில் 20 மார்ச்1833 பிறந்தார். அப்பா இல்லாமல் தாயும் சிறுவயதில் இறந்து போக அத்தையுடன் வளர ஆரம்பித்தார். ஹியூம் சிறுவயதில் ஒரு ஒரு நுட்பமான குழந்தையாக கருதப்பட்டர். காரணம் நரம்பு நோயால் (nervous temperament) பாதிக்கப்பட்டுள்ளார்.
நரம்பியல் நோய் தாக்கப்பட்டவர்களில் சிலருக்கு ESP கொண்டவர்களாக இருப்பார்கள். ஹியூமிற்கு கூடவே Psychokinesis என்னும் பார்வையின் தீட்சண்யத்தால் அல்லது ஆழ்மனத்தின் சக்தியால் பொருள்களை தொடாமலேயே நகர்த்தும் சக்தியும் சேர்ந்து கொண்டது.

ஹியூமிற்கு சாதாரண குழந்தைகளை போல விளையாட்டுகளின் மீது ஆர்வம் ஏற்படவில்லை.ஆனால் தனது நண்பனான எட்வினுடன் மிகவும் நெருக்கமாக காணப்பட்டார்.
ஒரு நாள் ஹ்யூமும் எட்வினும் ஒரு விசித்திரமான ஒப்பந்தம் செய்து கொண்டனர். தம்மில் யார் முதலில் இறக்கிறார்களோ அவர் மற்றவரின் முன்பு தோன்றவேண்டும் என்று சத்தியம் செய்து கொண்டனர். பிறகு எட்வின் தன் குடும்பத்துடன் வெளியூரில் குடிபுக நேர்ந்தது.

1946 -ல் அத்தையிடம் ஹ்யூம் ஓடிவந்து, " என் கட்டில் அருகில் எட்வின் நின்று கொண்டிருந்தான். ( எட்வினிடம் செய்து கொண்ட ஒப்பந்தமும் மனதில் வந்து )அவன் இறந்து விட்டான் என்று தோன்றுகிறது " என்று சொல்லி அழ, அத்தை இது என்ன பைத்தியக்காரத்தனம் என்று கோபித்துக் கொண்டாள்
மறுநாள் எட்வின் ஒரு விபத்தில் இறந்த செய்தி வந்தது. கூட முதல் முறையாக தனக்கு ஏதோ சக்தி இருப்பதாக ஹ்யூம் முடிவுக்கு வந்தது அப்போதுதான்.

காரணம் ஒரு காலைப் பொழுதில் கண்ணாடியில் ஹ்யூம் தலைவாரிக் கொண்டிருந்தபோது, அறையில் இருந்த நாற்காலி ஒன்று தானாகவே நகர்ந்து அவன் அருகில் வந்தது. கண்ணாடி வழியே அதை பார்த்து கலவரத்தில் ஆழ்ந்த ஹ்யூம் பயந்து போய் வெளியே ஓடினான்.
மறுநாள் அத்தையுடன் காலை சிற்றுண்டிக்காக அமர்ந்த போது டேபிளிலிருந்து தானாக விதவிதமான சத்தங்கள் எழுந்தன. அத்தை அச்சத்துடன் மேசைக்களில் குனிந்து பார்த்தாள். எதுவுமில்லை !
தொடர்ந்து இதுபோல ஸ்பூன் நகர்வது, திரைச்சீலை தானாக மூடிக் கொள்வது, பூக்கள் மிதப்பது போன்ற நிகழ்ச்சிகள் நடைபெற, "வீட்டுக்குள் சாத்தானை அழைத்து வந்திருக்கிறாய் ! " என்று கூச்சல் போட்ட அத்தை, ஹ்யூமை வீட்டை விட்டு வெளியேற்றி விட்டார்.

பிற்காலத்தில் எட்வின் இறக்கவே குழந்தைபருவத்தில் செய்த சத்தியத்தின்படி ஹியுமின் முன்பு எட்வின் அடிக்கடி தோன்றினான். அதிலிருந்து அவர் வாழ்க்கையில் மாற்றங்கள் நிகழ ஆரம்பித்தன. தனக்குள் இருக்கும் பல அபரிமிதமான சக்திகளை உணரவும் அதை செயல்படுத்தவும் ஆரம்பித்தார்.
ஒரு முறை பல ஆழ்மன சக்தி ஆராய்ச்சியாளர்களின் முன்னிலையில் தனது சக்திகளை நிரூபித்துக் கொண்டிருந்தார். அவர் மேசையை அந்தரத்தில் பறக்க செய்த போது உடனே அனைவரும் ஓடிப்போய் ஏதும் கேபிள் இருக்கிறதா என பரிசோதித்தார்கள்.
இப்படி அவர் செய்யும் ஒவ்வொரு செயலையும் சந்தேகக்கண்ணோடு பார்வையிட , எரிச்சல் அடைந்த ஹியூம் ஒரு சுவரின் ஓரமாகப் போய் நின்று கொண்டு தனது உயரத்தை அளவிடுமாறு கூறினார்.சரியாக 5 அடி 10 அங்குலம் அளவிடப்பட்டது.
பின்னர் கண்ணை மூடி மூச்சை உள்ளெடுத்துக் கொண்ட ஹியூம் சில நிமிடங்களில் வளர ஆரம்பித்தார். பின்னர் அளந்து பார்க்கையில் 6 அடி 6 அங்குலமாக வளர்ந்திருந்தார்.
இதை கண்ட அனைத்து ஆராய்ச்சியாளர்களும் விளக்கம் கூற முடியாமல் திகைப்புக்குள்ளாகி அவரின் இந்த அபூர்வ சக்தியை ஒப்புக்கொண்டார்கள்.
ரூஃபஸ் எல்மர்ஸ் என்ற செல்வந்தர் ஹ்யூம் செய்திகளை கண்டு , இந்த முறை இந்த முறை பெரிய மேஜை மூன்று பேர் இழுத்துப் பிடித்துக் கொண்டார்கள் மேஜை மிதக்க ஆரம்பித்ததும் அதை கீழே கொண்டுவர முடியவில்லை. இருவர் மேலே ஏறி அமர்ந்து பார்த்தார்கள். தொடர்ந்து மேஜை அவர்களை தூக்கிக்கொண்டு மிதந்தது.
இதை தவிர ஆவிகளுடன் பேசும் திறன்,காற்றில் பறத்தல்,எடையை அதிகரித்தல் போன்ற பலவிதமான சக்திகளை இவர் பெற்றிருந்தார்.

ஆகஸ்ட் 1852-ல் இன்னொரு மனோ தத்துவ நிபுணர்கள் க்யூ மை சோதிக்க வந்தது மறுபடியும் டேப்லே மிதக்க வைக்கச் சொன்னார்கள். சும்மா சும்மா மேஜையை மிதக்க செய்தால் போர் அடிக்கும் என்று போர் அடிக்கும் ! என்ற சொன்ன ஹ்யூம் வேறொரு ஆச்சரியத்தை நிகழ்த்திக் காட்டினார்.
இந்த முறை மிதந்தது ஹ்யூம் ! அலேக் என்று தரையில் இருந்து கிளம்பி மேலே சென்று மிதந்த ஹ்யூமின் தலை கூரையை தொட்டது. அடுத்த நிமிஷம் அங்கிருந்த பியோனோவும் அவருடன் சேர்ந்து மிதந்தது. தானாகவே பியோனோ இசைக்கவும் ஆரம்பித்தது.
டேனியல் டங்க்ளஸ் ஹியூமிற்கு ESP சக்தியால் அற்புதங்களை செய்தாரா ? கூடவே Psychokinesis என்னும் பார்வையின் தீட்சண்யத்தால் அல்லது ஆழ்மனத்தின் சக்தியால் பொருள்களை தொடாமலேயே நகர்த்தும் சக்தியால் செய்தாரா? அல்லது நண்பன் எட்வினுடைய ஆன்மாவின் ஆற்றலால் செய்தாரா ?
' தெரியவில்லை ' என்றது விஞ்ஞான உலகம்.
ஹஜ்ரத் ஸஃது இப்னு ஜிதாமா (ரலி ) அவர்களும் , ஹஜ்ரத் அவ்பு இப்னு மாலிக் (ரலி ) அவர்களும் உற்ற நண்பர்கள் இருவரில் யார் முதலில் மரணம் அடைந்தாலும் இருப்பவரின் கனவில் வந்து அங்குள்ள நிலவரம் பற்றி சொல்ல வேண்டும் என்ற முடிவு செய்திருந்தனர்.

ஸஃது (ரலி ) அவர்கள் முதலில் இறந்து அவ்பு (ரலி) அவர்களின் கனவில் தோன்றி , பல கஷ்டங்களுக்குப் பிறகு எனக்கு மக்ஃபிரத் கிடைத்தது என்பதை சொல்லும் போது , ஸஃது (ரலி) நினைவில் நேரில் வந்து சொல்வது போல் இருந்ததாம் அவ்பு (ரலி) அவர்களுக்கு .
ஸஃது கழுத்தில் கரு நிறக் கோடு இருந்ததைப் பற்றி அவ்பு விசாரித்தார்கள்.
அதற்கு ஸஃது , " இன்ன யூதனுக்கு 10 அஷ்ரப் காசுகள் கடன் கொடுக்க வேண்டும். என் வீட்டில் இன்ன இடத்தில் அந்த காசுகள் இருக்கிறது அதை எடுத்து அந்த யூதனுக்கு கொடுத்து விடவும் .
என் மரணத்திற்குப் பிறகு என் வீட்டில் நடந்த சகல காரியங்களும் எனக்கு தெரியும் ; நான் வளர்த்த பூனை இறந்தது உட்பட எனக்கு எல்லாமே தெரியும் , இன்னும் 6 நாட்களில் என் அன்பு மகள் இறக்கப் போவதையும் என் வீட்டில் தெரிவித்து விடுங்கள் " .
ஸஃது இட்ட கட்டளைகளை அவ்பு நிறைவேற்றினார்கள். பூனை இறப்பும் சரியாக இருந்தது , அதே மாதிரி 6 நாட்களில் அவருடைய மகள் இறப்பும் துள்ளியமாக நடந்தது .
(ஆதாரம் உயூனுல் ஹிகாயத்)

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 12
## ( உன்னுள்ளே ' நான் ' )




ஆன்மாவின் எல்லையற்ற பார்வைவெளியில்தான் மனம் தன் நாடகத்தை ஆடிக்கொண்டிருக்கிறது. மனத்துக்கு ஆன்மாவைத் தெரியாது. ஆனால் ஆன்மா, மனத்தின் தடத்தை வழிநடத்துகிறது.
தன்னை நோக்கிய பயணத்தின் பாதையை ஆன்மா அமைக்கிறது. அந்தப் பாதையில் கணிசமான தூரம் சென்ற பிறகுதான் மனத்துக்கு தான் வழிநடத்தப்படுவது உள்ளுணர்வில் தெரிகிறது.
தான் எப்போதும் ஆன்மாவின் ஒளியில்தான் நடந்து வந்திருக்கிறோம் என்பது மனத்துக்குப் போகப் போகத் தெரியவருகிறது.

ஆன்மா தன் மென்குரலில் மனத்திடம் பேசிக்கொண்டுதான் வருகிறது. மனத்தின் குரலில் ஆர்ப்பாட்டம் இருக்கும். அகங்காரம் இருக்கும். அவசரம் இருக்கும். ஆன்மாவின் குரல் மென்மையானது. சன்னமானது. ஏறக்குறைய மௌனத்தில்தான் ஆன்மா பேசுகிறது. மனத்தின் கூச்சலில் முதலில் ஆன்மாவின் குரல் வெளித்தெரியாமல் இருக்கிறது.

மனம் தன் துன்பத்தின் வெப்பம் தாங்காமல் கொஞ்சம் கொஞ்சமாக அடங்கத் தொடங்குகிறது. மெல்ல மெல்ல ஆன்மாவின் குரல் மெதுவாகக் கேட்கத் தொடங்குகிறது. மனம் விழித்துக்கொள்ளத் தொடங்குகிறது.
ஆன்மாவின் மென்குரல் இப்போது தெளிவாகக் கேட்கிறது. அது சொல்லும் உண்மைகள் வெளிச்சமாகின்றன. மனம் தன் பிரலாபத்தை விட்டு அமைதியடைகிறது. ஆன்மாவின் ஆழ்வெளியில் போய் விழுந்துவிடுகிறது. ஆன்மாவுடன் ஒன்றிணைந்துவிடுகிறது.
இதோ ஆன்மாவின் குரல். மனத்திடம் ஆன்மா சொல்லும் ரகசியங்கள். ஆன்மாவின் அன்புவெள்ளம்; பேரணைப்பு. அதைக் கேளுங்கள்.
'என்னை உனக்குத் தெரியாது. ஆனால் எனக்கு உன்னை நன்றாகவே தெரியும். நான் எப்போதும் உன் கூடவேதான் இருந்து வந்திருக்கிறேன். உன் இன்பத்திலும் துன்பத்திலும் உன் பின்னால், உன் பார்வையின் ஒளியாக, உன் இருப்புக்கு ஆதாரமாக நான் இருந்து கொண்டுதான் இருக்கிறேன்.
உன்னுடனேயே இருந்தாலும் நான் உலகத்தினுள்ளே இல்லை. உலகத்தின் விளிம்புக்கு வெளியேதான் நான் நிலைகொண்டிருக்கிறேன்.
என்னைப் பற்றி நீ நிறையக் கேள்விப்பட்டிருக்கிறாய். ஆனால் பெரும்பாலும் தவறான கருத்துக்களைத்தான் உன்னிடம் சொல்லியிருக்கிறார்கள். அப்படிச் சொன்ன பலருக்கு என்னைப் பற்றி எதுவும் தெரியாது.
நான் மிகத் தொலைவில் எங்கோ இருப்பதாகவும் அதனால் என்னை அடைவது மிகவும் கடினம் என்று சொல்லி வைத்திருக்கிறார்கள். அவர்களுக்கு என்னைத் தெரியாது. நீயும் பெருமளவுக்கு அவர்கள் சொல்வதையெல்லாம் நம்பிக் கொண்டிருக்கிறாய்.

உண்மையில் நீ நினைப்பதைவிட இன்னும் அருகில் நான் இருக்கிறேன். நான் மிகவும் தொலைவில் இருப்பதால்தான் என்னை உனக்குத் தெரியவில்லை என்று எண்ணாதே. நான் மிகவும் அருகில், மிகவும் நெருக்கத்தில் இருப்பதால்தான் உனக்குத் தெரியாமல் இருக்கிறது. உன் கண்ணை நீயே பார்க்க முடியாமல் இருப்பதைப்போல. உன் நாவின் சுவை உனக்குத் தெரியாததுபோல.
பெரும்பாலும் உன் வாழ்க்கையில் நீ கண்டு அனுபவித்த காட்சிகளின் நினைவில் நீ ஆழ்ந்திருக்கிறாய். உன் மனத்தைவிட, உன் சுவாசத்தைவிட, உனக்கு இன்னும் அருகில் நான் இருக்கிறேன். அதனால்தான் உனக்கு என்னை இன்னும் தெரியாமல் போய்க்கொண்டிருக்கிறது.
உனக்கு மிகவும் நெருக்கத்தில் நான் இருந்து கொண்டிருப்பதால் உன் எண்ணம் ஒவ்வொன்றும், உன் உணர்ச்சி ஒவ்வொன்றும் எனக்குத் தெரிந்துதான் இருக்கிறது. சொல்லப்போனால் நீ நினைப்பதற்கு முன்பாகவே உன் நினைப்பு எனக்குத் தெரியும்.

உன் உடல் உணர்விலும், மனத்தின் சுய உணர்விலும், 'நான்' என்னும் உன் பிரக்ஞையாகவும் நான்தான் இருந்து கொண்டிருக்கிறேன். எந்தப் பயமும் வேண்டாம். நான் எப்போதும் உன்னுடன்தான் இருக்கிறேன். இவ்வளவு தூரம் உன்னை அழைத்து வந்த 'நான்' இனியும் உன்னோடு இருக்க மாட்டேனா என்ன?
என் ஒளியில்தான் நீ எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கிறாய். ஆனால் இதுவரை என் ஒளியில் தெரியும் பொருள்களைப் பார்த்து வந்திருக்கிறாயே ஒழிய, அந்த ஒளியை நீ பார்க்க விழையவில்லை. இப்போது அதற்கான காலம் வந்துவிட்டது.
உன் கண்களுக்குப் பின்னால் இருந்து, நீ காண்பது எல்லாவற்றையும் உனக்குக் காட்டும் ஒளியைக் காண்பதற்குக் கற்றுக்கொள். அந்த ஒளி சூரிய வெளிச்சத்தைப் போல் இருக்காது. எல்லா நிறங்களும் வெண்மையில் அடக்கம். ஆனால் அந்த வெண்மையே என்னுள் அடக்கம். அதனால் என் ஒளி, ஊனக் கண்கொண்டு பார்க்கும் ஒளியைப் போல் இருக்காது. என் ஒளி எதன் மீது பட்டாலும் அதன் பிரதிபலிப்பில் எல்லாம் தெரியும்.
இதுவரை என் ஒளியின் பிரதிபலிப்பை மட்டுமே நீ பார்த்து வந்திருக்கிறாய். இப்போது அந்த என் ஒளியை நீ நேரடியாகக் காணப்போகும் காலம் கனிந்து வந்திருக்கிறது. அந்த ஒளி கோடி சூரியனின் ஒளியைவிடப்

பிரகாசமாக இருந்தாலும் உன் கண்களைச் சற்றும் கூசவைக்காது. அஞ்ச வேண்டாம். அந்த ஒளியை உன்னை விட்டுப் பிறிதான ஒன்றாக நீ பார்க்க நினைக்க வேண்டாம்.

நீ என் அம்சம். அந்த ஒளியின் அம்சம். அந்த ஒளியை நீயென்றே பார். நீ உண்மையில் உன் கண்களின் முன்னே விரிந்திருக்கும் உலகத்தில் இல்லை. உன் கண்களுக்குப் பின்னாலிருந்துதான் நீ உலகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்.

உன் உடல் மட்டும்தான் உலகத்தில் மற்றவர் பார்வைக்குள் இருக்கிறது. என்னைத் தவிர உன்னை வேறு யாரும் பார்க்க முடியாது. நீ என் பார்வைக்குள் மட்டும்தான் இருக்கிறாய்.

நீ பெண்ணோ ஆணோ அல்ல. உலகத்தின் கசடுகள் உன்னை என்றுமே தொட்டதில்லை. உனக்குள்ளே நீ என்றும் பரிசுத்தமாகத்தான் இருக்கிறாய். உன்னை நீயே குறைத்து எடைபோட்டுக் கொள்ளாதே. நீ உன்னைக் குறைத்து எடை போடும்போது என்னைத்தான் குறைத்து எடை போடுகிறாய்.

உன் சுயநிலையை உணர்ந்துகொள். உன் சுயரூபம் உன் உடலோ மனமோ இல்லை. விழித்துக்கொள். உலகம் நீ இதுவரை கண்டுவந்த கனவு. எனக்குள் விழித்துக்கொள். உன்னுள்ளிருக்கும் எனக்குள் விழித்துக் கொள். உன் கண்களுக்குப் பின்னல் விழித்துக்கொள். உன் எண்ணங்களுக்குப் பின்னால் விழித்துக்கொள்.

அங்கேதான் நீ உன் சுயநிலையில் இருக்கிறாய். அங்கேதான் நீ, நீயாக இருக்கிறாய். அங்கே நானாகவும் இருக்கிறாய். அல்லது அங்கே நான்தான் நீயாக இருக்கிறேன்.

நீ என்னைப் பார்க்க முடியாது. ஆனால், நானாக நீ இருக்க முடியும். எல்லாவற்றையும் பார்க்கும் பார்வையாக நான் இருப்பதால் என்னை ஒரு பொருளாகப் பார்க்க முடியாது.

காலமெல்லாம் உனக்கு வெளியில் என்னை நீ தேடிக் கொண்டிருந்திருக்கிறாய். ஆனால் உனக்கு வெளியில் இல்லை நான். எதைப் பார்க்க விழைகிறாயோ அதுதான் பார்த்துக்கொண்டிருக்கிறது என்னும் உண்மையை இன்னும் நீ அறியவில்லை. இந்த உண்மையை நீ அறிந்துகொள்ளும் காலம் வந்துவிட்டது.

நீ பார்ப்பவன்; பார்க்கப்படும் பொருளில்லை. காணும்போது காண்பவனாகவும், கேட்கும்போது கேட்பவனாகவும் நான் இருக்கிறேன். அனுபவத்தின் போது நான் அனுபவிப்பவனாக இருக்கிறேன். ஆனால் உண்மையில், ‘அனுபவிக்கப்படும் பொருள்-அனுபவிப்பவன்-அனுபவம்’ என்ற பிரிவுக்கு அப்பாற்பட்டுத்தான் நான் இருக்கிறேன்.

நான் அனுபவத்தின் பின்னணியாக நிலைகொண்டிருக்கிறேன். அனுபவ எல்லைக்குள் நான் நுழைவதில்லை. எப்போதும் திரைக்குப் பின்னால்தான் நான் மறைந்து இருக்கிறேன்.

இந்த உண்மையைப் புரிந்துகொண்டால்தான் அனுபவ வெளியில் என்னைத் தேடி அலையமாட்டாய்; சோர்ந்து போகமாட்டாய். துன்பப்படமாட்டாய். விழித்துக்கொள்.

"அவனுடைய அரியாசனம் (குர்ஸிய்யு) வானங்களிலும், பூமியிலும் பரந்து நிற்கின்றது; அவ்விரண்டையும் காப்பது அவனுக்குச் சிரமத்தை உண்டாக்குவதில்லை - அவன் மிக உயர்ந்தவன்; மகிமை மிக்கவன் ".
(அல்குர்ஆன் : 2:255)

நபி (ஸல்) அவர்களிடம், 'அல்லாஹ் வானத்தில் இருக்கிறானா ? பூமியில் இருக்கிறானா ? என்று ஸஹாபாக்கள் கேட்ட கேள்விக்கு ,

"அல்லாஹ் முஃமீனானவர்களின் கல்புகளிலே இருக்கின்றான் என்று நபி (ஸல் ) கூறினார்கள்.

" லா யஸ்அனி அர்லி வலா சமாயி வலாகின் யஸ்அனி அர்லி கல்பி அப்துல் முஃமீன் " -

"வானத்திலும் பூமியிலும் என்னை அடக்கி விட முடியாது. ஒரு முஃமீன் உள்ளத்தில் என்னை அடக்கிவிட முடியும் " என்று கல்பின் மகிமை பற்றி அல்லாஹ் கூறியிருப்பதை மனிதன் சிந்தித்தால், தன்னை ஒரு சிறிய பொருளாக தேகத்தின் அளவில் தன்னைத் தானே கைது செய்து கொள்ள மாட்டான்.

وَلَقَدْ خَلَقْنَا الْإِنْسَانَ وَنَعْلَمُ مَا تُوَسْوِسُ بِهِ نَفْسُهُ وَنَحْنُ أَقْرَبُ إِلَيْهِ مِنْ حَبْلِ الْوَرِيدِ

நிச்சயமாக நாம்தான் மனிதனை (முதன் முதலாகவும்) படைத்தோம். அவன் மனதில் உதிக்கும் எண்ணத்தையும் நாம் அறிவோம். பிடரியிலுள்ள இரத்த நரம்பைவிட நாம் அவனுக்கு மிக சமீபமாகவே இருக்கின்றோம். (குர்ஆன் : 50:16

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 13
## ( ' எட்டாம் நம்பர் வார்டு சிஸ்டரைப் பார்த்தீர்களா? ' )




டாக்டர் கென்னத் வாக்கர் உலகப் புகழ் பெற்ற மருத்துவ மேதை. நியூரோ சர்ஜன்.இன்றைய பிரபல சர்ஜன்களுக்கெல்லாம் பீஷ்மர் போன்றவர். ஆவிகளைப் புரிந்துகொள்வதில் மிகுந்த ஆர்வம் காட்டினார்.சாமான்யர்கள் புரிந்து கொள்ளக்கூடிய வகையில் அவர் எழுதி விட்டுப்போன 'The Unconscious Mind 'என்ற அவருடைய புத்தகத்தில் Appartions என்கிற அத்தியாயத்தில் விவரிக்கப்படும் ஆன்மா இது! மிகவும் சிம்பிளான ஆவி இது! வாக்கர், இது பற்றி புத்தகத்தில் எழுதியதற்கான காரணத்தை அவரே குறிப்பிடுகிறார் டாக்டர்.

'மதியம் 12 மணி அடிக்க இன்னும் பத்து நிமிஷங்கள் இருந்தன. என் ரவுண்ட்ஸை முடித்துக்கொண்டு (செயிண்ட் ஃப்ரையாஸ்) ஆஸ்பத்திரியிலிருந்து பக்கத்தில் உள்ள மெடிக்கல் ஸ்கூலுக்கு நடந்தேன். இரண்டு கட்டடங்களையும் இணைக்கும் பாலம் போல ஒரு வராண்டா உண்டு.

நான் அதில் நடந்து சென்ற போது எதிரே ஒரு நர்ஸ் மெல்ல நடந்து வந்தார். வயது ஐம்பதுக்கு மேல் இருக்கும். மருத்துவமனையின் யூனிஃபார்ம் வெளிர் நீலத்தில் வெள்ளைப் புள்ளிகள் கொண்ட உடையை அணிந்திருந்த அவரை நான் அதுவரை அந்த ஆஸ்பத்திரியில் பார்த்ததில்லை.

நான் அருகில் சென்றபோது சற்று ஒதுங்கிய அவரைப் பார்த்து.நாகரிகம் கருதி என் தொப்பியைத் தொட்டு மரியாதை காட்டினேன். அவரும் மெல்லத் தலையசைத்து விட்டு என்னைத் தாண்டிச் செல்ல, எனக்கு ஏதோ பொறி தட்டியது. அவர் அணிந்திருந்த யூனிஃபார்மில் ஏதோ மாறுதல், கைப்பகுதி சற்று பழைய ஸ்டைலாக (old fashioned) இருந்தது.

அது நீளமான வராண்டா. அந்த நர்ஸ் என்னைத் தாண்டி சில அடிகள் கூடப் போயிருக்க முடியாது. சரேலென்று நான் திரும்பிப் பார்த்தபோது, அங்கே நர்ஸ் இல்லை. இருபுறமும் தோட்டம். சத்தியமாக அதற்குள் அவர் எங்கேயும் போயிருக்க முடியாது.அதாவது, கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துவிட்டார் என்பது தான் உண்மை!

எனக்குப் பயம் எதுவும் ஏற்படவில்லை. ஆனால், திடீரென்று ஒருவர் எப்படி முழுசாக மறைய முடியும்? வியப்புணர்வுதான் நிறைய இருந்தது. மாணவர்களுக்கு ஒரு லெக்சர் தரவேண்டியிருந்தது. அதை முடித்து விட்டு, லஞ்ச் சாப்பிட்டுவிட்டு மறுபடி ஆஸ்பத்திரிக்குப் போனேன். வழியெல்லாம் என் கண்கள் அலைபாய்ந்தன. தலைமை மேட்ரனைத் தேடினேன். அவர் இல்லாததால் மற்ற சீனியர் நர்ஸ்களை ஆபீஸ் அறைக்கு அழைத்தேன். 'சுமார் 50 வயதுள்ள சற்றே நீளமான மூக்கோடு கூடிய நர்ஸ் இங்கே பணிபுரிகிறரா?, என்று நான் ஆரம்பித்த உடனேயே அங்கே ஓர் இறுக்கமான மௌனம் நிலவியது. பிறகு உதவித் தலைமை மேட்ரன் மெல்லிய குரலில் கேட்டார். 'டாக்டர், எட்டாம் நம்பர் வார்டு சிஸ்டரைப் பார்த்தீர்களா?'

மேலும் விசாரித்ததில், ஐந்தாறு நர்ஸ்கள் 'அதை'ப் பார்த்திருக்கிறார்கள் என்று புரிந்தது. எல்லோரும் ஒரே மாதிரி அடையாளங்கள் சொன்னார்கள்.

கொஞ்ச நேரத்துக்குப் பிறகு இன்னொரு பணியாளர் மெதுவாகச் சொன்னார். 'டாக்டர்! பெரிய பிரச்னையாக இருக்கிறது. எட்டாம் நம்பர் வார்டில் (வார்டு) டியூட்டிக்குப் போக எல்லோருமே தயங்குகிறார்கள். பகல், இரவு என்றில்லை. சற்று கூட்டமில்லாமல் அமைதியான நேரத்திலெல்லாம் குறுக்கும் நெடுக்குமாக அந்த நர்ஸ்! ஆகவே, நாங்கள் தனியாக அந்த வார்டில் உட்காருவதைத் தவிர்க்கிறோம்' என்றார்.

என்னைப் போலவே இன்னும் சில சீனியர் மருத்துவர்கள் அந்த நர்ஸை நேருக்கு நேர் பார்த்திருக்கிறார்கள். அப்படி ஒருவரான, ரிட்டயர் ஆகிவிட்ட டாக்டர் ப்ராங்க் என்பவர் வீட்டுக்குப்போய் இது பற்றிக் கேட்டேன். (நர்ஸுகள் ஏதாவது கதைகட்டி விடலாம் இல்லையா!) .

டாக்டர் ப்ராங்க் தானும் அந்த நர்ஸைப் பார்த்ததாக ஒப்புக்கொண்டார். அவர் பார்த்தது மாலை 6 மணி - லேசாக இருட்ட ஆரம்பித்த நேரம். ப்ராங்க் பார்த்ததும் அதே வராண்டாவில்தான். சில வித்தியாசங்கள் இருந்தன. அந்த நர்ஸ் சற்று வேகமாக நடந்து வந்த தாகவும், முகத்தில் ஏதோ கலவரம் படிந்திருந்ததாகவும், தன்னை நோக்கி வரும்போதே, கண்ணெதிரே 'பளிச்' சென்று மறைந்து போனதாகவும் சொன்னார் ப்ராங்க்! ஆக, யாருக்கும் பிரச்னையேற்படுத்தாத எளிமையான ஆவி என்பது இதுவே!

டாக்டர் வாக்கரின் விளக்கப்படி, ஆவிகளுக்குக் கால்கள் தெரியாது என்பதும், அது தரையிலிருந்து சில அங்குலங்கள் உயரத்தில் மிதந்து வரும் என்பதும் தவறான கருத்து. 'எட்டாம் வார்டு சிஸ்டர் நன்கு தரைபதிய நடந்து வந்தார். புகை மண்டலமெல்லாம் இல்லை. உடம்பின் அவுட்லைன், மூக்கு, கண்கள்எல்லாம் தெளிவாக, 'ஷார்ப்'பாக இருந்தன.

அதைவிடப் பெரிய விஷயம், நர்ஸ் நடந்து வந்தபோது மெலிதாக அவருடைய நிழலும் வராண்டாவில் கூடவே வந்தது!' என்கிறார்.

ஒரே ஒரு நர்ஸ் டாக்டரிடம் சொன்ன பின்னணிக் கதையான 'அந்த நர்ஸுக்கும் மேலதிகாரிகளுக்கும் ஏதோ வாக்குவாதம் ஏற்பட - ஒரு தலைமை டாக்டர் கடுமையாக நர்ஸிடம் ஏதோ சொல்ல, சென்ஸிடிவ் டைப்பான அந்த நர்ஸ் மனம் உடைந்து ஓடிப்போய் அந்த ஆஸ்பத்திரியின் நாலாவது மாடியிலிருந்து குதித்துத் தற்தெரிலை செய்துகொண்ட கதை இப்போது தேவையில்லை.

இமாம் கஸ்ஸாலீ (றலி) அவர்கள் கீமியாயே-ஸ ஆதத் பீடிகையில் குறிப்பிடும், "மனுஷ்ணன் அனாதியல்லனாயினும் முடிவற்ற நித்தியன்" எனும் பொன் மொழியிலிருந்து, மரணத் தோடு மனிதனின் வாழ்க்கை முடிவடைந்து விடவில்லை என்ற உண்மை வெளியாகின்றது.

நிர்யாணத்தினின்று ஒரு புதிய வாழ்க்கை உதயமாகி அது என்றும் அழியா நித்தியமாய் நின்று நிலவத் தொடங்குகிறது. ஜடவுலகத்தைப் பற்றி நிற்கும் பூததேகத்தின் சுகபோக இன்பங்களின் வாசல் அடைபட, சகல நுகர்ச்சிகளையும் அந்தரங்கத்திலிருந்து அனுபவித்து வந்த அந்த மனுஷ்யன் என்ற சுயம்பொருள் சூட்சமமாய்க் கிரியை புரிய சக்தி பெறுகின்றது,

பிணி, மூப்பு, தளர்ச்சி, இயலாமை, முதலிய தங்கட, சங்கடமின்றி மறதியற்ற முழுமனிதப் பண்பும் அவனில் அமைந்து காணப்படுகின்றது.
இவ்வுலகில் சஞ்சரித்து வந்தது போலவே எல்லாவிதமான புலன்களும் வதியத்தக்க யோக்கியதையுடையனவாய் ஆகும் போது தேகமும் அவற்றைத் தொடர்ந்தே நிற்கும். இம்மையில் பூத குணத்தின் மிகைப்பால் ரூஹு உடலுக்குள் மறைந்து காணப்படுவது போல, மறுமையில் ரூஹானிய்யத்தின் மிகைப் பால் தேகம் ரூஹுக்குள் மறைந்து காணப்படும்.
ஹிஸாபு என்ற கேள்வி கணக்கிற்கும். பாவ புண்ணியத்திற்கேற்ற பலா பலன்களுக்கும் இத்தேகமே பொறுப்பாக விளங்கும். ' .

**ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 14**
**( மெஸ்மரிஸம் _ ஆத்மஞான மகத்துவம் )**




மெஸ்மரிஸ வித்தையின் மகிமை என்பது ஆத்மஞான மகத்துவமாகும் என்கிறார் சம்பூரண சுயம் பிரகாசம் எழுதிய முஹம்மத் தாஹிர் ஹஸனீ காதிரீ அவர்கள்.மேற்கண்ட கிதாபில், " மெஸ்மரிஸ வித்தையானது மிகவும் பூர்வீகமானது. இது இலேசானதல்ல. மகா வலுப்பமானது, 'கிரேக்க தேசத்து ஃபிலாஸோஃபர்களாகிய தத்துவ ஞானிகளில் சிலர் "உலமாயெயிஷ்ராக்" என்னும் ஆத்ம ஞானிகளாயிருந்தளர்,
இவர்கள் தூரத்தில் வருகிற பிணியாளிகளை நோக்கி அவர்களை யாதொன்றும் விசாரியாமல், தமது ஆத்ம தத்துவங்களினால் அவர்களின் உள்ளத்தின் கருத்துக்களை உணர்ந்து அவர்களுக்கு யாதொரு ஔஷதமும் (மருந்தும்) கொடாமல், தமது சரீரங்களில் நின்றும் அனிமல் மேக்னடிஸம், (Animal Magnetism ) அல்லது ஹைவானி மக்னாத்தீஸென்னும் ஜீவகாந்த ஒளிவை அவர்கள் மேல் வீசி, அவர்கள் பிணிகளைச் சுகப்படுத்திக் கொண்டிருந்தனர்.
இன்னும் அவர்கள் இம்மெஸ்மரிஸ வித்தையின் மூலமாக பிரபஞ்சங்களில் புதைப் பொருளாயிருக்கிற மகா நுட்பமான அந்தரங்க இயற்கைகளில் நமது புத்திக்கு மட்டுப்படாத அனேக இரகசியங்களைக் கண்டறிந்தனர்.
அன்றி மெஸ்மரிஸ ஞானமானது சகல மதங்களுக்கும்

உயிராயிருப்பது மட்டுமன்றி, சகல மத மூலாசிரியர்களின் மூல தத்துவமும் இஃதேயாம்! தவிர சகல மதங்களின் உண்மையும், அஷ்டமாசித்திவின் மூலதத்துவமும் இவ்வித்தையேயாம்!
மோஸே (மூஸா) என்னும் தீர்க்கதரிசிக்கு அவர் வித்தியாப்பியாசஞ் செய்துகொண்டிருக்கும் போது ஹெல்ப்பொலெஸென்னும் ஸ்தலத்தில் இவ்வித்தையையே கற்பிக்கப்பட்டதாம்.
ஜூதியா, இன்னும் எகிப்து தேசத்துப் பூசாரிகளால் இயேசு என்னும் தீர்க்கதரிசிக்கு இவ்வித்தையையே கற்பிக்கப்பட்டதென்றும், மூவாயிர வருடத்திற்கு அதிகமாகவே
ஹிந்து, இன்னும் எகிப்து தேசத்து பூசாரிகளின் வசத்தில்
இவ்வித்தை இருந்துவந்ததென்றும் உரோபாள்டென்பவர் எழுதியிருக்கின்றனர்.
இன்னும், இவ்வித்தையின் உண்மையை அறயாத வரையில் மதங்களின் உண்மைகளை ஸ்தாபிக்க இயலாது.
சகல மத மூலாசிரியர்களின் மூலப்பொருளும், அகமியமும் இதுவே என்பது திண்ணம் !
(நூஹ்) நோவா என்னும் தீர்க்கதரிசி காலத்திலுள்ள மதங்களின் இதியாசங்களில், அடிக்கடி இவ்வித்தையின் அடையாளங்கள் காணப்படுகின்றன.

சற்றேறக்குறைய கிருஸ்துக்கு 500 வருடத் துக்கு மூன்னுள்ள ஹக்கீம் பிதாகோரஸ் என்னும் தத்துவ சாஸ்திரி தமது சீடர்களுக்கு இவ்வித்தையைக் கற்பிக்கும்போது, மிருகங்களின் பேரில் நமது ஜீவகாந்த (ப்பவரை) ஒளியைச் செலுத்திப் பரிசோதித்துக் காட்டிக்கொண்டிருந்தார்.
ஒரு விடுத்தம் தமது ஜீவகாந்தத் தத்துவத்தினால், ஒரு குரூரமான கரடியை ஒரு நிமிஷத்திற்குள் தன் சித்தத்திற்குக் கீழ்படுத்திவிட்டார்.
மறுவிடுத்தம் ஒரு மகாப் பசியுள்ள எருதுக்கு முன் தீனியை வைத்து தமது ஜீவ காந்த தத்துவத்தின் வலுவினால், அதைத் தின்ன விடாமல் தடுத்துவிட்டார்.
இன்னொரு விடுத்தம் ஆகாமத்தின் மிக உயரத்தில் பறந்து கொண்டிருந்த ஓர் இராஜாளியை நமது கண், நமது கையின் ஜீவ காத்தத் தத்துவத்தைக் கொண்டு அதைப் பறக்காமல் தடுத்துக் கொண்டார்.
1878-வது ஆணடில் மெஸ்மர் என்பவர் பாரீஸ் நகரத்தில் இவ்வித்தையினால் அனேக விந்தைகளைச் செய்து மானிடர்களை ஆர்சரியப்படுத்தி விட்டார்.
இவ்வித்தையை நம்பாதவர்கள் தமது ஆத்மாவையே நம்பாதவர்கள் ! இவ்வித்தையைப் பழிப்பவர்கள் தமது ஆத்மாவையே பழிக்கின்றவர்கள் ! இவ்வித்தையானது முக்திக்குக் காரணமாயுள்ளது ! ஏனெனில், சகல மதங்களிலும் முக்திக்குக் காரணமாயுள்ள வழி இரண்டே!
முதலாவது ஞானமல்லது விசுவாசம், இரண்டாவது தபமல்லது யோகம்! மெஸ்மரிஸ ஞளமானது யோகத்தைச் சேர்ந்தது. தபத்தினால் இது சித்தி ஆகின்றது. மனிதர்கள் ஞானத்தினால் ஜீவ முக்தியையும், யோகத்தினால் விநேக முக்தியையும் அடைவார்கள்!

ஜீவ முக்தியென்பது சரீர சம்பந்தத்துடன் கடவுளில் கலந்திருப்பது. விநேக முக்தி யென்பது சரீரம் சம்பந்தமின்றி கடவுளில் கலந்திருப்பது! இது மகாப்பெரிய பதவி! ஏனென்றால், சரீர சம்பந்தமிருக்கிற வரையில் மனதின் தடிப்பு நீங்காது. கடவுளிடம் தெளிவானச் சேர்மானம் கிடைக்காது! இவ்வித்தையில் முற்றிலும் சித்தி பெற்றவர்கள் அட்டமா சித்தியில் முற்றிலும் சித்தி பெற்றவர்களே !
ஆனால், முகம்மதியர்களில் ஜீவ முக்தர்களை காமிலீன்களாகிய வாசிலீன்களாகிய முக்தர்களென்றும், ஜீவமுக்தர்கள் மரணத்திற்கு பின் விநேக முக்தியை அடைவார்களென்றும் கூறுகின்றனர்.
ஆ ! இதன் மகத்துவத்தை யாரால் சொல்லக்கூடும்? ஐயோ! இதை இலேசா எண்ணுகிறவர்கள் தமது மதங்களின் உண்மைகளைத் தீர்க்கமாய விசாரித்து உணராத குற்றமென்பதில் சந்தேகமில்லையன்றோ?

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 15
## ( அறிதுயில் மூலம் முற்பிறப்புச் சம்பவங்கள் )




சம்பூரண சுயம் பிரகாசம் என்ற நூலில் மெஸ்மரிஸத்தின் மகிமையான இவ்வித்தையை நம்பாதவர்கள் தமது ஆத்மாவையே நம்பாதவர்கள் ! இவ்வித்தையைப் பழிப்பவர்கள் தமது ஆத்மாவையே பழிக்கின்றவர்கள் ! இவ்வித்தையானது முக்திக்குக் காரணமாயுள்ளது ! என்று மெஸ்மரிஸத்தை ஆத்மாவோடு சம்பந்தப்படுத்தி எழுதப்பட்டிருந்தது .

இந்தப் பதிவில் மேற்கண்ட சக்தியைப் பயன்படுத்தி ஆன்மாவின் முற்பிறப்புச் சம்பவங்களைப் பற்றி சில்வியா பிறவுண் (Sylvia Browne) என்ற ஆய்வாளர் ஆராய்கிறார்.
இவ்வாய்வாளர் அமானுஷ்ய சக்தி (Psychic)யைப் பற்றி இவர் எழுதி 2007-இல் வெளிவந்த அமானுஷ்ய சக்தியுடைய பிள்ளைகள் (Psychic Children) என்ற நூலில், சிகிச்சையின் அறிதுயில் மூலம் விவரங்களை குறிப்பிட்டுள்ளார். தான் இவர் (Hypnosis) அறிந்த அவற்றிலிருந்து சில சம்பவங்களைச் சுருக்கமாக...
ஒரு பிள்ளைக்கு மிகச் சிறிய குறுகிய, ஒடுக்கமான இடங்கள் என்றால் பயம். இதை கிளொஸ்ரோ போபியா (Claustrophobia) என ஆங்கிலத்தில் கூறுகிறார்கள்.

இப் பயம் உள்ள இவரை அறிதுயிலுக்கு உட்படுத்திய போதுதான் இதற்கு முந்தைய பிறப்பில் சுரங்கத்தில் வேலை செய்துகொண்டிருந்தபோது சுரங்கத்தினுள் விபத்து ஏற்பட்டு அந்த இடிபாடுகளுக்குள் சிக்குண்டு நசிந்து, மூச்சுத்திணறி அவஸ்தைப்பட்டு மரணமாகியுள்ளார் எனத் தெரியவந்தது.

அந்தக் குறுகிய இடத்திலிருந்து தப்பி வெளிவர முடியாமல் அனுபவித்த மரண அவஸ்தையினால் ஏற்பட்ட 'பயம்' அவரது அடுத்த பிறப்பிலும் தொடர்ந்துள்ளது.
பிறிதொரு பிள்ளைக்கு உயரமான கட்டடமாக இருக்கலாம், கோபுரமாக இருக்கலாம், உயரமான எதுவாகவும் இருக்கலாம். அதன் பக்கத்தில் போகப் பயம் உண்டு. இதை அக்றோபோபியா (Acro phobia) எனக் கூறுகிறார்கள் அறிதுயிலின்போது தெரியவந்ததாவது முற்பிறப்பில் மலை ஏறும்போது சறுக்கி விழுந்து முதுகெலும்பு உடைந்து, பல காயத்துடன் தரையில் கிடந்த இவரைக் காப்பாற்றச் சென்ற அவசர மருத்துவப் பிரிவினர் இவரைக் கண்டுபிடிக்க காலதாமதமானதால் இறந்துவிட்டார். அந்தப் பயம் இவரது அடுத்த பிறப்பில் தொடர்கிறது. இவர் இந்தப் பிறப்பி உயரங்களுக்கு பயப்படுகிறார்.
வேறோர் பிள்ளை தனது கண் பார்வையில் முன் தயாரிக்கப்படாத உணவை உண்பதற்குப் பயப்படுகிறது. இதை சிற்ரோ போபியா (Sito phobia) எனக் கூறுகிறார்கள்.

முந்தை பிறப்பில் இவரது சொத்தை எடுப்பதற்காக உணவில் நஞ்சு கலக்கப்பட்டு அதை உண்டு இறந்து விட்டார் . இதனால் ஏற்பட்ட உணவுப் பயம் அடுத்த பிறப்பிலும் அவரை அறியாமல் தொடர்கிறது.
மற்றுமொருவருக்கு மழை, மின்னல், இடிமுழக்க போன்றவற்றிற்குப் பயம். இதை அஸ்றாபோபிய (Astra phobia) அல்லது லிலப்ஸோ போபியா (Lilapso phobia என்பர்.
முற்பிறப்பில் இவர் கடலில் மீன் பிடிக்கும்போது சூறாவளியில் சிக்குண்டு மரணமான அனுபவத்தால் இப்பிறப்பில் சூறாவளி, மழை, மின்னல், இடிமுழக்கத்திற்குப் பயம் ஏற்பட்டுள்ளது.
இன்னுமொருவர் முந்தைய பிறப்பில் ஒன்பது வயதாக இருந்தபோது தீவிபத்தில் மரணமானார். இப்பிறப்பில் 'இவர் ஒன்பது வயதை அடைந்தபோது நெருப்புக்கு அதிகம் பயந்தார். இதை ஆர்சன் போபியா (Arson phobia) என்பர்.

மூன்று வயதுப் பிள்ளை ஒன்று வழமைக்கு மாறாக எல்லா நேரமும் உணவு உட்கொள்ளத் தொடங்கிவிட்டது. முற்பிறப்பில் மூன்று வயதாக இருந்தபோது உணவில்லாமல் இறந்தது அறிதுயிலில் தெரியவந்துள்ளது.
ஆறு வயதாக இருந்தபோது நீரில் மூழ்கி இறந்த வேறோர் பிள்ளை அடுத்த பிறப்பில் ஆறு வயதை அடைந்தபோது நீரில் இறங்க அச்சம் கொண்டது. அதனால் நீச்சல் பயிற்சிக்குப்
போக மறுக்கிறது. இதை ஹைட்ரோபோபியா (Hydrophobia) என அழைக்கின்றனர்.
எட்டு வயதுவரை சாதாரணமாக மேல் மாடிக்கு படிகளில் ஏறி இறங்கிய மற்றுமொரு சிறுமி எட்டு வயதை அடைந்ததும் படிகளால் மேல் மாடிக்கு போய்வர மறுத்து, தனக்குப் பயமாக இருப்பதாகக் கூறிக்கொண்டார். இதை கிளிமக்கோபோபியா (Climacophobia) எனக் கூறுகின்றனர்.
அறிதுயிலின் போது இச்சிறுமி 'தான் கடந்த பிறப்பில் எட்டு வயதாக இருந்தபோது படிக்கட்டுகளில் சறுக்கி விழுந்து உருண்டு தரையில் தலை அடிபட்டு கழுத்தெலும்பு உடைந்து இறந்ததாக' கூறினார்.
ஆக ஆன்மாக்கள் மெஸ்மெரிஸம் , அறிதுயில் போன்றவற்றுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது என்பதை இவ்வாய்வு அறிக்கை கூறுகிறது.

**ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 16**
**( மெஸ்மரிஸ வித்தைகள் )**




சுமார் 30 வருடத்துக்கு முன் பஞ்சாப் தேசத்தில் ஒரு யோகி, மிருகங்களையும், கற்களையும் பேச வைத்தனராம்.
இன்னும், 1876 ஆண்டின் வெல்டன் துரையுடைய
"இஸ்ப்பிரீச்சுவலிஸ மென்னும் ( Spiritualism) புத்தகத்தில், அஸிஸிவிலுள்ள ஸைன்ட் பிரான்ஸிஸ்
( Saint Francis ) என்பவரை அனேகர் ஆகாயத்தில் பறக்கக்கண்டனராம்.
ஸைன்ட் திரேஸா என்னும் ஒரு மாது மற்றக் கன்னியா ஸ்திரீகளுக்கு முன் ஆகாயத்தில் பறந்தனளாம்.
இன்னும் லார்டு ஆசரியென்பவரும், மிஸ்டர் வேலன்டைன் கிரேட் ராக் என்பவரும், டாக்டர் ஹென்றிமோர் என்பவருக்கும், மிஸ்டர் கிலான்வெல் என்பவருக்கும் சொன்னதாவது :
''அயர்லாண்டைச் சேர்ந்த ராக்கலியென்னும் நகரத்தில் லார்டு கானவேயினுடைய வீட்டில், ஒரு துரையின் காரியதரிசியானவர் நாங்கள் உணவருந்திக் கொண்டிருக்கும் போது எங்களுக்கு முன்பாக ஆகாயத்தில் எழும்பிப் பறந்து கொண்டிருந்தனர்" என்றனராம். இதைக் குறித்து கிலான்வெல் என்பவர் தம்முடைய "ஸேட்டோஸ் பம்ஸ்டிராய் அம்பிடீஸ்" என்னும் புத்தகத்தில் எழுதி இருக்கின்றார்.
இன்னும் டெயிலர் (Tailor) என்பவர் தம்முடைய சரித்திரத்தில், லண்டனிலுள்ள 50 கண்ணியவான்களுக்கு முன்பாக, மிஸ்டர் ஹூம் என்பவர் ஆகாயத்தில் பறந்தாரென்றும், தமக்கும், மற்ற அனேகருக்கும் இது தெரிந்த விஷயமே என்றும் எழுதியிருக்கிறார் .
இன்னும் ஜாலாவில் சிலர் புலியாகவும், முதலையாகவும் ரூபம் எடுக்க வல்லமையடைந்திருக்கின்றனராம்.
நம்முடைய காலத்திலிருந்த மேடம் பிளாவாட்ஸ்கி என்னும் அம்மாள் தம்முடைய ஆத்ம தத்துவத்தினால், காணாமற்போன நகைகளை கண்டுபிடித்ததும், ஆகாய மார்க்கமாகக் கடிதங்களைத் தருவித்ததும், உடைந்த பாத்திரங்களை பொருத்தினதும், இறந்துபோன மனிதர்களைக் கூப்பிட்டுக் காட்டிப் பேச வைத்ததுமல்லாமல்,

ஷம்ஸானில் புஷ்பத்தினால் மழை வருஷிக்கச் செய்ததும், காட்டில் ஆவி பறக்கத் தேத்தண்ணீர்க் கோப்பைகளையும், சுருட்டு முதலியவைகளையும் தருவித்து விருந்தளித்ததும்,
இந்தியா, அமெரிக்கா, எகிப்து முதலிய இடங்களில் செய்த பல அற்புதங்களும். தியா ஸோபிக்கல் சொஸைட்டி என்னும் சங்கத்தின் வருஷசத்திர ரிப்போர்ட்டுகளினால் தெரியவரும். இந்த அம்மாளின் சரித்திரம் மிகவும் வியக்கத்தக்கது !
இன்னும், "தியாஸோஃபிஸ்ட் " என்னும் புத்தகம், 15 வது வால்யூம் 7-வது அத்தியாயம். 407-வது பக்கத்தில் கர்னல் அல் காட் துரை, எழுதியிருப்பது "1876-வது ஆண்டில் நாங்கள்
நியூயார்க்கில், 34-நெம்பர் வீதியில் இருக்கும்போது ஓர் இரவு நானும் மேடம் பிளாவாட்ஸகியென்னும் அம்மாளும் அயிஸெஸ் அன்வைல்டென்னும் புத்தகத்தின் ஓர் அத்தியாயத்தை எழுதி முடித்துவிட்டு, மஸோதாவைப் பெட்டிக்குள் வைத்துவிட்டு, கள்ளர்களுடைய அச்சத்தினால் கதவுகளுக்குப் பூட்டுப் போட்டுவிட்டு, அந்த அம்மாள் தம்முடைய காமராவுக்கும், (காமரா-அறை) நான் என்னுடைய காமராவுக்கும், படுக்கைக்காக போய்விட்டோம்.
நான் என்னுடைய உடுப்புக்களைக் களைந்து கொண்டிருக்கும்போது இன்ன வாக்கியத்தில் இன்னன்ன வார்த்தைகளை அதிகப்படுத்தி விட்டால் அவ்வாக்கியத்தின் கருத்துகள் அதிகத் தெளிவாகி விடுமென என் கருத்தில் புலப்பட்டது. அதோடு நாளைக் காலை வரையில் அவ்வார்த்தைகள் என் ஞாபகத்தில் தங்குமோ, தங்காதோ? எனச் சந்தேகமும் ஏற்பட்டது. ஆதலால், நான் என்னுடைய சூக்ஷம சரீரத்தைக்கொண்டு, எழுதுகிற காமராவுக்குள் சென்று அவ்வார்த்தைகளை எழுதிவிட்டு வருவோமென்று நினைத்தேன்.
ஆனால் ஞாபகத்தோடு சூக்ஷும சரீரம் ஒரு போதும் நான் எடுத்ததில்லை. என்றாலும், இன்னவிதமாக எடுக்கிறதென வழி எனக்குத் தெரிந்தது. ஆகையால், அதுபோல் செய்தேன்.
காலை வரையில் எனக்கு யாதொன்றும் தெரியவில்லை. பின்பு காலையில் விழித்து என் ஆபிஸுக்குப் போவதற்காக அந்த அம்மாளுடைய காமராவின் வழியாகச் சென்றேன்.
அந்த அம்மாள் என்னை, " நீர் படுக்கைக்குப் போனபின் எழுதுகிற காமராவில் வந்து என்ன செய்து கொண்டிருந்தீர்?'' என விசாரித்தார்கள்.
அதற்கு நான், "அவ்விதம் விசாரிப்பதேன்? அவ்விடம் நடந்தது யாது? "என வினவினேன்.
அதற்கு அந்த அம்மாள், ' நான் கட்டிலில் படுத்தவுடன் உம்முடைய சூக்ஷும் சரீரத்தைச் சுவரில் நின்றும் வெளிப்படக் கண்டேன். அஃதானது உறக்கத்தில் உணர்ச்சியற்றிருப்பது போல் தோள்றியது. நான் சத்தமும் கொடுத்தேன். அதற்கு பதில் சொல்லவில்லை. நேராக எழுதுகிற காமராவுக்குச் சென்று கொஞ்ச நேரம் கடிதங்களைக் புரட்டிக் கொண்டிருந்துவிட்டு மறைந்து விட்டது" என்றார்கள்.
அப்போது நாள் என் கருத்தை வெளியாக்கினேன். பின்பு
நாங்கள் இருவரும் எழுதுகிற காமராவுக்குச் சென்று மசோதாவைச் சோதித்தோம். அதில் இரண்டு வார்த்தைகள் மட்டும் சரியாக எழுதப்பட்டிருந்தன. ஒரு வார்த்தை சரியாக எழுதப்படவில்லை. ஒரு சமயம் இந்த விஷயத்திற்கு அதிக அவசியமான மன ஓர்மை அப்போது தவறியிருக்கலாமெனத் தோன்றுகின்றது. "
இந்த வாக்கியத்தின் தொடர்ச்சியில் இன்னமும் எழுதுகிறார்: தாம் ஒரு விடுத்தம் தம்முடைய ஆபீஸைப் பூட்ட மறந்து விட் டாராம். சூக்ஷம சரீரத்தில் போய்ப் பூட்டிவிட்டுத் திரும்பும்போது, சூக்ஷ்ம சரீரமானது ஒரு சுவற்றில் மோதிக்கொண்டு கண்ணில் காயம்பட்டுவிட்டதாம். காலையில் குளித்துவிட்டு கண்ணாடியில் பார்க்கும்போது தெரிய வந்ததாம்.
இதனால் வாசிப்பவர்கள் சூக்ஷம சரீரமெடுப்பது இரண்டு வகை உண்டென்றும், ஒன்று விழிப்பில் ஞாபகத்தோடு எடுப்பது, மற்றொன்று உறக்கத்தில் ஞாபகமற்று எடுப்பது. கர்னல் அல்காட் துரை இதில் உறக்கத்தில் ஞாபகமற்று எடுத்ததைக் குறித்துச் சொல்லியிருக்கிறார் என்றும் உணர்க!
இன்னஞ் சூக்ஷும சரீரமானது கண்டிப்பான வஸ்துக்களில் மெதுவாகத் தாக்கி, விரைவாகச் செல்லுமாகையால், அது ஒரு வஸ்தில் சடுதியில் தாக்குமானால் ஒரு சமயம் சேதமுண்டாகலாம். அன்றி சூக்ஷுமத்திற்கும் சரீரத்துக்குமுள்ள ஒற்றுமையில் சில வித்தியாசங்களுண்டு.

அதாவது: சூக்ஷுமத்துக்கு சேதம் உன்டானால் சரீரத்துக்கும் சேதமுண்டாகும். சரீரத்திற்கு சேதமுண்டனால் சூக்ஷமத்துக்கு சேதமுண்டாகாது.
ஆகையால், நமது எண்ணம் சூக்ஷம சம்பந்தமாக இருக்கும் போது ஸ்திரீ போகம் செய்யக் கனவு கண்டால் அக்குணம் நமது சரீரங்களில் தாவி ஸ்கலிதமாகி விடுகின்றது.
இல்லாவிட்டால் அக்கனவு நினைவாக முடிகின்றது. ஆகையால், மேற்படித் துரையின் எண்ணம் சூக்ஷும சம்பந்தமாக இருந்தபடியால் அக்குணம் அவர் சரீரத்திலும் தாவினது என்று உணர்க.

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 17
## ( மெஸ்மரிஸம் என்னும் மூல தத்துவம் )

'ஒன்றென்பதற்கும், பலதென்பதற்கும், உண்டென்பதற்கும், இல்லையென்பதற்கும், அருபத்திற்கும், சொரூபத்திற்கும், ஞானத்திற்கும், அஞ்ஞானத்திற்கும், மரணத்துக்கும், ஜீவிப்புக்கும், இன்னும் இரண்டு மாற்றம், அல்லது இரண்டு வேற்றுமையான குணம், செய்கை, இயல்பு அடங்கலுக்கும் காரணமாயிருப்பது கடவுள் சித்த தத்துவம்,
ஆகையால், பிரபஞ்சங்களைக் கடவுள் சித்தத்தின் தோற்றமென்றும், பிரபஞ்சங்களின் தத்துவங்களைக் கடவுளின் சித்த தத்துவமென்றும் சொல்லக்கூடும்.
கடவுளின் சித்தந்துக்கும், கடவுளின் சித்த தத்துவத்துக்கும் மூலமாயிருப்பது கடவுளின் உள்ளமை. ஆகையால், சகலமும் கடவுளில் நின்றுமே சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன" என்று பிரமஞானிகள் கூறுகின்றனர். ஆதலால், பிரபஞ்சங்களில் மூல சத்தாகிய கடவுளின் சித்த தத்துவமே மெஸ்மரிஸ வித்தையின் மூல தத்துவம் !
ஒரு வஸ்து மற்றொரு வஸ்தை இழுக்கவும், ஒரு வஸ்து மற்றொரு வஸ்துக்குத் தன் (Power) பவரைச் செலுத்தவும், ஒரு வஸ்து மற்றொரு வஸ்துவை நேசிக்கவும், ஒரு வஸ்து மற்றொரு வஸ்துவை இச்சிக்கவும், ஒரு வஸ்து மற்றொரு வஸ்துவை வெறுக்கவும், ஒரு வஸ்து மற்றொரு வஸ்துவை வசியமாக்கிக் கொள்ளவும்,
ஒரு வஸ்து மற்றொரு வஸ்துடன் சேரவும், ஒரு வஸ்து மற்றொரு வஸ்துவை விலக்கவும் காரணமாயிருப்பது பிரபஞ்சங்களின் மின்சாரம் அல்லது காந்த சக்தியாகிய ஒவ்வொரு வஸ்துவிலும் இயற்கையாக நிறைந்து இருக்கிற (Negative or Positive Force) அதாவது குவ்வத்தே ஸாலிபா அல்லது மவுஜிபாவென்னும் இழுப்புக் காந்தம் அல்லது தள்ளுக் காந்தமாகிய இந்த இரண்டு சுபாவத்தையுடைய ஒரே தாது !
இதனைப் பிரபஞ்சங்களின் மூல தத்துவம் அல்லது கடவுளின் சித்த தத்துவமென்று சொல்லப்படும்.
இத்தத்துவமே

பிரபஞ்சங்களின் உற்பத்திக்கும் அழிவுக்கும் காரணம்! இத்தத்துவத்தைக் கொண்டே மெஸ்மரிஸமல்லது ஹிப்னாட்டிஸம் என்னும் வித்தை செய்யப்படுகின்றது.
மேற்சொல்லிய இழுப்பு காந்தம் அல்லது தள்ளு காந்தமாகிய மெஸ்மரிஸ வித்தையின் கடவுளின் சித்த தத்துவமென்றும், இஃதே சற்குணத்திற்கும் துர்குணத்திற்கும், உற்பத்திக்கும், அழிவுக்கும் காரணமென்றும், ஒவ்வொரு வஸ்துவிலும் இதே உயிராக நிறைந்திருக்கின்றன என்றும் மெஸ்டீரிஸ ஞானிகள் கூறுகின்றனர்.
இன்னும் இத்தத்துவமானது கல்லில் கல்லின் தன்மையாகவும், மரத்தில் மரத்தின் தன்மையாகவும் மிருகத்தில் மிருகத்தின் தன்மையாகவும், மனிதனில்
மனிதனின் தன்மையாகவும் விகாரப்பட்டிருப்பதால், இதன் குணத்தையும், செயலையும் வரையறுத்துக் கூற ஒருவராலும் இயவாது!
தத்துவ ஞானிகளில் சிலர் மேற்கூறிய "நெகடிவ்" அல்லது "பாஸிடிவ்" என்னும் தள்ளுக் காந்தம் அல்லது இழுப்புக் காந்தத்தை இரண்டாகவும் சிலர் இரண்டு தன்மையுடைய ஒரே சக்தியாகவும் பாவித்திருப்பதுடன், ஒன்றை ஆணைப்போல் ஃபாயில் அதாவது செயலுக்குடையது என்றும், மற்றொன்றைப் பெண்ணைப் போல் இன்ஃபிஆல்

அதாவது செயலை ஏற்றுக்கொள்ள கூடியதென்றும் (Material) மாத்தியத்தான சடப் பொருள்களுக்கெல்லாம் ( Principle ) பைப் அல்லது இல்லாத்தாகிய மூல சத்தென்றும் கூறுகிறார்கள்
ஆனால் சூஃபியாக்களாகிய ஞானிகள் இதனைக் கடவுளுடைய ஸிபாத்தாகிய பண்புகளின் ஜமால், ஜலால் என்றும், கோபமல்லது சாந்த குணமாகிய ஒளி அல்லது மின்னலில் நின்றுமுள்ளதென்றும், சற்குணத்திற்கும், துர்குணத்திற்கும், நீதத்திற்கும், அநீதத்திற்கும் இதுவே காரணம் என்றும், இதற்கு இச்சையும் அறிவும் உண்டென்றும் கூறுகின்றனர்.
ஆனால் தத்துவ ஞானிகள் இதனை அறிவும் இச்சையும் அற்றதென்றும் கூறுவார்கள். இஃதானது ஒவ்வொரு வஸ்துவிலும் அந்தந்த வஸ்துவின் தன்மையாகவும், ஒன்றுக்கொன்று இருக்கிற காந்த சம்பந்தமல்லது தொடரினால் ஒன்றுக்கொன்று வழிபடக் கூடியதாகவும் இருக்கிறது.
நியூட்டனின் மூன்றாவது விதியானது "ஒவ்வொரு வினைக்கும் (action) அதற்கு இணையான எதிர் வினை (reaction) உண்டு." என்று கூறுகின்றது "எல்லா விசைகளும் இரட்டையாக உள்ளன, அவ்விரு விசைகளும் அளவில் இணையாகவும், திசையில் எதிரெதிராகவும் இருக்கும் "
பத்தாம் நூற்றாண்டில் சீனத்துவ தத்துவத்தில் " யின் - யாங் " என்கிற தத்துவம் மிகப் பெரிய தத்துவ தாக்கத்தை ஏற்படுத்தியது.
" யின் - யாங் " தத்துவம் என்பது எதிர்மறைகளைப் பற்றி அவதானிப்பது.அதாவது உலகின் ஆதார உண்மையில் "யின் - யாங் " என்கிற எதிர்மறை சிந்தனை இருக்கிறது .அதுதான் உண்மையின் இரு வேறு வடிவங்கள் .
"யன் - யாங் " என்பது உண்மையின் இரட்டை நிலையின் குறியீடு .சீனர்கள் "யின், யாங் " என்று இருவித சக்திகளைச் சொல்கிறார்கள்.
உதாரணமாக வெளிச்சம் என்பதை அறியவேண்டுமாயின், இருட்டும் இருக்கத்தானே வேண்டும்?
இல்லையெனில் வெளிச்சம் என்று ஒன்றைத் தனியாக எப்படி அறிய முடியும்?
சூரியன் X சந்திரன்
வான் x பூமி
நன்மை X தீமை.
அழகு X குரூரம்,
நிஜம் X பொய்,
ஆண் X பெண்,
இரவு X பகல் ,
சந்தோஷம் X துக்கம்
இடது X வலது....... சொல்விக் கொண்டே போகலாம் .
அட , கம்ப்யூட்டர் ஆதாரமாக இந்த இரட்டை - பைனரி (0, 1) வடிவத்தில்தான் கணக்கே போடுகிறது.
" யின் - யாங் "குறிப்பிட ஒரு வட்டத்தை கருப்பு - வெள்ளையாக இரண்டு பகுதிகளாக பிரித்து அதற்கு வடிவம் கொடுத்தார்கள்
இந்த வடிவத்தின் இரு பகுதிகளும் முழுவதும் கருப்போ வெளுப்போ இல்லை. வெண் பகுதியில் ஒரு கருப்புப் புள்ளியும்,கருப்புப் பகுதியில் ஒரு வெண்புள்ளியும் உள்ளது.
ஒவ்வொரு நல்ல காரியத்திலும் கொஞ்சம் கெடுதல் இருக்கத்தான் இருக்கிறது. ஒவ்வொரு அழகிலும் சிறிது அழுக்கு, ஒவ்வொரு குரூரத்திலும் சிறிது அழகு .
'அழகு' என்று நாம் பிரித்துப் பார்க்கும் போதுதான் அவலட்சணத்தை சிருஷ்டிக்கிறோம்
உண்மையை கேட்கும் போதுதான் இதில் பொய்யின் பங்கு எவ்வளவு சிந்திக்கிறோம் .
இந்த எதிர்மறையெல்லாம் கடந்து சிந்திக்கும் போது இவையெல்லாம் தனிப்பட்ட அனுமானங்கள் அல்ல , எல்லாமே ஒரே நித்தியத்தின் இரண்டு பக்கங்கள் . ஒரே முழுமையின் இரண்டு வர்ணனைகள் என்பதே !
இவை இத்தனையும் அவதானிப்பதும், வருஷிப்பது ஆன்மாக்களே

**ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 18**

**( விண்வெளியில் ஒன்பது சக்திகள்! )**




டாக்டர் ஆண்ட்ரிஜா ப்யூஹாரிச் உலகப் புகழ்பெற்ற அமெரிக்க விஞ்ஞானி. தவிர, மனோதத்துவத் துறையில் ஏராளமான ஆராய்ச்சிகள் செய்தவர். டெலிபதி போன்ற விஷயங்களை அலசும் அவருடைய புத்தகங்களை விஞ்ஞான உலகம் மிகுந்த ஆர்வத்துடன் வரவேற்றது.

1952-ல் இந்தியாவுக்கு வந்த ப்யூஹாரிச் வடக்கே ஓர் இந்து யோகியைச் சந்தித்தார். டெலிபதி போன்ற அபூர்வ சக்திகள் பற்றி அந்தத் துறவியிடம் பலமுறை விவாதித்து, குறிப்புகள் எடுத்துக்கொண்டார்.

ஒருநாள் இரவு, துறவியோடு தனியாக உரையாடிக் கொண்டிருந்தபோது, திடீரென அந்தத் துறவியின் கண்கள் ஒளி வீசின. குரல் மாறியது. ஆங்கிலம் தெரியாத அந்தத் துறவியிடமிருந்து மிகத் தெளிவான உச்சரிப்போடு ஆங்கிலத்தில் வார்த்தைகள் வெளிப்பட்டன.

'நான் அந்த ஒன்பது பெரும் சக்திகளின் பிரதிநிதி. மனித மூளைக்கு அப்பாற்பட்ட, அறிவாற்றல் படைத்த அந்தச் சக்திகள் உலகைக் கண்காணித்துக் கொண்டிருக் கின்றன. மனிதர்கள் எங்கள் குழந்தைகள், அவர்களுடைய பரிணாம வளர்ச்சியை முடிவு செய்கிறவர்கள் நாங்கள்!' என்று அச்சக்திகள் தெரிவிக் கின்றன! இப்படிச் சொல்லிவிட்டுப் பளிச்சென்று விழித்துக் கொண்ட அந்தத் துறவியின் உடல் நடுங்கியது.

நிறைய துறவிகளையும் ஞானிகளையும் இந்தியாவில் சந்தித்துப் பழக்கப்பட்டுவிட்ட ப்யூஹாரிச்சுக்கு இதுபோன்ற அனுப வங்கள் புதிதல்ல. அத்தோடு விட்டுவிட்டார்.

நான்கு ஆண்டுகள் கழித்து, மெக்ஸிகோவில் ப்யூஹாரிச் தங்கி யிருந்த போது டாக்டராகப் பணிபுரியும் ஒரு நண்பரின் மனைவியைச் சந்தித்தார். அந்தப் பெண்மணிக்கு டெலிபதி சக்தி நிறைய இருந்தது. ஒரு சமயம், தியானத்தில் ஆழ்ந்த அந்தப் பெண்மணி இனம் புரியாத சிலர் என்னிடம் தொடர்பு கொண்டிருக்கிறார்கள். தங்களை ஒன்பது பெரும் சக்திகள் என்று அழைத்துக்கொள்ளும் அவர்கள், இந்தியாவில் நீங்கள் சந்தித்த துறவி

பற்றி நினைவூட்டுகிறார்கள். மீண்டும் உங்களை அவர்கள் தொடர்பு கொள்வார்கள் என்றும் அதற்குத் தயாராக இருக்கும் படியும் உங்களிடம் சொல்லச் சொல்கிறார்கள்!' என்றார்.
ஆச்சரியப்பட்டுப் போனார் ப்யூஹாரிச். தான் இந்தியாவில் துறவியைச் சந்தித்து உரையாடியது மெக்ஸிகோவில் வசிக்கும் இந்தப் பெண்மணிக்கு எப்படித் தெரிந்தது?

1960-ம் ஆண்டு ப்ரேஸில் நாட்டில் வசித்து வந்த அரீகோ என்கிற சர்ஜனைச் சந்திக்கச் சென்றார் ப்யூஹாரிச். அரீகோ சாமான்ய சர்ஜன் அல்ல. மருத்துவம் படித்தவரும் அல்ல. சுரங்கத் தொழிலாளியாகப் பணிபுரிந்து வந்த அரீகோவுக்குத் திடீரென்று ஒருநாள் சாமி வந்தது. சில நிமிஷங்களுக்குப் பிறகு விழிப்பு வந்து, நேராக கிச்சனுக்குச் சென்று காய்கறி நறுக்கும் ஒரு கத்தியை எடுத்துக்கொண்டு வெளியே வேகமாக நடந்தார் அரீகோ. அவருடைய நண்பரின் அம்மா நோய்வாய்ப்பட்டிருந்தார். டாக்டர்கள் 'இனி ஒன்றும் செய்வதற்கில்லை என்று சொல்லிவிட்டனர். நோயாளிப் பெண்மணியின் வயிற்றுக்குள் வளர்ந்திருந்த ஒரு ட்யூமர் கட்டி முற்றிய நிலை. அந்தப் பெண் படுத்திருந்த அறைக்குள் நுழைந்த அரீகோ தன் நண்பரை வெளியே தள்ளிவிட்டுக் கதவைப் பூட்டிக் கொண்டார். மயக்க மருந்து எதுவும் இல்லாமல் அந்தப் பெண்ணின் வயிற்றைக் கிழித்துக் கைகளால் ட்யூமர் கட்டியை பிய்த்தெடுத்தார். ஸ்டெரிலைஸ் செய்யப்படாத கத்தி. கையில் க்ளவுஸ் கிடையாது! ஆபரேஷன் நடந்தபோது நோயாளி மயக்கமடையவும் இல்லை! ரத்தம் வெளியேறவுமில்லை. ஆபரேஷன் சக்ஸஸ்! அத்தனை டாக்டர்களாலும் கைவிடப்பட்ட அந்தப் பெண்மணி குணமடைந்து சில நாள்களில் எழுந்து நடக்க ஆரம்பித்தார். இதுபற்றிக் கேள்விப்பட்டு வியந்துபோன காரணத்தால்தான் ப்யூஹாரிச் ப்ரேஸில் சென்றார். அரீகோவை அவர் சந்திப்பதற் குள், நூற்றுக்கணக்கான அறுவை சிகிச்சைகளை அரீகோ வெற்றிகரமாகச் செய்து முடித்திருந்தார். எல்லாமே சக்ஸஸ்!
அரீகோவைச் சந்தித்து ப்யூஹாரிச் பேசிக் கொண்டிருந்த போது புகழ்பெற்ற ஒரு ஜெர்மன் சர்ஜன் பெயரைக் குறிப்பிட்ட அரீகோ, 'எனக்கும் மருத்துவத்துக்கும் எந்தச் சம்பந்தமுமில்லை.ஆனால், ஆபரேஷன் ஆரம்பிக்கும்போது அந்த ஜெர்மன் சர்ஜனின் ஆவி எனக்குள் புகுந்துகொண்டு என்னை இயக்குவிக்கிறது. கூடவே வானிலிருந்து கண்ணுக்குத் தெரியாத சில சக்திகள் எனக்கு ஆலோசனை கூறுகின்றன. நோயாளிகளிடமிருந்து ரத்தம் வெளியாகாமல் இருக்கவும், ஆன்ட்டிபயாடிக் உதவியில்லாம காயம் ஆறுவதற்கும் அந்தச் சக்திகள்தான் காரணம் என்பது என கருத்து!' என்றார்.
ப்யூஹாரிச் முழங்கையில், கட்டி ஒன்று ரொம்ப காலமாக தொல்லை தந்துவந்தது. அதே ஸ்டைலில் அரீகோ, கிச்சன் கத்தயால் அதைக் கீறி ஆபரேஷன் செய்து அவரைக் குணப்படுத்தினார்.
மதன் எழுதிய மனிதனும் மர்மங்களும் என்ற புத்தகத்திலிருந்து...

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 19
## யூரி கெல்லர் ( Uri Geller )




1973 நவம்பர் 22-ம் தேதி என்று பிபிசி வானொலியில் ஒலிபரப்புக்காகப் பல நேயர்கள் தங்கள் வீட்டு வானொலியின் அருகில் ஆவலாகக் காத்திருந்தார்கள். இஸ்ரேலைச் சேர்ந்த யூரி கெல்லர் ( Uri Geller ) என்பவரின் பேட்டி அன்று ஒலிபரப்பாக இருந்தது.

"சாவி, ஆணிகள் போன்றவற்றை மிக மெதுவாக நீங்கள் தொட்டாலே அவை மறைந்து விடும் என்கிறீர்கள். ஓடாத கடிகாரத்தை உங்கள் பார்வையின் மூலம் இயங்க வைப்பேன் என்கிறீர்கள். இதுபோன்ற சக்தி உங்களுக்கு இருப்பதை எப்போது முதலில் உணர்ந்தீர்கள்?"
உடனடியாக பதில் வந்தது. "பள்ளியில் படிக்கத் தொடங்கிய நாள்களிலேயே இந்தச் சக்தியைக் கவனித்தேன்". இதைத்தொடர்ந்து அவரது மன சக்தியை நிரூபித்துக் காட்டச் சொன்னார் ஜிம்மி யங். வானொலியைச் சேர்ந்த தொழில்நுட்ப கலைஞர்கள் மிக ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருக்க, ஜிம்மி யங் தன் வீட்டுச் சாவி ஒன்றைத் தனது நீட்டிய உள்ளங்கையில் வைத்துக் கொண்டார்.
யூரி கெல்லர் மைக்கில், "அன்புள்ள வானொலி நேயர்களே உங்கள் வீட்டில் ஏதாவது உடைந்த அல்லது இயங்காத கடிகாரம் இருந்தால் அதை நீங்கள் இயக்க வைக்கலாம். இப்போது அந்த கடிகாரத்தை மட்டுமே உற்றுப் பார்த்தால் போதும்".
இப்படி அவர் பேசிக்கொண்டிருக்கும்போதே ஜிம்மி யங் பரவசத்துடன் பேசத் தொடங்கினார். "என் வீட்டுச் சாவி என் கண்முன்னாலேயே வளைந்துகொண்டிருக்கிறது. என்னால் இதை நம்பவே முடியவில்லை".
"லண்டனிலும் அதைச் சுற்றியுள்ள நகரங்களிலும் உள்ள பல வீடுகளில் கத்திகள், ஸ்பூன்கள் போன்றவை வளையத் தொடங்கின. கைக்கடிகாரம் தயாரிக்கும் ஒருவர் தான் வைத்திருந்த சிறு இடுக்கி போன்ற கருவி கன்னாபின்னாவென்று வளைந்ததோடு பல வருடங்களாக ஓடாது இருந்த ஒரு கடிகாரமும் அப்போது இயங்கத் தொடங்கியதாகக் கூறினார்".

டாக்டர் ஆண்ட்ரிஜா ப்யூஹாரிச் உலகப் புகழ்பெற்ற அமெரிக்க விஞ்ஞானி. தவிர, மனோதத்துவத் துறையில் ஏராளமான ஆராய்ச்சிகள் செய்தவர். டெலிபதி போன்ற விஷயங்களை அலசும் அவருடைய புத்தகங்களை விஞ்ஞான உலகம் மிகுந்த ஆர்வத்துடன் வரவேற்றது.
யூரிகெல்லரை அவர் வீட்டில் சந்தித்தார் ப்யூஹாரிச். கையோடு சில ஸ்பூன்களையும் எடுத்துச் சென்றார். டேபிள் மீது அவர் வைத்த ஸ்பூன்களை ஒதுக்கி ஓரமாக வைத்த யூரி
'உங்களுக்கு என் சக்தி மீது நம்பிக்கை வரவில்லை. சரிதானே?' என்று கேட்க, ப்யூஹாரிச் லேசாகப் புன்னகைத்தார்.
சற்று யோசித்த பிறகு ஒரு பேப்பரை எடுத்து, அதில் மூன்று எண்களை எழுதி, மடித்து கவருக்குள் போட்டு ஒட்டி டேபிள் மீது வைத்த யூரி 'ஏதாவது மூன்று எண்களை மனதில் நினைத்துக் கொள்ளுங்கள்!' என்றார் ப்யூஹாரிச்சிடம். 'ஓகே! நினைத்துக்கொண்டு விட்டேன்!' என்று ப்யூஹாரிச் சொன்னவுடன் 'கவரைப் பிரித்துப் பாருங்கள்!' என்றார் யூரி.
கவரைப் பிரித்த ப்யூஹாரிச்சின் முகம் வியப்பைக் காட்டியது. காகிதத்தில் அவர் நினைத்துக் கொண்ட அதே எண்கள்!

டெலிபதி சக்தி இருந்தால் கூட, ஒருவர் மனத்தில் நினைத்துக் கொள்ளும் எண்களைத் தான் கண்டுபிடிக்க முடியும். நினைப்பதற்கு முன்பே எழுதி வைத்தால்? இது எப்படிச் சாத்தியமாகும்?
அயர்ந்துபோய் நிமிர்ந்து பார்த்த ப்யூஹாரிச்சைப் பார்த்து சிரிப்போடு யூரி சொன்னார்: `நீங்கள் நினைப்பது நியாயம்தான். நான் செய்தது வேறு! அதாவது, மூன்று எண்களை எழுதினேன். பிறகு டெலிபதி மூலம் உங்கள் மூளைக்கு அதே எண்களை நினைக்கச் சொல்லி ஆணை பிறப்பித்தேன்! நீங்கள் வேறு எண்களை நினைத்திருக்கவே முடியாது என்பதுதான் விஷயம்!
ஒரு எண் என்றால்கூடப் பரவாயில்லை. மூன்று எண்களை கரெக்டாக, டெலிபதி மூலம் சொல்ல வைப்பது அசாதாரணமான விஷயம்!
அன்றிலிருந்து ப்யூஹாரிச் - கெல்லர் நட்பு உறுதிப்பட்டது. ப்யூஹாரிச், யூரியைப் பலவிதமான சோதனைகளுக்கு ஆட் படுத்தினார். `ஸ்பூனை வளைப்பது' மட்டும் என்றில்லாமல், வாட்ச்சை நிறுத்துவது, தான் ரகசியமாக

வரைந்து வந்த படங் களை டெலிபதி மூலம் கண்டுபிடித்து வரையச் சொல்வது... இப்படிப் பலவிதமான சோதனைகளின் மூலம் யூரி கெல்லருக்கு அமானுஷ்ய சக்தி இருப்பதாக நிரூபிக்கப்பட்டது.

ப்யூஹாரிச் - யூரி கெல்லர் சந்திப்பு நிகழ்ந்தது பிற்பாடுதான். ஒருமுறை 'உங்கள் அபூர்வ சக்திகளைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?' என்று ப்யூஹாரிச் யூரியைக் கேட்க,
'எனக்கே புரியவில்லை. ஆனால், ஏதோ இனம் புரியாத சக்திகள் என்னை இயக்குவதாகத் தோன்றுகிறது. அந்தச் சக்திகள் விண்வெளியிலிருந்து எனக்குத் தகவல்கள் அனுப்புவதாக நான் உணர்கிறேன். 'ஒன்பது பெரும் சக்திகள்' என்று என்னிடம் அவை அறிமுகம் செய்து கொள்கின்றன. ஒரு விண்வெளிக் கப்பலில் இருந்து கொண்டு ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கும் மேலாக மனித சமுதாயத்தைத் தாங்கள் கண்காணிப்பதாக அவை தெரிவித்தன!' என்றார் யூரி. ப்யூஹாரிச்சுக்குத் தலைசுற்றியது.

ஒருமுறை, இரண்டு தெர்மா மீட்டர்கள் கொண்டு வரப்பட்டன. அதில் ஒன்றை மட்டும் யூரி உற்றுப் பார்க்க, அதிலிருந்த மெர்க்குரி மட்டும் பத்து டிகிரிகள் ப்யூஹாரிச் கண்ணெதிரே சரேலென்று உயர்ந்தது!
இன்னொரு சமயம், கேமராவில் லென்ஸின் மூடியை அகற்றாமலேயே தன்னைத்தானே படம் எடுத்துக்கொண்டார் யூரி. பிலிமை டெவலப் செய்து பார்த் தால்... படம் கச்சிதமாக வந்திருந்தது! இருப்பினும் எல்லோரும் யூரியின் சக்தியை நம்பவில்லை. யூரிக்கு எதிராக ஒரு கோஷ்டியே எதிர்ப்பிரசாரம் செய்தது. அதற்குத் தலைமை வகித்தவர் ராண்டி என்கிற மேஜிக் நிபுணர்.
ராண்டி, 'கெல்லர் செய்வது எல்லாமே ட்ரிக்ஸ்! அதையெல்லாம் நான் செய்து காட்டுகிறேன்' என்று சொல்லி நிகழ்ச்சிகள் நடத்தினார். 'கெல்லர் ஒரு ஃப்ராடு' என்று ஒரு புத்தகம் கூட வெளியிட்டார்.
ஆனால், கெல்லரின் எல்லாச் சாதனைகளையும் அவரால் செய்து காட்ட முடியவில்லை என்பதுதான் உண்மை. ஸ்பூன்களை நைசாக விரல்களால் வளைக்க முடியும் அல்லது ஏற்கெனவே வளைத்த ஸ்பூனை உடைக்குள் ஒளித்து வைத்துக்கொள்ள முடியும்!' என்று ராண்டி சொன்னதற்குப் பதிலடியாக யூரிகெல்லர் ரோஷத்துடன் தெருவுக்குச் சென்று அங்கிருந்த இரும்பு டிராஃபிக் சிக்னலை வெகுநேரம் உற்றுப் பார்த்தார்
அந்தக் கம்பம் மெல்ல வளைய ஆரம்பித்தது!

ஒருமுறை விஞ்ஞானக்குழு ஒன்று யூரியைச் சோதிக்க வந்தது அவர்கள் கண்ணெதிரே ஸ்பூன் ஒன்றைப் பார்வையாலேயே வளைத்துக் கொண்டிருந்தபோது, ஒரு சோதனையா 'எனக்கென்னவோ ஸ்பூனை விரல்களால் நீங்கள் வளைப்பதா படுகிறது. உங்கள் விரல்களுக்கு சற்று அசாத்தியமான பலம் இருககலாமே?' என்றவுடன் சற்று அப்ஸெட் ஆன யூரி, அந்த ஸ்பூனை அவரிடமே கொடுத்துப் பிடித்துக் கொள்ளச் சொல்ல ஸ்பூன் தொடர்ந்து வளைந்து கொண்டிருந்தது!

ஒரு ஸ்பூனைப் பார்வையால் வளைப்பதாலோ டேபிள் மீது உள்ள வாட்ச்சைப் பார்வையில் சக்தியாலேயே நகரச் செய்வதாலோ சமுதாயத்துக்கு என்ன பயன் ? மனத்தை ஒருமுகப்படுத்தித் தீர்க்கமாகத் தியானித்து மேஜை மீது உள்ள ஒரு டம்ளரை நகர வைப்பதற்குள், சாதாரணமாகக் கையை நீட்டி டம்ளரை எடுத்துக்' கொள்ளலாமோ என்று சில ஆராய்ச்சியாளர்கள் யூரிகெல்லரை ஏளனம் செய்தார்கள்.
'இது குழந்தைத்தனமான கருத்து. ஸ்பூனை வளைப்பது ஒரு முக்கியமான விஷயமல்ல. இப்படிப்பட்ட சக்திகள் இருக்கிறதா என்று நிரூபிப்பதுதான் முக்கியம். அவை நிரூபிக்கப்பட்டால் பிறகு அதன் ஆச்சரியமான விளைவுகளை எண்ணிப் பார்க்க வேண்டும்!" என்று காட்டமாகப் பதில் சொன்னார் ப்யூஹாரிச்
முதன்முதலில் கார் கண்டுபிடித்த போதும் அமெரிக்க விஞ்ஞானிகள் சங்கம் 'இரண்டுமே வித்தியாசமான கண்டு பிடிப்புகள்தான். இவற்றை சர்க்கஸ் போல ஏதாவது கண் காட்சியில் காட்டலாம். மக்களுக்கு இந்தக் கண்டுபிடிப்புகள் எந்தவிதத்திலும் எதிர்காலத்தில் உபயோகப்படப் போவதில்லை!" என்று கருத்து சொன்னது நினைவுக்கு வருகிறது.

இருப்பினும், யூரிகெல்லர் ஒரே ஒருமுறை 'உபயோகமான ' ஒரு சாதனையை நிகழ்த்திக் காட்டினார்! ஒருமுறை, அமெரிக்காவில் ஒருவர் கடத்தப்பட்டார். போலீஸ் அவரைத் தேடியும் பலனில்லை.
கடத்தப்பட்டவரின் வீட்டுக்கு யூரி சென்று,அங்கே நடு ஹாலில் கண்மூடி சற்று நேரம் நின்றார். பிறகு அந்த ஊரின் வரைபடம் ஒன்றை எடுத்து, குறிப்பிட்ட இடத்தில் பென்சிலால் புள்ளியிட்டார். இங்கேதான் அவர் இருக்கிறார் என்று என் மனம் சொல்கிறது!' என்று சொன்னார். போலீஸ் படை அந்த இடத்துக்கு விரைந்து, கடத்தப்பட்டவரை மீட்டது!
அதைத் தொடர்ந்து, இப்படிப்பட்ட உதவிகள் கேட்டுப் பலர் யூரியிடம் வந்தும், அவர் மறுத்துவிட்டார். எழுத்தாளர் காலின்
வில்ஸனிடம், 'இதெல்லாம் கிரிமினல் பிரச்னைகள். என் மூக்கை நுழைக்க அச்சமாக இருக்கிறது. பிறகு எனக்கு ஏதேனும் ஆபத்து வரலாம்!' என்றார் யூரி.
'சாமான்ய மனிதர்கள் தங்களுக்கு எந்த அபூர்வ சக்தி இருப்பதாகவும் நம்புவதில்லை. பலருக்கு மூளையின் அடித்தளத்தில் அபூர்வ சக்திகள் இருக்கக்கூடும். யாருமே தங்கள் மூளையின் சக்திகளைப் புரிந்து கொள்வதுகூட இல்லை!' என்று பேட்டி ஒன்றில் வருத்தப்பட்ட யூரிகெல்லர் அதற்கான டிப்ஸ் சிலவற்றையும் எடுத்துச்சொன்னார்!
ஆனால் பொருட்களைப் பார்க்காமல் அதுவும் தொலை தூரத்தில் உள்ள பத்து பேர்கள் சேர்ந்து தூக்கக் கூடிய ஒரு சிம்மாசனத்தை தொடாமல் மன உள்ளுணர்வால் நிகழத்தி காட்டிய ஒரு இறைநேசரைப் பற்றி குர்ஆனில் அல்லாஹ்
அவளுடைய சிம்மாசனத்தை என்னிடம் கொண்டு வருபவர் உங்களில் யார் ? என்று சுலைமான் கேட்டார்
அதற்கு ஜின்களிலுள்ள இஃப்ரீத் "நீங்கள் உங்கள் இடத்திலிருந்து எழுந்திருப்பதற்கு முன்னதாகவே அதனைக் கொண்டு வந்து விடுவேன் என்று கூறினான்
எனினும் அவர்களில் வேத ஞானம் பெற்ற ஒருவர் இருந்தார் ( ஆஷிப் இப்னு பர்க்கியா ) அவர் சுலைமான் நபியை நோக்கி நீங்கள் கண் இமைப்பதற்குள் அதனை நான் உங்களிடம் கொண்டு வந்து விடுவேன் எனக் கூறி ( அவவாறே கொண்டு வந்தும் வைத்தார்) குர்ஆன் ( 27 : 40 )

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 20
## ( உயிர் நீத்து உயிர்த்தெழுந்தவர் )



ஜப்பானைச் சேர்ந்த சென் (Zen) ஞானியான பொகூயூ (Bokoju)
விடம் ஒருவர் அணுகி உங்கள் பயிற்சி என்ன என்று கேட்டார்
பொகூயூ : பயிற்சி என்று எதுவும் இல்லை பசிக்கும்போது உண்பேன்.உறங்கத் தோன்றும்போது உறங்குவேன்.

அணுகியவர் :நானும் இவற்றையெல்லாம் செய்கிறேன்.நான் மட்டும் அல்ல உலகிலுள்ள அனைவரும் இதைத்தான் செய்கிறார்கள். இதில் என்ன பயிற்சி இருக்கிறது?
பொகூயூ : நீங்கள் செய்யும் செயல் என்ன என்பதையே உணராமல் செயல்படுகிறீர்கள், மேலும் திட்டங்கள் போடுகிறீர்கள். அத்துடன் உங்களை அறியாமலேயே சாப்பிட்டு முடிக்கிறீர்கள், அதாவது நீங்கள் சாப்பிடுவது உங்களுக்கே தெரியாமல் இருக்கிறது. உறங்கும்போது எண்ணங்கள் குறுக்கிடுகிறது. உருண்டு புரண்டு தூங்குகிறீர்கள், விழிக்கிறீர்கள், மீண்டும் உறங்குகிறீர்கள். நான் உண்ணும்போது உண்பது மட்டும்தான் செய்கிறேன், உறங்கும் போதும் உறங்கும் செயல் மட்டுமே செய்கிறேன். ஆனால் எல்லாச் செயல்களையும் முழுமையாகச் செய்கிறேன்.
அணுகியவர் : (பொகூயூ தங்கியிருக்கும் இடத்தில் தங்கியிருந்து அவரை அவதானித்த பின்பு மிகுந்த குழப்பத்திற்குள்ளானார்) "எனக்கு எதுவும் விளங்கவில்லை."
பொகூயூ : நான் நடக்கும்போது நடத்தல் என்ற செயல் மட்டுமே நடக்கும். உண்ணும்போது உண்ணல் செயல் மட்டும்தான் அங்கு நிகழும். ஆனால் அங்கு பொகூயூ என்பவர் இருக்கமாட்டார். நீங்கள் கவனித்திருந்தால் 'செயல்கள்' முழுமையாக நடைபெறுவதை அவதானிக்கலாம், இதுதான் எனது பயிற்சிகள், மிகச் சுலபமானது.
இவர் வார்த்தைகள் அற்ற விழிப்புணர்வை சீடர்களுக்கு
காட்டியவர்.

அந்திம காலத்தில் பொகூயூ தன் சீடர்கள் அனைவரையும் வருமாறு அழைத்தார். அவர்களைப் பார்த்து 'என் உடலுக்கு இன்று மரணம் கொடுக்க உள்ளேன், உடலை விட்டு நான் பிரியப் போகிறேன். மரணம் என் உடலுக்கு ஒரு தனித்துவமான மரணத்தைக் கொடுக்க வேண்டும். தனித்துவமான மரணம் முறை ஒன்றைக் கூறுங்கள்' என்றார்.
ஒரு சீடன் "நீங்கள் தாமரைப் பூ வடிவம் போன்று உட்கார்ந்திருந்து மரணமாகலாம்" என்றார்.
இன்னொரு சீடன் குறுக்கிட்டார் "பல ஞானிகள் அந்த முறையில்தான் தங்கள் உடலை விட்டுப் பிரிந்துள்ளார்கள்" என்றார்.
தொடர்ந்து வேறொரு சீடன் "நீங்கள் நிலத்தில் நின்று உடலை விட்டுப் பிரியுங்கள்" என்றார்.
பிறிதொரு சீடன் "ஏற்கனவே ஒரு ஞானி அப்படித்தான் பிரிந்தார்" என்றார்,
அடுத்தவர் "நான் ஒரு வித்தியாசமான முறையைச் சொல்கிறேன் என்றார். எல்லோரும் ஆவலாக அவர் சொல்லப்போகும் முறைக்காகக் காத்திருந்தனர். "தலைகீழாக நின்று இறப்பீர்களா? இது தனித்துவமானதாக இருக்கும்" என்றார்.
பொகூயூ அதற்கு இணங்கினார். சீடர்கள் முன்னிலையில் தலைகீழாக நின்று தன் உடலுக்குத் தன்னுணர்வுடன் இறப்பைக் கொடுத்தார்.
இந்தத் தனித்துவமான மரணத்துக்கு எப்படி தனித்துவமான இறுதி மரியாதை கொடுப்பது என்று தெரியாமல் சீடர்கள் விழித்தனர். சீடர்கள் ஒரு முடிவுக்கு வந்தனர். ஞானி பொகூயூ அவர்களின் அக்கா ஒரு ஞான அவரிடம் ஆலோசனை கேட்போம் என்று அவர்கள் புறப்பட்டு அருகாமையில் இருந்த அவரது ஆசிரமத்துக்குச் சென்று அவரிடம் கேட்டனர்.
"நாங்கள் எங்கள் குருவுக்கு மிக உயர்ந்த தனித்துவமான இறுதி மரியாதையைக் கொடுக்க வேண்டும், நாங்கள் உங்கள் ஆலோசனையைப் பெற வந்துள்ளோம்" என்றனர்.
இதைக் கேட்டதும் தன் தம்பியினது உடல் இருந்த இடத்திற்கு அக்கா விரைந்தார். அவரது உடலுக்கு முன் நின்று உரத்த குரலில் கூறினார் "நீ உன் வாழ்நாள் முழுக்க முட்டாள் தனமாக நடந்து கொண்டாய், உன் இறுதி நாளிலும் இதுவரை நீ செய்யாத முட்டாள் தனங்களையும் விட கூட மிகப் பெரிய முட்டாள்தனமான இறப்பை உன் உடலுக்குக் கொடுத்துள்ளாய். நீ, ஞானம் அடைந்திருந்தாலும் நீ ஒரு முட்டாள். வேலைகள் உன்னை விட்டுப் போகவில்லை. இந்த முட்டாள்தனத்தை கைவிட்டு வெளியே வா! பிறர் எதிர்பார்ப்பது போல் இறவாதே!! பிறரின்

எதிர்பார்ப்புக்கேற்ப செயல்படாதே! நீ படுத்திருந்து சாதாரண நிலையில் உன் உடலை விட்டுப் பிரி, பொகூயூ நீ உயிர்த்தெழு" என்று உரக்கக் கூறினார்.
சுவாசம் நின்றிருந்த அவரது உடல், இருதயம் நின்றிருந்த அவரது உடல் மீண்டும் இயங்கத் தொடங்கியது. தலைகீழாக நின்று மரணமான அந்த ஞானி எழுந்து நிலத்தில் நின்றார். பின்னர் 'உலகின் பொது மரணமான படுத்திருந்து இறப்பது' என்ற அந்த நிலையை அவர் ஏற்று, அதனையே தன்னுடலுக்கு அனுமதித்து இவ்வுடலை விட்டுப் பிரிகிறேன் என்றார். அப்படியே உடலை விட்டுப் பிரிந்தார். பழையபடி அவரது சுவாசம் நின்றது, இதயத் துடிப்பு நின்றது, சீடர்கள் இறுதி மரியாதை செலுத்தினர்.

இந்த ஞானி முதலில் ஏற்பட்ட மரண நிலையில் இருந்து தன் சீடர்களுக்கு மரணத்தைப் பற்றிய ஒரு தெளிவைத் தத்துவார்த்தமாகச் செயல்முறையில் விளக்கியிருக்கிறார்.
சீடர்கள் என்ன செய்வதென்று தெரியாமல் நின்ற திகைப்பையும் கவனித்திருக்கிறார். தன் மரணம் மூலம் சீடர்களுக்கு அழகான அனுபவத்தைக் கொடுத்து மரணத்தை ஒரு சாதாரண அழகான நிகழ்ச்சியாக மாற்றி உலகத்துக்கு சென்றுள்ளார். இவர் மரணத்திலிருந்து மரணமற்ற நிலையை ( From death to deathlessness) அடைந்தவர்.
'என் உடலுக்கு இன்று மரணம் கொடுக்கப் போகிறேன்' இறப்பைக்கூட இயல்பாக எடுத்துக்கொண்ட ஜென் ஞானி! எதையுமே இயல்பாக எடுத்துக்கொள்வது போல, மரணத்தையும் அவ்வாறே எடுத்துக்கொண்டார்.

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 21
## ( ஆன்மாக்கள் ஒன்றும் பற்றி எரியாது ! )



திடீரென்று ஒரு காரணமும் இல்லாமல் தனக்குத் தானே தீப்பிடித்து சில மணி நேரத்துக்குள் கொடூரமாகச் சாம்பலாவது ஆச்சரியமான விஷயம்தான் என்றாலும், அது மனிதன் தீப்பிடித்து கொடூரமாக இறப்பது என்பது மிகப் பெரிய சோகம்.
விபத்து நிகழ்ந்தவுடன் வந்துசேரும் காவல் துறையினர் இது தானாகவே பற்றிக்கொண்ட அதிசய நெருப்பு என்று மேலதிகாரிகளிடம் போய்ச் சொன்னாலும் யாரும் நம்புவது சந்தேகம்.

'நெருப்பு மரணம்' திடீரென்று நிகழ்ந்து விடுவதால், எரியும் போது நேரில் பார்ப்பவர்களும் மிகக் குறைவு. நெருக்கமான ஒருவர் இப்படி எரிந்து கொண்டிருக்கும்போது அவர் ஓடிப்போய் கேமராவைக் கொண்டுவந்து படம் பிடிப்பார் என்றும் எதிர்பார்க்க முடியாது.
இப்படிப் பல காரணங்களால் விஞ்ஞானிகளால் 'நெருப்பு மரணங்கள் பற்றி ஒரு முடிவுக்கு வரமுடியவில்லை. பிரிட்டனில் வருஷத்துக்கு ஐந்து நெருப்பு மரணங்கள்
நிகழ்கின்றன என்பது ஆய்வாளர்களின் ஊகம். உலகளவில் ஐம்பது பேராவது இந்த ரீதியில் இறக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது.

ஆரம்பத்தில் இதுபற்றி சற்று அலட்சியமாக இருந்த விஞ்ஞான உலகம், 1951-ம் ஆண்டு ப்ளாரிடாவில் மேரி ரீஸர் என்கிற பெண்மணி ஒரு மணி நேரத்தில் எரிந்து சாம்பலான பிறகுதான் எழுந்து உட்கார்ந்து கவனமாக ஆராய ஆரம்பித்தது
நெருப்பு, வெடிகுண்டு போன்ற விஷயங்களில் பல
ஆராய்ச்சிகளில் தேர்ந்த டாக்டர் டக்ளஸ் டிரிஸ்டேல் என்பவர் சொன்ன விளக்கம்தான் 'மெழுகுவர்த்தி எஃபெக்ட்! மனித உடலை மெழுகுவர்த்தியோடு ஒப்பிடலாம் என்றார் டாக்டர் டிரிஸ்டேல் (தியாகம் செய்பவர்களை அவர் குறிப்பிட வில்லை!). மெழுகுவர்த்தியில் திரி எரிவதற்கு உதவும் ரசாயன சக்தியைத் தருவது மெழுகு! மெழுகுவர்த்தி எரிந்து முடிந்தவுடன் திரி காணப்படுவதில்லை. கொஞ்சம் மெழுகு மட்டும் திரவமாக வழிந்து உறைகிறது.

மனித உடலிலும் எலும்புகள் ஒரு திரி மாதிரிதான். உடலில் உள்ள கொழுப்புதான் மெழுகாக உதவுகிறது! சாதாரணமாக ஒருவர் தீ விபத்தில் சிக்கிக் கொள்ளும் போது அவருடைய உடல் மட்டும் மெழுகுபோல எரிந்து போகிறதே தவிர, உள்ளே எலும்புகள் (திரி) பாதிக்கப்படுவதில்லை. அரிதாக மிகச் சிலருக்கு அதீத வெப்பம் உடலுக்குள் உருவாகி எலும்புகளும் எரிந்துபோய் விடுகின்றன. இதுவே டிரிஸ்டேல் கருத்து.
'மெழுகு எரிய (உடல் சைஸுக்கு மெழுகு!) பல மணி நேரம் பிடிக்கும். ஓரிரு மணி நேரத்தில் ஒருவர் சாம்பலாவது எப்படி நிகழ முடியும்?' என்று சில ஆய்வாளர்கள் கேள்வி
எழுப்பினார்கள்.

1992 ஆம் ஆண்டில் வாஷிங்டன் அருகே ஒரு வீட்டில் ஹெலன்கான்வே என்னும் பெண்மணி இதுபோலத் தீப்பிடித்து இறந்தார். தீயணைக்கும் படையில் இருந்த ஆர்னால்ட் என்கிற ஆராய்ச்சி செய்தவர் என்பதால் அந்தப் பெண்மணியின் மரணம் பற்றி நுணுக்கமாக விசாரித்தார் அவர்.
எல்லோர் முன்னிலையிலும் நேர்ந்த பயங்கரம் அது! கான்வே தீப்பற்றிக்கொண்டு சாம்பலாக எடுத்துக்கொண்ட (!) நேரம் இருபது நிமிஷங்கள். நாற்காலியில் அமர்ந்து உயிரைவிட்ட அவருடைய இரு கால்கள் மட்டும் மிச்சமிருந்தன.
நாற்காலியின் சாய்வுப்பகுதியும் எரிந்து சாம்பலாகிவிட்டது. அதே சமயம், பக்கத்தில் இருந்த பிளாஸ்டிக் பொருள்களான டெலிபோன், பக்கெட் போன்றவை தீயால் சற்றும் பாதிக்கப் படவில்லை! உடலுக்குள் மட்டும் தானாகவே இந்த அளவுக்குக் கொடூரமான வெப்பம் உருவாக முடியுமா?
இதுபற்றி ஆராய்ச்சி செய்து பி பி சி ஒரு டாகுமென்டரி தயாரித்தது. அதில் விஞ்ஞானிகள் பல விளக்கம் கொடுத்தனர். எல்லாம் அரை குறையான விளக்கமே. கால்கள் மட்டும் எரியாமல் உடம் முழுவதும் எப்படி எரிய முடியும்?

மின்சாரச் சுடுகாட்டில் 1000 டிகிரி சென்டி கிரேடிலும் எரியாத எலும்புகள் கால்களை மட்டும் விட்டுவிட்டு உடல் முழுதும் எப்படி எரிந்து சாம்பாலயின ? இப்படிப் பல புதிர்கள் ! சடலம் எரிந்தும் பக்கத்தில் உள்ள மேஜை நாற்காலிகள் தீப்பிடிக்கததது ஏன்?

ஆனால் அமெரிக்காவில் ஒரு மாணவன் மாடிப்படியில் இருந்து இறங்கி வரும் போது தீப்பிழம்பானான். அவன் உடைகள் புத்தம் புதிய உடைகளாகக் காட்சிதந்தன. கருகவே இல்லை அப்போது இவ்வளவு பதிவு செய்யும் வசதிகள் இல்லாததால் வேறு எந்த நிரூபணமும் இல்லாமல் செய்தி மட்டுமே பத்திரிகையில் வெளியானது
ஒரு காரணமும் இல்லால் நெருப்பு உடலில் பற்றிக்கொள்கிறது
என்பதை விஞ்ஞான உலகம் ஏற்றுக்கொள்ள மறுத்தது. ஏதோ
ஒரு தீப்பொறி இருந்திருக்க வேண்டும் என்றார்கள்.
அதற்கேற்ப இறந்த பலருக்குச் சிகரெட் பழக்கம் இருந்தது தெரிய வந்தது.சிலருடைய உடல் கிச்சனில் ஸ்டவ் அருகே கிடந்தது. முக்கால் வாசிப்பேர் அறுபது வயதானவர்கள்!
'வயதானவர்கள் சிகரெட் பிடித்தவாறே தூங்கிப்போகலாம் அல்லது லேசாக மயக்கமடையலாம். தூக்க நிலையில் கையிலிருந்து நழுவி வயிற்றில் விழுகிற எரியும் சிகரெட் காரணமாக உடை முதலில் தீப்பிடிக்க வாய்ப்புண்டு. முதியவர்கள் என்பதால் உடனே வேகமாகச் செயல்பட்டு நெருப்பை அணைக்க முடியாமலும் போகிறது. முழுசாகப் பற்றி எரிகிறார்கள்!' என்றனர் சிலர்.
ஏதோ தீப்பொறி அடிப்படைக் காரணமாக இருந்தாலும், மிக விரைவில் சாம்பலாகப் போவதுவரை விபரீதம் நிகழ்வதுதான் கேள்விக்குறியான ஆச்சரியம்!
இதே போல வடக்கிலும் சில சம்பங்கள் உண்டு. கோபால் நாயக் என்பவர் தீபக் என்னும் ராகத்தைப் பாடினால் மனிதர்கள் தீப்பற்றி எரிந்துபோவார்கள் என்கிறார். மொகலாய சக்ரவர்த்தி அக்பர், அப்படியானால் தண்ணீருக்குள் நின்று பாடுங்கள் என்கிறார்.
அப்படிப் பாடினாலும் தண்ணீரிலும் தீ தோன்றி நான் எரிந்துவிடுவேன் என்று சொன்னபோதிலும், மன்னனே சொல்கிறாரே என்று அவர் தீபக் ராகத்தை இசைத்தார். தீப்பிழம்பாக மாறி மாண்டு போனார் பாடகர்.
1987-ல் பிரிட்டனில், கென்ட் என்கிற ஊரில் ஐம்பது வயதான ஒருவருக்கு நெருப்பு மரணம் ஏற்பட்டபோது, கொஞ்ச நேரத்தில் அங்கு வந்த பி.பி.சி. டி.வி. குழு விஸ்தாரமாக அந்தச் சூழ் நிலையைப் படம் பிடித்தது. போலீசும் சத்தியமாக இது கொலை இல்லை' என்று சொல்லிவிட்டது. விஞ்ஞானிகள் அந்த வீடியோ கேசட்டையும் வைத்து விவாதித்து ஒரு புதிய கருத்தை முன் வைத்தார்கள்!

மனிதனின் வயிற்றுக்குள் எரியக்கூடிய காற்றுப் பொருள்கள் Combustible gases) உண்டு! அரிதாகச் சிலருக்கு மட்டும் மிகவும் அதிக அளவில் அவை உற்பத்தியாகின்றன. தவிர, நம் எல்லாருடைய உடலிலும் மின் சக்தியும் உண்டு (Static Electricity). சிலருக்கு அதுவும் அதிகமாக இருக்கக்கூடும்.
அப்படி ஒரு மின்சாரம் உடலுக்குள்ளேயே பளிச்சிட்டு கூடவே வயிற்றுக்குள் காக்டெய்ல் போன்ற காஸ் விஷயங்களும் அதிக அளவில் பரவியிருந்தால் இப்படி ஒரு விபரீதம் ஏற்படுவது சாத்தியம் என்று விஞ்ஞானிகள் மெனக்கெட்டு விளக்கினார்கள்
அதற்கேற்ப 1993-ல் ஜெர்மனியில் இரு விஞ்ஞானிகள், சில விலங்கினங்களின் வயிற்றுக்குள் பாஸ்ஃபேன் காஸ் இருப் பதைக் கண்டுபிடித்தார்கள்! பாஸ்ஃபேன் வாயு - பாஸ்ஃபரஸ் போல தானாகவே திடீரென்று எரிகிற பொருள்! (வயல் புரங்களில் அந்தரத்தில் எரியும் தீப்பிழம்புகள் பாஸ்ஃபேன் காஸ்தான். அதைத்தான் நாம் கொள்ளிவாய்ப் பிசாசு என்கிறோம்!) விலங்குகளுக்கு இப்படி நிகழும் என்றால் மனிதனுக்கும் இது சாத்தியம் என்றார்கள் விஞ்ஞானிகள்.
இந்த வகைத் தீயில் உடல் எரிந்து சாம்பலாகி விடுவதால் விஞ்ஞானிகளால் இந்தக் கருத்தை இன்றுவரை நிரூபிக்க முடியாத நிலை! மனிதர்களை வைத்துச் சோதனை நடத்தினார்கள். ஆச்சரியம்! - சிலர் வயிற்றில் பாஸ்ஃபேன் காஸ் இருப்பது தெரிய வந்தது!
உடல் தீப்பற்றி எரிந்தாலும் ஆன்மாக்கள் ஒன்றும் பற்றி எரியாது. சித்தர்களின் அஷ்ட மஹா சக்திகளை நம்பும் இந்துக்களுக்கு இவைகள் எல்லாம் கொசுறு! என்கிறார் லண்டன் சுவாமிநாதன் என்கிற ஆன்மிக எழுத்தாளர்

وَمَا مِنْ دَآ بَّةٍ فِى الْاَرْضِ اِلَّا عَلَى اللّٰهِ رِزْقُهَا وَ يَعْلَمُ مُسْتَقَرَّهَا وَمُسْتَوْدَعَهَا كُلٌّ فِىْ كِتٰبٍ مُّبِيْنٍ
உணவளிக்க அல்லாஹ் பொறுப்பேற்றுக் கொள்ளாத யாதொரு உயிரினமும் பூமியில் இல்லை. அவை (வாழ்ந்து) இருக்குமிடத்தையும், அவை (எப்படி இறந்து) ( எங்கு ) அடங்கும் இடத்தையும் அவன் அறிந்தே இருக்கிறான். இவை அனைத்தும் (லவ்ஹுல் மஹ்பூல் என்னும்) தெளிவான (அவனுடைய) பதிவுப் புத்தகத்தில் பதிவாகி இருக்கின்றன. (குர்ஆன் : 11:6)

**ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 22**
**( முயன்றால் முற்பிறவியின் நினைவுகளைப் பெறலாம்.**
**- சுவாமி விவேகானந்தர் )**



19.09.1893 அன்று சுவாமி விவேகானந்தர் அவர்கள் அமெரிக்கா விலுள்ள சிக்காக்கோ நகரில் இடம்பெற்ற சர்வ சமயப் பேரவையில் (The world's Parliament of Religions) இந்துமதம் என்ற தலைப்பில் ஆய்வுக் கட்டுரை சமர்ப்பித்து அதனைத் தொடர்ந்து ஆற்றிய உரையிலிருந்து ஒரு சிறு பகுதி.)
நூல்: சிக்காக்கோ சொற்பொழிவுகள், வெளியீடு: ஸ்ரீராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை
"இங்கு நான் நிற்கிறேன். கண்களை மூடிக்கொண்டு 'நான், நான், நான்' என்று என்னைப்பற்றி நினைத்தால் என்னுள் என்ன தோன்றுகிறது? உடலைப் பற்றிய எண்ணம்தான். அப்படியானால் சடப்பொருள்களின் மொத்த உருவம்தானா நான்? 'இல்லை' என்கின்றன வேதங்கள்.
நான் உடலில் உறைகின்ற ஆன்மா. நான் உடல் அன்று. உடல் அழிந்துவிடும், ஆனால், நான் அழியமாட்டேன். நான் இந்த உடலில் இருக்கிறேன், இது வீழ்ந்துவிடும். ஆனால் நான் வாழ்ந்து கொண்டேயிருப்பேன். நான் முன்னமும் வாழ்ந்து கொண்டுதான் இருந்தேன்.
ஆன்மா படைக்கப்பட்டதன்று. படைக்கப்பட்டதாயின் அது பல பொருள்களின் சேர்க்கையாகும் .அப்படியானால் வருங்காலத்தில் அது கண்டிப்பாக அழிந்துபோக வேண்டும். எனவே ஆன்மா படைக்கப்பட்டதானால் அது இறக்கவேண்டும். அல்லது அழிந்து போக வேண்டும். எனவே ஆன்மா பொருள் அல்ல.

هَلْ اَتٰى عَلَى الْاِنْسَانِ حِيْنٌ مِّنَ الدَّهْرِ لَمْ يَكُنْ شَيْـًٔـا مَّذْكُوْرًا
திட்டமாக மனிதன் மீது காலத்தில் ஒரு நேரம் வந்து, அதில் அவன் இன்ன பொருள் என்று குறிப்பிட்டுக் கூறுவதற்கில்லாத நிலையில் இருக்கவில்லையா? (குர்ஆன் : 76:1)

சிலர் பிறக்கும்போதே இன்பத்தில் பிறக்கிறார்கள், உடல் வளத்தோடும், வனப்போடும் மனவலிமையோடும், தேவைகள் அனைத்தும் நிறைவேறப்பெற்று வாழ்கிறார்கள். சிலர் துயரத்திலேயே பிறக்கிறார்கள். சிலர் முடமாகவும், நொண்டி யாகவும் இருக்கிறார்கள். பலர் முட்டாள்களாகவே வாழ்ந்து, வாழ்க்கை முழுவதையும் ஏதோ இழுபறி நிலையிலேயே கடத்துகிறார்கள்.
அவர்கள் அனைவரும் படைக்கப்பட்டவர்கள் என்றால், நேர்மையும் கருணையும் உள்ள கடவுள், ஒருவரை இன்பத்தில் திளைப்பவராகவும் இன்னொருவரைத் துன்பத்தில் உழல்பவராகவும் ஏன் படைக்க வேண்டும்? அவர் ஏன் அத்தனை வேறுபாடு காட்ட வேண்டும்? இந்தப் பிறவியில் துன்பப்படுபவர்கள் அடுத்த பிறவியில் இன்பம் அடைவார்கள் என்று கூறுவதும் பொருந்தாது. நேர்மையும் கருணையும் கொண்ட கடவுளின் ஆட்சியில் ஏன் ஒருவர் துயருற வேண்டும்?
ஆகவே, படைப்பாளராகிய கடவுள் ஒருவர் இருக்கிறார் என்று கொள்வது இந்த முரண்பாட்டைத் தெளிவுபடுத்தவில்லை, மாறாக எல்லா வல்லமையும் வாய்ந்த ஒருவரின் கொடுங்கோன்மையையே காட்டுகிறது.
அப்படியானால், ஒருவன் மகிழ்வதற்கோ துயரத்தில் உழல்வதற்கோ உரிய காரணங்கள் வேண்டும். அவன் பிறப்பதற்கு முன்பே இருந்திருக்க வேண்டும். அவையே அவனது முற்பிறப்பின் வினைகள். ஒருவனுடைய உடல், உள்ளம் ஆகியவற்றின் இயல்புகள் பரம்பரையாக வருவது என்று காரணம் காட்டப்படுகிறது அல்லவா?
வாழ்க்கையில் இரண்டு இணைகோடுகள் உள்ளன. ஒன்று மனதைப் பற்றியது, இன்னொன்று சடப்பொருளைப் பற்றியது. சடப்பொருளும் அதன் மாற்றங்களும் மட்டுமே நமது இப்போதைய நிலையை விளக்கிவிடும் என்றால் ஆன்மா என்ற ஒன்று இருக்கிறது என்று கொள்ளவேண்டிய அவசியம் இல்லை.

ஆனால் சடத்திலிருந்து எண்ணம் தோன்றியது என்று நிரூபிக்க முடியாது. தத்துவப்படி, ஒரே ஒரு பொருள்தான் இருக்க முடியுமானால் ஆன்மா ஒன்றே ஒன்றுதான் இருக்க வேண்டும் என்று ஆகிறது. இது, சடப்பொருள் ஒன்றே ஒன்று தான் இருக்கவேண்டும் என்பதைப்போல பகுத்தறிவுக்குப் பொருந்தியதே. ஆனால் இவை எதுவும் இப்போது நமக்கு அவசியமில்லை.
'பரம்பரையின் மூலம் உடல்கள் சில இயல்புகளைப் பெறுகின்றன என்பதை நாம் மறுக்க முடியாது. ஆனால் குறிப்பிட்ட மனம் குறிப்பிட்ட விதமாகச் செயல்படுவதற்கு ஆதாரமாக இருக்கின்ற ஒரு தூல உருவத்தையே இந்த இயல்புகள் குறிக்கின்றன.
இனி, ஆன்மாவுக்கும் கடந்தகால விளைவுகளின் காரணமாகச் சில குறிப்பிட்ட இயல்புகள் ஏற்படுகின்றன. குறிப்பிட்ட இயல்புகளுடன் கூடிய ஆன்மா, குணஒற்றுமை விதிகளுக்கு (Law of Affinity) இணங்க எந்த உடலில் பிறந்தால் அந்த இயல்புகளை வெளிப்படுத்த முடியுமோ, அந்த உடலில் பிறக்கிறது.
இது அறிவியலுக்கு ஏற்புடையது. ஏனெனில் அறிவியல் எதையும் பழக்கத்தைக் கொண்டே விளக்க விரும்புகிறது. பழக்கமோ எதையும் திரும்பத் திரும்பச் செய்வதால்தான் உண்டாகிறது. ஆகவே புதிதாகப் பிறந்த ஓர் ஆன்மாவின் இயல்புகளை விளக்குவதற்கு அது அந்தச் செயலை திரும்பத் திரும்ப செய்திருக்க வேண்டும் என்று ஆகிறது. அந்த இயல்புகள் இந்தப் பிறவியில் பெறப்பட்டவை அல்ல ஆதலால் அவை முந்தைய பிறப்புகளிலிருந்து வந்திருக்க வேண்டும்.

இன்னொரு கருத்தும் இருக்கிறது. இவையெல்லாம் சரியென்றே வைத்துக்கொள்வோம், ஆனால் ஏன் எனக்கு முற்பிறவியைப் பற்றிய எதுவும் நினைவில் இல்லை? இதை எளிதில் விளக்க முடியும்.
இப்போது நான் ஆங்கிலம் பேசிக் கொண்டிருக்கிறேன். இது உண்மையில், என் தாய்மொழி அல்ல. என் தாய்மொழிச் சொற்கள் எதுவும் என் உணர்வுத் தளத்தில் இப்போது இல்லை. ஆனால் பேசுவதற்குச் சிறிது

முயன்றால் போதும் அவை விரைந்து வந்துவிடும். மனக்கடலின் மேற்பரப்பு மட்டுமே உணர்வுப் பகுதி, மனத்தின் ஆழத்தில்தான் அனுபவங்கள் அனைத்தும் திரண்டு கிடக்கின்றன என்பதையே இது காட்டுகிறது. முயலுங்கள் , போராடுங்கள் அவை மேலே வரும். முற்பிறவியையும் நீங்கள் அறிய முடியும் .

ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 23

பூர்வஜென்ம ஞாபக ஸ்பெஷலிஸ்ட் ! - சுஜாதா

மறுபிறவித் தத்துவத்தின் பிறப்பிடம் இந்தியாதான். இந்தியாவில் பிறந்த மதங்கள் அனைத்தும் மறுபிறவியில் நம்பிக்கை கொண்டுள்ளன. பல புராதன மதங்களும் ஏதாவது ஒரு விதத்தில் மறுபிறவியை நம்புகின்றன. காலத்தால் புதிய கிறிஸ்தவ, இஸ்லாமிய மதங்களில்தான் மறுபிறவி என்பது வெளிப்படையாகச் சொல்லப்படவில்லை- அதே சமயம், இறந்துபோன ஆத்மா காத்திருந்து சொர்க்கத்துக்குப் போவது இருக்கிறது. இந்த நம்பிக்கைகளில் முக்கியமானது மறுபிறவி. டார்வினின் பரிணாமத் தத்துவத்தைப் பிற்காலத்தில் எதிர்பார்த்து வழிமொழியப் பட்ட தத்துவம் இது என்று கூறுபவர்கள் உண்டு.

பரிணாமத் தத்துவத்தின்படி நாமெல்லோரும் ஒற்றை செல் உயிரினமாக பாக்டீரியாவிலிருந்து பிரதியெடுக்கும்போது தப்பு ஏற்பட்டு, அப்படித் தப்பாகப் பிரிந்த செல், உயிர் நீடிக்கும் சாத்தியக்கூறு அதிகமாகி மெல்ல மெல்ல ம்யுட்டேஷன் என்று சொல்லக்கூடிய பிரதியெடுக்கும் பிழைகளால் மீனாகி, புழுவாகி, பறவையாகி, விலங்காகி, குரங்காகி கடைசியில் மனிதப் பிறவிகளாகப் பரிணமித்தோம்.

அதற்கு வேண்டிய அளவு பலவித தப்புக்கள் நேர்ந்து, தட்டித் தடுக்கி ஒரு சரியான உயிரினமாகப் பரிணமிக்கத் தேவைப்படும் கால இடைவெளி இருந்திருக்கிறது. கோடானு கோடி வருஷங்களுக்குப் பின்தான் நாம் இந்த வடிவத்துக்கு வந்திருக்கிறோம் என்பது அறிவியலாளர்களால் சாட்சியங்களைக் கொண்டு ஒப்புக்கொள்ளப்பட்ட சித்தாந்தம்.

மறுபிறவிக் கருத்துக்களுடன் இதை ஒப்பிடும்போது, ஒரு சில விஷயங்களில் பொருந்துவது அதிசயமே. கீழ்நிலை உயிரினங்களாக இருந்து இருந்து மேல்நிலை உயிரினமாக வளர்ந்தது மனிதர்கள் என்கிற கருத்து சரியே. ஆனால், தப்புப் பண்ணிவிட்டால், மீண்டும் மனிதநிலை இழந்து ஒரு புழுவாகவோ காட்டுப் பன்றியாகவோ பிறப்போம் என்கிற கருத்தை அறிவியல் ஒப்புக்கொள்ளாது. இது ஒரு புத்திசாலித்தனமான பயமுறுத்தல், இதற்கு சமூக இயல்படி காரணங்கள் கற்பிக்கலாம்.

''இற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்'' - என்று பக்தியுடன் பாடும்போத பல பிறவிகள் எடுத்து, அதில் நல்ல உத்தம ஆத்மாக்களாக இருந்து விட்டுத்தான் கடைசியில் மோட்சம் என்கிற கருத்து. இவை அனைத்துமே மனித வாழ்க்கையில் காட்டுமிராண்டியாக இல்லாமல், மனிதர்கள் நல்லதனமாக நடந்துகொள்ள ஏற்பட்ட வற்புறுத்தல்கள், மேலும் இதை யோசித்தால், பலவீனர்களை முரடர்களிடமிருந்து - காப்பதற்காக ஏற்பட்ட ஓர் உத்தி என்றும் யோசிக்க முடிகிறது.

அல்லது மனித வாழ்க்கையின் இறுதியில் வயசாகிப் போவதால் ஏற்படும் சோகத்தையும் சங்கடங்களையும் சமாளிக்க ஒரு சொர்க்கம் என்னும் மறுகோடிப் பிரகாசம் தேவைப்படுகிறது.

ப்ரையன் வைஸ் என்கிற ஒரு மனோதத்துவ டாக்டர் (Brian L Weiless), Many Lives, Many Masters'பல பிறவிகள் பல எஜமானர்கள்' என்கிற சுவாரஸ்யமான புத்தகத்தில் காத்தரின் என்கிற ஒரு பெண்ணின் வினோதமான 'வியாதி'யைப் பற்றி எழுதியிருக்கிறார்.

டாக்டர் வைஸ், ஒரு சம்பிரதாயமான சைக்கோதெராபிஸ்ட் காத்தரினுக்கு அவர் வழக்கம் போலத்தான் ட்ரங்க்விலைசர் ஆண்ட்டி டிப்ரெஸண்ட் மருந்துகளைக் கொடுத்தார். அவள் பயங்கள் தீரவில்லை. அவளை ஹிப்னாட்டிசத் தூக்கத்துக்கு ஆழ்த்தி, தன் இளமைக்கால நினைவுகளைக் கொண்டுவர வைத்தபோது ஓர் ஆச்சரியம் காத்திருந்தது.

காத்தரினின் அண்மைக்கால நினைவுகளில் எந்தவித அதிர்ச்சிகரமான சம்பவங்களும் இல்லை. ஆனால், அவள் இன்னும் பின்னே போய் தன்னுடைய முற்பிறவியின் அதிர்ச்சிகர சம்பவங்களையும் கொண்டுவந்தாள். முதலில் இந்தப் பெண் ஏதோ இட்டுக்கட்டித்தான் சொல்கிறாள் என்று நம்பாமல் இருந்தார் டாக்டர். பின்னர் காத்தரின் பிறவிகளின் இடைவெளிகளிலிருந்தும் சில செய்திகள் கொண்டுவந்த போது, டாக்டர் ஆச்சரியப்பட்டார். அந்தச் செய்திகளில் டாக்டரின் குடும்பத்தைப் பற்றியும் அவருடைய இறந்துபோன மகனைப் பற்றியும் விவரங்கள் இருந்தன. அனைத்தும் சரியான தகவல்கள். காத்தரினுக்கு அவைகளைத் தெரிந்திருக்க சந்தர்ப்பமே இல்லை.
டாக்டர் வைஸ், இப்போது தன் கிளினிக்குக்கு வரும் எல்லா பேஷண்டுகளையும் முற்பிறவிக்கு அழைத்துச்சென்று, அந்தப் பிறவியில் ஏற்பட்ட அதிர்ச்சிகளை மறுபடியும் வரவழைத்து குணப்படுத்துகிறார். இந்தப் புதிய முறையைப் பலர் கேலி செய்கிறார்கள். ஆனால், வைஸ் மிகத் தீவிரமாக முற்பிறவியை நம்புகிறார். அவர் எதும் சாதாரண வைத்தியர் அல்ல... கொலம்பியா பல்கலைக்கழகத்திலும் யேல் மருத்துவப் பள்ளியிலும் படித்து எம்.டி. பட்டம் பெற்றவர். அவரை முற்பிறவியில் நம்ப வைத்த அந்த காத்தரினின் கதைதான் என்ன? ( தொடரும் 1 )

**ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 24**
**( காத்தரின் கண்ட கனவுகள்!- சுஜாதா )**

காத்தரின், டாக்டர் வைஸை வந்து பார்த்தபோது, தன் பயங்களைப் பற்றி விவரமாகச் சொன்னாள்.
மேசைமேல் முழங்கையை வைத்துக்கொண்டாள் படபடவென்று பேசினாள்: "டாக்டர் என் வாழ்க்கை முழுவதுமே பயங்கள்தான். தண்ணீரைக் கண்டால் பயம். இருட்டைக் கண்டால் பயம். மாத்திரை சாப்பிடும்போது தொண்டை அடைத்துவிடுமோ என்று பயம். ஏரோப்ளேனில் போனால் பயம் பயம்,"
"என்ன பயம்?"
"செத்துப்போய்விடுவேனோ என்று. என்னவோ தெரியவில்லை. சமீபத்தில் இந்தப் பயங்கள் அதிகரித்து விட்டன, வீட்டில் தனியாக உறங்க பயமாக இருக்கிறது. யாராவது என்னை தாக்க வருவார்களோ என்று அலமாரிக்குள் கதவை மூடிக்கொண்டு தூங்க முயற்சிக்கிறேன். இரண்டு மூன்று மணிநேரம் தூக்கமே வருவதில்லை. பயம்... பயம்! அதன்பின் அசதி மேற்கொண்டு தூங்கிவிடுகிறேன். கனவு கண்டு எழுந்துவிடுகிறேன். சின்ன வயசில் தூக்கத்தில் நடப்பேனாம். இப்போது மறுபடி அதே பிரச்னை. தூக்கத்தில் எழுந்து நடந்து செல்கிறேன்".
காத்தரின் பேசப் பேச டாக்டர் வைஸ் ஆச்சரியம் எதுவும் அடையவில்லை அவர் இந்த மாதிரி பேஷண்டுகள் பலரைப் பார்த்திருக்கிறார். சுலபமாகச் சரிபண்ண முடியும் என்று எண்ணினார்.
வழக்கம்போல் அவள் சிறுவயது ஞாபகங்களைப் பற்றிக் கேட்டார். அதில் ஏதாவது அதிர்ச்சிகரமான சம்பவம் நடந்திருக்கிறதா என்று பார்க்க. மெள்ள அவள் நினைவை அவள் இளமைக் காலத்துக்குக் கொண்டுசென்றார். அவள் இளமைக் காலத்தில் எதுவும் அதிர்ச்சியளிக்கக் கூடியதாக நிகழவே இல்லை.

நினைக்க நினைக்க அவள் இளமை நினைவுகளின் துண்டுப்படங்கள் ஓடின. ஒருமுறை அவளை, நீச்சல் குளத்தில் டைவ் அடிக்கும் பலகையிலிருந்து எதிர்பாராமல் தள்ளிவிட்டது அவள் ஞாபகத்தில் இருந்தது.
பதினோரு வயதில் அவள் தாய் சற்றே பட்டும் படாமல் இருந்தது அவள் மனதில் பாதித்திருந்தது. இதெல்லாம் ஒன்றும் பெரிய அதிர்ச்சிகள் இல்லை. அதிகம் நண்பர்கள் இல்லை. ஒரு சில நெருக்கமான நண்பர்கள் இருந்தார்கள். கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்தவள். எளிமையான கடவுள் நம்பிக்கை இருந்தது.
பள்ளிப்படிப்பு முடிந்து லாப் டெக்னீஷியனுக்காகப் படித்தாள். சொந்த ஊரிலிருந்து விலகி மையாமி என்னும் நகருக்கு வேலைதேடிச் சென்றாள். அங்கே ஒரு யூத இளைஞனை சந்தித்து காதலித்து மணம் செய்துகொண்டாள்.

இரண்டு குழந்தைகள். சில மாதங்களுக்கு முன் தொண்டையில் ஒரு சிறிய அறுவை சிகிச்சை செய்துகொண்டிருக்கிறாள். அவ்வளவுதான். அவள் வாழ்வில் விபரீதமான சம்பவம் எதுவுமே இல்லை. சம்பிரதாயமான இளமைப்பருவம், சம்பிரதாயமான படிப்பு, சந்தோஷங்கள், பயங்கள், அவ்வளவுதான். ஆபரேஷன் முடிந்து நினைவு திரும்பும்போது மட்டும் மிகுந்த பய உணர்ச்சி ஏற்பட்டிருக்கிறது.
காத்தரின் அந்த நாட்களில் இரண்டு கனவுகள் கண்டாள். அதிலிருந்து ஆரம்பித்தது வினை. கனவில், காரில் ஒரு மரப்பாலத்தைக் கடக்கும்போது பாலம் உடைந்து நீரில் விழுந்து மூழ்குவதாகவும் ஓர் இருட்டறையில் மாட்டிக்கொண்டு தடுமாறுவதாகவும், கனவுகள் திரும்பத் திரும்ப வந்தன. அதன்பின்தான் டாக்டர் வைஸை சந்திக்க வந்தாள்.

டாக்டர் வைஸ் அவளுக்கு பதினெட்டு மாதம் சிகிச்சை அளித்தார். தொடர்ந்து சம்பிரதாய மனோதத்துவ முறைப்படி சிகிச்சை. அவளது பழைய ஞாபகங்களை மறுபடி வரவழைத்து அதில் ஏதாவது காரணம் இருந்தால் இது அபாயமானதல்ல. வெறும் நினைவுத் துணுக்கு என்று காட்டிவிட்டு மெள்ள அவள் பயங்களைப் போக்கும் முறை. இந்த முறை பலரிடம் பயனளித்திருக்கிறது. அதைத்தான் முயன்றார்.
அவள் பயங்கள் விலகவில்லை. கெட்ட கனவுகள் இரட்டிப்பாகத் திரும்பின. பயங்கள், இருட்டைக் கண்டாலும் தண்ணீரைக் கண்டாலும் தொடர்ந்தன.
டாக்டர் வைஸுக்குப் புரியவே இல்லை. இளம் வயதில் இந்த பயங்களுக்கு காரணமே இல்லையே? என்ன இப்படி தொடர்ந்து பயப்படுகிறாள் என்பது விளங்கவில்லை. ஏமாற்றம், இவளை எப்படியாவது குணப்படுத்த வேண்டும் என்கிற வைராக்கியத்தை உண்டு பண்ணியது. அப்போது ஒரு முக்கியமான நிகழ்ச்சி அவள் வாழ்வில் ஏற்பட்டது.
காத்தரினுக்கு எப்போதுமே விமானத்தில் செல்ல பயம். அவள் கணவன் ஸ்டூவர்ட் சிகாகோ நகரத்துக்கு ஒரு மாநாட்டில் கலந்து கொள்ள செல்ல வேண்டியிருந்தது. காத்தரின் தன்னிச்சையாக நானும் வருகிறேன் என்றாள். சிகாகோ நகரில் ஒரு அரும்பொருளகத் தில் புராதன எகிப்திய கலைக் கண்காட்சிக்குச் சென்றாள். காத்தரினுக்குப் பொதுவாகவே புராதன எகிப்திய சரித்திரத்தில் ஆர்வம் உண்டு.
அந்தக் கண்காட்சியில் அவள் பார்த்தப் பொருட்கள் எல்லாம் அவளுக்கு மிகவும் பரிச்சயமானதாக இருந்தன. வழிகாட்டி கைடு தப்பாக ஏதோ சொல்ல, இல்லை அது அப்படியில்லை என்று திருத்தினாள் . அவளுடைய முற்பிறவிப் பயணம் துவங்கியது . ( தொடரும் 2

## **ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 25**
## **("முழுகுகிறேன்... மூச்சு முட்டுகிறது!" - சுஜாதா )**

தான் இருப்பது 1863 என்று காத்தரின் சொன்னபோது டாக்டர் வைஸுக்கு முதலில் குழப்பமாக இருந்தது. 'சரி இன்னும் பல ஆண்டுகள் முன்னே வா, இப்போது என்ன பார்க்கிறாய் சொல்லு?" என்றார்.
"சொன்னேனே... சமையல் அடுப்பு தெரிகிறது. என் பெயர் கிளியஸ்ட்ரா. என் மகள் பெயர் ரேச்சல்."
வைஸ் அதிர்ந்து போனார். அவள் மிகத் தெளிவாகப் பேசினாள். தேதி, உடைகள், மரங்களின் வருணனை எதிலும் குழப்பமே இல்லை. காத்தரின் தொடர்ந்தாள் -"அப்போதுதான் வெள்ளம் வந்தது தப்பிக்க இடம் இல்லை... எங்கும் வெள்ளம். தண்ணீர் மிகக் குளிர்ந்து இருக்கிறது. என் குழந்தையை நான் காப்பாற்ற வேண்டும். முடியவில்லை... முழுகுகிறேன் ! நீரை விழுங்குகிறேன். மூச்சு முட்டுகிறது. என் குழந்தை என்னிடமிருந்து பறிக்கப்படுகிறது."
காத்தரின் இப்போது மெள்ள நிதானமாக மூச்சுவிட்டாள்." படபடப்பு அடங்கி கொஞ்ச நேரம் சும்மா இருந்தாள்.
“மேகங்களைப் பார்க்கிறேன். குழந்தை என்னிடம் இருக்கிறது. கிராமத்தில் மற்றவர்களும் இருக்கிறார்கள். என் சகோதரனைப் பார்க்கிறேன்!"
அவள் சொல்வது எதிலும் பாசாங்கே இல்லை. பொய் சொல்கிறாள் என்று சொல்லவே முடியவில்லை. அவள் பேசிய விதம், அவள் கொடுத்த நுட்பமான விவரங்கள் அனைத்தும் ஒழுங்காக... சீராக... கோர்வையாக இருந்தன.

ஷ்கிட்ஸோப்ரீனியா இருக்குமோ என்று சந்தேகித்தார். இந்த உபாதையில் உள்ளவர்கள் வேறுவேறு குணாதிசயங்கள் கொண்டு வேறு மனிதர்களாகவே மாறுவார்கள்.
காத்தரின் அப்படியில்லை. ஒரே காத்தரின்தான். அவள் சொல்வது எதுவும் கற்பித்ததோ, கற்பனை செய்ததோ இல்லை. பின் அந்த நினைவுகள் யாவை? அது அவள் முன்ஜென்ம நினைவுகள்தானா?
டாக்டர் வைஸுக்கு மறுபிறவி, முன்ஜென்மம் பற்றி எதுவுமே தெரியாது. அவர் அதை நம்புபவரும் இல்லை. அவர் படித்தது அறிவியல். இப்போது அவர் கண்ணெதிரே ஒரு விளக்கமில்லாத மறுபிறவிக்கான சாட்சியங்கள் அத்தாட்சிகள் ! வேறு ஏதாவது ஞாபகமிருக்கிறதா?" என்றார்.
"கறுப்பு லேஸ் என் தலையில் அணிந்திருக்கிறேன். தலை நரைத்திருக்கிறது. 1756-ம் ஆண்டு நான் ஒரு ஸ்பெயின் தேசப் பெண் பெயர் லுயிஸ்ஸா. 56 வயது.
நடனமாடிக்கொண்டிருக்கிறேன். மற்றவரும் நடனமாடுகிறார்கள். ஜுரம் ! நிறைய பேருக்கு ஜுரம். மக்கள் இறந்துபோகிறார்கள். டாக்டர்களுக்கு அது நீரிலிருந்து வந்த வியாதி என்பது தெரியவில்லை. பலர் இறந்துபோகிறார்கள்!"
டாக்டர் வைஸ் சட்டென காத்தரினை உலுக்கி
நிகழ்காலத்துக்குக் கொண்டுவர, தலை வலிக்கிறது என்று சொன்னாள். எல்லாம் அந்த ஜுரத்தால் என்றாள். அந்த ஜென்மத் தலைவலி!
சற்று நேரத்துக்குப் பின் காத்தரின் அந்த வாழ்வில் தான் ஒரு விலைமகள் என்றாள். இதை முன்னால் சொல்ல வெட்கப்பட்டதாகச் சொன்னாள்.
டாக்டர் வைஸ், "இதில் நான் யார்?" என்று கேட்டார்!
"நீங்கள் என் ஆசிரியர். புத்தகங்களிலிருந்து சொல்லிக் கொடுக்கிறீர்கள். உங்களுக்கு வயசாகி தலை நரைத்துவிட்டது உங்கள் பெயர் டயாஜின்ஸ். வருஷம் 1568" என்று மறுபடி ரொம்ப பழைய ஜென்மத்து(?)க்குப் போனாள்.
"இன்று சிகிச்சை போதும்" என்று முடித்துவிட்டார்.
அவள் சென்றதும் டாக்டர் வைஸ் அதைப்பற்றி பிரமிப்புடன் யோசித்தார். காத்தரின் நிச்சயம் அதைக் கற்பனை செய்துதான் சொல்கிறாள் என்கிற தீர்மானத்துக்கு வந்தார். அவர் மனம் மறுபிறவித் தத்துவத்தை ஏற்க முழுவதும் மறுத்தது. டாக்டர் வைஸ் கொலம்பியா பல்கலைக்கழகத்தில் படிக்கையில் மதங்களின் ஒப்பியல் பாடம் இருந்தது. அந்தப் பாடப் புத்தகங்களை எடுத்துப் பார்த்தார்.
பைபிளின் பழைய, புதிய ஏற்பாடுகளில் மறுபிறவியைப் பற்றிய குறிப்புக்கள் ஆரம்பத்தில் இருந்தனவாம். கி.பி. 325-ல் கான்ஸ்டண்டைன் என்ற ரோமானியச் சக்ரவர்த்தி தன் தாய் ஹெலினாவின் விருப்பப்படி புதிய ஏற்பாட்டில் உள்ள மறுபிறவிக் குறிப்புக்களை நீக்கிவிட்டாராம்.
கான்ஸ்டாண்ட்டிநோப்பிள் நகரில் கி.பி. 553-ல் இரண்டாவது கவுன்சில் கூட்டத்தில் அந்தக் குறிப்புக்களை நீக்கியது சரியே என்று தீர்மானித்து, மறுபிறவியைப் பற்றி பேசுவது மதக்குற்றம் என்று தடை செய்யச் சொன்னார்கள். சர்ச்சின் வலுவான பாதிப்பில் மறுபிறவி தத்துவத்தை ஒப்புக்கொண்டால், மானுடர்களுக்குப் பாவமன்னிப்புக்கு அதிக சமயம் கிடைப்பதை அவர்கள் விரும்பவில்லை. என்பதைக் காரணமாகச் சொல்கிறார்கள்.
எப்படியும் ஆரம்ப காலத்தில் மறுபிறவிக் குறிப்புகள் வேதாகமத்தில் இருந்ததாகத்தான் சொல்கிறார்கள். க்னாஸ்டிக்ஸ் (Gnostics) என்று சொல்லப்படும் ஆரம்பகால கிறித்துவ சிறுபான்மையினர், தாங்கள் முன்னால் ஒரு பிறவி எடுத்திருந்ததாகவும் இனியும் பிறப்போம் என்றும் நம்பியிருக்கிறார்கள். பிற்பாடுதான் அந்தத் தத்துவம் திருத்தப் பட்டது. இருக்கட்டும், காத்தரின் மன அமைதி பெற்றாளா? ( தொடரும் 3 )

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 26
## ( கல்லறை சொன்ன கதை - சுஜாதா )

DEATH HAS GOT SOMETHING TO BE SAID FOR IT:
THERE'S NO NEED TO GET OUT OF BED FOR IT;
WHEREVER YOU MAY BE,
THEY BRING IT TO YOU, FREE.
- KINGSLEY AMIS -
LIBQUOTES.COM

அதன்பின் காத்தரினின் பயங்கள் மெள்ள விலக ஆரம்பித்தன. வாரம் தவறாமல் அவள் டாக்டர் வைஸின் க்ளினிக்குக்குத் திரும்பி வந்தாள். ஒவ்வொரு வாரமும் அவள் ஹிப்னாடிசத் தூக்கத்தில் தன் பூர்வ ஜன்மங்களை - நுட்பமாக விவரித்தாள். “பல தேசங்கள், பல மொழிகள், பல காலகட்டங்கள், பல வயசுகள். மெள்ள மெள்ள அவளுக்கு ‘சைக்கிக் பவர்' என்று சொல்லும் மனோசக்தி அதிக மாகியது!” என்று டாக்டர் வைஸ் சொல்கிறார். அவளால் குதிரைப் பந்தயங்களில் ஜெயிக்கும் குதிரைகளை முன்கூட்டியே யூகிக்க முடிந்தது. மறுபிறவியை நம்பாத டாக்டர் வைஸ் அதன் மேல் முழு நம்பிக்கை வைக்கத் துவங்கினார். அவர் குடும்பமே ஏறக்குறைய நம்மூர் சாமியார் குடும்பம் போல ஆகிவிட்டது என்பதைப் தனது புத்தகத்தில் Many Lives, Many Masters' - Brian L Weiless விஸ்தாரமாக எழுதியிருக்கிறார்.

கடைசியில் எல்லாவற்றுக்கும் முத்தாய்ப்பாக காத்தரின், டாக்டர் வைஸின் முன்பிறவியைப் பற்றிச் சொன்னாள்.

"டாக்டர்! உன்னுடைய கல்லறையைப் பார்க்கிறேன்!” என்றாள்.

“என்னுடையதா?”

"ஆம்...!"

"அதில் என்ன எழுதியிருக்கிறது?'

"நோபிள் என்று பெயர் எழுதியிருக்கிறது. 1668 - 1724. அதன் மேல் ஒரு மலர் வைத்திருக்கிறது. பிரான்சிலா, ரஷ்யாவிலா தெரியவில்லை. நீ சிவப்பில் சீருடை அணிந்திருக்கிறாய். ஒரு குதிரையிலிருந்து தள்ளப்பட்டு விழுந்துவிட்டாய். கையில் தங்க மோதிரம். அதில் ஒரு இலச்சினை .."

காத்தரின், டாக்டர் வைஸ் - இருவரின் பூர்வஜன்ம உரையாடல்கள் அதனுடன் முடிந்தன.

பின் அவள் பயங்கள் அனைத்தும் விலகி, நார்மலாகிவிட்டாள்.

காத்தரினின் இந்தக் கதையை நான் கொஞ்சம் விவரமாக கொடுத்ததற்குக் காரணம், மேற்கத்திய நகர நாகரிகத்திலும் பலர் மறுபிறவியில் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள் என்பதை உணர்த்தவே. இந்து பௌத்த மதங்களில் இயல்பாகவே மறுபிறவிக் கருத்துக்கள் இருப்பதால், தம் நாடுகளில் அந்த நம்பிக்கைகள் அதிகம் இருப்பதில் ஆச்சரியம் இல்லை. அவர்கள் மதத்தில் அந்த கருத்துக்கள் நீக்கப்பட்டு விட்டன.

இருந்தும் நவீன அமெரிக்காவில் குறிப்பாக

கலிபோர்னியாவில் இந்த மாதிரி தத்துவங்களில் நம்பிக்கை கொண்டவர்கள் அதிகம் இருக்கிறார்கள் என்பதுதான் அதில் ஆச்சரியம். இதில் எனக்கு நம்பிக்கை இருக்கிறதா என்று கேட்கலாம். இல்லை. மறுபிறவித் தத்துவத்தின் ஆதார காரணங்களை ஆராய்வது எனக்கு சுவாரஸ்யமாக இருக்கிறது. அவ்வளவே!

மறுபிறவிக்கு நாம் முன்பு சொன்னதுபோல் ஒரு தேவை இருக்கிறது. நாம் இறந்தபின், அப்படியே காணாமற் போய்விடப் போவதில்லை. ஏதோ ஒரு தொடர்ச்சி இருக்கப் போகிறது என்கிற எண்ணம். ஒரு சகமான எண்ணம். மீண்டும் வந்து நாம் மிச்சம் வைத்த காரியங்களை முடிக்கலாம். மிச்ச வைத்த ஆசைகளை நிறைவேற்றலாம் என்கிற கருத்து!

ரே-ப்ராட்பரியின் அழகான சிறுகதையில் ஒரு மாணவன் தன்னை விட வயதில் மூத்த ஆசிரியை மேல் மையல் கொள்கிறான். அவளைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்புகிறான். அவன் சிரித்து, " பாரப்பா ! இதை சமூகம் ஒப்புக்கொள்ளாது! என்று சமாதானப்படுத்துகிறாள்.

அதன்பின் இருவரும் பிரிந்துவிடுகிறார்கள். வேறு ஊருக்கு வந்து சில வருஷங்கள் கழித்து, ஒரு பெண்ணைக் காதலித்துக் கல்யாணம் செய்துகொள்கிறான்.

மனைவியிடம், தன் சிறுவயதில் செய்த பைத்தியக் காரத்தனத்தை விவரிக்கிறான். அவள் புன்னகைக்கிறாள். ஒருமுறை அவன் தான் படித்த பள்ளிக்குத் திரும்பச் செல்கிறான், அந்த டீச்சரைப் பற்றி விசாரிக்கிறான். 'அவள் கல்யாணம் பண்ணிக் கொள்ளாமலேயே இறந்துவிட்டாள்' என்று சொல்கிறார்கள். அவள் கல்லறையைத் தேடி மனைவியுடன் செல்கிறான்.

கல்லறையில் அந்த டீச்சர் பிறந்த தேதியும் இறந்த தேதியும் பொறித்திருக்கிறது.

அவனுடன் இருக்கும் மனைவி. 'இதில் ஆச்சரியம் பார்த்தீர்களா? என்றான்.

"உங்க டீச்சர் இறந்த தேதியில்தான் நான் பிறந்திருக்கிறேன்" என்கிறாள்.

கிங்ஸ்லி ஏமிஸ்ஸின் கவிதை வரிகள் எனக்கு மிகவும் பிடித்தது

"மரணத்துக்காக படுக்கையை விட்டு எழுத்திருக்கத் தேவையில்லை எங்கிருந்தாலும் இலவசமாக கொண்டு தருவார்கள் !" என்கிறார்.

Death has got something to be said for it

There is no need to get out of bed for it

Wherever you may be

They bring it to you free

இம்மாதிரி வேடிக்கை பண்ணுவதற்குக் காரணம்? பயத்தை மறைக்கத் தான்! (முற்றும்)

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 27
## ( உயிர் ஒரு தொடர்கதை! சுஜாதா )

கோமாவில் இருப்பவர்கள் இறந்தவர்களா இருப்பவர்களா என்று யோசிக்கும்போது சில உண்மைகளை நாம் மனதில் கொள்ள வேண்டும். அப்போதுதான் 'உயிருடன்' என்பதற்கு அர்த்தம் விளங்கும்.

கோமாவில் இருப்பவர்கள் பலருக்கு நினைவு திரும்பி விடுகிறது. நவீன மருத்துவத்தின் சாகசத்தால் ஒரு நாளோ ஒரு வருஷமோ அவர்களை பெட்சோர் (மரணப்படுக்கை) வராமல் போற்றிப் பாதுகாத்தால் விழித்தெழுந்து விடுகிறார்கள்.

கோமா என்பது சாதாரணமாக மூளையில் ரத்தக்கசிவால் காயத்தால் ஏற்படுகிறது. காயம் ஆறி அல்லது ரத்தக் கட்டிகள் கரைந்ததும், நினைவு திரும்புகிறது. அப்போது அவர்கள் புதிய மனிதர்களாக நினைவு திரும்புகிறார்களா? இல்லை..பழைய ஞாபகங்கள் பத்திரமாகத்தான் இருக்கின்றன.

"என்ன ராமு சார், நான் யார் என்று தெரிகிறதா?" என்று மாரைப் பிறாண்டிக் கேட்டால், மெள்ளத் தலையசைத்து, "நீ சேஷாத்திரி தானே, நீ எனக்கு ஆயிரம் ரூபாய் கடன் பாக்கி தரணுமே. ஞாபகம் இருக்கா!" என்று நம்மிடமே கேட்கும்போது அவர் பழைய ராமுதான். ஆபரேஷனிலோ கோமாவிலோ நினைவிழந்து திரும்புவர் அந்த இடைவெளியில் செத்துப்போவதில்லை. பார்க்கப்போனால் தினம் தூங்கும்போது எல்லோருமே கொஞ்சம் செத்துப்போகிறோம்.

ஆதலால் உயிர் என்பது என்ன என்று ஆதாரமாகச் சிந்திக்கும் போது, நம் ஞாபகங்கள்தான் உயிர். கோமாவில் இருப்பவர் செத்துப் போவதில்லை. ஆனால், அம்னீஷியா, அல்ஷைமர் போன்ற வியாதிகள் வந்து மொத்த நினைவையும் இழக்கும் ஒருவர் உயிருடன் இருந்தாலும், செத்தவர் ஆகிறார்.
நினைவுகள் மட்டும் இல்லை. குணாதிசயங்கள், முகஜாடை, கோபம்,சிரிப்பு, கன்னத்தில் விழும் குழி எல்லாமே உயிரின் அடையாளங்கள். அவைகள் தொடரும்வரை உயிர் தொடர்கிறது.
நாம் எல்லோரும் ஆதிகாலத்து உயிரின் தொடர்ச்சிகள் என்பது நவீன அறிவியலில் மாலிக்யுலர் பயாலஜியில் டி.என்.ஏ. சரத்தை அலசும்போது, கண்டுபிடித்திருக்கிறார்கள்.
நம் வம்ச அடையாளங்கள் அனைத்தும் நம் டி.என்.ஏ. சரத்தில் க்ரோமோசோம்களில் இருக்கின்றன. அதனால், யாரும் சாவதில்லை. ஏதோ ஒரு டி.என்.ஏ-வின் தொடர்ச்சியாகத் தொடர்ந்து வாழ்கிறோம் என்கிற கருத்து எனக்கு மறுபிறவிக் கருத்தை விட வசீகரமாக இருக்கிறது.
இந்த ரீதியில்தான் ஒரு புதிய இயலைக் கொண்டு வந்திருக்கிறார்கள்.
"நம் உடலில் இருக்கும் ஞாபக சக்தியைக் காப்பாற்றும் சாதனம் கெட்டுவிட்டாலும், நம் உள் இருக்கும் 'நான்' அதாவது ஆன்மா நம் உடலுக்குள் இருந்துகொண்டு வருகிறது. அதனால், நாம் உயிருடன் இருக்கிறோம். ஆன்மாவுக்கு எப்போதும் குறை ஏற்படுவதில்லை. அது அழிவதில்லை"
இந்த ஆன்மாவுக்கு அழிவில்லை என்கிற கருத்து டி.என்.ஏ. செய்திக்கு அழிவில்லை என்கிற கருத்துடன் நெருக்கமாக வருகிறது.
'நம் ஒவ்வொருவர் டி.என்.ஏ.-யிலும் ஆதிமுதல்வனின் டி.ஏன்.ஏ.வின் செய்தியின் ஒரு துணுக்கு என்பது இந்த நூற்றாண்டின் மிகப்பெரிய அதிசயம். Dawson-ன் Selfish Gene என்கிற புத்தகத்தில் இதை விவரமாகப் பார்க்கலாம். அதனால் நாம் இறக்கும்போது, நம் தொடர்ச்சி நம் குழந்தைகளிடம் தொடர்கிறது.
இதுதான் அறிவியல் ரீதியான மறுபிறவி.
எவல்யூஷன் என்னும் பரிணாமத் தத்துவத்தின்படி மனிதன் ஓரிரவில் சிருஷ்டிக்கப்படவில்லை. படிப்படியாகத்தான் பல்லாயிரம் பலகோடி நூறாயிரம் வருஷங்களாக மாறிமாறி உயர்ந்து இந்த உன்னதம் பெற்றிருக்கிறோம் என்று சொல்கிறவர்களின் பக்கம்தான் அறிவியல் சாட்சியங்கள் உள்ளன.
இதை நம்பும்போது, உயிரின் தொடர்ச்சி, மிருகங்களுக்கும், சுலபமாக நீட்டப்பட்டு நம்மை ஒரு அனாதி காலத்து பாக்டீரியா வரை தொடர் சங்கிலியை பின்னோக்கி அறிய முடியும்.
அதனால், பலவகைப் பிறப்புக்கள் பிறந்துவிட்டுக் கடைசியில் மனித உருவத்துக்கு வந்திருக்கிறோம் என்று சொல்வதில் அபத்தமில்லை. அடுத்த பிறவியில் பாவ புண்ணியங்களுக்கு ஏற்ப மண் புழுவாகவோ கிளிண்டனின் பேரனாகவோ பிறப்போம் என்று சொல்வதுதான், தூய தமிழில் சொன்னால், 'உட்டாலக்கடி அறிவியலுக்கு சரிப்படவில்லை.

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 28 தொடர் குறித்து ர.ரா

"ஆன்மாக்களின் நிதர்சனங்கள் " என்கிற இந்த ஆய்வு தொடரின் பதிவுகள் குறித்து நண்பர்கள் வெகுவாக பாராட்டினார்கள். சில நண்பர்கள் ஆவி, பேய், மறுபிறப்பு என்று மூட நம்பிக்கையைப் பற்றியா எழுதுறது ? என்று கடும் விமர்சனத்தையும் போனில் கதைத்தார்கள். போன் பேச்சின் கடைசியில் "இருந்தாலும் இந்த தொடரின் பதிவுகள் சூப்பர் "
இதிலே கண்டனத்தை கணக்கில் எடுப்பதா ? பாராட்டைப் பார்த்துப் பரவசப்படுவதா ? தெரியவில்லை
"குதிரை மீது எனக்கு அலாதிப் பிரியம் உள்ளது சார் . கனவுல கூட அழகான பறக்கும் குதிரை, கொம்பு முளைச்ச குதிரையெல்லாம் வருது. எங்க தோட்டத்திலே மேயுது... அதற்காக குதிரைப் பந்தயத்தில் பணம் கட்டகிறவன் அல்ல. குதிரை ஓடுவதையும், அது கனைப்பு கூட எனக்கு பரவசத்தைக் கொடுக்கிறது. உங்க பதிவுகளைப்

படிக்கும்போது போன பிறவியில் குதிரையோட்டி ஜாக்கியாக இருந்திருப்பேனோ " என்று ( பெயர் குறிப்பிட வேண்டாம் ) நண்பர் போனில் அரை மணி நேரமாக குதிரை ஓட்டுகிறார்
நண்பர் Mohamed Farook , " விவேகானந்தர் சொல்லட்டும். முற்பிறவி என்பது குறித்து நம் அகீதா என்ன ? " என்று சற்று கோபாகமாக கேட்டு பின்னூட்டமிட முடிகிறது .
இதையெல்லாம் சேர்த்து புத்தகமாக போட்டால் என்ன ? என்று ஒரு நண்பர் கேட்க, அந்த பின்னூட்டத்தை நண்பர் Vali Poakkan Parathesi அவர்களுக்கு Tag செய்றேன்.
" எட்டாம் நம்பர் வார்டு சிஸ்டர் "பதிவை இரவு நேரத்திலே படித்துவிட்டு தூங்கும்போது, சிஸ்டர் பக்கத்தில் நின்று கவனிக்கிற மாதிரி ஒரு பிரமை. ஆய்த்துல் குர்ஸி 11 தடவை ஓதி நெஞ்சில் ஊதினேன்" என்று பெண் நண்பர் ஒருவர் கூறுகிறார்.
" ஷிகிட்ஸோப்ரீனியா ன்னு ஏதோ பயம் பற்றிய நோய் சொன்னீர்களே அந்த நோய்க்கு என்ன மருந்து சாப்பிட வேண்டும் ? " என்று அதே பெண் நண்பர்தான் கேட்டார்.
"நல்ல மனோதத்துவ மருத்துவரைப் பாருங்கள் அவர் பரிந்துரைக்காத எந்த மாத்திரையும் சாப்பிடாதீர்கள் " சொன்னேன்.
" இந்தப் தொடரை இப்போதைக்கு நிறுத்தி விடாதீர்கள். தொடர்ந்து எழுதுங்கள் " இது மாதிரி பல நண்பர்கள் கேட்டுக் கொண்டார்கள்.
" சார் , மறுபிறவி கேஸ் ஏதாவது நீங்கள் பார்த்திருக்கீங்களா ? பார்க்க வேண்டுமென்றால் அட்ரஸ் கொடுங்க நேரில் வர்றேன். ஏன்னா நானே ஒரு மறுபிறவி கேஸ்தான் " என்று ஒரு நண்பர் கலாய்க்கிறார்
"வேற்றுகிரக வாசிகள் பற்றியும் எழுதுங்கள் அவர்களின் ஆன்மாக்கள் பற்றியும் சொல்லுங்கள்" என்கிறார்கள்
ஆன்மாக்களின் நிதர்சனங்கள் என்கிற இத்தொடரின் முதல் பதிவிலேயே சொல்லி விட்டேன். ஆன்மாக்களைப் பற்றி மற்ற மதங்களில் சொல்லப்பட்டிருப்பது, தத்துவஞானிகள், மதத் தலைவர்கள்,எழுத்தாளர்கள், அவர்கள் எழுதிய புத்தகங்கள் என்று இந்த தொடருக்கு பல ஆதார விஷயங்களையெல்லாம் கருத்தில் கொண்டு தொகுத்து எழுதியுள்ளேன்.
எந்த தொடர் பதிவுகள் எழுதுவதாக இருந்தாலும் ஓரளவு முன்னேற்பாடுகள் செய்துதான் எழுதுவது வழக்கம் .ஆனால் இந்த தொடர் ஒரு பதிவு எழுதும் போதே அடுத்தப் பதிவில் இதைச் சொல்ல வேண்டும், அதைச் சொல்ல வேண்டும் என்று அவ்வப்போது மனநிலை மாறிக்கொண்டே இருக்கிறது.
உடனே இதெல்லாம் ரூஹானித்தின் வேலை என்று நீங்கள் எண்ணி விடாதீர்கள் . ரூஹானித்தைப் பற்றியும் , ஜின் சேட்டைப் பற்றியும் நிறைய சேதிகள் இருந்தாலும், அதையெல்லாம் இங்கு சொல்லவில்லை.
உங்களுக்கு தெரிந்த ஆன்மா , மறுபிறப்பு பற்றி ஏதாவது தெரிந்தருந்தால், பின்னூட்டத்தில் சொல்லுங்கள். அதை எடுத்து முன்னூட்டத்தில் உங்கள் பெயரிலேயே பதிவு செய்கிறேன்.
ஆக மொத்தத்தில் இது என் ஆய்வு அவ்வளவே . மற்றப்படி என் கொள்கை கோட்பாடான கருத்துக்கள் அல்ல. ஆன்மாக்களைப் பற்றி சொல்லும் சேதிகள், மறுபிறப்புப் பற்றிய கதைகள், கட்டுரைகள், மறுபிறப்பாளர்களின் கனவுகள் என்று இவைகளெல்லாம் ரொம்பவும் சுவாரசியமாக எனக்குப் பிடித்துப்போகிறது. அதனால தொடர்ந்து எழுதுறேன்.

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 29
## ( இறப்பு என்பது முற்றுப் புள்ளியா..? சுஜாதா )

சாவு என்பது என்ன என்கிற கேள்வி உபநிஷத் காலத்து நசிகேதனிலிருந்து முந்தாநாள் வரை மனித சிந்தனையை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் விஷயம். இதற்குப் பதில் தெரிந்துவிட்டால் வாழ்க்கையில் சுவாரஸ்யம் போய்விடும். மேலும் செத்த பிறகு என்ன என்று கண்டுபிடிக்கிறதுக்கு முதற்கண் செத்துப்போவதைத் தவிர வேறு மார்க்கமில்லை. அதுதான் சிக்கல்.

பல பேர் சொர்க்கம். நரகம், அப்படி இப்படி என்று ஜல்லியடி பண்ணிக்கொண்டு பிழைப்பை நடத்திக் கொண்டிருக்கிறார்கள்.உண்மை என்னவென்றால் யாருக்கும் திட்டவட்டமாகத் தெரியாது.

2500 ஆண்டுகளுக்கு முன் உர் என்னும் சுமேரிய நகரத்தில் ராஜா இறந்துபோனபோது அருகே பாடிகார்டுகளும் தேரோட்டிகளும் அழகழகான பெண்களும் ஆளுக்கொரு மண்கோப்பை வைத்துக் கொண்டு ஒரு தொட்டியில் இருந்த விஷத்தை ஒரே சமயத்தில் ரொப்பிக்கொண்டு 'ராஜாவே போய்விட்டார். அவரோடு நாமும் போவோமே' என்று மடக்கென்று சிரித்துக்கொண்டு குடித்ததாகத் தகவல் இருக்கிறது. தொல்பொருள் ஆராய்ச்சி சாட்சியாக. இது நிஜமோ இல்லையோ,

1978-ல் தென்அமெரிக்கா கயானா தேசத்தில் காட்டின் மத்தியில் ஜேம்ஸ் ஜோன்ஸ் என்னும் போதகர் ஒலிபெருக்கி மூலம் தன் ஆயிரம் சீடர்களிடம் பேசி, “வாழ்வில் இனி பிரயோசன மில்லை. நாமெல்லோரும் மீண்டும் சந்திப்போம். எல்லாரும் அவரவர் ப்ளாஸ்டிக் கோப்பைகளை நிரப்பிக்கொள்ளுங்கள்" என்று ஆணையிட,

தொட்டியில் இருந்த சயனைட் விஷயத்தை அனைவரும் மாந்திக் குடித்த மகா தற்கொலையை இன்னும் சமூக மனவியலாளர்கள் அலசிக்கொண்டிருக்கிறார்கள். 912 பேர் விஷமருந்தி இறந்தனர்.

இந்த இரண்டு சம்பவத்தையும் இணைப்பது சாவுக்குப் பின் ஏதோ தொடர்கிறது என்கிற நம்பிக்கையே, விஞ்ஞானம் சொல்வது ரொம்ப சிம்பிள், நாமெல்லாரும் பாஸ்பரஸ், கார்பன், நைட்ரஜன், ஹைட்ரஜன்தான். இறந்த பின் நம் எண்ணங்கள் அனைத்தும் செத்துப்போய் எரிந்தோ புதைந்தோ மறுபடி கார்பன், பாஸ்பரஸ், இத்யாதி ஆகிவிடுகிறோம். காற்றிலும், சேற்றிலும் கரைந்துவிடுகிறோம்.இறந்த பின் 'நாம்' என்பதன் மிச்சம் ஏதும் இருப்பதில்லை.

ஆனால் எல்லா மதங்களும், இறந்ததின் நம் ஆத்மா, 'ஸோல்'

என்று ஏதாவது தொடருகிறது என்பதை நம்புகிறது கிரேக்க, எகிப்திய, கெல்டிக், முஸ்லிம், யூத... இந்துவோ கேட்கவே வேண்டாம். எல்லா பல்வேறு ஐந்துக்களாகப் பிறந்து கொஞ்சம்கொஞ்சமாக ஸ்டேட் பாங்க் ஊழியர் மாதிரி ப்ரமோஷன் பெற்று கட்டக் கடைசியில் போன ஜன்மத்தில் கெட்ட காரியங்கள் பண்ணாமல் உத்தமி/மனாக இருந்தால் சொர்க்க பிராப்தி, அங்கே கின்னர கிம்புருடர்களுடன் ரம்மியாடலாம் என்ற எளிய சிந்தனை,

எகிப்தியர்கள் 'கா' என்கிறார்கள். நாம் ஆத்மா என்கிறோம் கிறிஸ்தவர்கள் 'ஸோல்' என்கிறார்கள். பழைய ஏற்பாட்டில் எலிஜாவும், புதிய ஏற்பாட்டில் ஜேம்ஸும் திட்டவட்டமாக ஆத்மா என உயிரையும் உடலையும் பிரித்துப் பேசுகிறார்கள்.

எனவே, உயிரின் தொடர்ச்சியைப் பற்றி யாரும் சந்தேகப்படவே இல்லை. அவர்கள் கவலை எல்லாம் நம் ஆத்மாவை அடைய நல்ல காரியங்கள் பண்ணுகிறோமா இல்லையா என்பதே.

நியண்டர்தால் மனிதனின் காலத்திலிருந்து மனிதர்கள் இறந்து போன பின் புதைக்கும் வழக்கம் இருந்திருக்கிறது. காரணம் என்ன? நைஜீரியாவில் யானைகள் கூட இறந்தவைகளைப் புதைக்கின்றனவாம். ஏன் என்று யானைகளைத்தான் விசாரிக்க வேண்டும்.

மனிதன் புதைப்பதற்குக் காரணம், புதைத்த இடத்திலிருந்து புதிய உயிர் பிறக்கும் என்பதோ, ஏதாவது ஒரு தருணத்தில் அதன் ஆத்மா வந்து சேரும் என்பதோதான்.

இந்துக்களைப் பொறுத்தவரை உடல் என்பது சட்டை, உயிர் பிரிந்த பின் கழட்டிப் போட வேண்டிய சட்டை. ஆனால் எல்லோரும் ஆத்மா இருப்பதாகத்தான் நம்புகிறார்கள். விஞ்ஞானிகளைத் தவிர. இந்தக் கேள்விக்கு அதனால் இரண்டுவித பதில்கள் கிடைக்கின்றன. விஞ்ஞானம் தரும் பதில், மதம் தரும் பதில்.

விஞ்ஞானம் இறப்பு என்பது முற்றுப்புள்ளி என்கிறது. மதம் அது ஒரு கால்புள்ளி அல்லது அரைப்புள்ளி. அதன் பின்னும் வாக்கியம் வேறு வடிவில் தொடர்கிறது என்கிறது. இதில் எதை நம்புவது என்று உங்களுக்கு வியப்பாக இருக்கும்போது கொஞ்சம் இவ்வாறு யோசித்துப் பாருங்கள். செத்தபின் என்ன என்று தெரிந்து கொள்வதால் என்ன லாபம்?

நான் செத்த பின் நானாக இருந்தால் தான் எனக்கு பிரயோசனம். என் மூளை, என் புத்தகங்கள், என் லேசான முதுகெரிச்சல்கள் எல்லாம் இருந்தால்தான் நான் நானாக இருக்க முடியும். செத்தாலும், ஆத்மா தொடர்ந்து பாஸ்னியாவிலோ இந்தோனேசியாவிலோ அல்லது வெனிஸ் நகரத்தில் ஒரு படகோட்டியாகவோ பிறப்பதில் அர்த்தமில்லை.

நான் நானாகவே தொடர வேண்டும். அதற்கு என்னை அறிந்தவர்கள் வேண்டும். உறவினர்கள், என் வாசகர்கள் வேண்டும். முத்தாரம் வேண்டும். கட்டுரை அனுப்பினால் அதைப் பற்றி விமரிசிப்பவர்கள் வேண்டும். தமிழ் வேண்டும். அதெல்லாம் இல்லாவிடில் உயிர் என்பது தொடர்ந்தால் என்ன, முடிந்தால் என்ன? எனவே சாவு என்பது கொஞ்சம் யோசித்துப் பார்த்தால் நம் நினைவுகளின் அழிவு.

உலகத்தில் மிகக் கொடிய வியாதி அல்ஸைமர்ஸ் டிஸீஸ் என்பது. நம் ஞாபக செல்கள் மெல்ல மெல்லப் பழசாகி நம் நினைவுகளை அழிப்பது. அதுதான் சாவு.

அதற்குள் எமிலி டிக்கின்டிஸன் என்னும் அற்புதமான அமெரிக்க கவிதாயினி சொன்னதுபோல்

"ஒரே ஒரு இதயம் முறிவதை
என்னால் நிறுத்த முடிந்தால்
நான் வாழ்ந்தது வீணல்ல.
ஒரே ஒரு வாழ்வின் வேதனையைக்
குறைக்க முடிந்தால் அல்லது
கீழே விழுந்த ஒரு குருவியை
அதன் கூட்டுக்குத் திருப்பினாலே
நான் வாழ்ந்தது வீணல்ல."

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 30
## ( லாமாக்களின் (Lamas) மறுபிறப்பு )

ஆசையே மறுபிறப்புக்கு காரணமாக அமைகிறது என்கிறது ரிக்வேதம்.

'ஆசை அற்றவர் நிர்வாணம் எய்துகிறார், மற்றவர்கள் மீண்டும் மீண்டும் பிறப்பெடுப்பார்கள்' என்கிறது தம்மபதம்.

தலாய் லாமா (Dalai Lama) என்பது கெலுக் (கெலுக்பா) அல்லது மஞ்சள் தொப்பி என்ற திபெத்திய புத்த மதப்பிரிவின் தலைமை லாமாவின் பதவியைக் குறிக்கும் பெயராகும்.

இது தலாய் (கடல்) என்ற மங்கோலிய சொல்லும், லாமா (திபெத்தியம் :ஆசான், குரு) என்ற திபெத்திய சொல்லும் இணைந்த கூட்டாகும்

திபெத்திய மொழியில் "லாமா" என்னும் சொல் "குரு" என்னும் வடமொழிச் சொல்லுக்கு இணையானது என்று இன்றைய தலாய் லாமா விளக்கம் தருகிறார்.

திபெத் ஒரு ஆன்மிக நாடு. இந்து, பௌத்த, சென், சூஃபி, தந்திரா (Tantra) ஞானிகள் வாழ்ந்த பூமி அது. அங்கு லாமாக்களைத் தெரிவு செய்யும்போது ஒருவர் தம் பிரக்ஞை (consciousness) அற்ற மனதை அறிந்துகொள்ளக் கூடியவராக இருந்தால்தான் லாமாக்களில் ஒருவராகச் சேர்த்துக் கொள்ளப்படுவார். அவர்களால்தான் தமது மனதை தம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரமுடியும். அவர்களை யாராலும் செய்யவும் முடியாது.

மனோவசியம் சாதாரண நனவிலி மனதில்தான் செயற்படும். தம் நனவிலி மனதைக் கட்டுக்குள் வைத்திருப்பவரை ஒன்றும் செய்யமுடியாது. அவர் தனது நனவிலி மனதை உணர்ந்துகொண்டவராக இருப்பதால் அவசியமற்ற குப்பைகள் அங்கு தங்காது. அதனால் ஆத்மா ஒளிமயமானதாக மாறிவிட்டிருக்கும்.. அப்படிப்பட்ட மனதில் எந்தக் கருத்தையும், தூண்டுதலையும் பிறரால் விதைக்க முடியாது.

ஒருவர் லாமா ஆவதற்கு அவருடைய நிகழ்கால வாழ்வை மட்டுமல்லாமல் அவருடைய முற்பிறவிகளையும் ஆராய்ந்து பார்ப்பார்கள். அவருக்கு மிக நீண்ட ஆன்மிகப் பயிற்சி இருக்கவேண்டும். ஒவ்வொரு தலைலாமாவும் தம் முன் வாழ்ந்த லாமாக்களின் ஆத்மாக்களைச் சுமந்து திரிபவர்களாக இருப்பார்கள்.

ஒரு லாமா இறக்கும்போது ஒரு இரகசிய அடையாளத்தை விட்டுச் செல்வார். அவர் அடுத்த பிறவியில் எப்படி எங்கே இருப்பார் என்பதை அதை வைத்துத்தான் தெரிந்துகொள்ள வேண்டும்.

அவர் சொல்லிவிட்டுப் போன அடையாளங்கள் உள்ள குழந்தையைத் தேடிக் கண்டு பிடிப்பார்கள். கடுமையான சிக்கலான காரியம் இது. முரசறைந்து அந்த நாடு முழுவதும் அறிவித்துவிடுவார்கள். அந்த அடையாளங்கள் மட்டும் நாட்டு மக்களுக்குத் தெரிவிக்கப்படும்.

அந்த அடையாளம் உள்ள குழந்தை தம் வீட்டில் இருந்தால் தலைமை மடாலயத்திற்கு அறிவிக்க வேண்டும். அதைத் தெரிந்துகொண்ட 'லாமாக்கள் அங்கு சென்று பல சோதனை நடாத்துவார்கள். அவர்கள் கேட்கும் வினாக்களுக்கு விடையளிக்கும் குழந்தையை அடுத்த வாரிசாகத்
தேர்ந்தெடுப்பார்கள்.

லாமாக்களின் குழு அக்குழந்தையைப் பல சோதனைகளுக்கு உள்ளாக்கும். அந்தக் குழந்தையின் நனவிலி மனதை யாராலும் மனோவசியம் செய்யமுடியாது என்பதை உறுதிப் படுத்திக்கொள்வார்கள். மறுபிறப்புக் கோட்பாட்டில் லாமாக்கள் உறுதியானவர்கள்.

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 31
## ( மாயன்களின் மறுபிறப்பு )




மாயா நாகரிகம் என்பது பண்டைக்கால மத்திய அமெரிக்க நாகரிகம் ஆகும். இப்பகுதி,தற்காலத்தில் இருக்கும் மெக்சிகோ, குவாத்தமாலா, ஹொண்டுராஸ்
போன்ற நாடுகள் விரவியிருக்கும் மத்திய அமெரிக்கப் பகுதிகளை உள்ளடக்கியது

கி.மு. 2600 வாக்கில் மாயன் நாகரிகம் தோன்றியது. மாயன் இனத்தவர் கணிதம், எழுத்துமுறை, வானியல் போன்ற துறைகளிலெல்லாம் மேம்பட்டிருந்தனர். மிக விசாலமான, நுணுக்கமான கட்டிடக்கலை மாயன் இனத்தவரின் சிறப்பாகும்

கொலம்பசுக்கு முந்தியகால அமெரிக்காவின் முழு வளர்ச்சிபெற்ற ஒரே எழுத்து மொழியைக் கொண்டிருந்தது இந்த நாகரிகத்தைச் சேர்ந்த மக்களே.

" An over view of the Mayan World "என்ற நூல் மாயன்களின் மறுபிறப்பு நம்பிக்கைகள் பற்றிய சில தகவல்களைக் கூறுகிறது.

AN OVERVIEW OF THE MAYAN WORLD

WINAMACAN FOLGATEC AND THE MEGA VERDE ANASAD COLTURES

ஒருவர் வாழ்ந்த முறையில் மறுபிறப்பு அமையும் என்கின்றனர் மாயன் (Mayan) இனத்தவர்கள். தென் அமெரிக்காவிலுள்ள பூர்வீகவாசிகளிடம் மறுபிறப்பைப் பற்றி பல தகவல்களை அனுபவ ரீதியாக கூறுகிறார்கள். மாயன் (Mayan) இனம் முழுமையாக மறுபிறப்புக் கோட்பாட்டை மையமாக வைத்தே தங்களது கலாச்சாரம், வழிபாடுகளை அமைத்துள்ளார்கள். மய (Maya) இனம் பெரும்பான்மையாக மெக்சிக்கோ, குவாத்தமாலா, எல்சல்வடோர் ஆகிய நாடுகளில் வாழ்ந்துள்ளார்கள்.

இவர்கள் 'முற்பிறப்பு, மறுபிறப்பு, தொடர்பிறப்பு' இவற்றில் நம்பிக்கை உடையவர்கள். வாழும் காலத்தில் ஒருவரது வாழ்ந்த முறையில் அவரது மறுபிறப்பு அமையும் என்பதே மய இனத்தின் பல ஆயிரம் வருடங்களான நம்பிக்கை.

மாயன் மொழி (Mayan Language), மாயன் மதம் (Mayan Religion), மாயன் கலாச்சாரம் (Mayan Culture), அறிவியல் என எல்லாவற்றையும் உடைய முதல் நாகரிக மக்கள் இவர்களாகும்.

எகிப்துக்கும், கிரேக்கத்திற்கும் கணிதம், வானியல், கட்டடக்கலை கொண்டு சென்றவர்கள் இவர்களே! எகிப்தின் பிரமிடுகளில், மம்மிகளில் மாயன்களின் கருத்தியல் கோட்பாடுகளும் பின்பற்றப்படுகிறது .

ஆன்மா நித்தியமானது என்ற கருத்துடையவர்கள்:

மாயன் இனத்தினர் ஆன்மா நித்தியமானது, அது மீண்டும் மீண்டும் பிறப்பெடுக்கும் என நம்புகின்றனர். நல்ல செயல்கள் அதாவது நன்மை செய்தவர்கள் இறந்தபின் அவர்களது 'ஆன்மா'வானது சீபா (Ceiba) மரத்தில் சிறிது காலம் தங்கி நிறைவாக உணவு உட்கொண்டு அமைதியாகவும், ஆனந்த மாகவும் இருந்து மறுபிறப்பை அடைகிறது என்கின்றனர்.

தீமையான செயல்களில் ஈடுபட்டவர்கள் மெட்னல் (Metnal) அதாவது நரகலோகம் சென்று பூதங்களின் தலைவனான ஹன் ஹோ (Hun-Hau) வின் கீழ் இயங்கும் பூதங்களின் உத்தரவுகளுக்குக் கட்டுப்பட்டு பணியாற்றித் துன்பம் அனுபவித்து மீண்டும் அந்த ஆன்மா மறுபிறப்பெடுக்கும் என்கின்றனர்.

இறந்தவர்களின் ஞாபகமாகக் குடும்பங்களில் ஐப்பசிமாதம் (October 31) முப்பத்தோராம் திகதி, கார்த்திகை (November 1st, 2nd) முதலாம், இரண்டாம் திகதிகளில், ஒவ்வொரு வீடுகளிலும் இறந்தவர்களுக்காக நல்ல ஆகாரங்கள் சமைத்துப் படைக்கிறார்கள். சிறிது நேரம் வழிபாடும், பிரார்த்தனையும் செய்துவிட்டு அந்த அறையைவிட்டுச் சென்றுவிடுகிறார்கள்

இறந்தவர்கள் வந்து அந்த விருந்தில் பங்குபற்றி உண்பார்கள் என்று நம்புகிறார்கள். குறிப்பாக மெச்சிக்கோவில் உள்ள யுகற்றான் குடாநாட்டில் (Yucatan Peninsula) இந்த நம்பிக்கை இன்றும் நிலவிவருகிறது. மெச்சிக்கோவின் பல இடங்களில் இது கடைப்பிடிக்கப்பட்டுவருகிறது.

இறந்தவர்களின் ஞாபகார்த்த தினமாகவும் 'ஆன்மாக்களை' மகிழ்வூட்டும் தினமாகவும் 'Halloween And All Saints Days' என்று ஒவ்வொரு வருடமும் கார்த்திகை மாதம் முதலாம், இரண்டாம் திகதிகளில் கொண்டாட்ட தினமாக கொண்டாடுகிறார்கள்.

அன்றைய தினங்கள் தேசிய விடுமுறை நாட்களாகவே அறிவிக்கப்பட்டுள்ளது.

ஐப்பசி 31ஆம் திகதி இறந்த குழந்தைகள் மேலோகத்திலிருந்து வந்து விருந்தில் பங்குபற்றுவார்கள் என நம்புவதால் அன்றைய தினம் 'குழந்தைகள் தினமாகவும்' (Childrens' Day) கார்த்திகை முதலாந் நாள் 'வயதானவர்கள் தினமாகவும்' (Adults' Day) கார்த்திகை இரண்டாம் நாள் 'அனைத்து இறந்தவர்கள் தினமாகவும்' (Day of All the Dead) கடைப்பிடிக்கப்படுகிறது.
மறுபிறப்புக் கோட்பாடு உலகத்தின் பல பாகங்களிலும் வித்தியாசமான கருத்துக்களில் நிலவிக்கொண்டு தான் இருக்கிறது.

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 32
## ( நம் உயிரின் எடை 21 கிராமா ? )

SOUL HAS WEIGHT, PHYSICIAN THINKS

Dr. Macdougall of Haverhill Tells of Experiments at Death.

LOSS TO BODY RECORDED

Scales Showed an Ounce Gone in One Case, He Says—Four Other Doctors Present.

*Special to The New York Times.*

BOSTON, March 10.—That the human soul has a definite weight, which can be determined when it passes from the body, is the belief of Dr. Duncan Macdougall, a reputable physician of Haverhill. He is at the head of a Research Society which for six years has been experimenting in this field. With him, he says, have been associated four other physicians.

உயிரின் எடை 21 கிராம் என்ற தகவலை நாம் அதிகமான முறை மற்றவர் சொல்லி அறிந்திருப்போம். முதன் முதலாக எப்பொழுது மற்றும் யாரால் கண்டுபிடிக்கப்பட்டது என்பது பற்றி சிலருக்கு தெரியாது.
1901 ம் ஆண்டு, Dr. Duncan Macdougall என்பவர் ஒரு வித்தியாசமான ஒரு ஆராய்ச்சியை மேற்கொள்ள இருப்பதாக அறிவித்தார். அவருடைய ஆராய்ச்சியின் மூலமாக மனித உயிருக்கு எடை இருக்கிறது என்றும், அதை தான் நிருபிக்க இருப்பதாகவும் அறிவித்தார்.

இதற்காக இறக்கும் நிலையில் இருந்த 6 நோயாளிகளை தேர்ந்தெடுத்தார். அந்த 6 நோயாளிகளையும், weighing scale வைத்து தொடர்ந்து கண்காணிக்க ஆரம்பித்தார் Dr. Duncan Macdougall. இதற்காக ஒரு பெண் மற்றும் 5 ஆண் நோயாளிகளை தேர்ந்தெடுத்தார். அந்த நோயாளிகள் அனைவரும் காச நோயால் பாதிக்கப்பட்டு இருந்தனர். இந்த ஆராய்ச்சியை Dr. Duncan Macdougall மட்டும் தனியாக மேற்கொள்ளாமல், அவருடன் 4 மருத்துவர்களையும் இணைத்துக் கொண்டார். தொடர்ந்து நோயாளிகள் கண்காணிக்கப்பட்டு வந்த நிலையில், ஒரு நோயாளி உயிரிழக்கிறார்,

அந்த சமயத்தில் ஒரு ஆச்சரியாமான நிகழ்வு நடக்கிறது. அந்த நிகழ்வு என்னவென்றால், இறந்து போன நோயாளியின் உடலில் இருந்து கிட்டத்தட்ட 21 கிராமுக்கு சமமான அளவுக்கு எடை குறைந்துள்ளதை Dr.Duncan Macdougall கவனித்துள்ளார். இதை மற்ற மருத்துவர்களும் கவனித்துள்ளனர்.
இதன் பிறகு நோயாளிகள் ஒருவர் பின் ஒருவராக இறக்க தொடங்கினர். ஆனால், அனைவரிடமும் இதே போன்ற எடை குறைந்ததா என்றால் இல்லை என்று தான் கூறுகின்றனர். சிலருக்கு சில கிராம் குறைந்துள்ளது. ஒருத்தருக்கு இறந்த பிறகு 1 நிமிடம் கழித்து தான் அவரின் உடல் எடையில் சில மாற்றம் ஏற்பட்டுள்ளது.
இந்த ஆராய்ச்சின் மூலம் ஒரு மனிதன் இருக்கும் போது அவர்களின் எடையில் சில மாற்றங்கள் ஏற்பட்டதாக அனைவரும் ஏற்றுக்கொண்டாலும், இந்த ஆராச்சியின் மூலமாக ஒரு நிலையான முடிவுக்கு வரமுடியவில்லை.
சில ஆண்டுகளுக்கு பிறகு Dr. Duncan Macdougall இதே ஆராய்ச்சியை நாய்களை கொண்டு மேற்கொண்டார். ஆனால் அது எந்த விதமான பலன்களையும் கொடுக்கவில்லை.
இதே மாதிரியான ஆராய்ச்சியை 1917 ம் ஆண்டு H.V.டிடிங் என்பவர் எலிகளை வைத்து மேற்கொண்டார். ஆனால் எலிகளில் எந்த விதமான மாற்றங்களையும் கண்டுபிடிக்க முடியவில்லை.
Dr. Duncan Macdougall மேற்கொண்டு ஆராய்ச்சி செய்ய இருந்த நிலையில் 1920 ம் ஆண்டு எதிர்பாராதவிதமாக இறந்து விட்டார். அதன் பிறகு பல ஆராய்ச்சியாளர்கள் இது ஒரு தவறான முடிவு என்றும், இதை ஏற்று கொள்ள முடியாது என்றும் தெரிவித்தனர்.
ஆனால் இதை நிரூபிக்க இதுவரை யாரும் முன் வரவில்லை, இதன் காரணமாக Dr. Duncan Macdougall செய்த ஆராய்ச்சியின் முடிவுகளை தான் ஒரு வகையில் எடுத்துகொள்ள முடியும் என்று சொல்லலாம்.
இது உண்மையாக இருக்கவும் வாய்ப்பு இருக்கிறது. அல்லது இது பொய் என்று நிருபிக்க எதிர்காலத்தில் ஆராய்ச்சி கூட நடக்கலாம். ஆனால் அது எந்த அளவுக்கு சாத்தியம் என்று தான் தெரியவில்லை.

உயிரை கண்டுபிடிக்க கண்ணாடிப் பேழை சோதனைகளை ஆய்வாளர்கள் செய்துபார்த்தும் விடைகாண முடியவில்லை உயிருக்கு எடை உண்டா என்று பிரான்ஸ் நாட்டில் "றைன்" என்ற ஆய்வாளர் தனது ஆராய்ச்சிக்காக இறக்கப்போகும் மனிதனைக் கண்ணாடிப் பேழையினுள் வைத்துப் பரிசோதனை செய்தார். அம்மனிதன் இறந்தபோது கண்ணாடிப் பேழையை உடைத்துக்கொண்டு உயிர் வெளியே சென்றதற்கு ஆதாரமாக வெடிப்போ, துளையோ, பிளவோ எதுவும் காணப்படவில்லை கதிரொளி போலவே உயிரும் கண்ணாடிச் சுவரை ஊடுருவி சென்றிருக்க வேண்டும்.
'X-Ray' கதிர்கள் நம் கண்களுக்குத் தெரியாது ஆனால் எலும்பையும் இரும்பையும் ஊடுருவிச் செல்லும் அதுபோல் உயிரும் ஊடுருவி சென்றிருக்கலாம். தர்க்க ரீதியாகப் பார்த்தால் அப்படித்தான் இருக்கவேண்டும். ரூஹை ஒளி பொருந்திய இறைவன் நமக்கு .ஊதியது அல்லவா ?
قَلِيْلًا مَّا تَشْكُرُوْنَ  ثُمَّ سَوّٰىهُ وَنَفَخَ فِيْهِ مِنْ رُّوْحِهٖ وَجَعَلَ لَكُمُ السَّمْعَ وَالْاَبْصَارَ وَالْاَفْـــِٕدَةَ
பின்னர், (படைப்பாகிய) அதனைச் செப்பனிட்டுத் தன்னுடைய "ரூஹை" அதில் புகுத்தி (உங்களை உற்பத்தி செய்கிறான்.) உங்களுக்குக் காதுகள், கண்கள், உள்ளங்கள் ஆகியவற்றையும் அவனே அமைக்கிறான். இவ்வாறு இருந்தும் உங்களில் நன்றி செலுத்துபவர்கள் வெகு சிலரே!(குர்ஆன் : 32:9)

நாம் எடை என்று எதனைக் குறிப்பிட்டாலும் அது புவியீர்ப்புச் சக்தியுடன் தொடர்புடையது. நிலாவில் இறங்கிய விண்வெளியாளர்களின் எடை மிகமிகக் குறைவாக அங்கிருந்தது.
பூமியின் ஈர்ப்பு எல்லையைத் தாண்டியவுடன் மனிதர்கள் சுத்தமாக எடையற்றவராகி விடுகிறார்கள். விண்வெளிப் பயணிகள் தங்களை விண்கலத்துடன் பிணைத்து கட்டிக்கொண்டுதான் வெளியே வருகிறார்கள். எடை குறைந் மனிதர்களாகி விடுவதால் பலூனைப் போல் மிதந்து
செல்கிறார்கள்.

'உயிரை' ஈர்க்கும் சக்தி பூமிக்கு இல்லாமல் இருக்கக்கூடும். 'உயிர்' மேல் பூமியின் ஆதிக்கம் செல்லுபடியாகவில்லை உயிருக்கு எடையில்லை. அதனால்தான் பாரிஸ் நகரிலும் மற்ற இடங்களிலும் நடைபெற்ற கண்ணாடிப் பேழைச் சோதனைகள் தோற்றுவிட்டன.
இந்தப் பூமியின் சகல விதிகளுக்கும் வெளியே இருப்பது 'உயிர்.' சித்தர்கள், யோகிகள், ரிஷிகள் கூறி இரகசியத்தை விஞ்ஞானம் என்றோ ஒரு நாள் நிரூபிக் போகிறது.
ஆராய்ச்சியின் உச்சக்கட்டமாக என்றோ ஒரு நாள் இந்த வளரும் விஞ்ஞானத்திடம் 'உயிர்' அகப்படத்தான் போகிறது என்பதாக விஞ்ஞானிகள் மார் தட்டுகிறார்கள் .
وَيَسْـئَلُوْنَكَ عَنِ الرُّوْحِ قُلِ الرُّوْحُ مِنْ اَمْرِ رَبِّىْ وَمَاۤ اُوْتِيْتُمْ مِّنَ الْعِلْمِ اِلَّا قَلِيْلًا
(நபியே!) ரூஹைப் பற்றி (யூதர்களாகிய) அவர்கள் உங்களிடம் கேட்கிறார்கள். அதற்கு நீங்கள் "அது எனது இறைவனின் கட்டளையால் ஏற்பட்டது. (அதைப் பற்றி) வெகு சொற்ப ஞானமேயன்றி உங்களுக்குக் கொடுக்கப்படவில்லை. (ஆதலால், அதன் நுட்பங்களை நீங்கள் அறிந்துகொள்ள முடியாது)" என்று கூறுங்கள். (குர்ஆன் : 17:85)

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 33
## ( தொலைதூரப் பார்வை-Telepathy )

அமெரிக்காவில் உள்ள நியூயார்க் நகரில் வசித்த 'டெட்' (Ted) என்பவரது கண்களின் கருமணிகள் தொலைதூரத்தில் உள்ளதை ஊடுருவி எடுத்துவிடுமாம்.
தொலை தூரத்துக்கு செய்தி அனுப்புதல்:
ரஷ்யாவில் பியாதோவ் என்பவர் இருந்தார் அவரால் 1000 மைல்களுக்கப்பால் உள்ளவர்களுக்குக் கூட மனோசக்தி (Telepathy) செய்தி அனுப்ப முடிந்தது. தன் மனதில் ஆழமாக மூலம் நினைப்பதன் மூலம் அந்தச் செய்தி குறிப்பிட்ட நபரை சென்றடைந்துவிடுமாம்.
சித்தர் போகர், சித்தர் காளங்கி நாதரின் சீடர் ஆவார்.
இந்தியாவிலிருந்து சென்ற காளங்கிநாதர் சீனாவில் மூலிகை மருத்துவத்தையும் சித்த விஞ்ஞானத்தையும் பரப்பியவர்.
தமிழ்நாட்டில் பழநியில் இருந்த தனது சீடன் போகரை சீனாவிற்கு உடனே வரும்படி மனவழிமுலம் செய்தி அனுப்பினார். அதை மனவழி மூலம் பெற்றுக்கொண்ட போகர் அட்டமாசித்திக் கலையை பிரயோகித்தும் பறந்து சீனா சென்றடைந்தார். அங்கு தன் குருவைச் சந்தித்தார்.
போகருக்கு நீடித்த காலம் வாழும் காயகல்ப கலையையும், அதற்கான மூலிகைத் தயாரிப்பையும் விளக்கிவிட்டு தன் பணியைத் தொடரும்படி கேட்டுக் கொண்டுவிட்டு காளங்கிநாதர் சமாதிநிலைக்குச் சென்றுவிட்டார் என அபிதான சிந்தாமணி, தமிழ்மொழி அகராதி என்ற நூல்களில் சித்தர்களைப் பற்றிய பகுதியில் காணப்படுகிறது.
ஶ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சரின் இல்லத்துக்கு அருகாமையில் 'காலு' (இராமகிருஷ்ணரின் சீடரில் ஒருவர்) சிறு குடிசை போட்டு வாழ்ந்து வந்தார்.
அவர் ஒரு வெளிப்படையானவர், அப்பாவி, தூய்மையானவர். காலு விக்கிரக வழிபாட்டில் ஈடுபாடுடையவர். காலு இருக்க இடமில்லாதபடி அவரது குடிசை முழுக்க விக்கிரகங்கள்.
சுவாமி விவேகானந்தர் கடவுள் வடிவமற்றவர்' என்ற ஆணித்தரமான கருத்துடையவர். விவேகானந்தர் உருவ வழிபாட்டை ஏற்றுக்கொள்ளாதவர். அந்த விக்கிரகங்களை கங்கையில் போடும்படி கூறிவந்தார்.
அந்த விக்கிரகங்கள் தனது வணக்கத்துக்காகக் காத்திருக்கின்றன என்று கூறி 'காலு' அவற்றைப் பாதுகாத்துவந்தார்.
விவேகானந்தரது மனோசக்தி செயற்பட்டது. 'காலு'வுக்கு ஓர் உத்தரவு மனவழி மூலம் (Telepathy) அனுப்பினார். எந்தத் தடையும் இல்லாமல், தன் குடிசையில் இருந்த 'காலு' அந்த உத்தரவை மனவழி மூலம் பெற்றார்.

தன்னிடமிருந்த கடவுள் சிலைகளை மூட்டை மூட்டையாகக் கட்டி முதுகில் சுமந்தபடி கங்கையை நோக்கிப் புறப்பட்டார். சுவாமி விவேகானந்தர் நினைத்தவுடனே அது நிகழ ஆரம்பித்துவிட்டது.
கங்கையை நோக்கிச் செல்லும் 'காலு'வை ஸ்ரீ இராமகிருஷ்ணர் கண்டார்.
"கங்கையில் இந்த மூட்டையைப் போடப் போய்க் கொண்டிருக்கிறேன்" என்றார் காலு.
"மீண்டும் கொண்டுபோய் உன் வீட்டில் வை. உன் மூலமாக யார் பேசுவது என்பது எனக்குத் தெரியும், நான் கவனிக்கிறேன்" என்றார் ஸ்ரீ இராமகிருஷ்ணர். தன் சீடர் விவேகானந்தருடன் அதைப் பற்றிப் பேசியும் கொண்டார்.
இந்த டெலிபதி நிகழ்வுகளுக்கெல்லாம் முத்தாய்ப்பு வைத்த மாதிரி ஒரு வரலாற்றை இஸ்லாமிய கிதாபுகளில் ஆதாரத்துடன் காணக்கிடைக்கிறது
திண்ணமாக உமர் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்கள் ஒரு படையை மதீனாவிலிருந்து நிஹாவந்த் என்னும் இடத்திற்கு அனுப்பி வைத்தார்கள். ஸாரியா (ரழியல்லாஹு அன்ஹு) அவர்களை அப்படைக்கு தளபதியாக நியமித்தார்கள்.
(மதீனாவில்) சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்த உமர் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்கள் ''யா ஸாரியா! அல் ஜபல்!' (ஸாரியாவே! மலையை கவனித்து சண்டையிடுங்கள்)" என சப்தமிட்டார்கள்.
பிறகு படையிலிருந்து ஒரு தூதர் வந்து சொன்னார்.
" அமீருல் முஃமினீன் அவர்களே! எங்கள் எதிரிகளோடு நாங்கள் போர் புரிந்தபோது, அவர்கள் எங்களை விரட்டியடித்தார்கள். அப்போது 'யா சாரியா அல் ஜபல்' என்று சத்தம் கேட்டது. பின்னர் மலையை எங்களுக்கு பின்புறமாக ஆக்கி கொண்டு போர் செய்தோம். அல்லாஹ் அவர்களை விரட்டி விட்டான்." ஹழ்ரத் இப்னு உமர் (ரழியல்லாஹு அன்ஹு) நூல் – பைஹகீ (தலாயிலுந் நுபுவ்வா) – 2655
டெலிபதி சக்தி (Telepathy) பொதுவாக எல்லா மனிதர்களிடமும் அவர்களை அறியாமலே சிறிதளவாகச் செயற்பட்டுக் கொண்டேயிருக்கிறது. ரிஷிகளது சக்தி வலிமை மிக்கது, அவர்கள் அதை மேலான நிலைக்கு மாத்திரம் செயற்படுத்திக் கொண்டார்கள்.
'டெலிபதி' விஞ்ஞானத்துடன் இணைய வேண்டும். விஞ்ஞானம் வேண்டும். விஞ்ஞானம் 'டெலிபதி'யை அரவணைக்க வேண்டும் .

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 34
## ( மறுபிறப்புக் கோட்பாடும், கால நேரம் இழப்பும் )




நேரத்தின் முக்கியத்துவம் பிறப்பின் கோட்பாட்டோடு தொடர்புடையது போல் தெரிகிறது. பல பிறப்புக்கள் கோட்பாட்டைக் கொண்ட இந்துசமயம், புத்தசமயம் பரவிய நாடான இந்தியா, இலங்கை, நேபாளம், திபெத், மியன்மார் தாய்லாந்து, வியட்நாம் போன்ற பல நாடுகள் நேரத்துக்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. இங்கே நேரம் தன் பெறுமதியை இழக்கிறது.

பல பிறப்புக் கோட்பாட்டால் வாழ்வு தன் மகிமையை இழக்கிறது. சுலபமாக முற்பிறப்பில், கர்மாவில் பழி போடலாம். அதனால் வாழும் காலத்தில், நேரம் அதன் முக்கியத்துவத்தை இழக்கிறது. நல்லது நடந்தால் 'அதிர்ஷ்டம்' என்றும், எதிர்பார்த்தது கைகூடாது விட்டால் 'விதி' . என்றும் மனித முயற்சி மதிப்பிழக்கிறது. யூதமதம், கிறிஸ்தவமதம், இஸ்லாமிய மதம் ஒரே ஒரு பிறப்பு என்ற கோட்பாட்டைக் கொண்டவை. கிறிஸ்தவ மதத்தை பின்பற்றும் மேற்கு நாடுகள் சரியான நேரத்துக்கு துரிதமாக இயங்குகின்றன. நேரத்தைத் தவறவிடாமல் பயன்படுத்துகின்றன. ஒவ்வொரு வினாடியும் நகர நகர அவர்கள் வாழும் காலம் குறைகிறது என்பதை தெளிவாக உணர்ந்திருக்கிறார்கள். எனவே மறுபிறப்புக்கு இங்கு இடமில்லையே!
எனவே இந்தப் பிறப்பில் ஏதாவது சாதிப்பதாயின் துரிதம், வேகம், நேரத்தை விரயம் செய்யாமை, ஒவ்வொரு வினாடியையும் பயனுள்ள வகையில் பயன்படுத்தல் போன்ற விஷயங்களைக் கவனத்திற் கொள்ளவேண்டியுள்ளது. குறித்த நேரத்திற்குள் அனைத்தையும் கவனத்திற் கொண்டு உயர்வடைய வேண்டும். அதற்காகப் பேச்சைக் குறைத்து செயலாற்ற வேண்டியுள்ளது.
வாழ்வும், செயலும், நேரமும் எல்லாம் ஒன்றாக வேகமாக ஓடவேண்டியுள்ளது. Positive ஆக பார்ப்பதும், அடுத்த கட்டத்துக்கு வேகமாக நகர்வதும் இயல்பாகவுள்ளது. ஒரே ஒரு பிறப்புக் கோட்பாட்டால்தான் மேற்குலகம் அசுர வளர்ச்சி காண்கிறதா?

கிழக்கு மறுபிறப்புக் கோட்பாட்டையும் மேற்கு ஒரே ஒரு பிறப்புக் கோட்பாட்டையும் கொண்டிருப்பதால் வளர்ச்சியில் வேறுபாடு தெரிகிறது. கிழக்கில் மேலதிக நேரமுண்டு, இப்பிறப்பில் தவறினால் மறுபிறப்பில் பார்க்கலாம் என்ற நினைவு அவர்களை அறியாமலே பொதுவாக அவர்களின் மனதில் பதிந்துவிடுகின்றது. எது நடந்தாலும் 'கர்மா', விதியின் பயன் என்று கூறி ஒதுங்கிக்கொள்ளலாம்.
இப்பிறப்பில் கர்மாவுக்கு பரிகாரம் தேடி மறுபிறப்பிற்காக இப்பிறப்பில் வாழ்கிறார்கள். மேற்குலகம், ஒரே ஒரு பிறப்பைக் கருத்திற் கொண்டு, நேரத்தை முழுமையாகப் பயன்படுத்த வேண்டியுள்ளதால் முழு ஆற்றலையும் வெளிப்படுத்துகிறது. சாதனையாளராக மாறவேண்டும், புதுமைகளைக் கண்டறிய வேண்டும், பார்த்த உலகத்தை அப்படியே விடாது, புதிய உலகம் படைக்கவேண்டும் என்ற தூண்டலினால் எதற்கும் ஒரு கால எல்லை வரையறுக்கப்படுகிறது.
'நேரம்' பட்ஜெட்டாகி (Time Budget) விடுகிறது. நிதிப் பட்ஜெட்டை விட (Financial Budget) இது முக்கியமாகி விடுகிறது. காரணம் கிடைத்த இந்தப் பிறப்பில் அனைத்தையும் சாதித்து சாதனையாளராக மாறவேண்டும், புதுமைகளைக் கண்டறிய வேண்டும், பார்த்த உலகத்தை அப்படியே விடாது.புதிய உலகம் படைக்க வேண்டும் என்ற தூண்டலும் சேர்ந்தே விடுகிறது.

பல பிறப்புக் கோட்பாடுகளை முன் நிறுத்தும் நாடுகளில், மறுபிறப்பிற்காக பல செயற்பாடுகள் நடைபெறுகின்றன, காரணம் மறுபிறப்பில் தாங்கள் நலமாக வாழவேண்டும் என்பதற்காக வழிபாட்டின் மூலம் பரிகாரம் செய்யப்படுகிறது. இங்கு வாழும் காலத்தைப் பற்றிய சிந்தனைகள் மேலோங்குவதில்லை, அதாவது தாங்கள் வாழும் உலகத்தைவிட மறு உலகத்ததைப் பற்றிய எண்ணமே அதிகமாகக் காணப்படுகிறது. தாங்கள் இந்த உலகத்தில் தற்பொழுது வாழ்ந்து கொண்டிருப்பது சொர்க்க உலகத்திற்கு செல்வதற்காகவே என்ற கருத்து மேலோங்கியுள்ளது.
இந்த உலகத்தில் எப்படி வாழவேண்டும் என்ற எண்ணத்தைவிட, மறு உலகத்தில் எப்படி இருக்கவேண்டும் என்றே சிந்திப்பதால், இந்த உலகத்தை முழுமையாகப் பார்க்க முடியாமல், குற்றமானதாக, தவறானதாகத் தெரிவதால், தங்களை பாவிகள் என்று நினைப்பதால், முரண்பாடான எண்ணங்கள் (Negative Ideas) அதிகரிக்கின்றன. எதுவும் சரியானதாகத் (Positive) தெரிவதில்லை.
கூடியவற்றிற்கும், முக்கியமற்றதற்கும் முக்கியத்துவம் தவிர்க்கக் கொடுக்கப்படுகிறது. ஒரு பிறப்புக் கோட்பாடும், பல பிறப்புக் கோட்பாடும் மனிதர்களின் சிந்தனைகளை, வாழும் முறைகளை மாற்றியமைக்கிறது.

மனிதர்களுக்கு ஒரே ஒரு பிறப்புத்தான் என்று ஒரே ஒரு பிறப்புக் கோட்பாடு நேர முக்கியத்துவத்துடன் சம்பந்தப் படுகிறது. பிறப்பை முழுமையாக முழு ஆற்றலுடன் பயன்படுத்தத் தூண்டுகிறது. வாழ்க்கையின் வேகத்தை துரிதப்படுத்துகிறது. இங்கு 'நேரம்' (Time) 'வேகம்' (Speed) உள்ளடங்குகிறது.
இக்கோட்பாடு உள்ள நாடுகளில் நேரம் தவறாமல் கருமமாற்றுகிறார்கள். இதனால் நேரத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். அந்த நாடுகளின் வளர்ச்சி அபரிமிதமாக இருக்கிறது. சுருக்கமாகப் பேசி, நேர தாமதமாகாது கருமமாற்றி, நேரத்தை வீண்விரயம் செய்யாது பயன்படுத்துகிறார்கள்.ஒவ்வொருவரும் 'நேரவங்கியாக' (Time Bank) உள்ளார்கள்.

நேர அடிப்படையில்தான் வேலைக்கு ஊதியம் வழங்கப்படுகிறது, மற்றும் நன்றி கூறும்போதும் 'உங்கள் நேரத்துக்கு நன்றி' (Thanks for your time) என்று ஒரு பிறப்பு கோட்பாடுடைய நாட்டு மக்கள் கூறுகிறார்கள்.
பல பிறப்புக் கோட்பாடுடையவர்கள் நேரத்துக்கு முக்கியத்துவம் கொடுக்காது. சுறுசுறுப்பாக இயங்காது. கால தாமதம் பற்றி அக்கறை இல்லாது, பல கொண்டாட்டங்களில், நிகழ்ச்சிகளில், பொதுக் கூட்டங்களில் நேரம் புறக்கணிக்கப்படுகிறது. சுருக்கமாகக் கூறின் பொதுவாகக் கிழக்கிற்கும் மேற்கிற்கும் (ஒரு பிறப்பு, மறு பிறப்பு ) இடையே நேரத்தை பயன்படுத்தும் முறையில் வேறுபாடு உண்டு.
ஒலிம்பிக் போட்டியில் அதிக பதக்கங்களைக் குவிக்கும் நாடுகள் ஒரே ஒரு பிறப்புக் கோட்பாடுடைய நாடுகளாகத் தான் இருக்கின்றன.

விளையாட்டுக்களில் அதிகம் சிறந்து விளங்கும் நாடுகளும் அத்தகைய நாடுகளாகத்தான் இருக் ‘அதிக நேரம்' எடுக்கும் விளையாட்டுக்களில் பொதுவாக மறுபிறப்புக் கோட்பாடு உள்ள நாடுகள் தங்கள் ஆற்றல்களை வெளிப்படுத்துகின்றன.
ஒலிம்பிக் ஓட்ட வீரர்கள் தாங்கள் பங்கு பற்றும் போட்டியில் ஓட்ட நேரத்தை எவ்வளவுக்கு குறைக்க முடியுமோ, அவ்வளவுக்கு குறைக்கும்போது சாதனையாளராக மாறுகிறார்கள். நேரத்துக்கு எவ்வளவு முக்கியத்துவம் உண்டு என்று பாருங்கள்.
அடுத்த ஒலிம்பிக் போட்டி வருட 4 இடைவெளிக்குப் பின்தான் நடைபெறும், எனவே வீரன், தான் பங்குபற்றும் இந்த சந்தர்ப்பத்தைத் தவறவிட அவனுக்கு மனம் இடங்கொடுக்க மாட்டாது. இதுதான் அவர்களது ஒரே ஒரு வாழ்வு, ஒலிம்பிக் அவர்களுக்கு ஒரே ஒரு பிறப்புப்போல் அதனால் 'நேரம்' இங்கு முக்கியத்துவமடைகிறது. அதாவது ஒவ்வொரு வருடமும் ஒலிம்பிக் நடைபெறுமாயின் பின்பு பார்த்துக்கொள்ளலாம் என்ற நிலைக்கு மனம் ஏற்புடையதாகி, நேரத்தின் மதிப்பை இழக்கச் செய்துவிடும். மனம் முழுமையான திறனுடன் செயலாற்றும் போது நேரம் என்பதே தென்படாது வெளிப்படும் ஆற்றலுக்கும் முடிவே இருக்காது.
உலகில் கவிஞர்களது, ஓவியர்களது படைப்புக்கள் நிறையக் கருத்துக்களை சுருங்கக்கூறி விளங்க வைக்கின்றன. அவை அனைத்தும் நேரத்தின் முக்கியத்துவத்தை காட்டுகின்றன. அவர்கள் நேரத்தின் பெறுமதியை மேலும் பெறுமதியாக்கு கிறார்கள்.

சமண நிலையில் மத முன்னோடி மகாவீரர் "ஒருவர் சமாதி பிரவேசிக்கிறபோது முற்றிலுமாய் மாறுகிற அடிப்படை விஷயம் நேரமே ஏற்படும்" என்கிறார். நேரத்திற்கு ஒரு நிறுத்தம் சென்மார்க்க மத துறவியான பொகூஜு (Bokuju) 25 வயதில் ஞானம் பெற்றவர். "நான் நேரத்தைப்பற்றி அறியவில்லை, நேரத்துக்கு என்னவாயிற்று? அது நின்று விட்டதா" என்றார் பொகூஜூ. இவர் சுறுசுறுப்பாக இயங்கிய ஒருவர்.
பயன்பாட்டில்தான் நேரத்தை உணரமுடியும். விடுமுறை நாட்களில் பொழுது விரைவில் நகர்ந்துவிட்ட மாதிரி தெரிகிறது. கடினமான நாட்களில், சங்கடமான நேரங்களில் நேரம் நகராத மாதிரி தெரியும். குழந்தையானது நேரத்தை குறைந்தளவில் உணர்வதால், நேரம் ஒரு பிரச்சினையாகத் தெரியாது.

குழந்தையானது நிறைவாய், முழுமையாய் இருக்கிறது. ஆனால் வளர்ந்துவிட்ட ஒருவர் வெறுமையை, தனிமையை உணர்வதால் நேரம் நீண்டதாய்த் தோன்றும். நேரம் ஒரு பிரச்சினையாய் தெரியும், அதே வேளை குழந்தைகளுக்கு அப்படியில்லை.
மறுபிறப்பு உண்டு என்ற நம்பிக்கையால் கிழக்கத்திய நாடுகளில் காலம் முடிவற்றதாகவும், எவ்வித அவசரம் இல்லாததாகவும் இருக்கிறது. இந்த நம்பிக்கை இருப்பதால் நேரம் அர்த்தம் அற்றதாகிவிட்டது. இறப்பென்பதே இல்லை என்றால் 'நேர இழப்பும்' அர்த்தமற்றதாகிறது. (அவுட்டே இல்லாத கிரிக்கெட் பார்க்க சுவராசியமாகவா இருக்கும் ? ) எனவே காலம்
'நேரம்' முடிவற்றதாகிவிடுகிறது. நேரத்தைப்பற்றிய எண்ணமே
இருக்காது.
மேற்கத்திய நாடுகளில் ஒருபிறப்புக் கோட்பாடு அதிகம். ஒரே ஒரு பிறப்பு ஒரே ஒரு வாழ்வு -மீண்டும் பிறப்பில்லை மறு பிறப்பில்லை என்றால் 'நேரம்' முக்கியத்துவமடைகிறது. ஒவ்வொரு வினாடியையும் பிரயோசனமில்லாமல் இழக்க விருப்பம் ஏற்படாது, நேரமானது 'உயிராகக்' கருதப்படும். 'நேர' உணர்வு கொண்டவராகிவிடுவோம்.
மறுபிறப்பில்லை என்றால் 'இறப்பு' அர்த்தமுள்ளதாகிவிடும். வாழும்போது அனைத்தின் மீதும் கவனம் ஏற்படும். எதையும் இழக்க மனம் இடம் தராது. இழப்பானது 'நேரம்' நகர்வதை உணர்வோம், 'நேர' கிடைத்த ஒரு பிறப்பையும் வீணடிக்கிறதாக நினைக்கத் தோன்றும்.
நேர இழப்பானது பிறப்பை வீணாக்குகிறது. வாழும் காலத்தை வரையறுத்துவிட்டால் நேரமானது பயனுள்ள, பெறுமதியானதாகி விடும். அப்போது வாழ்வு வளமாகி, செழிப்பாகிவிடும். குறைந்த அளவு நேரம் கொண்ட இப்பிறப்பில் நேரத்தைத் தவறவிடாமல் வாழவேண்டும் என்ற எண்ணத்தை மனதில் பதிய வைத்தால் சாதனையாளராகி விடுவோம். வாழ்வு பயனுள்ளதாகவும் மகிழ்ச்சிகரமானதாகவும் அமைந்துவிடும்.

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 35
## ( மரணம் நிகழ்ந்தவுடன் 'மனம்', 'உயிர்' இவற்றின் நிலை )

ஒஷோவின் சொற்பொழிவிலிருந்து... "ஒரு மனிதர் இறக்கும்போது அவருடைய உடல் மட்டுமே இறக்கிறது.மனம் உடனே இறப்பதில்லை.' நம்ம பாஸ் உயிருடன்தான் இருக்கிறார் ' என்று நம்புகிறது.
உதாரணமாக கனவிலிருந்து விழித்துக் கொண்டவுடன், பதற்றம் நீடிக்கிறது. பின் சுய நினைவுக்கு வந்ததும், 'நல்ல வேளை கனவு' என்று மனம் நிதானப்படுகிறது. கனவின் ஒரு பகுதி மட்டுமே நினைவில் நிற்கிறது. அதுவும் கனவின் கடைசிப் பகுதி சற்று நேரம் மட்டுமே நினைவில் நிற்கும். பின் கனவு படிப்படியாக நினைவிலிருந்து மறைந்து விடுகிறது.
கனவு உறக்கத்தில் வருகிறது. ஆழ்ந்த பிரக்ஞையற்ற நிலையில் கனவு பிறக்கிறது என்றாலும் விழிப்பில் அதன் இறுதிப்பகுதி மட்டுமே நினைவில் நிற்கிறது,
காரணம் விழிப்பிற்குமுன் நீங்கள் அரைத்தூக்கத்தில் இருப்பதுதான். அரைத்தூக்கம், அரைவிழிப்பு போன்ற நிலையில் காணும் கனவுதான் விழித்த பின் நினைவில் நிற்கிறது. நேரம் செல்லச் செல்ல நினைவிலிருந்து நழுவி விடுகிறது.
இதேபோலத்தான் உயிர் பிரிந்த பின்பும் இறந்தவரது உள்ளத்துக்கு கிட்ட உள்ளவரது நினைவுகள் உயிரில் சிறிது காலம் இருக்கிறது.
ஒருவர் திடீரென எதிர்பாராமல் விபத்து போன்றவற்றால் மரணமடையும்போது, தாம் மரணமடைந்ததை அவரால் அறியமுடிவதில்லை. சற்றுநேரம் அவர் திகைத்துப் போய்விடுகிறார். ஏதோ தவறு நேர்ந்துவிட்டது என்ற தடுமாற்றத்தில் அவர் தவிக்கிறார். உடலுக்குள் எதுவுமே சாகாத நிலையில், உயிர் உடலை விட்டுப் பிரிந்து சென்று விடுகிறது.

பெரும்பாலான உயிர்கள் சட்டென உடலைவிட்டுப் பிரிய நேரும்போது சுத்தமாகக் குழப்பமடைந்து தடுமாறிப்போய் விடுகின்றன. உயிர் மெல்ல மெல்லத்தான் கடந்தகால நினைவுகளிலிருந்தும் தொடர்புகளிலிருந்தும் விடுபடுகிறது. இது நாம் கனவுகளை மெல்ல மெல்ல மறந்து போவது போன்றது.
இறந்த ஒருவர் 'ஆவியாக' கடந்தகால நினைவில் இருக்கிறார். புதிய மறுபிறவி எடுத்த பின்பும்' பிறக்கும் குழந்தைகளுக்கு பழைய 'உயிரின்' நினைவுகள் சிறிது காலம் வரை இருக்கும் பின்னர் சிறிது சிறிதாக அவை மறைய ஆரம்பிக்கும். குழந்தை பேசத் தொடங்க அவை முற்றிலும் மறைந்துவிடும்.
முற்பிறவியில் அசாதாரணமான நினைவாற்றல் கொண்டவராக இருந்திருந்தால், குழந்தை பேசத் தொடங்கிய பின்பும் முற்பிறப்பு நினைவுகள் தொடர முடியும்" என்கிறார் ஓஷோ.
"வாழ்க்கை ஆசைகளால் தூண்டப்படுகிறது. ஆசை இல்லாவிடில் பிறப்பே இருக்காது" புத்தர்.
சில வேளைகளில் மனிதர்களது உள் உறுப்புக்கள் நல்ல நிலையில் இருக்கும். ஆனால் இறந்திருப்பார் 'Life' போயிற்று என்கிறார்கள்.
Life என்றால் (சுய) தன்னுணர்வுதானா? (Self Consciousness) சுய உணர்வு என்றால் என்ன? சிலவேளைகளில் சில மனிதர்கள் சுயஉணர்வு இல்லாமல் வருடக்கணக்காக படுக்கையில் இருப்பார்கள் ஆனால், உயிருடன் இருப்பார்கள்.
இன்றைய மருத்துவ உலகம் இதைத்தான் கூறுகிறது, நோய்வாய்ப்பட்டு இருக்கும்போது, ' தேறுவேன் ' என்ற நம்பிக்கை இல்லாவிட்டால் மருந்தும் செயல் இழக்கிறது. டாக்டர்கள் நம்பினாலும் நோயாளி நம்பாவிட்டால் பலன் இல்லை.
மரணப் படுக்கையில் இருப்பவருக்கு 'தான் தப்புவேன் ' என்ற நம்பிக்கையில் இருப்பவருக்கு மருந்து செயல்பட்டு குணமாக்கி விடுகிறது.
வாழ்க்கைக்கு ஆசைகள் தேவைப்படுவதுபோல் மரணத்திற்கும் ஆசைகள் தேவைப்படுகிறது என்பதுதான் வினோதம். உடம்பும் தன்னுணர்வும் ஆசைகளின் மூலம் தொடர்புபடுத்தப்படுகின்றன.
சிக்மண்ட பிரய்ட் (Sigmund Freud) "மரண விருப்பம் ஒழித்திருக்கிறது, இல்லையேல் உடம்பால் நீடித்திருக்க முடியும். இறப்பதற்கான ஆசைதான் இறப்பிற்கு உதவுகிறது" என்கிறார். “வாழ்வதற்கான ஆசை மீண்டும் பிறப்பெடுக்க காரணமாகிறது” என்கின்றனர் தத்துவஞானிகள்.
காலையில் பூ மலர்கிறது மாலைப்பொழுதில் போய் விடுகிறது. அந்த ‘மலர்தல்' எங்கிருந்தோ வந்தது (Unknown) 'போதல்' மீண்டும் எங்கிருந்து வந்ததோ அங்கே
சென்றுவிடுகிறது (Unknown).
போதிதர்மா அவர்கள் உடலுக்கும், மனதுக்கும் அப்பால் உள்ள அந்த தெரியாததை ‘மனம் அற்ற (Non-mind) நிலை' என்று குறிப்பிடுகிறார். இந்த 'மனம் அற்றநிலை முடிவற்ற (Eternal) நிலை என்கிறார்..
“உயிர் தெரியாததிலிருந்து (Unknown) மலர்ந்து பின்பு பிரிந்து செல்லும்போது மீண்டும் அந்த தெரியாததிற்குள் (Unknown) பிரவேசிக்கிறது. இது முடிவற்றது” என்கிறார்.
தெரிந்ததிலிருந்து தெரிந்ததற்குள் (from known to known) தெரிந்ததிலிருந்து தெரியாததற்குள் (from known to unknown) தெரியாததிலிருந்து தெரிந்ததற்குள் (from unknown to known) தெரியாததிலிருந்து தெரியாததற்குள் (from unknown to unknown) ஆகிய நான்குமே பொதுவாக வாழ்வை நகர்த்தும் நான்கு
சக்கரங்களாக தொடர்ந்து கொண்டேயிருக்கிறது
"ஞானமடைந்தவர்கள் இந்த நகர்விலிருந்து விலகி விடுவார்கள். மீண்டும் மலரமாட்டார்கள்” என மனதிற்கு அப்பாற்சென்று மரண அனுபவமடைந்த ஞானிகள் கூறுகிறார்கள்.

**ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 36**
**( நம் உடலில் மொத்தம் 114 சக்கரங்கள் )**




உடலைப் பற்றி தெரிந்து கொள்வோம் நாடி என்பதை உடலில் நீங்கள் வெளிப்படையாகக் 'காண' முடியாது உடலை வெட்டி உள்ளே பார்த்தாலும், அதை நீங்கள் பார்க்கமுடியாது ஆனல் உங்கள் விழிப்புணர்வு அதிகரிக்கும் போது, உங்கள் உடலில் சக்திவோட்டம் குறிப்பிட்ட வழிகளில்தான் நிகழ்கிறது என்றும், எல்லாத் திசையிலும் ஒழுங்குமுறையின்றி பயணிப்பதில்லை என்றும் நீங்கள் உணர்வீர்கள்.
சக்கரம் என்பது நாடிகள் சந்திக்கும் சக்தி மையம். அங்கு, சக்தி சுழல் (energy vortex) உருவாகும் விதத்தில், நாடிகள் சந்திக்கின்றன.. நாடிகளைப் போன்றே, சக்திச் சக்கரங்களும் மிக சூக்ஷ்மமான நிலையில் இருப்பதால், அதையும் நீங்கள் பார்க்க முடியாது.
இந்த மையங்களில், நாடிகள் முக்கோண வடிவில் சந்திக்கின்றன (சக்கரம் எனும் வார்த்தை குறிப்பதுபோல் வட்டவடிவில் அல்ல). ஒரு எந்திரத்தில், நகரும் விதமாக செயல்படும் பாகங்கள் எப்போதுமே வட்ட வடிவில்தான் அமைக்கப்படும். ஏனெனில் வட்ட வடிவம்தான் மிகக் குறைவான எதிர்ப்புடன் நகரும். எனவே, சுறுசுறுப்பான இயக்கத்தைக் குறிப்பதற்கு. சக்கரம்தான் சிறந்த குறியீடு. அதனால்தான் இந்த சக்தி மையங்களை, "சக்கரம்" என்று குறிப்பிடுகிறோம்.

நம் உடலில் மொத்தம் 114 சக்கரங்கள் இருக்கின்றன.(திருக்குர்ஆனில் 114 சூராக்கள் இருக்கின்றன) இதில் 2 சக்கரங்கள் உடலுக்கு வெளியேயும், 112 நம் உடலுக்கு உள்ளேயும் உள்ளன. இந்த 112ல், 7 சக்கரங்கள் மற்றவற்றைவிட அதிக செயல்பாடு கொண்டவை. நம்மில் பெரும்பாலானோருக்கு. இந்த ஏழில், மூன்றுதான் உயிரோட்டத்தோடு இயங்கும். மற்ற நான்கும், ஒன்று, வேலை செய்வதில்லை, அல்லது மிகக் குறைவாக வேலை செய்கிறது.
இவ்வுலகில் பிழைப்பு மட்டும் நடத்திக் கொள்வதற்கு இந்த 114ம் வேலை செய்யவேண்டும் என்றில்லை. இதில் சில சக்கரங்கள் மட்டும் வேலை செய்தாலே, பிழைப்பை நாம் முழுமையாக நடத்திக் கொள்ளலாம்.
அப்படியெனில், இந்த 114 சக்கரங்களும் வேலை செய்தால், எப்படியிருக்கும்? இந்த 114 சக்கரங்களும் முழு தீவிரத்தில் செயல்பட்டால், உங்களுக்கு உடலென்று ஒன்று இருப்பதேகூடத் தெரியாது.
யோகாவின் நோக்கம் இதுதான், உடலின் மீது உங்களுக்கு இருக்கும் கவனத்தைக் குறைத்துவிட்டு. இங்கு நீங்கள் உடலில் அமர்ந்தாலும், நீங்கள் உடலல்ல என்ற உணர்வு மேலோங்கும் விதமாக, உங்கள் சக்தி தீவிரத்தை அதிகரிப்பது.

தென்னிந்தியாவில் சதாஷிவ பிரம்மேந்திரர் என்ற புகழ்பெற்ற யோகி ஒருவர் இருந்தார். அவர் ஒரு நிர்காயா. அதாவது, உடலற்ற யோகி." நிஜத்தில் அவருக்கு உடல் இருந்தது. ஆனால் உடல் என்ற ஒன்று இருப்பது அவர் உணர்வில் இல்லை. அந்த உடல் மீது சிறு பறவைகள் வந்து அமர்ந்து போகும்.
உங்கள் உணர்வில் உடலென்று ஒன்று இல்லையென்றால், உடை பற்றிய எண்ணங்களுக்கு இடமேது? அதனால் இவர் ஆடை ஏதும் அணிவதில்லை. அதுமட்டுமல்ல, இந்நிலையில் இருப்பவர்களுக்கு. வீடு, சொத்து, அவ்வளவு ஏன், பொருட்தன்மைக்கு உண்டான எந்த எல்லைகளும் அவர்கள் உணர்வில் இருப்பதில்லை.
ஒருமுறை இவர் காவேரி நதிக் கரையில் நடந்து கொண்டிருந்தார். அவ்வழியில்தான் அரசனின் நந்தவனமும் அமைந்திருந்தது. அப்படியே நடந்து கொண்டிருந்தவர், அரசனின் நந்தவனத்திற்குள் நுழைந்தார். அங்கே செல்லவேண்டும் என்பது அவர் நோக்கமல்ல. ஆனால், தன் உடலே அவர் உணர்வில் இல்லை என்றால், "தான் நுழைவது ஒரு நந்தவனம். அது அரசனுடையது" என்பது போன்ற வரையறைகள் எப்படி இருக்கும்?
எனவே சதாஷிவ பிரம்மேந்திரர் தன் ஆடையற்ற மேனி பற்றிய கவனமின்றி, அத்தோட்டத்திற்குள் நடந்து கொண்டிருந்தார். அங்கு அரசன் தன் ராணிகளுடன் ஓய்வாக அமர்ந்திருந்தான். இவரைப் பார்த்ததும் அவன் வெகுண்டான். யாரிந்த முட்டாள்? சற்றும் இங்கிதமில்லாமல், என் மனைவியரின் முன் ஆடையின்றி வருகிறான்" என்று கோபம் கொண்டான்.
உடனே தன் காவலர்களை அழைத்து. சதாஷிவ பிரம்மேந்திரரைத் தன்னிடம் இழுத்து வருமாறு கட்டளையிட்டான். காவலர்களும், சதாஷிவ பிரம்மேந்திரரை நிற்கும்படி கூக்குரலிட்டு அவர் பின்னே ஓடினர். ஆனால் சதாஷிவ பிரம்மேந்திரர் திரும்பிப் பாராமல் நடந்துகொண்டே இருந்தார்.
.இதனால் கோபப்பட்ட ஒரு காவலன், தன் வாளை உருவி அவரைத் தாக்கினான். அவனது வாள்வீச்சில், சதாஷிவ பிரம்மேந்திரரின் வலதுகை துண்டாகி கீழே விழுந்தது. ஆனால் அவரோ, அதைப் பற்றி சிறிதும் கவனமின்றி நடந்துகொண்டே இருந்தார். அவர் நடையில் வேகம் குறையவும் இல்லை, அதிகரிக்கவும் இல்லை. அவர் முன்போல் சாதாரணமாக நடந்துகொண்டே இருந்தார்.
இதைப் பார்த்ததும், அக்காவலர்களுக்கு பயம் தொற்றிக் கொண்டது. அவர் சாதாரண மனிதர் அல்ல என்பதைக் கண்டு கொண்டனர்.

அரசனிடம் சென்று இதை அவர்கள் சொல்ல, அரசன் ஓடிவந்து பிரம்மேந்திரரின் கால்களில் விழுந்தான். தன்னை மன்னித்து விடுமாறு வேண்டி மீண்டும் அவரைத் தோட்டத்திற்கு அழைத்து வந்தான். அதன்பின் சதாசிவ பிரம்மேந்திரர் அங்கேயே வாழ்ந்தார். பிற்காலத்தில் தன் உடலையும் அங்கேயே துறந்தார்.
யோக மரபில் இதுபோன்று பல சம்பவங்கள் உள்ளன. உங்கள் சக்திநிலை உயர்நிலையில் இயங்கும்போது, பொருட்தன்மையிலான பரிமாணத்தின் முக்கியத்துவம் பெருமளவில் குறைகிறது. இது எந்தளவிற்கு குறைந்துவிடும் என்றால், உணவு பற்றியோ, வலியைப் பற்றி சிந்தனையோ. அதற்கான அவசியமோ இன்றி, நீங்கள் பல நாட்களுக்குக்கூட வாழமுடியும். ( ஈஷா யோகா - உன்னை அறியும் விஞ்ஞானம்,
பக் 280, ஜக்கி வாசுதேவ் )
ஒரு நாள் அலி (ரலி) அவர்களின் உடலில் அம்பு தைத்தது. இதனால் அலி (ரலி) அவர்கள் வேதனையால் துடித்தார்கள். சகாக்கள் அனைவரும் அந்த அம்மை எடுப்பதற்கு அவரவர்கள் முயற்சித்தார்கள் .இதனால் அலி (ரலி) அவர்களுக்கு வலி கூடியதே தவிர அம்பை எடுக்க முடியவில்லை.
பின்பு அலி (ரலி) அவர்கள், "நான் அல்லாஹ்வை வணங்கும் போது, நீங்கள் அந்த அம்பை எளிதாக எடுத்து விடலாம்" என்று கூறினார்கள்.
அலி (ரலி) அவர்கள் இறைவனோடு தனித்து, மன ஒருமித்த நிலையில் தொழுது கொண்டிருந்தபோது சகாக்கள் அந்த அம்பை அங்கும் இங்குமா ஆட்டி அசைத்து எடுத்து விட்டனர்.
தொழுது முடித்ததும் . "அம்பை உருவி விட்டீர்களா ..? எனக் கேட்டார்கள்

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 37
## ( பிரபஞ்ச நுட்ப விஷயங்களைக் கூட உங்கள் ஆன்மாவால் உணர முடியும் )




உங்கள் உடல் என்பது அன்னமயகோஷா. அதாவது உங்கள் உடல் என்பது, இதுவரை நீங்கள் உண்ட உணவைக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ள உணவுக்குவியல்.
நீங்கள் உண்ட உணவோ, இப்பூமியின் ஒரு பாகம். அப்படியென்றால், இப்பூமியினின்று வெளிவந்த ஒரு சிறு துணுக்குதான் மனிதன், தான் ஒரு தனிப்பட்ட, தனித்து இயங்கக்கூடிய படைப்பு என்ற எண்ணத்தோடு வளைய வந்துகொண்டிருக்கிறது!
நீங்கள் இப்பூமியின் ஒரு சிறு விரிவாக்கம் என்பதால், இப்பூமிக்கு என்னென்ன நடக்கிறதோ, அது உங்களுக்கும் நடக்கிறது. சிலசமயம் நுட்பமாக நிகழ்கிறது, சிலசமயம் வெளிப்படையாகவே நடக்கிறது.
இந்த பூமி, சூரிய மண்டலத்தின் ஒரு பாகம். அதனால், சூரிய மண்டலத்தில் நடக்கும் விஷயங்கள் எல்லாம் ஏதோவொரு வகையில் இந்த பூமிக்கும் நடக்கிறது.
இந்த சூரிய மண்டலம், இப்பிரபஞ்சத்தில் ஒரு அங்கம். இதை கோர்வையாகப் பார்த்தால், உங்கள் உடல் இப்பூமியின் ஒரு துணுக்கு என்பதால், இப்பிரபஞ்சத்தில் எங்கு என்ன நடந்தாலும், அது ஏதோவொரு வகையில் உங்களுக்கும் நடக்கிறது!
உங்களுக்கு கொடுக்கப்பட்ட ஆன்மாவானது , உங்கள் உடலுக்குள் அது வருவதற்கு முன்னும் இருந்தது. உடல் அழிந்தப் பிறகு இருந்து கொண்டே இருக்கும். பிரபஞ்சத்தின் எந்த செயலின் தாக்கமும் ஆன்மாவிற்கும் உண்டு. இப்போது இது உங்கள் அனுபவத்திற்கு அப்பாற்பட்டு இருக்கலாம். நம்புவதற்கு சிறிது கடினமாகவும்கூட இருக்கலாம். ஆனால் உங்கள் உடலை ஒரு குறிப்பிட்ட விதத்தில் பராமரித்தால், இப்பூமியிலும், இப்பிரபஞ்சத்திலும் நடக்கும் நுட்பமான மாற்றங்களையும் கூட நீங்கள் உங்கள் ஆன்மாவால் உணரமுடியும். அந்தச் சின்னச்சின்ன மாற்றங்களையும் உணரும் அளவிற்கு உங்கள் உணரும் திறன் கூர்மையாகும் போது, சுற்றி நடக்கும் எல்லாவற்றையும் உங்கள் முழு உடலும் உணரும். இப்பூமியின் செயல்பாட்டில் இன்னும் அதிக கவனமும், நேரமும் முதலீடு செய்தால், உங்கள் உணரும் திறன் பிரமிக்கத்தக்க வகையில் கூர்மையடையும்.
உதாரணத்திற்கு மழை வருவதை முன்கூட்டியே அறிய பிரபஞ்சத்தின் செயலிலிருந்து உணர்ந்து கொண்டனர். எறும்பை வைத்தும் மழையை அறியலாம் என்கிறது புறநானூறு எறும்பும் மழை பெய்யும் அறிகுறியைக் காட்டும்.

பண்டய தமிழர்களின் அறிவு எவ்வளவு நுணுக்கமானது என்பதை இந்தப் பாடலின் மூலம் நாம் அறியலாம். அது மட்டுமல்லாது நம் முன்னோர்கள் பூமியில் வாழும் ஒவ்வொரு உயிரையும் எவ்வளவு நேசித்துப் பின் தொடர்ந்திருக்கிறார்கள் என்பதை இந்தப் பாடலின் மூலம் அறியலாம்.
"பொய்யா எலிலி பெய்விடம் நோக்கி முட்டை கொண்டு வன்புலம் சேரும் சிறு நுண் எறும்பு சில் ஒழுக்கு எய்ப்ப (சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்" புறநானூறு 21)
பொருள்:
சிறிய எறும்பு கூட்டம் மழை வரப்போவதை காற்றின் மூலம் அறிந்து தன் முட்டைகள் நீரில் அடித்துப் போகா வண்ணம் காப்பதற்காக தன் முட்டைகளை மேட்டு நிலப்பகுதியை நோக் எடுத்துச் செல்லுமாம். இந்த நுண்ணிய ஜீவனின் ஒழுக்க நெறியைப் பாரீர் என்கிறார் புலவர்
இந்தப் பாடலின் மூலம் நாம் அறிவது என்ன நம் முன்னோர்கள் சிறிய உயிரினங்களிடமு நாம் கற்றுக் கொள்ளும் விசயங்கள் உள்ளன என்பதை எடுத்துரைக்கின்றனர். இதை நாம் அறிவியல் கண்கொண்டும் காணலாம், வாழ்வியல் நெறி கண்கொண்டும் காணலாம்.
இதே மாதிரி குற்றாலக் குறவஞ்சியிலும்,
ஆற்று வெள்ளம் நாளை வரத் தோற்றுதே குறி – மலை
யாளமின்னல் ஈழமின்னல் சூழ மின்னுதே
நேற்றும் இன்றும் கொம்பு சுற்றிக் காற்று அடிக்குதே – கேணி
நீர்ப்படு சொறித் தவளை கூப்பிடுகுதே
சேற்று நண்டு சேற்றில் வளை ஏற்று அடைக்குதே – மழை
தேடி ஒருகோடி வானம் பாடி யாடுதே
போற்றுதிரு மால்அழகர்க்கு ஏற்றமாம் பண்ணைச் – சேரிப்
புள்ளிப் பள்ளர் ஆடிப்பாடித் துள்ளிக் கொள்வோமே
(முக்கூடற் பள்ளு 30)
உங்கள் உடலை ஒரு குறிப்பிட்ட விதத்தில் பராமரித்தால், இப்பூமியிலும், இப்பிரபஞ்சத்திலும் நடக்கும் நுட்பமான மாற்றங்களையும் கூட ஆன்மாவால் நீங்கள் உணரமுடியும்.

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 38
## ( ஒவ்வொரு நொடியும் ஆத்மார்த்தமாக வாழுங்கள் )

நான் எப்போது வேண்டுமானாலும் இறக்கக்கூடும் என்பதை நீங்கள் உணரும்போதுதான், “வாழ்வில் நான் அறியாதது, உணராதது வேறு என்ன இருக்கிறது?” என்று அறிய முற்படுவீர்கள். அப்போதுதான் ஆன்மீகத் தாகம் பிறக்கிறது !
இது ஒருமுறை நடந்தது :
80 வயதைத் தாண்டிய இருவர் சந்தித்தனர். ஒருவர், அடுத்தவரை அடையாளம் கண்டுகொண்டு, "நீங்கள் இரண்டாம் உலகப் போரில் கலந்து கொண்டீர்கள்தானே?" என்று வினவினார்.
அடுத்தவர், "ஆம்" என்று சொல்ல.
எந்த இடத்தில், எந்த படைப்பிரிவில் என்று முதலாமவர் கேள்விகளை அடுக்கினார். எல்லாவற்றிற்கும் பதில் கிடைத்ததும் முதலாமவர் ஆனந்தமாக ஆர்ப்பரித்தார்.
" ஹய்யோ! என்னைத் தெரியவில்லை ? நாம் இருவரும் ஒரே படைப்பிரிவில், ஒரே குழியில் மறைந்திருந்து எதிரிகளைத் தாக்கினோமே!"
அவ்வளவுதான்! இருவரும் பேசினார்கள் பேசினார்கள், பேசிக்கொண்டே இருந்தார்கள். அவர்கள் மொத்தமாகவே 40 நிமிடங்கள்தான் அந்த உக்கிரமான போர் சூழ்நிலையில் இருந்திருப்பார்கள்.

ஆனால் அந்தக் குறுகிய நேரத்திலும், 'கரணம் தப்பினால் மரணம்" என்பதுபோல் ஒரு சில அங்குலங்களில் அவர்கள் மரணம் தப்பிய கதை, அவர்களைத் தாண்டி ஜிங் ஜிங் என்று பறந்து சென்ற ஒவ்வொரு துப்பாக்கித் தோட்டாக்கள் என சிறு விவரம் கூடத் தவறாமல் எல்லாவற்றையும் அத்தனை ஈடுபாட்டோடு பேசினார்கள்.
அந்த 40 நிமிட போராட்டத்தை,4 மணி நேரம் பேசினார்கள்.

அதைப்பற்றி பகிரவேண்டியது எல்லாவற்றையும் பேசிமுடித்த பிறகு, ஒருவர் மற்றவரைக் கேட்டார்,
"சரி... போர் முடிந்தபின் நீ என்ன செய்தாய்? உன் வாழ்க்கை எப்படி அமைந்தது?" என்று
அதற்கு இவர் சொன்னார். ஓ. அதுவா! கடந்த 60 வருடங்களாக, நான் ஒரு விற்பனையாளனாக இருந்தேன்"
அந்த 40 நிமிடங்கள் இவர்கள் வாழ்வில் மிக முக்கியமானதாக ஆத்மார்த்தமாக வாழ்ந்திருக்கிறார்கள் . காரணம், ஒவ்வொரு நொடியும் அவர்கள் மரணத்தின் பிடியில் உயிர் அபாயத்தில் இருந்தது.

அப்போரில் அவர்கள் உருவாக்கிக் கொண்ட பந்தங்கள் மிக ஆழமானதாக ஆயின. ஆனால் அதன் பின்னோ, அம்மனிதரின் வாழ்வை ஒரே வரியில் சொல்லிவிடலாம்: அவர் ஒரு விற்பனையாளர். அவ்வளவுதான்.
நீங்களும் இறக்க முடியும் என்பதை எப்போது உணர்கிறீர்களோ, அப்போது உங்களுக்குள் ஒரு ஆழமான புரிதல் மேலோங்கும். உங்கள் எல்லையில்லாத் தன்மையை நீங்கள் உணரவில்லை என்றாலும் கூட பரவாயில்லை. குறைந்தபட்சம் உங்கள் நிலையில்லாத் தன்மையையாவது நீங்கள் உணரவேண்டும்.
மரணம் என்பது உயிரின் முடிவல்ல. அது உங்கள் உடலின் முடிவு மட்டும்தான். உங்கள் உடலோடு மிக ஆழமான அடையாளம் கொண்டு நீங்கள் வாழ்ந்தால், மரணத்தை எதிர்கொள்வது உங்களுக்குப் பெரும் போராட்டமாக ஆகும். ஏனெனில் மரணம் என்பது உங்கள் உடலின் முடிவு.
நீங்களும் இறக்கமுடியும், இறந்துதான் ஆக வேண்டும் என்ற நிதர்சனத்தை நீங்கள் எதிர்கொள்ள வேண்டும். உடல் நிச்சயம் ஒருநாள் முடிவுபெறும். எப்போது இதை ஏற்கிறீர்களோ, அப்போதுதான் இதையெல்லாம் கடந்துபோக வேண்டும் என்ற ஏக்கம் உங்களுக்குள் உண்மையாகப் பிறக்கும்.
மரணம் என்ற முடிவை ஏற்க முடிந்தவர்களால்தான் வாழ்க்கையை முழுமையாக ரசிக்க முடியும்.
எந்நேரம் வேண்டுமானாலும் நிறுத்தம் வரலாம் என்பது தெரிந்திருந்தால்தான் , ஒவ்வொரு சுவாசத்தின் மதிப்பை உணர்ந்து அனுபவிக்க முடியும்.

உண்ணும் ஒவ்வொரு கவளத்தையும் சுவைத்து உண்ண முடியும் . அருந்தும் ஒவ்வொரு துளி நீரையும் ரசித்து அடுத்த முடியும்.
நீங்கள் நடக்கும் மண், உங்களைத் தழுவிச் செல்லும் தென்றல், உங்கள் மீது விழும் மழைத்துளி, உங்களை வெளிச்சமிட்டுக் காட்டும் சூரியன் எல்லாமே உங்களைப் பொறுத்தவரை தற்காலிகமானவைதான் என்பதை அறிந்திருந்தால் மட்டுமே அவற்றின் மதிப்பை நீங்கள் பூரணமாக உணர முடியும். துரோகங்களை மன்னிக்க முடியும். ஆனந்தமாக அனுபவிக்க முடியும். அதற்கு மரணம் அவசியம்.
அடுத்த பொழுது மரணம் என்றால் இப்பொழுது உங்கள் வணக்கம் எப்படி இருக்கும் ? அப்படி உங்கள் செயல்கள் எல்லாம் பதிவானால் உங்கள் வாழ்க்கை எப்படி இருக்கும்.?
அதற்கு மரணம் தேவையாக இருக்கிறது !
"இறை நேசர்களுக்கு மரணம் அன்பளிப்புப் போன்றதாகும். மனிதன் மரணத்தை வெறுக்கிறான் .ஆனால் உலகில் உண்டாகும் சோதனைகளிலிருந்து தன்னை காப்பாற்றிக் கொள்ள மரணம் துணை நிற்கிறது என்பதை உணர்ந்தால் மனிதன் மரணத்தைக் கண்டு மருளவும் மாட்டான், வெறுக்கவும் மாட்டான் " நபி (ஸல்) அவர்கள் .

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 39
## ( எண்ணங்களும், உணர்வுகளும்)

அடிக்கடி மனிதர்கள் இதுபோன்று பேசி நாம் கேட்டிருப்போம். என் மூளை என்னை ஒருபக்கம் இழுத்துச் செல்கிறது, ஆனால் என் இதயமோ என்னை வேறுபக்கம் இழுக்கிறது" என்று.
நாம் நிலைநாட்டும் அடிப்படையான ஒரு விஷயம்: "நீங்கள்" என்பது ஒரு முழுமையான அம்சம். தனித்து இயங்கக்கூடிய தனித்தனி அம்சங்களின் சேர்மானம் அல்ல. அதனால் என் மூளை இதைச் சொல்கிறது. என் இதயம் அதைச் சொல்கிறது என்றெல்லாம் எதுவும் இல்லை. அவற்றிற்கு தனித்தனி நோக்கங்கள் கிடையாது. அவை எல்லாம் நீங்கள்தான். உங்கள் ஆன்மாதான் .
முதலில் மூளை என்றும், இதயம் என்றும் நீங்கள் எதைக்
குறிக்கிறீர்கள் என்று பார்ப்போம். மூளை எனும்போது, உங்கள் எண்ணங்களையும், இதயம் எனும்போது உங்கள் உணர்வுகளையும் குறிக்கிறீர்கள்.
ஆனால் இதை கவனமாக, நேர்மையாக நீங்கள் அணுகினால், நீங்கள் சிந்திக்கும் விதத்தில்தான் உணர்கிறீர்கள் என்றும், நீங்கள் உணரும் விதத்தில்தான் சிந்திக்கிறீர்கள் என்பதும் உங்களுக்குத் தெளிவாகப் புலப்படும்.
இவையிரண்டையும் தனித்தனியாகப் பிரிக்காமல், மனஉடல் என்று தத்துவஞானிகள் குறிப்பிடுகிறார்கள் .
பொதுவாக நீங்கள் "மனம்" என்று நினைப்பது உங்கள் எண்ணங்களை அல்லது புத்தியை. ஆனால் மனம் என்பது, அது மட்டுமல்ல. அதற்கு பல பரிமாணங்கள் இருக்கிறது. ஒன்று, அதன் தர்க்க செயல்பாடு (புத்தி). மற்றொன்று அதன் ஆழமான உணர்வுப் பரிமாணம் மிக நுட்பமாக பலப்பல நிலைகளில் தொகுக்கப்பட்டிருக்கும் ஞாபகங்கள்.
இதுதான் உங்கள் உணர்வுகளை குறிப்பிட்ட விதத்தில் வடிவமைக்கிறது. அதனால் நீங்கள் உணர்வதும் சிந்திப்பதும், இரண்டுமே மனதின் செயல்பாடுகள்தான்.
சிந்தனையும்,உணர்வுகளும் நேரடித் தொடர்பு கொண்டவை. நீங்கள் ஒரு அற்புதமான மனிதர்" என்று நான் நினைத்தால், உங்களிடம் எனக்கு இனிமையான உணர்வுகள் உருவாகும். இதுவே நீங்கள் மிக மோசமான மனிதர்" என்று நான் நினைத்தால், உங்களிடம் எனக்கு மோசமான உணர்வுகள் உருவாகும்.
அதனால் ஒருவரை உங்கள் "எதிரி" என்று முடிவுசெய்து, அதன்பின் அவரிடம் அன்பாக இருக்க முயல்வது மிகவும் கடினமான வேலை வாழ்வின் மிகச் சாதாரணமான, எளிய அம்சங்களை இத்தனைக் கடினமான ஒரு விஷயமாக மாற்றிக்கொள்வது வேண்டாமே!
"நான் சிந்திக்கும் விதம்தான் உணர்கிறேன். உணரும் விதம்தான் சிந்திக்கிறேன்" என்றால், பிறகு என் சிந்தனைகளும், உணர்வுகளும் ஏன் முற்றிலும் வெவ்வேறாக இருக்கிறது?
இது ஏனெனில் எண்ணங்களுக்கு ஓரளவிற்குத் தெளிவும், துரிதமான செயல்பாடும் இருக்கிறது.ஆனால் உணர்வுகள் சற்றே மெதுவாகத்தான் செயல்படும். உதாரணத்திற்கு, இன்று யாரோ ஒருவரை மிக அற்புதமானவர் என்று நினைக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம்.
அவரைப் பற்றி மிக நல்லவிதமாக உணர்கிறீர்கள். அவர்மீது அன்பு செலுத்துகிறீர்கள். ஆனால் நாளையே அவர் உங்களுக்குப் பிடிக்காத ஏதோவொன்றை செய்துவிடுகிறார். உடனே உங்கள் எண்ணங்கள் அவர் சரியல்ல என்று சொல்கிறது.
ஆனால் உங்கள் உணர்வுகளோ உடனடியாக மாறிவிடாது. அது போராட்டத்திற்கு உள்ளாகும். தற்சமயம் அது இனிமையாக இருந்தால், அடுத்த நொடியே அது கசப்பாக மாறிவிடாது. மாறுவதற்கு அதற்கு கால அவகாசம் தேவைப்படும். அது உங்கள் உணர்வின் வீரியம் பொறுத்து, அது முற்றிலுமாக மாறுவதற்கு 3 நாட்கள் ஆகலாம். 3 மாதங்கள் ஆகலாம், இல்லை 3 வருடங்கள்கூட ஆகலாம். ஆனால் மெதுவாக அது மாறத் துவங்கும்.
உங்கள் புத்திக்கும், மனதிற்கும் இடையே அபிப்ராய பேதம் உருவாக்கிக் கொள்வதில் பயனில்லை. உணர்வுகள் என்பது எண்ணங்களின் சுவாரஸ்யமான மறுபக்கம் போன்றது. அதன் இனிமையை நீங்கள் ஆனந்தமாக சுவைக்கலாம்.

பெரும்பான்மையான நேரத்தில் உங்கள் எண்ணங்கள்தான் உங்கள் உணர்வுகளை வழிநடத்துகின்றன. இதை நீங்கள் உணர்ந்திருந்தாலும் சரி, உணரவில்லை என்றாலும் சரி, இதுதான் நிதர்சனம்.
உங்கள் உணர்வுகள் 100% ஸ்திரமானவை என்று சொல்லிவிட முடியாது. அது சற்றே சலசலக்கும். இந்தப் பக்கமும், அந்தப் பக்கமும் அலைபாயும். ஆனால், உங்கள் எண்ணங்களின் அளவிற்கு அவற்றால் துரிதமாகச் செயல்பட முடியாது. தன் நிலையில் இருந்து மாறுவதற்கு உங்கள் உணர்வுகளுக்கு ஓரளவிற்கு நேரமாகும் என்பதாலும், எண்ணங்களோடு ஒப்பிடும்போது, அதன் தீவிரம் மிக அதிகம் என்பதாலும், இவையிரண்டும் வெவ்வேறு என்று தோன்றலாம்.
ஆனால், நிஜம் அதுவல்ல. எண்ணங்களும், உணர்வுகளும், கரும்பும், அதன் சாறும் போன்றது. ஒன்றை மற்றொன்றில் இருந்து பிரித்தறிய முடியாது.
பெரும்பாலான மனிதர்களுக்கு, உணர்வில் இருக்கும் தீவிரம் எண்ணத்தில் இருப்பதில்லை. உதாரணத்திற்கு, உங்கள் கோபத்தில் இருக்கும் தீவிரம், உங்கள் சிந்தனையில் இருப்பதில்லை. ஆனால் நீங்கள் மிகத் தீவிரமாக ஒரு எண்ணத்தை உருவாக்கினால், அந்த ஒரு எண்ணமே உங்களை மெய்மறக்கச் செய்துவிடும். கூட உணர்வுகளுக்கு அவசியமின்றி, எண்ணத்திலேயே இந்தளவிற்குத் தீவிரமாக ஈடுபடுகிறது
நம் மக்கட்தொகையில் 5 - 10% மனிதர்களால் மட்டுமே முடியும். மீதம் 90% மக்களால், உணர்வுகளை மட்டுமே தீவிரமாக உருவாக்க முடியும். ஏனெனில், அவர்கள் அவ்வளவாக எண்ணங்களைப் பயன்படுத்துவதில்லை. அதேபோல், எண்ணங்களில் மிக ஆழமாகச் செல்பவருக்கு. அந்தளவிற்கு உணர்வுகள் இருக்காது. ஒன்று தீவிரமாக இருக்கும்போது, மற்றொன்று அத்தனை தீவிரமாக இருக்காது.
என்றாலும், உங்கள் எண்ணங்களும், உணர்வுகளும் ஒரே திசையில் செல்வது நல்லது. இவை வெவ்வேறு திசைகளில் சென்றால், அது உள்நிலைக் கலகத்தில் அல்லது ஸ்கைட்சோஃப்ரீனியா (schizophrenia: மிகத் தீவிரமான மனநிலை பாதிப்பு) நோயில் முடியலாம்.
எண்ணங்களும், உணர்வுகளும் வெவ்வேறல்ல. ஒன்று வறண்டது, மற்றொன்று சுவாரஸ்யமானது. இரண்டையும் மகிழ்ச்சியோடு சுவையுங்கள்.
எண்ணங்களையும் , உணர்வுகளையும் திருக்குர்ஆனில் ரொம்ப அழகாக உதாரணத்துடன் தெளிவாக விளக்குகின்றான்.
اَلَاۤ اِنَّهُمْ يَثْنُوْنَ صُدُوْرَهُمْ لِيَسْتَخْفُوْا مِنْهُ‌ؕ اَلَا حِيْنَ يَسْتَغْشُوْنَ ثِيَابَهُمْ ۙ يَعْلَمُ مَا يُسِرُّوْنَ وَمَا يُعْلِنُوْنَ‌ۚ اِنَّهٗ عَلِيْمٌۢ بِذَاتِ الصُّدُوْرِ
(இந்தப் பாவிகள் தங்கள் தீய எண்ணங்களை) அல்லாஹ்வுக்கு மறைப்பதற்காக (அவற்றைத்) தங்கள் உள்ளங்களில் (வைத்து) மடித்து மறைக்கக் கருதுகின்றனர் என்பதை (நபியே! நீங்கள்) அறிந்து கொள்ளுங்கள். (நித்திரைக்குச் செல்லும்போது) அவர்கள் தங்கள் போர்வையைக் கொண்டு தங்களை மறைத்துக்கொள்ளும் சமயத்தில் (தங்கள் உள்ளங்களில்) அவர்கள் மறைத்துக் கொள்வதையும் (அதற்கு மாறாக) அவர்கள் வெளியிடுவதையும் அவன் அறிகிறான் என்பதை நீங்கள் அறிந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அவன் உள்ளங்களில் உள்ள (ரகசியங்கள்) அனைத்தையும் நன்கறிந்தவன்.
(குர்ஆன் : 11:5)
எண்ணங்களாலோ உணர்வுகளாலோ எந்த வினை செய்தாலும் அதனால் தாக்கம் பெறுவது என்னவோ ஆன்மாதான் !

## ஆன்மாக்களின் நிதர்சனங்கள் 40
## ( புலன்களைத் தாண்டியும் வாழ்க்கை உள்ளது )

இந்த மனித உடல் இவ்வுலகைப் பற்றி எப்படிப் புரிந்து கொள்கிறது? இவ்வுலகைப் பற்றிய விபரங்களை அதற்கு உணர்த்துவது யார்?
இதற்கான பதில் நாம் எல்லோரும் அறிந்ததே : நம் ஐம்புலன்கள்

இந்த உலகத்தைப் பற்றியும், உங்களைப் பற்றியும், நீங்கள் அறிந்துள்ள விபரமெல்லாம், இந்த ஐம்புலன்களின் மூலம் நீங்கள் சேகரித்ததுதான். பார்த்து, கேட்டு, முகர்ந்து, சுவைத்து, தொட்டு, என இப்படித்தான் அந்த விபரங்களை சேகரித்தீர்கள். இந்த ஐம்புலன்கள் வேலை செய்வதை நிறுத்தினால், உங்களுக்கு இவ்வுலகும் புரியாது. உங்களையும் புரியாது.

ஒவ்வொரு நாளும் நீங்கள் தூங்கும்போது, திடீரென உங்களைச் சுற்றியிருக்கும் மக்கள் காணாமல் போகின்றனர். இந்த உலகும் காணாமற்போகிறது. ஏன் நீங்களே கூட காணாமல் போகிறீர்கள். அச்சமயத்தில் நீங்கள் உயிரோடுதான் இருக்கிறீர்கள். உங்களைச் சுற்றியுள்ள மனிதர்களும் கூட உயிரோடுதான் இருக்கிறார்கள். ஆனால் உங்கள் அனுபவத்தில் மட்டும் ஒன்றுமில்லை. ஏனெனில் உங்கள் ஐம்புலன்கள் அப்போது வேலை செய்வதில்லை.

ஐம்புலன்கள் எல்லைக்கு உட்பட்டவை. பொருட்தன்மை சார்ந்தவற்றை மட்டுமே அவற்றால் உணரமுடியும். எப்போது உங்கள் உணரும் திறன் ஐம்புலன்களை மட்டுமே சார்ந்திருக்கிறதோ. அப்போது இயல்பாகவே உங்கள் வாழ்வனுபவமும் பொருட்தன்மைக்கு உட்பட்டு மட்டுமே நிகழும். அதைத் தாண்டிய பரிமாணங்களை நீங்கள் உணரமுடியாது.

அதுமட்டுமல்ல, உங்கள் ஐம்புலன்கள், ஒவ்வொன்றையும் ஒப்பிட்டுப் பார்த்தே உணர்கின்றன. இதை ஒரு உதாரணத்தின் வாயிலாகப் பார்ப்போம்.

நான் ஒரு உலோகப் பொருளைத் தொடுகிறேன் என்று வைத்துக்கொள்வோம். என் விரல்களுக்கு அது குளிர்ச்சியாக இருந்தது என்றால், அதற்குக் காரணம் அதோடு ஒப்பிடும்போது என் உடல் சூடாக இருக்கிறது என்பதுதான். இதுவே என் உடல் சூட்டை தணித்துக்கொண்டு. அதன்பின் அதே உலோகப் பொருளை நான் தொட்டால், அப்போது அது எனக்கு சூடாக இருப்பதுபோல் தோன்றும்.

இந்த ஐம்புலன்கள் நமக்குக் கொடுக்கக்கூடிய தகவல்கள், நம் பாதுகாப்பிற்கும், பிழைப்பிற்கும் மிக அவசியம். அந்த வகையில் பார்த்தால், அவை அற்புதமான கருவிகள்தான். நீங்கள் பிறந்த அடுத்த கணமே அவை செயல்படத் தொடங்கி விடுகின்றன.

“உங்களுக்கு வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும் உணவளிப்பவன் யார்? (உங்கள்) செவிப்புலன் மீதும், (உங்கள்) பார்வைகளின் மீதும் சக்தியுடையவன் யார்?

இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றையும், உயிருள்ளவற்றிலிருந்து இறந்தவற்றையும் வெளிப்படுத்துபவன் யார்? (அகிலங்களின் அனைத்துக்) காரியங்களையும் திட்டமிட்டுச் செயல்படுத்துபவன் யார்?” என்று(நபியே!) நீர் கேளும்.

உடனே அவர்கள் “அல்லாஹ்” என பதிலளிப்பார்கள்; “அவ்வாறாயின் அவனிடம் நீங்கள் பயபக்தியுடன் இருக்க வேண்டாமா?” என்று நீர் கேட்பீராக.

(குர்ஆன் : 10:31)

ஏனெனில் வெளியுலகில் நீங்கள் பாதுகாப்பாய் வாழ்வதற்கு அவை மிக அவசியம். ஆனால் பிழைப்பைத் தாண்டி வேறு ஏதேனும் நீங்கள் நாடினால், அதற்கு அவை போதாது. அதற்குக் காரணம். நிதர்சனத்தை உள்ளது உள்ளதுபோல் அவற்றால் உணரமுடியாது. எதையுமே ஒப்பிட்டுப் பார்த்து அந்த வித்தியாசத்தின் அடிப்படையில்தான் அவை உங்களுக்குத் தகவல் அளிக்க முடியும். அதனால் அவற்றின் மூலம் நீங்கள் அறிவது திரிக்கப்பட்ட நிதர்சனத்தைதான்.

வாழ்வை அதன் அடிஆழத்திலும், அதற்கான எல்லாப் பரிமாணங்களிலும் அறிய விரும்பினால், நீங்கள் உள்நோக்கிப் வாழ்வை பார்ப்பது மிக அவசியம். வாழ்வின் சாரத்தை, பொருட்தன்மையின் வடிவில் உடலாலோ, எண்ணங்களின் வடிவில் மனதாலோ உணர் முடியாது. இந்த உடலுக்கும், மனதுக்குமே எது ஆதாரமாக இருக்கிறதோ, அதன் மூலம்தான் வாழ்வை நீங்கள் முழுமையாய் உணரமுடியும்.

அதற்காக, "அவ்வளவுதானே... இன்றுமுதல் நான் உள்நோக்கிப் பார்க்கிறேன்!" என்பதுபோல் அத்தனை சுலபமாக உள்நோக்கிப் பார்த்துவிடவும் முடியாது. அதற்குத் தேவையான உணரும் கருவிகள் இப்போது உங்களிடம் இல்லையென்பதால், அதை அடைவதற்கு நீங்கள் நிறைய வேலை செய்யவேண்டி இருக்கும்.
இப்போது மனிதனின் நிலை இதுதான்: உங்கள் அனுபவங்களுக்கான ஆதாரசக்தி, உங்களுக்குள்ளேதான் இருக்கிறது. ஆனால் உங்கள் உணரும் கருவிகளோ முழுமையாக வெளிநோக்கி இருக்கிறது.
இதனால்தான் உள்ளே - வெளியே என்பதற்கு இடையே பெரும் இடைவெளி இருக்கிறது. வெளியில் இருப்பதை உங்களால் பார்க்கமுடியும், ஆனால் உங்களுக்குள் இருப்பதை உங்களால் பார்க்க முடியாது.

யாரேனும் உங்கள் காதருகில் மெலிதாக கிசுகிசுத்தாலும் உங்களுக்குக் கேட்கும். ஆனால் உங்கள் உடலிற்குள் இத்தனை செயல்கள் நடந்துகொண்டிருக்கிறது, அவற்றில் ஒன்றுகூட உங்களுக்குக் கேட்பதில்லை.
ஒரு எறும்பு உங்கள் கைமீது ஊறினாலும் உங்களால் உணரமுடியும். ஆனால் உங்களுக்குள் இரத்தம் விடாது ஓடிக்கொண்டிருக்கிறது. அதை உங்களால் உணரமுடிவதில்லை!
உங்களின் புலன் உறுப்புகள் வெளியுலகில் இருப்பவற்றை மட்டுமே பார்த்து, கேட்டு, முகர்ந்து, சுவைத்து, உணர்ந்து, உங்களுக்குத் தகவல் கொடுக்கிறது .
இந்த தகவல்கள் வெளியில் இருந்து கிடைத்தாலும், அதற்கான அனுபவம் உள்ளிருந்தே உருவாக்கப்படுகிறது. இந்த அனுபவங்களுக்கு எல்லாம் ஆதாரம் உங்களுக்குள் இருக்கிறது. அனுபவத்தின் காரணி வேண்டுமானால் வெளிசூழலில் இருக்கலாம். ஆனால் அனுபவம் உங்களுக்குள்தான் நிகழ்கிறது.
அவ்வளவு ஏன், சில சமயங்களில் வெளித்தூண்டுதல்கள் இல்லாமலேகூட, உங்களுக்குள் அந்த அனுபவங்களை நீங்கள் உருவாக்கிக் கொள்ள முடியும்.

உங்கள் வாழ்வனுபவத்தை இந்த ஐம்புலன்கள் தாண்டி விரிவடையச் செய்வதே ஆன்மா . இந்த ஐம்புலன்கள் உணரக்கூடிய பரிமாணங்களுக்கு அப்பாற்பட்ட பரிமாணம் ஒன்று உள்ளது. அதை உங்கள் விருப்பம்போல் "ஆத்மா" என்றோ, "உருவமில்லா தெய்வீகம்" என்றோ, "கடவுள்" என்றோ, அல்லது வேறு எப்பெயர் வைத்து வேண்டுமானாலும் அழையுங்கள். அந்தப் பரிமாணத்தை நீங்கள் உணரவேண்டும் என்பதுதான் ஆன்மாவின் நோக்கம்.
உடல் படைக்கப்படாமல், ஆன்மா மட்டுமே ஆன முதல் பரிமாணத்தில், ஆன்மா உலகில் இறைவன் நம் ஒவ்வொருடனும் பேசி உறுதி மொழி வாங்கியதை திருக்குர்ஆனில் ...
(நபியே!) உங்களது இறைவன் ஆதமுடைய மக்களை அவர்களுடைய (தந்தைகளின்) முதுகுகளிலிருந்து அவர்களுடைய சந்ததிகளாக வெளியாக்கி, அவர்களையே அவர்களுக்கு சாட்சியமாகவும் வைத்து (அவர்களை நோக்கி) "நான் உங்கள் இறைவனாக இல்லையா?" என்று கேட்டதற்கு,
"ஏன் இல்லை (நீதான் எங்கள் இறைவன்! என்று) நாங்கள் சாட்சியம் கூறுகிறோம்" என்று அவர்கள் கூறியதை (நீங்கள் அவர்களுக்கு) ஞாபகமூட்டுங்கள்.
ஏனென்றால் (இதனை ஒருவரும் எங்களுக்கு ஞாபகமூட்டாததால்) நிச்சயமாக நாங்கள் இதனை (மறந்து) விட்டுப் பராமுகமாகி இருந்தோம்" என்று மறுமை நாளில் சொல்லாமல் இருப்பதற்காகவும், (குர்ஆன் : 7:17
அந்தப் பரிமாணத்தை அடைவதில் எனக்கு அத்தனை ஆர்வமில்லை என்கிறீர்களா? அதில் ஒன்றும் பிரச்சினையில்லை. அந்தப் பரிமாணத்தை அடைவது உங்கள் நோக்கம் இல்லை என்றாலும், நல்வாழ்க்கை பெறுவதில் உங்களுக்கு ஆர்வம் இருக்கிறதுதானே?
உங்கள் வாழ்வனுபவத்தை இந்த ஐம்புலன்கள் தாண்டி விரிவடையச் செய்யும்போது, அது உங்கள் நல்வாழ்விற்கும் பெருமளவில் வழிசெய்கிறது.
நீங்கள் என்னவாக இருந்தாலும் சரி, அது மருத்துவரோ, காவல்துறை அதிகாரியோ. பொறியாளரோ, கலைஞரோ. குடும்பத்தை பராமரிப்பவரோ, இல்லை மாணவரோ. அடிப்படையில் பார்த்தால். உங்கள் உள்வாங்கும் தரத்தைப்

பொறுத்துதான் உங்கள் திறனும், வெற்றியும் அவ்வளவு ஏன், இவ்வுலகில் நீங்கள் செய்யக்கூடிய செயல்களும் கூட அதைப் பொறுத்துதான் நிர்ணயிக்கப்படுகிறது.
உங்களின் உள்வாங்கும் திறன் தற்போதைய எல்லைகளைக் கடந்து விரிவடையும்போது, அது பிரம்மாண்டமான பலன்களைத் தரும். உங்கள் வாழ்வில் அதிசயம் போல் தோன்றும் புதியதொரு பரிமாணம் திறக்கும்.
பொதுவாக இதைப்பற்றிக் கேட்கப்படும் கேள்விகள், "என் உள்வாங்கும் திறனை மேம்படுத்திக் கொள்வது மிகவும் கடினமா? நான் உள்நோக்கிச் செல்லவேண்டும் என்றால், என் வாழ்வை என் உதறிவிட்டு இமாலய மலைக்குச் செல்லவேண்டி இருக்குமா?" என்பன.
அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. எங்கோ மலையில் தனித்து அமர்வதால் இது நடக்கும் என்றில்லை. இது உங்களுக்குள் இருப்பது. "உள்ளுக்குள் இருப்பது என்றால், அதை ஏன் என்னால் உணர முடியவில்லை?" அதற்குக் காரணம்.

நீங்கள் ஏதோ வேலையில் மிக மும்முரமாக இருக்கிறீர்கள், அல்லது வேறு எதற்கும் நேரமில்லாதபடி உங்கள் மன ஓட்டம் உங்களை முழுமையாய் கட்டிவைக்கிறது. காரணம் எதுவாக இருந்தாலும். இப்பேற்பட்ட சாத்தியம் ஒன்று உங்களுக்குள் இருப்பதை உங்களில் பலரும் உணராததற்கு ஒரே காரணம், உங்களின் கவனமின்மைதான்.
உள்நோக்கித் திரும்புவது என்பது, உங்கள் கருத்துக்களோ, எண்ணங்களோ, தத்துவங்களோ சார்ந்ததல்ல. அது மன ஓட்டத்தைச் சார்ந்ததும்கூட அல்ல. உள்வாங்கும் திறனை உங்கள் மேம்படுத்துவது என்றால், வாழ்க்கை எப்படி இருக்கிறதோ, அதை அப்படியே ஏற்றுக்கொள்வது. தேவையான திறனை வளர்த்துக்கொள்வது!
உங்கள் வாழ்வில் அப்படி ஒவ்வொரு நாளும் சில நிமிடங்களை இதற்காக நீங்கள் ஒதுக்கத் ஏற்றுக்கொள்வதற்குத் தயாராக இருந்தாலும் போதும். அது உங்கள் வாழ்வில் மாபெரும் மாற்றத்தை உண்டு செய்யும். உங்கள் உள்தன்மையை உணர சிறிதளவு கவனம் செலுத்துங்கள். இந்த எளிய செயல்முறை உங்கள் வாழ்வை அற்புதமாக மாற்றும்.

